உ

சிவமயம்

முருகன் துணை.



# பரங்கிரிப் பிரபந்தத் திரட்டும், குறிப்புரையும்.



மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்

மு. ரா. அருணாசலக்கவிராயரால்,

இயற்றப்பெற்று



மதுரை,

மீனலோசனி அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றன.

1927.

# இப்புத்தகத்திலடங்கியவை.



## பிரபந்தங்கள்.

சிவமயம்.

# பரங்கிரிப் பிரபந்தத்திரட்டு வரலாறு.

உலகம் ஒரு கடவுளை முதலாகவுடையதென்பது எல்லாச்*சாதி யாரும் எல்லா மதத்தாரும் ஒப்புக்கொண்ட தெய்வப்புலமைத் திரு வள்ளுவநாயனாருளிச்செய்த "ஆதிபகவன் முதற்றேயுலகு" என்ற திருக்குறளால் ஒருவரும் ஆட்சேபமில்லாமலறிந்த தொன்றும். அக் கடவுள்தான் யாவரென ஆராய்ச்சிசெய்யுமிடத்துப் பலகடவுளரும் தம்மைப்பூசித்து வரம்பெறத் தாமொரு கடவுளைப்பூசித்து வரம்பெ றாமல் சுதந்திரராயும், சனனமரணத் துன்பத்துளகப்பட்டு வருந்தும் எல்லாக் கடவுளருக்குள்ளுந் தாமொருவராகாமல் அவ்விரண்டு துன்ப முமின்றி அநாதியேயுள்ளவராயுமிருக்கின்ற பரம்பொருளாகிய சிவ பிரானே முழுமுதற்கடவுளெனத் தர்க்கசுத்தியாகத் தெரிந்து அக் கடவுளானவர் சைவசமயாசாரியர் நால்வருளொருவரான ஸ்ரீ சுந்தர மூர்த்தி சுவாமிகளுக்கு*அர்ச்சனை பாட்டே யாகும் ஆதலால் நம்மை யென்றுஞ் சொற்றமிழ் பாடுக" என்று திருவாய் மலர்ந்து கட்டளை யிட்டருளிய ஆணையைக் கடைப்பிடித்து (உறுதியாகக் கொண்டு) அச்சிவபிரானுந் தாமும் அபேதமாயிருக்குங் கலியுக வரதராகிய திருப்பரங்கிரி முருகக்கடவுள் யாவராலும் எட்டுதற்கரிய சுயஞ் சோதி வடிவாயிருத்தலால் "பாட்டிற்கின்புறு குருபரன்" என்ற †பெரியார் திருவாக்கைப்பற்றி அம்முருகக்கடவுளை எட்டுதற்குரிய சாதனம் இவையென்று,பரங்கிரிப்பிரபந்தத்திரட்டெனப்பெயரிட்டுப் பரங்கிரிப்பாமாலை முதலிய எட்டுப்பிரபந்தங்கள் திருவருளாற் பாடி முடித்தேன். அதன்பின்னர், இப்பிரபந்தத்திரட்டுள் எத்தனை பிழை களிருக்கின்றனவோ? இதனைத் தமிழ்நூல் பலவற்றையும் நுணுகியா ராய்ந்த பேரறிவுடைய பெரியாரொருவருக்குக்காட்டி,அவர் பரிசோ தித்து நன்கு மதித்தால் அச்சிட்டு வெளிப்படுத்தலாமென்று திடப் படுத்திக்கொண்டு தென்காசித் தாலூகா வெள்ளகாலிலிருக்கும்

* பெரியபுராணம். † பரஞ்சோதிமுனிவர்.

# பரங்கிரிப் பிரபந்தத்திரட்டு வரலாறு.

ஸ்ரீமாந் வே. ப. சுப்பிரமணிய முதலியாரவர்களுக்கு அனுப்பினேன்; அவர்கள் என் வேண்டுகோளுக்கிணங்கிச் சிரமம் பாராட்டாமல் ஒவ்வொரு செய்யுளையும் நன்கு கவனித்துப் படித்துப்பார்த்து அதன் குறிப்புக்களுடன் எனக்குத் திரும்ப அனுப்பி, இப்பிரபந் தங்கள் கற்றாருள்ளங் களிகொளச் செய்வனவாயிருத்தலால் அச்சிற் பதிப்பித்து வெளியிட வேண்டுவதேயாமென்று (3) பாடல்கள் மூலமாகவும் என்னை ஊக்கினார்கள். அதன்மேற் சிற்சில அசௌகரி யங்களால் அச்சிடுதற்குக் காலம் தாழ்க்கநேர்ந்தது. அதுகண்டு திருப் பரங்குன்றம் போலீஸ் சப்இன்ஸ்பெக்டர் ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரம்பிள்ளை யவர்கள் நம் குமாரக்கடவுளிடஞ் சிரத்தையோடு தரிசனத்துக்கு வரும்போதெல்லாம் எனக்கு மிகவும் ஊக்கமூட்டிப் பிரபந்தத் திரட்டு அச்சிடுதற்கு வேண்டிய காகிதங்கள் முழுதும் வாங்கிக் கொடுத்துச் சீக்கிரம் அச்சிற் பதிப்பித்துப் புத்தகம் வெளிவரச் செய்க என்று வற்புறுத்தினார்கள். அவர்களது மிகுந்த தெய்வ பத்தியையுந் தமிழருமையறியும் பேரறிவையுங் கண்டு இது நம் முருகக்கடவுள் கட்டளையே யெனக்கருதி மதுரை மீனலோசனி அச்சியந்திரசாலையிற் பதிப்பித்து வெளியிடலானேன்

தமிழ்வளஞ் சுருங்கிய இக்காலத்துக் கல்வி கேள்வியுடையார் சிற்சிலரே யாதலால் அவ்விருவகையாருக்குமாக இருநூறு புத்தக மட்டும் அச்சிட்டு ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு புத்தகம் இலவச மாகக் கொடுக்க நியமனஞ் செய்துகொண்டேனாதலால் வேறு யாருக்கும் இப்புத்தகம் விலைக்கு விற்பதாயில்லை. மேற்குறித்த வாறு இருநூறு புத்தகங்களும் வித்தியாதருமமாக விநியோகமான வுடன் இரண்டாம்பதிப்புப் பதிப்பிடப்பெற்றால் வேண்டுவோர்க்கெல் லாம் விலைக்குக கிடைக்கும். சுபம், சுபம, சுபம்.

இங்ஙனம்,

மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்,

மு. ரா. அருணாசலக் கவிராயர்.

# முகவுரை.

இத்தொகை நூற்றிரட்டை ஆக்கிய முகவூர் ஸ்ரீ மு. ரா. அருணாசலக் கவிராயரவர்கள், தென்பாண்டிநாட்டில் சைவவேளாளர் குடியில் சேற்றூர் ஆத்தானப்புலவர் பரம்பரையில் வருமொரு பாவல ராவார். மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் சைவநூற் பரிசோதகராக இருந்து சமீபத்தில் புகழுடம்புபூண்ட அருந்தமிழ்ப் பெரும்புலவர் ஸ்ரீ சுப்பிரமணியக் கவிராயரவர்களுக்கும், வித்தியாபாநுப் பத்திராசிரியரும் ஆசுகவி அதிவிரைவில் மதுரமிகப் பாடுபுகழ்ச் சதுரரான ஸ்ரீ மு. ரா. கந்தசாமிக் கவிராயரவர்களுக்கும் ஜேஷ்டராவர். அருந் தமிழும் ஆங்கிலமும் ஒருங்குணரும் உயர்புலவர் வெள்ளகால், ஸ்ரீ சுப்பிரமணிய முதலியாரவர்கள் இந்நூற்றிரட்டுக்குதவியுள்ள சாற்றுக் கவிக்கூற்றானே, இப்பாவலர் பரம்பரையின் பெருமையும், இவர் மரபினோர் தமிழ்ப்புலமை வான்முறை யுரிமையும் நன்கு விளங்கும்.

தமிழ்ச் செவ்வியறமறந்த தற்காலத் தமிழகத்தில் அடிப்பட்ட தனதருங்குடிப் பெருமை மறவாதோம்பித் தமிழ் பயின்று கவிபல சுவையொடு தருந்திறம் பெற்றுத் தமிழ்த்தொண்டியற்றிவரும் இப் புலவரைத் தமிழறிஞர் புகழ்வதியல்பே. எழுபத்தாறாண்டு நிகழும் வயதொடு நாளும்வளர்ந்து முதிர்சுவையும் தளரா இளமைவள நலமும் வாய்ந்துள இப்பாவலர் பிரபந்தமெல்லாவற்றினும் இவர்பாக் களின் இனிய எளிய நடையொழுக்கு, திரிபு முதலிய சொல்லணிகள் செறியுமிடங்களிலும் பொருள் இடர்ப்படாது செம்பாகமாக உணர்தற்குதவும் நெகிழ்ச்சியும் ஒளிதருந்திட்பமும் ஒருங்குடைய தென்பதை இந்நூற்றிரட்டில் பல இடங்களிலும் பார்க்கக்காணலாம். தமிழ்க்கடவுளாகிய முருகவேள்பால் முறுகிய பற்றுடையாரிப்புலவ ரென்பதற்கு இப்பனுவற்றிரட்டே சிறந்த சான்றாம்.

இவர் குமரன்மீ தன்புமேலிட்டால் மனங்கசிந்துருகித் தெய்வ மணங் கமழப்பாடிய செய்யுட்களைப் படிப்பவருக்கு இன்பமும்

# முகவுரை.

பத்தியும் இனிது வளரும். இத்திரட்டுப்பனுவல்கள் யாவும் இவர் பாவன்மையையும் விளக்குகின்றன எனினும், இவற்றுள் பரங்கிரிக் கோவை வியந்து பாராட்டத்தக்கது. இது, நம்பியகப்பொருளிலக் கணத்தோடியைந்து தஞ்சைவாணன் கோவைப்போக்கைத் தழுவி யமைந்திருப்பினும், சொற்பொருளணிகளிலும் கருத்துக்களிலும் தனிச்சிறப்புக்குரிமை கேட்கின்றது. அகப்பொருள் கற்கும் மாணாக்கருக்கு இலக்கண நூற்பயிற்சி வேண்டாது இப்பரங்கிரிக் கோவைதானே இலக்கணமும இலக்கியமுமாகியுதவு மினியபுதுச் செவ்வியுடைத்து, தனியிலக்கணந் தராதசுவையும, தனியிலக்கியந் தாற்கரிய அறிவும் இக்கோவை படிப்பவருக் கொருங்குதரும் பான்மை பாராட்டற்பாலதாகும், கோவைத்துறைகளின் தொகை விரிகளைத்தையும் வரிசைமுறையில் வகுத்து நிறுவிக்கொளுக்களை யுங் குறிப்புக்களையும் விளங்கவைத்துச் செய்யுள்தோறும் பொருத்த மான கருத்துக்களை யமைத்துச் சொற்சுவையொடு பொருட்செறி வும், யாப்புநலத்துடன் இயலடைவிற் பயிலும் அணிகளையும் கொண்டு நிலவும் இப்பரங்கிரிக்கோவை கற்போர்க்கும் கற்றவர்க்கும் படித்தனுபவிக்கும் பயனுதவுந் தகுதியுடைய்து.

இப்பாவலர் இன்னும் பலவாண்டிருந்து தமிழுக்குத் தொண் டியற்றுமாறு இவருக்கு நோயற்ற நல்வாழ்வு விரும்புவதல்லால் தமிழகம் பிறிது கருதுகின்றிலது.

இங்ஙனம்,
ச. சோமசுந்தரபாரதி,
உயர்தர நீதிமன்றவாதி, மதுரை.

---

சிவமயம்.

# சாற்றுக்கவிகள்.

வெள்ளகால் ஸ்ரீமாந்

## வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள் பாடியவை.

திருவளருந் தென்பாண்டிச் சேயிழைக்கூர் பலவுறுப்பாத்
திகழ்ப வற்றுள்
ஒருமுதன்மை யுற்றதனால் முகலூரென் றுலகமெலா
முரைக்கு மூர்
இருவினைடை யொழிநடி யினமீங்க * உடங்கிலங்க
லென்ன மண்ணிற்
பெருகுபுக †ழெழுபலவ ரொருகுடியி லொருங்குமிகப்
பிறங்கி னால். (1)

அன்னவர்கள் யாவரென அறியாதார் அறியாதா
ரவர்கள் தங்கள்
சொன்னகவி சொல்லியெனக் ‡கவிச்சுவையுங் கவிச்சுவைக்குத்
தோற்குந் தோற்கும்
என்னவுரு சித்தறியப் பயிற்றினோ ரிவர்தம்மு
ளெஞ்சா தின்று
மன்னியவ னெனதுபழ நேயனரு ணாசலப்பா
வாணன் மாதோ. (2)

ழிமுதுமை விரைந்துசெலக் கவிமுதுமை யதனின்முந்தக்
§கதழ்ந்து செல்வோன்
பழமுதிர முதிரவினிப் பதிகமுறு பான்மையெனப்
பழமை கூற
அழகுமிகு கவிபூவா அவற்றுலா மாலையெட்டென்
றுய வென்ன
மொழிதருமெண் பிரபந்தம் புனைந்தணிந்தான் பரங்கிரிவாழ்
முருகன் மீதே. (3)

---

* உடங்கு-ஒன்றாக. † எழுபுலவர்-சேற்றூர்ச் சமஸ்தான வித்வான் மு. கந்தசாமிக்கவிராயரவர்கள், அவர்கள் குமாரர் திருவாவடுதுறையாதீனம் பழநிக்குமார தம்பிரான்சுவாமிகள், மீனாக்ஷிசுந்தரக்கவிராயர், மேற்படி கந்தசாமிக்கவிராயரவர்கள் சகோதரர் மு. இராமசாமிக் கவிராயரவர்கள், மேற்படியார் குமாரர் மு. ரா. அருணாசலக்கவிராயர், மு. ரா. சுப்பிரமணியக்கவிராயர், மு. ரா. கந்தசாமிக்கவிராயரென்பார். ‡ அவி - தேவருணவாகிய அமுதம். § கதழ்ந்து-விரைந்து.

மதுரைத் தமிழ்ச்சங்கம் கலாசாலைப் போதகாசிரியர் மகா-ள-ள-ஸ்ரீ
நல்லசிவன்பிள்ளையவர்கள் பாடியவை.

மங்கள மிகுந்ததமிழ் வளர்மதுரை நான்காம்
சங்கமதில் வைகிய தமிழ்ப்புலவ ரோறு
பங்கயமி ஞாருள் படைத்தலி னுயர்ந்த
இங்கித முறுமபொரு ளிரண்டுமிவ ணெய்ந்தோன். (1)

வேறு.

வான வர்க்கிடர்செய் தான வப்பகையை
மாய்த்த வேற்கரன்ம லர்ப்பதம
ஆன தாமரையை யஞ்ச லித்துநித
மாற கப்பகைய றுத்தவன்
தான மாகியதி ருப்ப ரங்கிரித
னைத்த னககிடம தாக்கியே
மீன கேதனனை வென்று வீடுபெறும்
வேட்கை கொண்டுறையும் வாழ்க்கையான். (2)

வேறு

நாற்றிசை புகழ்சேற் றார்ச்சமஸ் தான
நாவல ருவலர் மணியாச்
சாற்றிட மதுரைத் தமிழ்ச்சங்க மதனிற்
சைவநூற் சோதக னாகி
யாற்றல்சான் றுறைந்தும் துறைசையா தீனத்
தணிதிகழ் புலவனு யமர்ந்துந்
தோற்றமிக் குயர்ந்த சுபபிர மணியத்
தூயபா வலாபெருந் தகைக்கும். (3)

சீர்மிகு விவேக பானுவென் றுரைக்குஞ்
செந்தமிழ்ப் பத்திரா திபனுப்
பேர்மிகு கந்த சாமிநா மஞ்சேர்
பிரபல முறுகவி ஞனுக்கும்
ஏர்மிகு சேட்ட னென்னமுன் றோன்றி
யிருநிலந் துதித்திட வாழ்வோன்
நீர்மிகு கடல்சூழ் புவியினிற் கல்வி
நிலையமா நிலவுநன் னிலையோன். (4)

வேறு.

காப்பியங்கள் யாத்துங் கருத்துங் குறிப்புரையு
மாப்பெருநூல் கட்கு வரைந்துமுயர்—பாப்பெரியன்
ஆன்றோ ரமிழ்தம் அருணாச லக்கவிஞன்
சான்றாண்மை மிக்க தவன். (5)

வேறு.

பன்னெடு நாட்கு முன்னர்ப் பரங்கிரி முருக வேட்குக்
கன்னலி னினிதாம் பிள்ளைக் கவியுடன் கற்றோர் போற்றச்
சொன்னயம் பொருணை யங்கள் தோய்ந்திடுங் கவிஞர்ந் தின்ப
மன்னிய திருவி ரட்டை மணிமாலை புனைந்தா னிந்நாள். (6)

அரவிந்தம் பணிந்தோ னெற்றி யம்பகந் தன்னிற் றோன்றி
வரவிந்தம் பணிந்தோன் போற்ற வாழுமக் குமர வேட்குப்
பிரபந்தத் திரட்டென் றோர்நூல் பேருல குவப்பப் பாடி
விரவுந்தன் முன்னை நல்ல வினையினாற் றந்தான் மன்னோ. (7)

வேறு.

கற்றவ ரமிழ்தெனக் கலந் தருந்திடும்
பெற்றியின் மிகுந்தவிப் பிரபந் தத்திரட்
டுற்றுநோக் குநர்க்கத னுள்ளு றும்பொருள்
தெற்றென வாடியிற் றெரிய லாமரோ. (8)

வேறு.

திரிபுயம கத்தொடுசி லேடைமுதல் யாவும்
விரிவுடனி யற்றிடுமிவ் வித்துவசி ரேட்டன்
புரிவுடனி னும்பல பொருட்கவிகள் யாத்துத்
தெரிவுறுபு விக்குதவி செய்திடுக மாதோ. (9)

உ

சிவமயம்.

# பரங்கிரிப் பாமாலை.





கற்பகவிநாயகர்.



சுப்பிரமணியர்.

## கற்பகவிநாயகர் காப்பு.

செந்தமி ழின்பந் திருச்செவிகொள் சேயுவந்து
வந்த பரங்கிரிப்பா மாலைக்குச் — சந்ததமும்
அற்பகமெய்த் தொண்ட ரகத்தி லமர்ந்தருளுங்
கற்பகவி நாயகன்றாள் காப்பு.

குறிப்பு:— அற்பு-அன்பு, அகம்-மனம்.

## நூல்.

திருவமர் பரங்குன் றீசர் திருக்கண்கள் செலுத்துஞ் செந்தீ
மருவிய பொறிக ளாறும் வடிவமொன் றாகி வந்த
முருகனுங் குமரா நின்றாள் முளரியென் முடியிற் சூடி
யருகில்வைத் துபதே சஞ்செய் தடிமைகொண் டருளு வாயே. (1)

பெற்றதாய் தந்தை மைந்தர் பேரின்பத் தொடுகீ ழெண்ண
ணுற்றவின் புதவு மாத ருறவின ரொருங்கில் லாமல்
அற்றபின் புன்னைத் தேடி யயிற்கரத் தரசே வந்தேன்
குற்றமில் பரங்குன் றத்திற் கூட்டியாட் கொள்க நீயே. (2)

இதுவரை யுனைம றந்திங் கிருந்ததா லென்னை நீயும்
பொதுவறப் பார்த்தா யில்லை பூரணப் பொருளாங் கந்தா
பதுமமா மலராள் வைகும் பரங்கிரிப் பதியி லேபன்
பதுசெய வந்தே னுண்மை யறிந்துநீ யருள்செய் வாயே. (3)

பலபடி யேறி வந்துன் பதமலர் பார்த்துப் பார்த்துள்
ளலமர லொழிப்பான் வந்தேன் ஆறிரண் டங்கை யாய்நின்
சுலவுசீர்ப் பரங்குன் றத்தைச் சூழ்வரு தொண்ட ரெய்தும்
நலமெலா மொருசற் றேனு நான்பெற நல்கு வாயே. (4)

கைதவ ரோடி ணங்கிக் காலங்கள் கழித்து விட்டேன்
பொய்தவிர் மனத்த னாய்நின் பூங்கழல் போற்று கில்லேன்
மெய்தவழ் பரங்கி ரிக்கண் வீடொன்று வேண்டு கின்றேன்
ஐதமை முருகா நீதா னருள்வையோ வறிகி லேனே. (5)

கருதர வென்னு மல்குற் கன்னியர் காமத் தாழ்ந்தே
யொருதரம் பரங்குன் றத்தை யுள்ளுத லுஞ்செ யேன்றா
யருதரம் போய்மீண் டின்ன மலக்கணுற் றழுங்குங் காலைப்
பொருதரந் தேயும் வேலோய் புரப்பர்யார் புகலு வாயே. (6)

---

(2) கீழெண்ணுற்ற இன்பம் - சிற்றின்பம். (3) பொதுவற - சிறப்பாக. (4) சுலவு-சூழ்கின்ற. (5) ஐ-அழகு. (6) கருது அரவு-எண்ணுகின்ற பாம்பு. தாயர் உதரம்-தாய்மார் வயிறு.

பத்தியிற் பரங்குன் றத்தைப் பாடியுன் பணிக ளாற்றி
நித்தியஞ் சேவை செய்யு நியமமு நிகழ்த்திப் பின்னர்
முத்தியும் பெறுவான் வந்தேன் முடித்தருள் முன்ன மெல்லாஞ்
சத்தியிற் சிறந்த செங்கைச் சண்முகந் தழைத்த கோவே. (7)

புலவனென் பதுப லர்க்கும் பொதுவெனப் புகன்றிட் டாலும்
இலகிடு குறிபாப் நிற்கே யெய்திய சிறப்பா லென்றும்
நலமிகு பெரியோ னென்று நானுனை நாடி வந்தேன்
குலமலி பரங்குன் றத்திற் கூட்டிபாட் கொள்க நீயே. (8)

இராமைநீங் காத தெய்வ மிவனென எய்த்து முன்னோ
உளமகிழ் முருக னென்னு முளவறிந் துனக்குப் போகி
வளமலி பரங்குன் றத்தின் மணஞ்செய்து மகளைத் தந்தான்
பளகறு மவன்முன் செய்த பாக்கியம் பலித்த வாறே. (9)

கலியுக வரத னென்று கற்றவர் சொற்ற தாலே
ஒலிகடல் சுவற வேலா லொறுத்திடு முன்பா லுற்றேன்
மெலிவறு பரங்குன் றத்தில் வேண்டிய வரங்க ளெல்லா
மலிதர வழங்கா யென்றால் வல்வழக் கிடுவன் மாதோ. (10)

கரும்பினை பெறும்பு சூழுங் கணக்கெனக் கந்தா நின்னை
விரும்பிவந் தடைந்தோ மெங்கள் வெய்யதீ வினையை வீட்டித்
தரும்பயன் பரங்குன் றத்திற் றராதுநீ தழலிற் காய்ந்த
இரும்பென இருத்தி யென்றா லின்னினி யென்செய் வோமே. (11)

அடைக்கல மென்ன வந்தே னல்லலை யகற்றிச் சற்றே
கடைக்கணித் தருள வேண்டுங் கற்பகக் காவ லோனைத்
துடைக்கருந் துன்பஞ் செய்த சூரனைத் தொலைத்த வைவேற்
படைக்கல மேந்தி நின்ற டரங்கிரிப் பதியு ளானே. (12)

---

(9) எய்த்து-அறிந்து. உளவு-இரகசியம். போகி-இந்திரன். பளகு-குற்றம். (10) சுவற-வற்ற. (11) இன்னினி-இப்போது. (12) கடைக்கணித்து-கடைக்கண்ணாற் பார்த்து.

செந்தமி ழறிஞர் வைகுந் திருப்பரங் கிரியைத் தேடி
வந்தவர் துயர்தீ ராயேல் வரந்தரு வள்ளல் நீயென்
றிந்தவூர் தனிலு மற்றை யெந்தவூர் தனிலு முள்ளோர்
தந்தமிற் பேசி டாரோ சரவணந் தாங்குந் தேவே. (13)

ஆறிரண் டங்க ளுப்பின் னன்றியு மநாதி யாக
வேறிரண் டுண்ட வற்றுள் மேவொன்றாய் மெலிவுற் றேனை
மாறிரண் டாலொப் பாகு மற்றொன்றை வாட்டி நின்னைத்
தேறிரண் டறுக லப்புத் திருப்பரங் கிரியிற் செய்யே. (14)

தன்னையே பிரம மென்று சாதிக்குஞ் சழக்கர் தம்மோ
டென்னையே சேர வொட்டா தின்னருள் ளொளிதிற் செப்தா
யன்னையே பரங்கி ரிக்க ணருட்கட லாகி நின்ற
வுன்னையே மஞ்ஞை மேலிங் குலாவரக் கண்டுய்ந் தேனே. (15)

எண்ணிய எண்ணி யாங்கே யெய்துவ ரெண்ணி யார்தாந்
திண்ணிய ராகு லென்று செப்புதல் திறம்பா தென்றே
யுண்ணினைந் துன்னைக் கந்தா வுறுதியாப் பற்றி நின்றேன்
பண்ணிய பாவ மெல்லாம் பரங்கிரிப் பதியிற் றீரே. (16)

முருகனே தெய்வ மென்று முகிழ்த்தகை முடிமேல் வைத்துன்
னருகனே கரும்வந் தாரா லவரைக்கண் டறிந்தும் வன்மை
தருகனோர் நெஞ்சி லன்பு தழைந்திடச் சார்ங்க பாணி
மருகனே பரங்கி ரிக்கண் வந்திலேன் மடமை யென்னே. (17)

தீப்பிணி கொஞ்சங் கொஞ்சந் தெறுதலாற் சிந்தை நொந்து
மூப்பினி விளைத்து விட்டேன் முருகநின் முன்பு நின்றோர்
பாப்பிழை யறவும் பாடேன் பரங்கிரிப் பதியி லுன்காற்
காப்பினி லென்னைக் காலன் கடிகுமுன் கருணை செய்யே. (18)

(13) சரவணம்-சரவணப்பொய்கை. (14) வேறு இரண்டு-பசு, பாசம். ஒன்றாய்-பசுவாய். (பசு உயிர்.) மால்-மயக்கம. மற்றொன்று-பாசம், ஆணவமலம். இரண்டறுகலப்பு-அத்துவிதக்கலப்பு. (15) சழக்கர்-வழக்குக்கு மாறுபட்டவர். (17) கல்நேர்-கல்லையொத்த. (18) பா-பாட்டு.

பட்டவை படமுன் போற்செய் பானருட் படிவங் கொண்ட
சிட்டனே குருவா நின்னைச் சேவைசெய் திடுவ னென்றால்
இட்டமாம் பரங்குன் றத்தி லெவருனை யிறைஞ்சா ரெல்லாக்
கட்டமுங் களையும் வைவேல் கரங்கொண்ட கந்த வேளே. (19)

சரவணப் பொய்கை யாடிச் சந்திவந் தனைக ளாற்றிப்
புரவணம் பரங்குன் றத்தைப் போய்வலம் புரிந்து பல்லோர்
வரவணக் கினையென் மாட்டு மற்றவை தொன்றுஞ் செய்யாய்
கரவணற் பரம னெற்றிக் கண்வரு கடவுட் சேயே. (20)

தேடருஞ் சிறப்பின் மிக்க தேவருஞ் சரிக்கும் வெய்ய
வேடர்மா னுக்குஞ் சற்றும் வேற்றுமை கருதா யென்றால்
கேடறு பரங்கி ரிக்காங் கேயனே கிளரும் பத்திப்
பீடமை வார்க்கு மெற்கும் பேதமென் பேசு வாயே. (21)

அரம்பைகள் சூழ்ப ரங்குன் றறுமுகத் தரசே நின்னைப்
பரம்பரை யாக வென்றும் பாடினே மெம்பி னிந்த
வரம்பழிந் திடாமல் மேன்மேல் வருமெங்கள் மகார் மகார்கள்
நிரம்புநின் சீர்த்தி பாட நிலைத்திடும் வரநீ நல்கே. (22)

அறையினி லாடி யாடி யம்பலத் தாடு வார்போல்
முறையினிற் பாடிப் பாடி முதிர்ச்சி முற் றியபின் மூன்று
பறையெனு முரச மார்க்கும் பரங்கிரிப் பதியில் வேறுகை
யிறைவனே நின்னைப் பாட எப்தின னென்று கொள்ளே. (23)

மரத்தினைக் கல்லைச் சூரன் மார்பினை வகிர்ந்த வைவேற்
கரத்தினை பரங்குன் றத்தைக் கைதொழக் கருதா என்னெஞ்
சுரத்தினை யீர்ந்து ஞான முட்புகுத் தொன்று சேர்த்துத்
தரத்தினை யளவா னுன் தயைசெயாய் தடையென் னேயோ. (24)

---

(19) பட்டவை-தோன்றிய எல்லாப் பொருள்களும். பட-சருவசங்கா ரத்திலழிய. சிட்டன்-ஞானசொரூபியாயுள்ளவன். (20) புரவு-காவல். அண்-பொருந்திய. வணக்கினை வளைத்தாய். கர அணல்-விடத்தைத்தரித்த கண்டம். (21) பீடு-பெருமை. (23) மூன்றுபறை-படைமுரசு, கொடைமுரசு, விவாக முரசு. (24) கல்-கிரௌஞ்சகிரி. கரத்தினை-கையையுடையாய். ஈர்ந்து-பிளந்து.

சீரணிப் பதுச ரீரந் தேர்பவர் தேர்மி னென்று
காரணத் திற்சொ லுண்மை காண்கிலார் களிப்பின் மூழ்கி
யாரணத் தினைப்ப ரங்குன் றத்தினை யபேத மாக்கொள்
பூரணப் பொருளாஞ் சேய்நின் பொன்னடி போற்றி லாரே. (25)

மரணமீவந் தெய்து காலை மனைவியர் மைந்த ருற்றார்
அரணதாய் நம்மைச் சூழ்ந்திங் கதைத்தடுத் தகற்று வாரோ
பரணம ரேனல் சூழும் பரங்கிரிப் பதிச்சேய் பைம்பொற்
சரணமே காக்கு நெஞ்சே தாழ்த்திடா ததைநீ சாரே. (26)

சுரிதிரை நரைநோய் மூப்புச் சோம்பலின் றுயர மெய்தி
வரிசையாம் பற்க முன்று மரணத்தின் வரவு கிட்டும்
பெரியனு னினியி ருநதாற் பெறும்பயன் யாது கந்தா
உரியநின் பரங்குன் றத்தி லுன்பதத் தொடுக்கிக் கொள்ளே. (27)

எழுபது வயது சென்று மினமல ரெடுத்து நின்றாள்
உழுவலன் பொடுபூ சிக்கு முவகையென் னுளத்தி லில்லை
பழுதுறு மிநதப் பாவம் பற்றறப் பரங்கி ரிக்கண்
முழுவதுங் கெடுமோ சொல்லாய் மூவிரு முகங்கொள் கோவே. (28)

பணம்பண மெனும்பே ராசைப் பட்டுநின் பதம்பா டாமல்
உணங்கியூர் தோறும் போய்ப்போ யுலோபமே யுருவங் கொண்ட
பிணங்களைப் பாடி நோமிப் பேதைக்குங் குமரா நின்சீர்
இணங்கிய பரங்குன் றத்தி லிடமுண்டோ வியம்பு வாயே. (29)

மெய்ப்பத்தி யுடையார் போல வேடம்வெண் ணீறு சாத்திப்
பொய்ப்பத்தி யாக வேனும் போந்துனைப் போற்றல் செய்யார்
எய்ப்பத்தி கைத்தை மேற்கொண் டிடும்பொழு தென்செய் வாரோ
செய்ப்பத்தி சூழ நிற்குந் திருப்பரங் கிரிச்செவ் வேளே. (30)

(25) சீரணிப்பது-அழிவது. (26) அரண்-காவல். ஏனல்-தினைப்புனம். (28) உழுவலன்பு-எழுபிறப்புந் தொடர்ந்தபத்தி. (29) உணங்கி-வாடி. (30) எய்ப்ப-இளைக்க. திகைத்து-பெருமூச்சுவிட்டு. ஐ-கோழை. செய்-வயல். பத்தி-வரிசை.

பிறப்பினி லச்ச மில்லை பிழைசெய்த பிரமன் றன்னை
யுறச்சிறை யிட்ட தேவே யுடலைவிட் டுயிரோ டுந்தி
யிறப்பினி லெய்துந் துன்ப மியாதியா தோவென் றுள்ளம்
அறப்பய முறுமென் செய்வே னருளுமெய் யசலத் தானே. (31)

உண்டிகிட் டாத போது முறக்கம்வந் துறாத போதும்
பெண்டிரெய் தாத போதும் பெருங்கவல் கொள்வல் ஞான
பண்டித னென்ன வென்றும் பரங்கிரிப் பதியு ளாய்கை
கண்டிடு மருந்துண் டேலிக் கவலையைக் களைகு வாயே. (32)

சுரும்பொக்க லைபெண் ணுமற் சுரிகுழற் றுஞ்சு மின்னார்
அரும்பொக்க மிரிரும் பன்னீ ராசையுற் றலைந்தேன் குற்றந்
தரும்பொக்க மில்பன் னீருன் றுண்மலர் தன்னிற் பெய்யேன்
விரும்பொக்க லொடுவாழ் வார்சால் மெய்ப்பர வெற்பு ளோனே. (33)

இடம்பொரு ளேவல் மூன்று மியைந்தொருங் கின்மை யாலே
திடம்பெற நின்றுட் பூசை சேவைசெய் திடுகென் பார்சொற்
குடன்பட லொல்லேன் குற்ற முதுவென வொறுத்தி டாமற்
கடம்பணி பரங்கி ரிக்கட் கந்தனே கருணை செய்யே. (34)

குருவெனத் தாதை முன்னுடை குறிக்கொளுங் குமர னேநீ
மருவிய பரங்குன் றத்தோர் வைகிடம் வழங்கா தற்குத்
தருவம ரிறைபெ றச்சிந் தாமணி தயங்கும் பொன்னு
டுருநிதி யரசு மற்று மெய்படி யீந்திட் டாயே. (35)

மலைமலை யாப்பொன் வெள்ளி மதிப்பவர் மனத்துக் கெட்டா
நிலைநிலை யாவைத் துள்ள நிமலன்சேய் நீயென் றக்கால்
இலைவடி வேலா வொன்று மிலையென்ப தேலா திம்மெய்ச்
சிலையினிற் கேட்ட வெல்லாச் செல்வமுஞ் சிறப்பி னீயே. (36)

---

(31) யாதியாதோ-என்னதுவோ. அற-மிக. மெய்யசலம்-பரங்கிரி. (32) கவல்-கவலை. (33) ஒக்கலை-இடையை. பன்னீர்-பல்லிடையூறிய நீர், எச்சில். பொக்கம்-பொய். ஒக்கல்-சுற்றத்தார். (34) ஒல்லேன்-சம்மதியேன். உது-இது. (36) ஏலாது-பொருந்தாது. மெய்ச்சிலை-பரங்கிரி.

வயித்திய கூவந் தோய்வார் மலைவலம் வருவார் சாந்திற்
குயிற்றுநின் னுருவங் கண்டு கும்பிடுங் குணத்த ராவர்
பயித்திய மாதி நோய்கள் பரங்கிரிப் பதியிற் றீர்வா
அயிற்றிற லரசே யொன்று மடியனே னாற்றி லேனே. (37)

சத்திய தீர்த்தந் தோய்ந்து சரவணப் பொய்கை யாடிப்
புத்திர கூவ மூழ்கிப் பொன்மலர் போலு நின்றாட்
கெத்தின மேனு மோர்பச் சிலையுமிட் டேத்தேன் பொய்ம்மைப
பத்தியு மில்லேன் காவாய் பரங்கிரிப் பதிச்செவ் வேளே. (38)

ஈட்டிய வினைக்குத் தக்க வின்னலு மின்புஞ் செய்வாய்
பாட்டினு ளிதைய றிந்தும் பரங்கிரிப் பதியி லென்னை
வாட்டினை யென்று நின்னை மறப்பது மடமை யன்றோ
தீட்டிய வேலாற் றேவர் சிறையினைத் தீர்த்த தேவே. (39)

உன்னையான் பாடி லேனென் றுரைத்தவ னொருவன் முன்போய
நின்னையே யுருவ மாற்றி நின்றுநீ பாடச் செய்தா
யென்னையே வலிய யான்வந் தெத்தனை பாடி னாலுந்
தென்னையார் பரங்குன் றத்திற் சேர்தனை செவிக்கொ ளாயே. (40)

எத்தனை மிடியு நோயு மிளைமையி லெய்து மானால்
அத்தனை யும்பொ றுக்க லாமவை யணுவா னாலும்
இத்தரு ணத்தில் வந்தா லெவர்சகித் திடுவ ராலோ
சித்தரு ளிலையென் செய்வல் திருப்பரங் கிரிச்செஞ் சேயே. (41)

சைவத்தின் றெய்வ மாநின் றமையனுந் தந்தை தாயும்
வைவைத்த வேற்கை நீயும் வந்தவ ரென்று வாழ்த்தி
மெய்வைத்த பத்தி செய்வார் மேவுவர் வேண்டு மெல்லாம்
உய்வைத்தந் திடும்ப ரங்குன் றுள்ளிருந் தோங்குந் தேவே. (42)

(37) கூவம்–கிணறு. சாந்திற்குயிற்று–சுதையாற்செய்த. (39) இன்னல்–துன்பம். (40) ஒருவன்–பொய்யாமொழிப்புலவர், இவர் சரிதம் விரிப்பிற் பெருகும். தெரிந்தார்வாய்க் கேட்டுணர்க. (41) இத்தருணம்–முதிர்ந்தபருவம். (42) வை–கூர்மை. உய்வை–பிழைப்பை.

மகப்பல பெற்ற தாயம் மக்கட்கு வந்த நோயை
யகற்றுதல் கடமை யன்றோ அறுசம யத்தா ராய
மிகப்பெருங் கடவு ளாகி வேறுவே றாய்வி ளங்குங்
குகப்பெரு மானே யன்பு கூர்பரங் குன்று ளானே. (43)

உற்றுழி யுதவ லன்றோ வுறுதியென் றுயர்ந்த நூல்கள்
கற்றுவல் லுநர்சொற் றிறென் கால்களிற் கடியா வாத
முற்றும்வந் திருந்து கொண்டு முழுக்குபர் மூட்டும் போதுஞ்
சற்றுநீ பரங்குன் றத்திற் சாமியே துணைசெ யாயே. (44)

கருங்கல்வன் றாண்மே லேற்றுங் கடுஞ்சுமை காட்சிக் கெய்தாத்
துரும்புறு முசகி லேற்றிச் சுமத்துவார் துணைய என்மேல்
வரும்பெருந் துன்ப மெல்லாம் வைத்தனை மாற்று வார்யார்
அரும்பரங் கிரியிற் றெய்வ யானையோ டமருந் தேவே. (45)

திருப்பரங் கிரியில் வைகுஞ் சிவற்குப தேசஞ் செய்த
குருப்பெருந் தகையே யோங்கு குணப்பெருங் குன்றே கோதில்
பொருப்பரங் கனையை வேட்ட புனிதனே புன்க ணெல்லாம்
இருப்பரம் போல றுத்தா லென்செய்வ னேழை யேனே. (46)

பருவத்துக் கேற்ற புத்தி படைத்திலாப் பாவி யேனின்
னுருவத்தின் மும்மை காண ஒல்லுமோ ஒல்லு நல்லோர்
மருவத்திண் கழற்கா லின்கீழ் வைத்திடும் வரதா தெய்வத்
திருவத்தி பரங்குன் றத்திற் றிருமணஞ் செய்த தேவே. (47)

உருவடி வின்னு மெய்தா துன்னொடு மொன்றி ரண்டற்
றருவடி வாகிப் பேரா னந்தத்தை யநுப விக்கக்
குருவடி வாகி வந்தெற் குப்பரங் குன்றிற் செய்ய
திருவடி காட்டித் தீக்ஷைச் சிறப்புப தேசஞ் செய்யே. (48)

---

(43) மக-பிள்ளை. பெருங்கடவுள்-பரம்பொருள். (44) உற்றுழி-ஆபத்து வந்த இடத்து. வல்லுநர்-வல்லவர். (45) காட்சிக்கெய்தா-கண்ணுக்குப் புலப்படாத. துணைய-போல. (46) அங்கனை-பெண். (47) மும்மை-உருவம், அருவம், அருவுருவமென்னு மூன்று. ஒல்லுமோ-கூடுமோ. அத்தி-யானை. (48) ஒன்றிரண்டற்ற-ஒன்றெனவும் இரண்டென்றுஞ் சொல்லப்படாத, (அத்துவிதம்.)

அத்திர விழியார் பாற்செ யன்பிலோ ரணுவா னாலும்
பத்திர மொடுகொண் டேகிப் பரங்கிரிப் பரமன் பெற்ற
புத்திரச் செம்மல் பாத பூசனை புரிவ ரென்றால்
எத்திர வியசம் பத்து மெளிதினி லெய்த லாமே. (49)

உன்னொடு சித்தா யொத்து முணர்ச்சியிற் பேத முற்றால்
என்னொடு சமம்நீ யென்ற லேழைமைப் பால தேயாம்
அன்னது தெரிந்தே நின்கீ ழடிமையென் றடைந்தேன் காவாய
மின்னொடு மேகஞ் சூழு மெய்க்கிரி வேற்கை வேந்தே. (50)

என்னையு நின்னை யும்போ லிருந்தவொன் றெனையே பற்றி
உன்னைவந் துறாமை யால்நா னுன்னைவந் துறுத லில்லை
தன்னைநேர் பரங்குன் றத்திற் சாமியித் தளைய விழ்த்தாற்
பின்னைவந் தேக போகம் பெற்றிருந் திடுவன் மாதோ. (51)

மூலமாங் கன்ம மென்பால் முன்னையே முகிழ்த்து நின்ற
தாலஃ தவாவுண் டாக்க வதுசன னத்தை யாக்கி
ஞாலமீ துழல வைத்தால் நான்செய்வ தென்னே நம்பன்
பாலமார் விழியில் வந்த பரங்கிரிப் பரம தேவே. (52)

ஐம்பொறி முற்று மென்னை யடிமைகொண் டலைத்த லைத்துப்
பம்புதீ வினைகள் செய்யப் படுத்திய பாடு சற்றோ
சம்புவின் குருவாய் மைந்தன் றானுமாஞ் சாமி யேநீ
யும்புறக் கணித்தால் மெய்க்குன் றுள்ளெவ ருதவு வாரே. (53)

தத்துவ முப்பத் தாறிற் சமைத்தவிச் சரீரந் தாங்கி
யெய்த்திது காறுஞ் சால இடைந்தன னின்னுந் தாங்கற்
கொத்தவோர் பலமு மில்லே னுன்பத முதவல் வேண்டும்
பத்திரு கண்கை கொண்ட பரங்கிரிப் பதியு ளானே. (54)

---

(50) சித்து-அறிவுடைப்பொருள். உணர்ச்சியிற் பேதம்-தானே யறிதல், ஒருவரறிவிக்க அறிதல். இவற்றில் தானேயுணர்வது-பதி. உணர்த்த வுணர்வது-பசு. பதி-கடவுள். பசு-உயிர். (51) ஒன்று-பாசம், ஆணவ மலம். தளை-பாசமாகிய கட்டு. ஏகபோகம்-மோக்ஷம். (52) மூலமாங்கன்மம்-ஆன்மாவோடு செம்பினிற் களிம்புபோலிருக்குங் கன்மம். இஃதொன்றுண்டென்பது "கன்ம மூமூலங்காட்டி" என்னும் சிவஞானசித்தியார்த் திருவிருத்தத்தால் உணர்க. (53) புறக்கணித்தால்-பராமுகமாயிருந்தால். மெய்க்குன்று-பரங்கிரி. (54) சால-மிக. இடைந்தனன்-வருத்தமுற்றேன்.

அகத்தினும் புறத்தும் பூசை யாற்றிநின் னருட்பே றெய்தச்
சகத்தின்முன் றவஞ்செ யாவென் றன்முழங் காலின் வாத
மகத்தினிற் சனிபோல் வந்து வாட்டுமிவ் வருத்தந் தீராய்
தகத்திருப் பரங்குன் றுற்ற சாமிநின் சரண்புக் கேனே. (55)

திடன்பெறு பொருளை யீட்டல் சேமித்தல் சேமித் தப்பாற்
கடன்பெறு வாருக் கீதல் கடன்கொண்ட கையர் பாற்போ
யுடன்பெறக் கேட்ட லென்னும் உறுகணுள் ளுடைந்தே னிந்த
மடன்பெறும் பேறென் றுண்டோ வளர்பர மலைச்செவ் வேளே. (56)

ஈட்டிய பொருள்மற் றோர்கை யினிற்கொடுத் திட்டுப் பின்னர்க்
கேட்டிடிற் கொடாம லன்னோர் கேடுசூழ் கின்ற தீந்தப்
பாட்டினிற் காலம் போக்கிப் பரங்கிரிப் பதியைப் பாடேன்
சேட்டிளங் கதிர்வே லோய்நின் றிருவருள் சேர்த லென்றே. (57)

பற்பல துயர்செ யிந்தப் பாழ்ம்பணப் பழக்க மின்றேல்
அற்பர்பா லுங்கை யேந்தி யடிசிற்கு மாடைக் கும்போய்
நிற்பரே யதைநி னைந்தால் நெடுந்துயர் நிகழு மிந்தத்
துற்பலம் பரங்கி ரிச்சேய் தொலைத்திடிற் றொலையுந் தானே. (58)

கிடுகிடென் றொலிக்குஞ் சேனை கிளர்தரக் கிட்டிச் சூரன்
முடுகிட வைவே லேவு மூர்த்தியே முதிரு நோய்பா
லொடுகிட வாம லென்னை யுன்னடிக் குள்ளா ளாக்கிப்
படுகிடங் கரணஞ் சூழும் பரங்கிரிப் பதியிற் காவே. (59)

புடத்தினிற் செம்பொ னிட்டாற் போன்மெனப் புன்கண் வாரி
யிடத்தினி லென்னை யிட்டா யிக்கருத் தினையெண் ணுமல்
மடத்தன மாக நின்னை வசைசொலி வதிந்தேன் வைவேற்
றிடத்திருப் பரங்குன் றுபித் தீவினை தீர்த லெங்கே. (60)

(55) மகம்-ஒரு நக்ஷத்திரம். சனி-ஓர் கிரகம். மகத்திற் சனி வந்தால் வருத்தஞ் செய்யுமென்பது சோதிட சாஸ்திரவழக்கு. (56) சேமித்தல்-காப்பாற்றல் (57) ஈட்டிய-சம்பாதித்த, சேடு-அழகு. (59) முடுகிட-மோத. படுகிடங்கு-ஆழமாகிய அகழ். (60) போன்மெனி-போலுமென்றுசொல்ல. புன்கண்வாரி-துன்பக்கடல்,

பழவினைப் பயனு லிந்தப் பாழுடற் பாரந் தாங்கி
யுழலுமெற் கிரங்கி னன்றோ வுன்னருட் கொத்த பண்பாங்
குழன்மொழித் தெய்வ யானைக் குப்பரங் குன்றின் மாலை
யழகுறப் புனைந்து போரா னந்தத்தி லமருந் தேவே. (61)

அவன்றிரு வருளி னாலே யவனடி வணங்கி யென்று
நுவன்றனர் பெரியா ரிந்த நுண்பொருள் மெய்யே யென்றால்
எவன்றின முனைவ ணங்கா திருந்திட லென்மேற் குற்றஞ்
சிவன்றிரு மைந்த னாகுந் திருப்பரங் கிரிச்செஞ் சேயே. (62)

பலகலைப் பயனெ லாநின் பதமலர் பணித லென்றே
யலகறு மறிஞர் சொற்ற நலந்தறி யாக்கா லம்போ
லுலகநா லின்னு மோதி யுற்றநா ளொருங்கே யூக்கி
விலகினே னினியென் செய்வேன் மெய்ப்பர வெற்பு ளானே (63)

அடைந்தவ ரிடுக்கண் டீர்த்தற் கறிகுறி யாக விண்ணோர்
கடைந்தநஞ் சுண்டான் பெற்ற கநதநின் கருணை வாரி
குடைந்தடி யேனுந் தொண்டர் குழாத்தொடுங் கூடச் செய்வா
யிடைந்தவர் பரங்குன் றத்தி லில்லையென் றெய்தி னேனே. (64)

ஒருவமர் பரங்குன் றெந்தா யுன்னடி யுவந்து போற்றிப்
பருவரற் கூற்றெய் தாளென் பாரது பின்னர்க் காணபாம்
மருவுறு பிறப்பில் லென்பார் மற்றது மற்றே யின்றெம்
அருவினை நோய்போ மென்ப தநுபவத் தறியச் செய்யே. (65)

இடையுள தெய்தின் மற்றை யிரண்டுமெய் திடலா மென்பார்
உடைமையெய் தியதற் கொப்ப வுறுமுன்னும் பின்னு மெய்தா
தடையுறுங் கவலை சொல்லி யாரிடத் தாற்று வேனான்
கொடைமிகும் பரங்குன் றத்திற் குறித்தருள் குமர வேளே. (66)

---

(62) எவன்-யாது. (63) ஊக்கி-செலுத்தி. பரவெற்பு-பரங்கிரி. (64) குடைந்து-மூழ்கி. இடைந்தவர்-வருந்தினவர். (65) ஒரு-ஆட்டுவாகனம். பருவரல்-துன்பம். அற்றே-அப்படியே. (66) இடையுளது-பொருள். இரண்டு-இடம், ஏவல். ஒப்ப-பொருத்தமாக. முன்னும் பின்னும்-இடமும் ஏவலும் "நடுவணதெய்திலிருதலையுமெய்தும்" என்பதை இவ்விடத்திற்கவனிக்க.

கேழுயர் மணிமா டங்கள் கிளர்பரங் கிரியை காளுஞ்
சூழுவ ரோடு நானுஞ் சூழ்வரத் தூண்டு மாசை
தாழுற வாத நோயென் றுள்களைத் தடுத்த தித்தைப்
போழுமா றன்வே லேவிப் புரந்தருள் புனித வேளே. (67)

எற்றைக்குந் தமிய னன்புன் னிடத்தினி லிருக்க வேண்டுங்
கற்றைக்குந் தளமின் னார்மோ கத்தினிற் காம னேமெய்
யிற்றைக்குந் தளர்ச்சி யில்லா திருதயத் திடைவி டாமற்
பற்றைக்குந் தங்கை யேந்தும் பரங்கிரிப் பதிச்செவ் வேளே. (68)

மயிலினில் வருதல் போலென் மனத்தினில் வரவு மாட்டா
யயிலினி லென்னைப் பெற்றை யறுத்தலு மாற்று யங்காக்
குயிலியல் பரங்குன் றத்திற் கூட்டியாட் கொளலுஞ் செய்யாய்
வெயிலியல் புழுப்போல் வாடி மெலிந்தனன் வேற்கை வேந்தே. (69)

கொடுவினை யெல்லா நீங்குங் குளிர்பரங் குன்றுற் றுறை
வடிவினை யாமற் செய்சேய் மலரடி வணங்கார் வஞ்சம்
படிவினை யஞ்செப் மாயப் பரதெய்வம் பணிவார் வெய்ய
கடுவினை யருந்து வாரே கனிதரு கனிகை விட்டே. (70)

தாயொன்று யிசைக்க வாறு தலைபுடல் தன்னிற் சேர
நீயொன்று மென்னே டொன்றுப் நிற்கின்ற நிலைமை தேரேன்
வாயொன்று லேனும் நீயும் வழுத்திட மாட்டா பென்றும்
நோயொன்றுப் பரங்கி ரிக்கண் ணுதலுக்கோம் நுயன்ற தேவே. (71)

சத்தியங் கைக்கொண் டுள்ளான் றண்டிக்குந் தானேன் றஞ்சிச்
சத்தியங் கைக்கொ ளாரைத் தணந்துனைச் சாரு மாறு
சித்தியங் குறச்செய் வாயேற் செய்ந்நன்றி மறவே னிட்ட
சித்தியங் கங்கைய் வார்வாழ் திருப்பரங் கிரிச்செஞ் சேயே. (72)

---

(67) கேழ்-ஒளி. கிளர்-விளங்குகின்ற. தாழுற-தாமதிக்க. போழுமாறு-பிளக்கும்படி. (68) கற்றை-திரட்சி. குந்தளம்-கூந்தல். ஏ-அம்பு. மெய்யில்-சரீரத்தில். பற்று-பொருந்துகின்ற ஐ-அழகிய. குந்தம்-கைவேல். (70) வடுவில்-குற்றத்தில். படு-ஆழ்ந்த. கடு-விடம். (71) தாய்-உமாதேவி. இயைக்க-சேர்க்க. என்னேடொன்றுய்-ஆன்மாவுடன் ஏகமாய். (72) சத்தி-வேலாயுதம். தணந்து-நீங்கி. சித்து-அரிய திருவிளையாட்டு. இட்டசித்தி-வேண்டிய வரம். ஏய்வார்-பொருந்துவார்.

இடையிடை நினைம றந்த விப்பிழைக் கின்னல் யானே
படைகுவன் பரங்கி ரிக்க ணறுமுகத் தண்ண லேநீ
மிடைபல துயரஞ் செய்ய வேண்டுமோ மேலோர் வெய்ய
கடையர்செப் பிழைபொ றுத்தல் கடனன் றோ கருதுங் காலே. (73)

கன்றுமா றுற்றி றற்றன் கவியுளங் கனிந்து சொல்வ
னென்றுநீ நினைந்தோ துன்ப மியற்றினை யிதுமெய் யென்றால்
நன்றுநன் றெனக்கே யுய்யும் நல்வழி நானுங் கண்டேன்
குன்றுதோ றுடல்செப் மெய்க் குன்றுறை குமர வேளே. (74)

வரவரத் தளர்ச்சி யேசெப் வாயெனில் வைவேல் கொண்ட
கரவரப் பரங்கி ரிக்கட் கற்றவர் காணுங் கந்தா
பரவரற் புதப்பெண் பாவை பயிலொரு பாக னாமீ
சுரவரற் குனக்கா ளாகித் தொண்டுசெப் திடுத லெங்கே. (75)

ஒருபுறம் பழுத்த செங்கா யொருபுறம் பழுத்தி டாம
லிருநிலத் திருப்ப துண்டோ வேழையேற் கிரங்கிப் பாதிப்
பருவர லொழித்தாய் மற்றைப் பாதியு மொழித்தல் வேண்டுங்
கிருபையோ ருருவங் கொண்டு கிளர்பரங் கிரிச்செவ் வேளே. (76)

கவலைவந் தடைந்தா லுன்னைக் கைதொழக் கதிக்கு மன்பு
திவலையு மெய்தா திந்தச் சிறுமைதீர்த் திடுவர் யாவர்
பவலைய மொழிவ தெங்கே பரங்கிரிப் பதியிற் றங்குங்
குவலையம் பூத்த பைம்பொற் கொடியருள் குமர வேளே. (77)

ஏடணை மூன்றி னுள்ளு மிம்மியு மேகா தென்றால்
வீடணை தருநன் மார்க்க மேவலெவ் விதஞ்சொல் வாய்நீ
நீடணை நிறைநீர் முந்நீர் நிகரென நிற்கும் பாண்டி
நாடணை பரங்கி ரிக்க ணன்மயில் நடாத்துங் கோவே. (78)

(73) மிடை-நெருங்குகின்ற. (74) கன்றுமாறு-வருந்தும் விதம். (75) கர-கையையுடையாய். வர-விசேடமாகிய. பரவர்-நெய்தல் நிலத்திலுள்ள சாதியார். ஈசுரவரற்கு-ஈசுரனாகிய சிவபிரானுக்கு. (76) பருவரல்-துன்பம். (77) கதிக்கும்-ஓங்கும். திவலை-ஓர் சிற்றளவு. பவலையம்-சனனத்தில் ஐக்கியமாயிருப்பது. குவலையம்-உலகம். (78) ஏடணை-ஆசை. மூன்று-மண், பெண், பொன். வீடு-மோக்ஷம். முந்நீர்-கடல். நாடணை-நாட்டினைச் சேர்ந்த.

தீமைசெய் வாரைத் தெய்வஞ் செறுத்திடுஞ் சினங்கொண் டென்றே
யூமைபோ லொன்றும் பேசா துறைந்தன னுன்கை வேலால்
வீமையற் கடற்கு ளந்த வீணரை வீழ்த்தித் தண்டி
யாமையென் றிருப்ப ரங்குன் றதிபதி யாகுங் கோவே. (79)

பாமரப் பதக ரென்னப் படுமைந்து பகைவ ரென்னை
யாமரற் குபதே சஞ்செ யண்ணலே யலைக்க நொநதேன்
மாமரத் தினைவ கிர்ந்து மயிலுஞ்சே வலுமாக் கொண்டு
காமரற் புறமெய் வெற்பிற் கலந்துறை கந்த வேளே. (80)

வழுச்செறி பொய்யா லென்னை மயக்கிய வஞ்சர் நாவிற்
புழுச்சொரி யச்செய் தாலுன் புகழ்க்குபே றபுகழாந தொண்டர்
குழுச்செறி பரங்கி ரிக்கட் குமரனே முத்தி காட்டும்
பழுச்செறி மேணி யென்னப் பதமலர் படைத்த தேவே. (81)

பூர்த்தியாய்க் கலைகள் கற்ற புலவர்தேர் புலவ னென்னு
மூர்த்தியாய் மும்மூர்த் திக்கு முதல்வனாய் முத்தி நல்குங்
கார்த்திகே யனைத்தேன் சிநதுங் கடம்பனைக் கைவேல் கொண்ட
கீர்த்திசால் பரங்கி ரிக்காங் கேயனைக் கிடைத்துய்ந் தேனே. (82)

இலக்கண விலக்கி யங்க ளிபன்றமட் டினிலுங் கற்றேன்
புலக்கணைப் தாமல் வாளா பொழுதெலாம் போக்கி விட்டேன்
கலக்கணீர் சிந்தக் காலன் கையுறிற் கவல்வே னிந்த
அலக்கணென் றொழிப்பாப் கொல்லோ அயிற்கைமெய் யசலத் தானே.()

யாதனை மெய்யி லெப்தி யான்படு மின்னல் யாதோ
பூதனை மெய்யிற் சாங்காற் புன்கணைப் பொறுக்கி லேன்மெய்
வேதனை யெய்தா வண்ணம் வேலனை மிளிருஞ் செம்பூம்
பாதனைப் பரங்கி ரிக்கட் பரமனைப் பாடு நெஞ்சே. (84)

---

(79) வீ-இறக்கின்ற. தண்டியாமை-தண்டனைசெய்யாதிருத்தல். (80) பாமரம்-மூடம். பதகர்-பாதகர். ஐந்து-பஞ்சேந்திரியங்கள். வகிர்ந்து-பிளந்து. காமர்-அழகிய. மெய்வெற்பு-பரங்கிரி. (81) செறி-நெருங்கிய. குழு-கூட்டம். (83) மெய்யசலம்-பரங்கிரி. (84) யாதனைமெய்-யாதனாசரீரம். அவ்தா வது-இம்மையிற் செய்த பாவத்துக்குத் தக்கபடி மறுமையில் துன்பமநுப விக்குஞ் சரீரம். பூதனைமெய்-பஞ்சபூதங்களாலாகிய தற்கால சரீரம். புன் கண்-துன்பம். மிளிரும்-பிரகாசிக்கும்.

பாட்டினுக் கின்ப மெய்தும் பரனெனப் பாவ லோர்தம்
ஏட்டினிற் கண்டே னந்த விறைமக னென்னி லச்சீர்
காட்டிநீ விளக்க வேண்டுங் கந்தனே கவிய னந்தந்
தீட்டிநின் பரங்கி ரிக்கட் சேர்ந்துவா சித்தேன் யானே. (85)

சிலச்சில கற்று நின்ற சிறுவர்க்குத் தினமு நின்றாட்
கலப்பல தில்லை மேலாங் கதியெனக் கார ணத்தாற்
பலப்பல சொல்லி னாலும் பற்றுமோ பரங்கி ரிக்க
ணுலப்பறு வேல்கை யேந்தி யுவந்துறை யும்பி ரானே. (86)

ஒருதிரு முருகன் வந்தா னுலகங்க ளுய்ய வென்று
பெருமையிற் சிறந்தார் முன்னம் பேசின ரதைப்பின் பற்றி
யருமையாம் பரங்குன் றத்தி லமருநின் னடிய டைந்தேன்
இருவினைத் தொடக்கை நீக்கி யென்னையீ டேற்று வாயே. (87)

நாறுபூங் கடம்ப ணிந்த நம்பிரா னம்மைக் காக்க
ஆறுமா முகங்கொண் டுற்றா னவனருட் பெருமை யாய்ந்து
கூறுவார் கோணிக் கோணிக் குமரனைப் பாடு கென்று
தேறுநீ பரங்குன் றத்தோர் சிறுகவி செப்பு நெஞ்சே. (88)

சிறுவிளை யாட்டிற் கேனுந் திகழுமெய்ச் சிலம்பிற் சென்று
மறுவிளை யாட்டி லேறும் வரதனும் வனசஞ் சாரர்
பெறுவிளை யாட்டி தன்பாற் பிரியன்சீர் பிறர்சீர் தூக்கி
நிறுவிளை யாட்டிச் சாங்கால் நெருக்குந்துன் பொறுத்தி டாதே. (89)

ஒருத்திதெய் வப்பெ ணுன்பா லுவகையுற் றுறைந்தும் பாவக்
குருத்தியல் வேடர் பெற்ற குறத்தியைக் கும்பிட் டேத்தித்
திருத்தியுட் களித்தா யென்றாற் சிறியரேஞ் செய்யுங் காம
விருத்தியை வெறுப்பாய் கொல்லோ மெய்ப்பர வெற்பின் வேந்தே. (90)

---

(85) இறை-சிவபிரான். தீட்டி-எழுதி. (86) கலப்பு-கலத்தல். உலப்பு-வாட்டம். (87) இருவினை-புண்ணியமும் பாவமும். தொடக்கு-சம்பந்தம். (89) மறு-குற்றம். விளை-உண்டாக்குகின்ற. ஆட்டில்-ஆட்டுவாகனத்தில். வனசஞ்சாரர்-வேடர். இளையாட்டி-இளமையுடைய மனைவி, வள்ளிநாயகி. நிறு-நிறுப்பாய். வின்-சொல்லுகின்ற. ஐ-கபம். ஆட்டி-அசைத்து. ஒறுத்திடாது-வருத்தஞ்செய்யாது. (90) குருத்து-இளம்பருவமுளை. கொடிச்சி-வேடப்பெண். பரவெற்பு-பரங்கிரி.

கழிபெருங் காத லாக்குங் காமத்தின் காவால் வெய்ய
பழிமொழி யெய்தி டாமற் பரங்கிரிப் பதியிற் காப்பாய்
அழிதக னேனும் ஆண்டா னடிமையை யகற்ற லாமோ
விழியருள் பொழிய நோக்கும் விமலனே வேற்கை வேந்தே. (91)

வானையு மளந்து மேற்போய் வளர்பா மலையு ளானுக்
கானையு மயிலு மூர்தி யாதல்போ லாடு மானுல்
மோனையு முறையு மில்லா மூடனேன் மொழிந்த பாடல்
ஏனைநல் லறிஞர் பாப்போ லியைவதற் கைய மியாதே. (92)

பராசரன் புதல்வர்க் காகப் பரங்கிரிப் பதியில் வந்து
தராசர விழிமு ழங்காற் சந்திர மதிபத் தாவாம்
இராசரா சன்செய் கோயி லினிலயி லேந்தி நிற்குஞ்
சராசர மீன்ற சத்தி தனையநின் சரணம் போற்றி. (93)

கன்னலே கனியே தீம்பால் கலந்தசர்க் கரையே கண்டே
யின்னமு தேபூந் தேனே யெண்ணுவார்க் கினித்தி ருக்கும்
பன்னலஞ் சுரந்த பாகே பரங்கிரிப் பதிச்சே யேநின்
பொன்னடிப் போதென் னெஞ்சுட் புகுத்தினன் போவ தெங்கே. ()

உயிர்க்குயி ராய்ப்ப ரங்குன் றுறைந்திடு மொருவன் றன்னைச்
செயிர்த்திடும் பகைஞ னென்று செருச்செயுந் திறல்வெஞ் சூரன்
மயிற்பரி யாகித் தாங்கும் வரம்பெற்று வாழ்ந்தா னென்றால்
அயிர்ப்பின்றித் தெய்வ மாக்கொ ளடியரேம் வாழ்வெற் றாமே. (95)

உருவமுஞ் சாந்த மாக்கொண் டுள்ளமுஞ் சாந்த மானாய்
குருவெனப் பிதாகை கூப்புங் குமானுங் குமர னேநின்
அருமையைப் பரங்கி ரிக்க ணறிந்தறிந் தடைந்தே னென்னை
வெருவா நோய்க்குக் காட்டி விடாதருள் மிகச்செய் வாயே. (96)

---

(91) கழி-மிகுந்த. காவால்-களவால். அழிதகன்-பாதகன். (92) ஊர்தி-வாகனம். மோனை-ஒருவரியில் ஒரு சீர்க்குப்பின் ஒருசீர்நிற்கு முறை நிற்றல். ஏனை-மற்றை. (93)பராசரன்-ஒரு மகாருஷி. தராசு-தராசுத்தட்டு. பத்தா-கணவன். சத்தி-பார்வதி. (95)பரி-வாகனம். அயிர்ப்பு-சந்தேகம். (96)சாந்தம்-சுண்ணச்சாந்து. கூப்பும்-குவிக்கும். வெருவா-பயப்பட.

உன்பற்றை யன்றி வேறே யொருபற்று முடைய னல்லேன்
தன்பத்தின் முடிவே தென்னிற் சுகமெனக் கற்றூர் சொற்றூர்
இன்பத்தின் றேற்றஞ் சற்று மில்லையே யின்னுந் துன்பம்
இன்பற்றி யுள்ள தோமெய்ப் பிறங்கலிற் பிறங்குஞ் சேயே. (97)

அரனுனை மைந்த னாக அமரர்தம் அல்லல் தீர்ப்பான்
வரவழைத் திட்ட தன்றி வளர்பர மலையா யுன்பாற்
பிரணவங் கேட்ட றிந்த பெற்றியென் பிரமம் நீயென்
றரமிகு மறிஞர் கண்டுள் ளுணர்தற்கோ வுரைத்தி டாயே. (98)

பிறந்திறந் துழலுந் தெய்வம் பெரிதெனப் பேசி யுண்மைத்
திறந்திறம் பினர்போ லாமற் றிருவருள் செய்வை யென்றால்
அறந்திகழ் திருப்ப ரங்குன் றயிற்கரத் தரசே யின்னும்
இறந்திறந் தெய்துஞ் சன்ம மெனைத்துக்கு மிடைந்தி லேனே. (99)

உலகெலாம் வியாபி யானு னுந்தையுன் றமைய னேஅவ்
இலகிய வியாபி பூசை யியற்றிடுந் தெய்வ மானுன்
விலகிவில் லுமிழும் வேலோய் மெய்ப்பர வெற்பின் மேலோய்
அலகினுன் மகிமை சற்றும் அறிந்திட வல்லர் யாரே. (100)

அடிமைசெய் பிழைகட் கிந்த அல்லல்போ தாதோ இன்னுங்
கொடியதண் டனைசெ யாமற் குணப்பெருங் குன்று மென்றும்
படிபுகழ் பரங்கி ரிக்கட் பயிலயில் பற்றி நின்ற
வடிதமிழ்க் கடலே கேட்ட வரமெலாம் வழங்கு வாயே. (101)

---

(97) மெய்ப்பிறங்கல்-பரங்கிரி. பிறங்கும்-விளங்கும். (98) பிரமம்-தனக்குமேலொன்றில்லாத பரம்பொருள். உரம்-ஞானம். (99) திறம்பினர்-மாறுபட்டவர். போலாமல்-சமானமாகாமல். எனைத்துக்கும்-எவ்வளவுக்கும். (100) வியாபி-எங்கும் நிறைந்தவன். உந்தை-உன்பிதா. விலகி-இடைவிட்டு. வில்-ஒளியை. உமிழும்-கக்கும். பரவெற்பு-பரங்கிரி. (101) படி-உலகம்.

முற்றிற்று.

இங்ஙனம்,

மு. ரா. அருணாசலக்கவிராயர்.

# பரங்கிரிக் கலித்துறையந்தாதி.

## கற்பகவிநாயகர் வணக்கம்.

ஒருங்கற் பகமுறு வானவர்க் காக்கிர வுஞ்சமெனும்
பருங்கற் பகவயி லேவுங் குமரன் பரங்கிரியின்
மருங்கற் பகலக லாமல் வதிந்து வணங்கவருள்
தருங்கற் பகவும்பல் யான்சொலந் தாதித் தமிழ்க்கவிக்கே.

## நூல்.

பொன்னம் பரமன் மருகா பரங்கிரிப் புங்கவனாய்
மன்னம் பரமன் குருவாம்நின் சீரடி வந்தடைந்தும்
துன்னம் பரமன்ன கட்பெண்மண் ணாசைத் தொடக்கினில்வீழ்ந்
தின்னம் பரமன்பு வைத்தேன் பிழைபொறுத் தேன்றுகொள்ளே. (1)

என்றா னமரர் படைப்பதி யாமிறை யென்னையினி
நான்றா னமரற் கிடமாப் பரங்கிரி நாடிவந்தேன்
வான்றா னமர சொடுநல்கி னானு மதித்திலனென்
போன்றா னமரவைக் குள்ளுண்டு மோநற் புலவர்களே (2)

புலவரை யாதும் புறக்கணி யாயது போலெனைய
கலவரை யாதுகைக் கொள்வாய்தெய் வானை கரம்பிடித்த
நலவரை யாதுதி செய்தெதிர் நின்றும்பர் நாடுமுயர்
குலவரை யாதுயர் தீர்ப்பாயென் கால்வலங் கொண்டிடவே. (3)

---

குறிப்பு:—காப்பு. அற்பு-அன்பு. பக-பிளக்க, அற்பகல்-இரவும் பகலும். நூல். (1) பொன்னம்பரம்-பீதாம்பரம். மன்-நிலைபெற்ற. அம்பரம்-அம்பும் அரமும். பரமன்பு-உண்மையும், அன்பும். (2) என்றான்-எற்றுக்கொண் டான். படை-சேனை. அமரற்கு-தங்குதற்கு. அரசொடு-இராசாங்கத்தோடு. நமர்-நம்மவர். (3) யாதும்-சிறிதும். விலையாது-நீக்காது. அரையா-அர சனே. வரையா-பரங்கிரியுடையவனே, வலம்-பலம்.

கொண்ட லனைத்தும் படிபரங் குன்றிற் குமரனையா
கண்டல னைத்துயர் தீர்த்துவின் னூடருள் கந்தனையோர்
மண்டல னைத்துணை கொண்டோன் பணியும் வான்குருவைப்
பண்டல னைத்து வணங்கவென் காற்றுயர் பாறியதே. (4)

பார்த்தனை யாவரு ளென்றேத்தப் பாசு பதங்கொடுத்தார்
சீர்த்தனை யாவரு வாயென றெனையும்வெந் தீவினையிற்
பேர்த்தனை யாவரு கேவந்து நின்னடிப் பேறுதவிச்
சேர்த்தனை யாவருஞ் சூழ்பரங் குன்றினின் சீர்த்திநன்றே. (5)

சீரமை யாமற் பொருளே யமைப்பர்பின் சென்றுநெடுந்
தூரமை யாமன நொந்தலுத் தேனித் துயரமெலாங்
காரமை யாமல கத்தூர் பரங்குன்றிற் கண்டுமுற்றுந்
தீரமை யாமலர்க் கண்வள்ளி நாயக செய்தருளே. (6)

செய்யம் புயங்கமழ் சீர்ப்பரங் குன்றுறை தெய்வமெனுங
கையம் புயங்கதிர் வேல்கடம் பேந்தி கழல்பணிந்தால்
வையம் புயங்க நிகரிடை யல்குல் மடந்தையரால்
ஐயம் புயங்க வருத்தாச் சுகமுற மடைவரன்றே (7)

அடைக்கலங் காமவி யும்பரங் குன்றென் றடைந்திருந்துஞ்
சடைக்கலங் கார மதியணி வான்குரு சாமிபத்தி
படைக்கலங் காலன் விடுதூதர் வந்தெமைப் பற்றுபொழு
திடைக்கலங் காமல் விடுவிப் பவரெவ ரேழைநெஞ்சே. (8)

ஏழைக் கலாதரு ளானென் றுனையென்று மேத்திலனல்
லூழைக் கலாதவென் னெஞ்சனல மேல்மெழு கொத்துருகாக்
காழைக கலாதமிழ் தேர்பரங குன்றிற்கு காமதிபின்
மாழைக் கலாதரன் கண்ணழற் கண்வந்த வானவனே. (9)

---

(4) ஆகண்டலன்-இந்திரன். அலனை-பலராமனை. அலனைத்து-அல்லலைக்கெடுத்து. (5) பார்த்தன்-அருச்சுனன். பேர்த்து-நீக்கி. அனையா-தாயாக. சேர்த்தனை-சேர்த்தாய். (6) சீா-சீர்திதியை. அமையாமல்-செய்யாமல். ஐயா-ஐயனே. கார்-மேகம். அமை-மூங்கில். ஆமலகம்-நெல்லிமரம். மையாம்-மை பூசுதலாம். (7) செய்-வயலிலுள்ள. கை-கையும். அம்-அழகிய. புயம்-தோளும். ஏந்தி-தாங்கியகுமரன். (வினையாலணையும்பெயர்) வையம் - தேர். புயங்கம், பாம்பு. ஐயம்பு-ஐந்துபுட்பபாணங்கள். (8) படைக்கலம்-படைத்தோமில்லை. (9) அலாது-அலாமல். ஊழை-முறையை. காழ்-வயிரம். ஐ-சாரியை. கலா-கல்லா. மாழை-அழகு. கலாதரன்—கலையைத்தரிசித்த சிவபிரான். கலை-சந்திரனது பாகம்.

வான வரம்பைய ருந்தே வருமின்ப வாழ்வுறச்செய்
கான வரம்பைய ருங்கட் குறவள்ளி காதலனே
ஞான வரம்பையர் சூழ்பரங் குன்றினை நாடிவந்தேற்
கான வரம்பையப் பையச்சற் றேனு மருளுகவே. (10)

அருமறை யாவுந் தொழும்பரங் குன்றினி லாணவத்தென்
னுருமறை யாமல் வெளியேற்றிக் காட்டியுன் னுள்மறைப்பாய்
திருமறை யாகன் மருகா குறவள்ளி சீறடியைப்
பொருமறை யாலகற் றுமென்று போற்றிய புங்கவனே. (11)

புங்க வரைத்துயர் செய்யும் பகைவரைப் போர்க்களத்தில்
மங்க வரைத்து மகிழ்நின் பரங்குன்றில் வந்துவந்து
தங்க வரைத்துன்ப மாயினு நீக்கிலை சண்முகனே
துங்க வரைத்துணைக் கொங்கைய ராசைத் தொடக்கறவே. (12)

தொடக்கற் றவருள்மெய்ஞ் ஞானிகள் சூழல் தொடர்ந்துபொறி
யடக்கற் றவஞ்செய் தறியேனைம் பாதக மத்தனையும்
விடக்கற் றவரொடு சேரேன் பரவெற்பில் மேவலருர்
படக்கற் றவர்கொண்ட வன்பெற்ற வேற்கரப் பண்ணவனே. (13)

பண்ணிய பாவம்நின் முன்னர்நில் லாது பரவையினுள்
ளண்ணிய பாவகன் முன்பஞ் செனவஃ தாய்ந்தறிஞர்
எண்ணிய பாவனந் தம்பாடி மெய்வெற்பி லேயிருந்தேன்
நண்ணிய பாவமென் பால்வைகு மோவள்ளி நாயகனே. (14)

நாயக னங்கணி யும்பூங் கடம்ப னயப்பரன்பின்
மீயக னங்க ணிறையறி வுக்குள் விளங்கியமாற்
சாயக னங்கணில் வந்தவன் யாந்தொழத் தங்குமிடம்
பாய கனங்கணி மேல்நாளுஞ் சூழும் பரங்கிரியே. (15)

---

(10) கானவர்-வேடர். அயரும்-சோரும். வரம்பு-அளவு. ஐயர்-மேலோர். (11) ஆணவத்து-ஆணவமலத்துள். மறு-கவுத்துவமணியின் தழும்பு. ஐ-அழகு. ஆகன்-மார்பையுடையவிஷ்ணு. பொருமல்-துன்பம். தையால்-பெண்ணே. (12) புங்கவர்-தேவர். அரைத்து-தேய்த்து. வரைத்துணை-மலைபோலும். (13) தொடக்கு-பந்தம். அருள்-கருணையுடைய. பொறி-பஞ்சேந்திரியங்களை. அடக்கல்-ஒடுக்குதலுடைய. கற்றவர்-மலைவில். (14) பரவை-கடல். பாவகன்-வடவாமுகாக்கினி. பா-பாட்டு. அபாவம்-இன்மை, தரித்திரம். (15) அங்கு-அவ்விடத்து. மீயகன்-மேலிடத்துள்ளவன். நங்கண்-நம்மிடத்து. மாற்சாயகன்-விஷ்ணுவாகிய பாணத்தையுடையவன். பாய-பரவிய. கணி-வேங்கைமரம்.

பரந்தா மனத்து மருகாவென் றேத்துநற் பாவெனுமா
யிரந்தாம னத்து விதமாயென் னோடு மிசைவனருள்
சுரந்தா மனத்து மலிபரங் குன்றுறை தூயசெவ்வேள்
வரந்தா மனத்துயர் தீரவென் பாக்கு வழங்குவனே. (16)

வழங்கு பழங்கரு ணைக்கட லாகிய மாமயிலோன்
கிழங்கு பழஞ்சரு காரற வோர்சொல் கியாதிமறை
முழங்கு பழன மலிபரங் குன்றினில் முத்துடல்க
விழங்கு பழங்கண் டவிர்ப்பா னவன்பத மேவுநெஞ்சே. (17)

மேவிப் பிரமன் முதலோர் பணியும் விரிசுனைச்செங்
காவிப் பிரமரம் பாடும் பரங்கிரிக் கந்தனைப்பூத்
தூவிப் பிரமமென் றேத்தி யனுதினந் தொண்டுசெய்து
சேவிப் பிரமரர் சூழ்வெள்ளி யங்கிரி சேருவிரே. (18)

சோரத் தியங்கு மடநெஞ்ச மேயிந் திரன்மகிழ்ச்சி
கூரத் தியங்கு மரிமணஞ் செய்பரங் குன்றிலுறை
வீரத் தியங்கு மயிலவே லனைவன வேடர்தங்கு
மாரத்தி யங்கு மகிழ்முரு கேசனை வாழ்த்துவையே. (19)

வாழிய மன்ற மிசைநடஞ் செய்வர் மதுரைநகர்ப்
பூழிய மன்றன் பிரம்படி யேற்பர்தம் பூசைசெய்வார்க்
கூழிய மன்றலை மேற்றாக் குவரவர்க் கொண்குருவாம்
வீழிய மன்ற முழங்கும் பரங்கிரி வேற்குகனே (20)

வேலா வலைய நிகர்செல்வர் வாழ்கின்ற வீடுதொறுங்
காலா வலைய மிடியால் வருந்திலர் கார்க்கடலும்
போலா வலையமர் பொய்கைப் பரங்கிரிப் பொன்மயிலோன்
பாலா வலையமில் லாமல்வைத் தேத்திய பாவலரே. (21)

---

(16) நத்தும்-விரும்பும். பா-பாட்டு. ஆயிரம்-அளவில்லாத. தாமன்-மாலையுடையவன். அத்துவிதமாய்-இரண்டற்ற ஒன்றாய். ஆம்-நீரிலுள்ள. மல்-வலிய. நத்து-சங்கு. (17) ஆர்-உண்ணுகின்ற. அறவோர்-முனிவர். பழனம்-வயல்கள். கவிழ்-வளைகின்ற. அங்கு-அவ்விடத்து. பழங்கண்-துன்பம். (18) பிரமரம்-வண்டு. சேவிப்பிர்-சேவியுங்கள். (19) சேர-முழுவதும். அத்தியங்குமரி-தெய்வானை. அயில்-கூர்மை. (20) வாழிய-(உலகம்) வாழ. மன்றம்-அம்பலம். பூழியமன்-பாண்டியராசன். ஊழ்-பகையாகிய. வீழ்-விரும்புகின்ற. இயம்-வாத்தியங்கள். மன்ற-மிக. (21) வேலாவலையம்-கடல். காலா-காற்றுப்போல. போலா-ஒப்பாகாத. பால்-இடத்து. ஆவல்-ஆசை.

பாவல ருந்த வரும்பாடல் கந்தர் பதமலர்க்காம்
ஆவ லருந்தமிழ் கற்பார் துதியு மணைந்ததற்காம்
பூவல ருந்தடம் பொய்கை மலர்களும் போந்ததற்காம்
மேவல ருந்தன் புடைவரிற் றும்பா வெற்பிடத்தே. (22)

வெற்புக் குமரிக்கும் வேலேவிட் டோன்றெய்வ வேழமெனுங்
கற்புக் குமரிக்கு மாலேயிட் டோன்கழற் கால்வணங்கும்
அற்புக் குமரிக்கு ரும்பைத் தனத்திய ராசைவலே
யிற்புக் குமரிக்குங் காற்பரங் குன்றி லெவர்துணையே. (23)

எவரங்க ணன்பின் வணங்குவ ரோவவ ரேற்றிடச்செப்
புவரங்க ணல்கும பரங்கிரிக கந்தாசெம பொன்னசலத்
தவரங் கணர்மைந்தர் தாள்வணங் காதவர் தம்முயிரைக்
கவரங்க ணங்கையர் மோகக கடற்கரை கண்டிலரே. (24)

கண்டிக்கு மார னலரம் பிறைக்கக் கறுத்தவனேத்
தண்டிக்கு மாரழற் கண்ணுற் கருள்குரு சாமியெனப்
பண்டிக்கு மார சுவாமியைப் பாடுவர் பல்புவைர்
எண்டிக்கு மாரறி யார்பரங் குன்றி விருப்பவரே. (25)

இருப்புக் கடலே யுருகாதற் றேயென் னிதயமற்றைப்
பொருப்புக் கடலே மிசைப்பரங் குன்றெனப் புக்கமர்நின்
விருப்புக் கடலே புனைவார் பணிவடி வேலவின்னுங்
கருப்புக் கடலேம மலக்கட் டுறுவிதங் காப்பதென்றே. (26)

காவனங் தங்கவின் காட்டும் பரங்கிரிக் கட்கமலப்
பூவனந் தங்க மலருஞ் சாவணப் பொய்கைபடிந்
தாவனந் தங்க ணயிலவேற் குமர னடிபணிவார்
பாவனந் தங்கணத் தோடெய்திச் சேர்வர் பரகதியே. (27)

(22) உந்த-செலுதத. ஆவல்-ஆசையுடைய. போந்து-வந்து. மேவலர்-பகைவர். புடை-பக்கம். (23) அரிக்கும்-கடலுக்கும். தெய்வவேழம்-தெய்வயானையம்மை. அற்பு-அன்பை. உக்கு-சிதறிவிட்டு. உமர்-உம்மவர்கள். (24) அங்கண்-அவிடத்து. செப்பு-சொல்லுகின்ற. பொன்னசலம்-மகாமேருவாகிய. தவர்-வில்லேயுடைய வர். அங்கண்-அழகியகண்கள். (25) இக்கு-கருப்புவில். கறுத்து-கோபித்து. பண்டு-முற்காலததில். (26) அற்றே-அத்தன்மைத்தே. பொருப்புக்கள்-மலே கள். விருப்புக்கு-விருப்பத்தின் பொருட்டு. அடலே-விபூதி. புக்கு-புகுந்து. அடல் - வருத்துகின்ற. ஐம்மலக்கட்டு-பஞ்சபாசக்கட்டு. ஆணவம், மாயை, கன்மம், மாயேயம், திரோதாயி. இவ்வைந்தின் குணங்கள் சித்தாந்த சாத்திரங் கற்றூர்க்கு நன்குவிளங்கும். (27) கா-சோலே. அனம்-அன்னப்பறவை. ஆவல்-ஆசை. நந்து-மிகுகின்ற. அங்கண்-அவ்விடத்து. பாவனம்-பரிசுத்தம்.

பாகதி யான பதமலர்க் கந்தன் பரங்கிரியில்
நாகதி யானடை யாதருள் வான்றனை நாடியின்னார்
விரக தியானர் வரினு மவரை வியந்தெதிரே
சாகதி யானடந் தேவந்து நல்குவன் றண்ணருளே. (28)

தண்ணிய விந்தமர் செஞ்சடை யான்பெறு சாமிதனை
யண்ணிய விந்தமெய்க் குன்றமர் வாரோ டமர்ந்துறையார்
எண்ணிய விந்தன மேலீமத் தீச்சுட வேறியிடர்
நண்ணிய விந்தபின் னென்செய்கு வார்முத்தி நண்ணுதற்கே. (29)

நன்றிக்கு முத்தர் தொழுஞ்சேய் பரங்கிரி நாம்புகழுந்
தென்றிக்கு முத்தா கிக்குஞ் சமஞ்செய் திறத்தர்தொழுந்
துன்றிக்கு முத்த நிகர்பற்சொல் வள்ளி துணைவரிட
மென்றிக்கு முத்தமிழ் வாணர்சொல் வாரிதை யேத்துவமே (30)

எத்தா ரணங்கள் முழங்கும் பரங்குன்றி விந்திரன்பெண்
பூத்தா ரணங்களத் திற்பல் லுயிரின்பம் பூணப்பொன்னாண்
யாத்தா ரணங்களிந் தன்பிற்செய் தானை வணங்குவரெற்
காத்தா ரணங்கற்ற வாழ்வெய்தி முத்தியுங் காண்பவரே. (31)

காணிய வாவிரு தாமன மேயெந்தக் காலமுஞ்சீர்
பூணிய வாவியை யும்பரங் குன்றிற் புலவனைவேற்
பாணிய வாவி யனையாயென் றேத்தயன் பற்றுமெழுத்
தாணிய வாவி யெழுதாது தீயெழுத் தைநமக்கே. (32)

ஐயங் கிடைக்கு மெனச்சொல் லினுங்கிடை யாதிதுவே
மெய்யங் கிடைக்குல நாதன் மருகனை வேண்டிலமேல்
செய்யங் கிடைகுலை யார்நீர்ப் பரங்கிரி சேர்ந்திருந்தால்
நையங் கிடைக்கு மொடுங்கச்செய் நோய்மிடி நண்ணிலமே. (33)

---

(28) பாகதி-மோக்ஷம். நரகது-நரகத்தை. சாகதி-பாணம்போன்ற வேகத்தொடு. (29) இந்து-சந்திரன். இந்தனம்-விறகு. ஈமத்தீ-சுடுகாட்டுத்தீ. (30) நன்றிக்கு-மோக்ஷமாகிய நன்மையின்பொருட்டு. திறத்தர்-வலிமையுடைய அகத்தியர். இக்கு-இப்பூமியிலுள்ள. (31) எத்து-துதிக்கின்ற. அண்-பொருந்திய. களம்-கழுத்து. பொன்னாண்-பொற்கயிறு, தாலி. தாரணம்-தரித்தல். அணங்கு-நோய். (32) காணிய-தரிசிக்க. பூண்-பொருந்திய. இயம்-மங்கலவாத்தியம். வாவு-கல்யாணச்சடங்கு. பாணிய-கையையுடையாய். அவாவி-விரும்பி. (33) செய்-சிவந்த. கிடை-நெட்டி. குலை-கூட்டம். நையம்-வருந்தமாட்டோம்.

நண்ணிலங் கைக்கும் படியாய தீயவை நான்குறழ்முக்
கண்ணிலங் கைக்கு மான்பரங் குன்றெதிர் கண்டபின்பொன்
பெண்ணிலங் கைக்கு வரத்தேடு மாசையும் பேர்ந்ததினித்
திண்ணிலங் கைக்குமன் சென்னியிற் றொள்வெற்புஞ் சேருதுமே. ()

சேர னலங்கண் டிசைப்பா ணனுக்குத் திருமுகந்தந்
தார னலங்கண் டருமுரு கன்றன தாற்றுப்படை
கீர னலங்கமை யன்பாற் புகலக் கிருபைசெய்தோன்
சூர னலங்க மடித்தான் பரங்கிரித் தூயவனே. (35)

தூய மனத்தவர் சூழ்பரங் குன்றினைச் சூழ்ந்துவரார்
காய மனத்தழ லேற்றும் பொழுது கவலைகொண்டு
தீய மனத்த வலையுட் படுவரித் தீமையற
மேயம் னத்தன் மருகா வெனக்கு விரைந்தருளே. (36)

விரைப்பங் கயமலர்க் கண்ணுமை யோடு வியந்திருக்க
அரைப்பங் கயலறி யாதருள் வான்மக னுண்டிருக்கும்
வரைப்பங் கயன்பணி யும்பரங் குன்றென வாழ்த்தியென்று
முரைப்பங் கயமுத லாகிய நோய்த்துய ரோடுதற்கே. (37)

ஓடிப் பதங்கன்ற ஈயா ரிடஞ்சென் றலைந்துமுகம்
வாடிப் பதங்கம் விளக்கினுள் வீழுதல் மானநொந்தேன்
கூடிப் பதங்கன் புறம்போ முயர்பரங் குன்றடையேன்
நீடிப்ப தங்கமன் றென்றெண்ணி லேன்கந்த நீயருளே. (38)

நீபதி யானறி வில்லாப் பசுவென்று நேர்ந்தவரைப்
பூபதி யான பதவியில் வைப்பன் புகுங்கருவி
லேபதி யானருட் கந்தனென் பாரதை யெண்ணியெண்ணிப்
பாப தியானமுள் ளேனும்வந் தேனிப் பரங்கிரிக்கே. (39)

---

(34) நண்ணிலம்-பொருந்தமாட்டோம். இலங்கு-விளங்காநின்ற. ஐ - அழகு. திண்-வலிய. வெற்பு-கயிலாசமலை. (35) நலம்-நன்மை. அனல்-அக்கினி. தனதாற்றுப்படை-திருமுருகாற்றுப்படை. அலங்கு-விளங்குதல். அல்-கரிய. (33) மன-மன்ன, பொருந்த. தழல்-மயானத்தீ. தீ-கொடிய. அத்தவலை-கையிலுள்ள வலை. மேய-பொருந்திய. மல்-வளம். நத்தன்-விஷ்ணு. (37) விரை-வாசனை. வரைப்பு-இடம். உரைப்பம்-சொல்லுவோம். கயம்-க்ஷயம். (38) கன்ற-வருந்த. பதங்கம்-விட்டில். பதங்கன்-சூரியன். நீடிப்பது-நீண்டகாலமிருப்பது. (39) பதி-இறைவன். பசு-ஆன்மா. பூபதி-அரசன்.

பரங்குன் றியலும் பிறகுன் றியலுமொப் பாமென்பைபல்
தரங்குன் றியங்கதிர் மாமணி நேரென்றுஞ் சாற்றுவையோ
அரங்குன் றியகண் ணியர்மோக வாரியு ளாழ்ந்துதின
மிரங்குன் றியக்க மறுப்பானங் கந்தனங் கேகுநெஞ்சே. (40)

ஏகுக கந்த முதலைங் குணமு மெனவிகந்தார்
மோகுக கந்தவி ராகிரண் டற்று முயங்கியமர்
மா குக கந்தவென் றேத்திப் பரங்கிரி வந்துவந்தே
யாகுக கந்த னுருவாகி வைகுவ ராய்ந்தவரே. (41)

ஆயசத் தித்திரட் குள்ளுயர் சத்தி யருண்மகனாந்
தூயசத் தித்திடு நீர்நிறை வாவி சுலாம்பரங்குன்
றேயசத் தித்திற லோட்டென வூர்ந்ததை யோட்டுநின்சீர்
பாயசத் தித்திப் பினுமினி தாங்கவி பாடுநர்க்கே. (42)

பாவிப் பிரசங் கதமதை விட்டுமெய் பாலித்தினி
மாவிப் பிரசங்க மாமறை யோசைவிண் வாய்ப்புகுசெங்
காவிப் பிரசங் கமழ்பரங் குன்றினிற் கந்தர்தஞ்சீர்
மேவிப் பிரசங்கஞ் செய்வீ ரருட்செல்வ மேவுமின்றே. (43)

மேவிலம் பாடு தவிர்ப்பா னுலோபர்தம் வீடுசென்று
கோவிலம் பாடுற நிற்பேன் பரங்கிரிக் கோக்குகனை
நாவிலம் பாடுதல செய்யநெஞ் சேயினி நந்தமக்கு
மாவிலம் பாடுபட் டுத்தேடுஞ் செம்பொன்பெண் வாய்த்தலென்றே.()

---

(40) இயலும்-தன்மையும். என்பை-என்று சொல்வாய். குன்றி-குன்றிமுத்து. கதிர்-ஒளி. மாமணி-மாணிக்கம். குன்றிய-கூர்மையாற் குறையப்பட்ட. இரங்கு-வருந்துகின்ற. (41) ஏகுக-போகக்கடவன. கந்தமுதலைந்துகுணம்-வாசனை, ரசம், உருவம், பரிசம், கந்தமாகிய ஐந்து குணங்களும். இகந்தார்-(அவற்றை) நீங்கினவர். மோகு-மோகத்தை. உகு-சிந்திய. அகம்-மனம். இரண்டற்று முயங்கி-இரண்டறக்கலந்து. ஆகு-ஆகின்ற. ககம்-அன்பு. (42) சத்தித்திரள்-சத்திக்கூட்டங்கள். உயர்சத்தி-பராசத்தியாகிய உமாதேவி. தூய-புனிதமாகிய. சுலாம்-சூழ்கின்ற. பரங்குன்றேய்-பரங்கிரியுடையவனே. அசத்து-(நாரதர் யாகத்திற்றோன்றிய) ஆட்டின். இத்திறல்-இந்த வலிமையை. ஊர்ந்து(அவ்வாட்டை வாகனமாகச்) செலுத்தி. (43) பாவிப்பிர்-பாவனை செய்யுங்கள். அசங்கதம்-ஒழுங்கில்லாமை. விப்பிரசங்கம்-பிராமணர்கூட்டம். பிரசம்-தேன். (44) இலம்பாடு-தரித்திரம். கோவில்-கண்ணில். அப்பு-நீர். ஆடுற-ததும்ப. நா-நாக்கு. இலம்-இல்லாமற்போனோம். மா-பெரிய. இலம்-வீடு.

என்றா ழியற்றமிழ் தேர்நம் பவவிருட் கின்னருட்சேய்
நன்றா ழியற்றச் செயும்பதி யென்று நயந்துமலர்
நின்றா ழியற்றரு வெல்லாஞ் சுலாவி நிறைந்தபரங்
குன்றா ழியற்றவெண் குன்றென்று நெஞ்சுட் குறிக்கொள்கவே ()

குறித்தறி யற்றிடக் கொல்யானை போலென் குறைத்தறியை
முறித்தறி யக்க வடிவாய்விண் ணோர்மயல் முற்றுமறத்
தறித்தறி யத்த னியல்காட்டி மைந்தநின் றுளெய்தலை
மறித்தறி யக்க மறுநின் பரங்குன்றில் மற்றுவந்தே. (46)

மற்றஞ்ச லஞ்சலென் பார்நின் னலாதெவர் மள்ளர்வய
விற்றஞ்ச லஞ்சல மீதென் றெடுக்கத் தவழ்வரம்புட்
பற்றஞ்ச லஞ்சல னத்தொடு நிற்கும் பரங்கிரியாய்
கற்றஞ்ச லஞ்சமை யாவெனைக் காலன் கடுத்திடினே. (47)

கடுகத் தனையன் பிலர்பாற் கொடுமென்று கைவிரித்த
லொடுகத் தனைய வருள்வான் பரங்கிரி யுள்ளமர்வேள்
வடுகத் தனையனை யீன்றோ னெனும்புர வாணர்தமை
யடுகத் தனையவென் றேத்து மவனை யருச்சிபுமே. (48)

அரிச்சு வடியும் படியாரைக் கம்பனென் றுங்கவர்முன்
சுரிச்சு வடிவொரு சாணுக நிற்குந் துயர்தவிர்ப்பாய்
கரிச்சு வடியங் கவலிற்செந் தேனைக் கணிமலர்கள்
விரிச்சு வடிய விடும்பரங் குன்றுறை வித்தகனே. (49)

---

(45) என்றாழ்-சூரியன். நன்று-நன்மையாகிய. ஊழ்-முறையை. ஊழ்-உதிர்க்கின்ற. சுலாவி-சூழ்ந்து. ஊழியற்ற-காலங்கடந்த. வெண்குன்று-கயிலாய மலை. (46) குறி-அடையாளமாகிய. தறி-யானைகட்டுந் தறி. அற்றிட-ஒடிய. முறித்து-ஒடித்து. அறு-வெட்டு. இயக்க வடிவாய்-(தேவர்களுடைய அகங்காரத்தையொடுக்கும் பொருட்டு) ஒரு யக்ஷனுடைய வடிவமெடுத்து. (இக் கதை காஞ்சிப்புராணத்திற் காண்க). அறிய - அத்தேவர்கள் தெரியும் படி. காட்டி-காண்பித்தவராகிய சிவபிரான். (காட்டி - வினையாலணையும் பெயர்) மறித்தல்-தடுத்தலையும். தியக்கம்-மபக்கத்தையும். மற்று-அசை. (47) அஞ்சல்-பயப்படாதே. தம்-தம்முடைய. சலஞ்சலம்-சங்கு. வரம்புள்-வரப்பினுள்ளிடத்தில். அம்-அழகிய. சலனத்தொடு-அசைவொடு. அஞ்சு-பஞ்சேந்திரியங்கள். அலம்-அமைவு, அடக்கம். சமையா-அமையா. (48) கத்தல்-கதறுதல். வடுகத்தனையன்-வயிரவராகிய புத்திரனை. அடு-கொன்ற. கத்தன்-சிவபிரான். ஐய-குருவே. (49) சுரிச்சு-சுரித்து. கரி-யானையின். சுவடு-கால் பட்டதழும்பு. அவலில்-பள்ளத்தில். கணி-வேங்கைமரங்கள். விரிச்சு-விரித்து.

வித்தின்றி யங்குரஞ் செய்யும் விநோதன்முன் வெய்யவிடத்
தைத்தின்றி யங்கு மரன்மைந்த ஞங்கந்த சாமியெனப்
பித்தின் றியங்குநெஞ் சேபரங் குன்றினிற் பேசுகிலாய்
செத்தின் றியங்குளி றக்கொடு போகிலென் செய்குவையே. (50)

செய்ய வளக்கரை யுங்கண் சிவப்பத்தன் சேயுயிரை
யைய வளக்கரை யன்யா ரெனிற்கரு நந்திணங்கள்
பைய வளக்கரை மேலூரும் வாவிப் பரங்கிரிவாழ்
மைய வளக்கரை வற்றச்செய் வேலங்கை வைத்தவனே. (51)

வைத்திருக் குந்தன மெல்லாங் கவர்பொது மாதர்மய
லைத்திருக் குந்த விடுப்பாரென் னெஞ்சை யலருங்கலங்
கத்திருக் குந்தமி யேனென்செய் வேனயிற் கைக்கும்ரா
இத்திருக் குந்த மாஞ்சூழ் பரங்குன் றினிலருளே. (52)

இனிக்காக மாகக் கரைந்தாலு மென்னென் றிடாயொருமாங்
கனிக்காக மாகடல் சூழண்டஞ் சுற்றுபைங் கார்மயிலாய்
பனிக்காக மாக மளக்கும் பொதிகைப் பரமகுறு
முனிக்காக மாதிகள் சொல்பரங் குன்ற முழுமுதலே. (53)

முழுமு ளரியலர் தீர்த்தங்க ளாடி முருகனைச்செங்
கழுமு ளரிய கனிநேர் தனவள்ளி காதலனைத்
தொழுமு ளரியம தூதர்கள் யாக்குந் தொடரினிற்கூர்
எழுமு ளரிய வருந்தார் பரங்குன்றி லீதுண்மையே. (54)

---

(50) அங்குரம் - முளை. முன் - முற்காலத்தில். அரன்-சிவபெருமான். பித்தின்-மயக்கத்தால். இயம்-பிணப்பறையாகிய வாத்தியம். குளிற-ஒலிக்க. (51) அ-அந்த. கரையும்-அழும். சேய்-பிள்ளையாகிய மன்மதன். அள்-வாரிக் கொண்ட. அக்கர்-கண்ணையுடையவர். ஐயன்-குரு. வளம்-வளம்பொருந்திய. மையஅளக்கரை-கரியகடலை. (52) திருக்கு-கண். உந்த-செலுத்த. அலரும்-புட்ப பாணமும். திருக்கும்-சுழற்றும். குந்தமரம்-குருந்தமரம். (53) மாகடல்-பெரும் புறக்கடல். பனி-குளிர்ச்சி. கா-சோலை. கம்-மேகமண்டலத்தையும். மாகம்-ஆகாயத்தையும். ஆகமாதி-ஆகம முதலிய நூல்கள். (54) முளரி-தாமரை. கழு முள்-மாதுளையின். உளர்-உள்ளத்தையுடையவர். யாக்கும்-கட்டும். தொடர்-சங்கிலி. கூர்-கூர்மை. முள்-முள்ளானது. அரிய-அறுக்க.

ஈதலங் காரக னுக்கதி தெய்வ மெனுங்னக்கே
யாதலங் காரல் மதலா யறிந்துநின் னூற்றெழுத்தை
யோதலங் காரக லாதூர் பரங்குன்றி லுன்னடிக்குப்
போதலங் காரம் புனையே மெம் முன்னென்று போதுவையே. (55)

போதுகந் தாவர சங்கமத் தூடு புகுத்துமொரு
வாதுகந் தாவர மாட்டாயென் முன்பு வளர்சிகரி
மீதுகந் தாவர மார்பரங் குன்றில் விருப்புறுநீ
யோதுகந் தாவரன் மைந்தா நினையொப் புடையனன்றே. (56)

உடையவ ராகு மூமக்கே யுரிமை யுடைப்பொருள்யான்
அடைய வராயென் றகற்றுமல் நீர்தடுத் தாளல்கடன்
இடைய வரானைக் கிழிக்கும் பசுமையி லீரைந்துதீ
விடைய வராக மிகந்தார் பயில்பர வெற்பினிலே. (57)

வெற்புரு வத்திறல் வேல்விடுக் குங்கரன் மிக்கவெண்மைப்
பொற்புரு வத்தி புதல்வியும் வேடர் பொருசிலைபோல்
நற்புரு வத்தியும் தோயும் புயங்கண்மூந் நான்குடையா
னற்புரு வத்திரங் காட்டும் பரங்கிரி யாண்டவனே. (58)

ஆண்டு கடந்த தளவுக்கு மிஞ்சி யறிவுகுன்ற
வீண்டுக டந்தது செய்வினை யிந்த விபத்தினியும்
ஈண்டு கடந்தரித் தாற்சகி யேனின் னிணையடியை
வேண்டு கடந்தவிர்த் தாள்வாய் பரங்கிரி மேற்குகனே. (59)

---

(55) ஈதல்-கொடுத்தல். அங்காரகன்-செவ்வாய். அங்கு-அவ்விடத்து ஆரல்-கார்த்திகை. ஓதலம்-ஓதமாட்டோம்.கார்-மேகம். போது-பூ. (56)போது-பூ. உகு-சொரிகின்ற. உகந்தா-மகிழ்ந்தா. கம்-மேகம். தா-தாவுகின்ற. வரம்-விசேடம்.ஒப்புடையன்-சமான முடையவன்.அன்றே-அல்லவே. (57)அடைய-சேர. வராய்-வரமாட்டாய். இடைய-வருந்த. மயிலீர் - மயில் வாகனத்தை யுடையவரே. ஐந்து-பஞ்சேந்திரியங்கள். விடைய அராகம் - விஷயமாகிய ஆசை. இகந்தார்-நீங்கியஞானிகள் (58)வெற்பு-கிரௌஞ்சகிரி. பொற்பு-அழகு. உரு-நிறம். அத்தி-வெள்ளையானை. புருவத்தி-புருவத்தையுடையாள். புயங்கண் -தோளும் கண்ணும். அற்புருவம்-அன்புவடிவம். (59) வீண்டுகள்-வீணாகிய குற்றம். ஈண்டு-நெருங்குகின்ற. கடம்-சரீரத்தில். வேண்டுகு-வேண்டுவேன். அடம்-வன்மம்.

மேற்குத் தமரக் கடல்போய்ப் பகல்விழின் வெய்யமூழுங்
காற்குத் தமர வருமிது நீரகங் காரவலி
யாற்குத் தமரன் றிடுமா யவன்மரு காவடிய
னேற்குத் தமரடை யும்பரங் குன்றத் திறையவனே. (60)

இறைவரை யாதுலர்க் கியா ரிடத்தி லியக்கிறும்மில்
உறைவரை யாதுணைக் கொண்டுய்கு வீரெங்கு முட்கலந்து
நிறைவரை யாது மருள்வடி வேலரை நீ ணுமன்பின்
முறைவரை யாது பணியும் பரங்குன்றின் முத்தியுண்டே. (61)

முத்தி யரிவையர் போகமென் பாய்நன் முறையறியாய்
பத்தி யரிவையம் பாக்கொள்வர் பாலறப் பார்த்தறிவைக்
கொத்தி யரிவை யகமே பரங்கிரிக் கூரியசெஞ்
சத்தி யரிவை யறிந்தா லுனக்குண்டு தண்டனையே. (62)

தண்டங் கரங்களிற் றூங்கிச் சமன்றமர் தாக்கியுனைக்
கொண்டங் கரங்கப் புடைக்குமுன் னேசென்று கூடல்நகர்
கண்டங் கரங்கம ராடல்செய் தார்பெறு காமர்செம்மை
மண்டங் கரங்கண் மலர்த்தாள் பரங்கிரி வாய்ப்பணியே. (63)

வாயச மானது மன்னாறம் புள்ளென்று மானுமென்பார்
ஏயச மானமென் பார்சீயு நானுஞ்சித் தென்றிடலாற்
பாயச மான முறும்புலி யோடு பயில்பரங்குன்
றாயச மான னடிமையென் றேநமை யாய்ந்திலரே. (64)

---

(60) தமரம்-ஒலி. பகல்-சூரியன். குத்து-வலி. அமர-தங்க. பூ-பூமிக்கு. தமர்-துவாரம். உத்தமர்-உயர்ந்த பெரியவர். பூமிக்குத் துவாரமிடுதலாவது பன்றியாகிப் பூமியைத்துளைத்து விஷ்ணு, சிவபிரான் திருவடியைத் தேடுதல். (61) இறைவரை-இறையளவு. இயக்கி-செலுத்தி, உறு-பொருந்துகின்ற. ஐ வரையா-பஞ்சேந்திரியங்களென்பவரையா. யாதும்-எதுவும். வரையாது-நீக்காது. (62) அரி-விஷ்ணுவை. வை-கூரிய. அறப்பார்த்து-கெடச்செய்து. அரிவை-அறுப்பாய். சத்தியர்-வேலாயுதமுடையவர். (63) தண்டம்-தடி. அரங்க-அழுந்த. புடைக்கும்-அடிக்கும். கண்-இடத்து. அரங்கு-வெள்ளியம்பலத்தில். அமர்-தங்குகின்ற. ஆடல்-நடனம். காமர்-அழகு. மண்டு-நெருங்குகின்ற. அங்கர்-திருமேனியுடைய முருகர். (64) வாயசம்-காக்கை. புள்-பறவை. மானும்-ஒக்கும். ஏய-பொருந்திய. சித்து-அறிவுள்ளப்பொருள். பாய்-பாய்கின்ற. அசம்-ஆடு. மானம்-வீரம். குன்றோய்-குன்றுடையவனே.

ஆய்வா ரமரர் முருகாநின் சீரங்க ணய்ங்கடியேன்
சேய்வா ரமரன் மகற்குறித் தென்றத் தினம்வணங்கேன்
நோய்வா ரமரன்று மின்றும் புரிந்து நொறுக்கிற்றிஃ
தோய்வா ரமரன் பயில்பரங் குன்றிலுண் டோசொல்லையே. (65)

ஓசனித் தற்பற வைக்குடம் பைநிக ருனுடம்புள்
ளேசனித் தற்பம ரும்பரங் குன்றில்வந் தென்னெஞ்சமாம்
ஔசனித் தற்பர போகமின் னுரு ளுலாவிவரும்
ஈசனித் தற்பர னென்னு துணையயி லேந்தரசே. (66)

எந்தலம் பார வடந்தாழ் தனமு மிருண்டகருங்
கூந்தலம் பாரமுங் கொண்டமின் னார்மயல் கூட்டுமதன்
காந்தலம் பாரத் துளைக்குந் துயரங் கடிபவருக்
காந்தலம் பாரக மேசெய் பரங்கிரி யன்றியின்றே. (67)

அன்றி னகர வமர்சூ ரனையடர்த் தார்விடிய
லின்றி னகரனை யொத்தசெம் மேனிய ரெய்துபரங்
குன்றி னகர வரீரைய கோநமக் குத்துணையார்
பொன்றி னகரமர் வார்கொடு போய்ச்சுடும் போதத்தினே. (68)

போதிக்கத் தக்க குருவாய்ப் பரங்கிரி புக்கன்பர்நெஞ்
சாதிக்கத் தக்கர மாறுட் பொருளுணர்த் தண்ணலையெண்
மாதிக்கத் தக்கதிர் வேலோயென் றேத்திடு மற்றுயந்தச்
சோதிக்கத் தக்கனைக் கொன்றார் குருவென்றுஞ் சொல்லிடுமே. (69)

---

(65) சேய்வாரம்-செவ்வாய்க்கிழமை. அத்தினம்-அந்தநாள். வார்-நீண்ட. அமர்-கலகத்தை. நொறுக்கிற்று-பொடியாக்கியது. ஒய்வு-ஒழிதல். ஆரமான்-சந்தனமரம். (66) ஓசனித்தல்-சிறகடித்தல். குடம்பை-முட்டை. சனித்து-தோன்றி. நித்தல்-தினந்தோறும். இ-இந்த. அயில்-வேலாயுதம். (67) அலம்பு-அசைகின்ற. காந்தல்-சுடுகின்ற. ஆர-உடல்நிறைய. கடிபவருக்கு-நீக்குகின்ற மெய்ஞ்ஞானிகளுக்கு. தலம்-இருப்பிடம். பார்-பார்ப்பாய். (68) அன்றின-பகைத்த. காவு-கள்ளம். நகர-செல்ல. வரீர்-வரமாட்டீர். பொன்றில்-இறந்தால். (69) ஆதிக்கத்து-உயர்ந்ததானத்தில். அண்ணலை-முருகக்கடவுளை. எண் - எட்டு. மா-பெரிய. திக்கு-திசையிலுள்ளவர். அத்தம்-கை. அத்தக்கனை-அந்தத்தக்கனாகிய மாமனை.

சொல்ல வளவுநின் சத்தியச் சொற்பொருள் துன்றுமன்பர்
புல்ல வளவு மொருநீ யெனினுநிற் புல்லுமந்த
இல்ல வளவு தவிபெறி லுன்னைவந் தெய்துவல்யான்
மெல்ல வளவும்ப ரார்சூழ் பரங்கிரி வேற்கரனே. (70)

வேற்கர வாசன மாக்கொண்ட எட்டினு மேவுமொன்றும்
பாற்கர வாசன் குமரா பரங்கிரிப் பாலிடையாம்
நாற்கர வாசரி யென்னும்பெண் பேய்கள்செய் நோய்பிடித்தக்
காற்கர வாசரி யாரெவ ரென்னையுங் கண்டருளே. (71)

கண்ட காக்குளிர் மூத்தினும் வேய்மூத்தர் கான்முளையென்
றெண்ட காக்குழல் வள்ளி மணாள னெழுதமுலுள்
ளுண்ட காக்குரு வானோன் பரங்கிரி யுள்வடிவேல்
கொண்ட காக்கு மரனவன் சீர்த்தியைக் கூறுமினே. (72)

கூறுக சத்திய கூவத்தின் மூழ்கிக் குளிறுமத
மூறு கசத்திரள் கூடும் பரங்கிரி யோங்கியஎண்
ணேறுக சத்தி யறிந்ததென் றேயன் றிமையவர்தம்
வீறு கசத்தி னிவர்வா னருளுவன் வேண்டியதே. (73)

வேண்டிய வஞ்சக லாதார்க்க வீதியில் மேவுமுக்ர
பாண்டிய வஞ்சகர் காணவொண் ணாத பரங்கிரியாய்
ஈண்டிய வஞ்சகத் தேரூர்வர் மைந்தவென் றேத்திநின்று
காண்டி யவஞ்ச கலமுந் தவிர்ப்பனக் கந்தனன்றே (74)

(70) சத்தி-தெய்வயானையாகிய கிரியாசத்தி. புல்ல-பொருந்த. அளவு-தாமும் கலந்துகொள்ளும். இல்லவள்-பத்தினியாகிய சத்தியின். அ வுதவி-அந்த உதவியை. மெல்ல-பைய. வளம்-வளந்தங்கிய. (71)ஆசனம்-இருப்பிடம். எட்டு-பஞ்சபூதங்கள்; சூரியன், சந்திரன், ஆன்மா. பாற்காவாசன், சூரிய னிடத்து வசிக்கும் சிவபிரான். அரவா-பாம்பா. சரி-ஒப்பு. கரவு-கள்ளத் தனத்தை. ஆசரியார்-கைக்கொள்ளாதவர். (72) கண்-கணுக்கள். தகா-உடைய. வேய்மூத்தர்-மூங்கிலடியிற்றோன்றிய சிவபிரான். கான்முளை-மகன். எண்-எண்ணப்பட்ட. தகரம்-மயிர்ச்சாந்து. உண்டகு-உண்ணத்தக்க. என்றே கூறுக என்று கூட்டுக. (73) கூறுக-சொல்வாய். (மனமே) குளிறும்-முழங்கு. கசத்திரள்-யானைக்கூட்டம். எண்ணேறு-அளவுகடந்த. உகசத்தி-யுகங்களின் வலிமையை. வீறு-பெருமையையுடைய உகு-கெடுக்கின்ற. அசத்தின்-ஆட்டுவாகனத்தில். (74) அஞ்சு-பஞ்சவாத்தியங்கள். ஆர்க்க-முழங்க. அம்சகத்தேர்-அழகிய பூமித்தேரை. காண்டி-தரிசிப்பாய்.

கந்தன் றிருப்பரங் குன்றங் கதிக்குங் கயிலையென
வந்தன் றிருப்ப வரைக்குறு மாமுனி வாழ்மலைவ
சந்தன் றிருப்ப முடியாது தையலர் தந்தனத்தைப்
பந்தன் றிருப்பரும் பென்றென்று கூறப் படுமயற்கே. (75)

படும் பாட்டி லேயுழல் வார்தமைப் பார்த்தும் பரங்கிரியாய்
குடும்பாட்டி லேசென்று கொண்டேனின் கீர்த்தியைக் கூறுகின்ற
நெடும்பாட் டிலேசமுங் கல்லேன் றழலி னிமிர்ந்துவந்த
இடும்பாட்டி லேறி வருமுரு காசற் றிரங்குகவே. (76)

இரங்காத வன்னெஞ் சுலோபரைப் பாடி யிரந்திடப்பல்
தரங்கா தவழி யொருகணத் தோடித் தளர்ந்தனன்முப்
புரங்கா தவன்மத லாய்துடி யாடல் புரியும்பொன்செ
யரங்கா தவஞ்செய் பவர்சால் பரங்குன் றகத்தருளே (77)

அகர வரியக் கரமுற்று நின்றதொப் பாமெனவிச்
சகர வரிதய மெங்குநின் றூர்தஞ் சடாக்கரத்தைப்
பகர வரிலவர் யாரேனு நந்தெய்வம் பன்மலர்த்தே
னுகர வரிகள் சுலாம்பரங் குன்றிடை நோக்குமினே. (78)

நோக்கஞ் சுருக்க நினைசெல் வரைக்கண்டு நொந்திரந்தால்
ஆக்கஞ் சுருக்கமு மீயா ரவரிடத் தாசைவைத்துப்
போக்கஞ் சுருக்க மொடுபரங் குன்றினிற் போபுன்மையே
தேக்கஞ் சுருக்கறத் தேய்க்குஞ்செவ் வேலன் றிருத்தருமே. (79)

---

(75) கதிக்கும் - ஓங்கும். வசந்தன் - தென்றற்றேருடைய மன்மதன். இருப்பரும்பு-இரும்பாற்செய்த தாமரையரும்பு. (76) குடும்பாட்டு-குடும்ப விளையாட்டு. இலேசமும்-சிறிதும். தழல்-நாரதர் யாகாக்கினி. இடும்பு-துன்பமுடைய. ஆட்டில் ஆட்டுவாகனத்தில். (77) காது-மோதுகின்ற. அவன்-அந்தச் சிவபிரான். துடி-குமரன் திருநடனம். அரங்கா-சபையையுடையவனே. (78) வரி - எழுத்து. அக்கரம்-எழுத்துக்கள். சகரவர் - உலகத்தவராகியவர். சடாக்கரம்-ஆறெழுத்து மந்திரம். நுகர-உண்ண. வரி-இசைப்பாட்டு. (79) நோக்கம்-பார்வையை. சுருக்க-குறைக்க. ஆக்கம்-செல்வம். சுருக்கமும்-சிறிதும். போக்கு-போதற்கு. அஞ்சு-பயப்படு. (மனமே) தேக்கு-நிறைந்த. அஞ்சு-பஞ்சேந்திரியங்களாகிய. உருக்கு-உருக்கை. அற-கெட.

திருத்தங் கமலையில் லார்கும ராவெய்ய தீப்பிணிகள்
வருத்தங் கமலைத் துரும்பா யமைந்துரு மாறியின்னங்
கருத்தங் கயலைக்கு மென்னையுங் காத்துன் கழலடிக்கீ
ழிருத்தங் கமலை யமர்பரங் குன்றினி லின்னினியே. (80)

இன்னினி யாயநின் றாளே பரமுத்தி யென்றுணர்ந்தேன்
உன்னினி யாயமு மஃதே பசுமயி லூர்முருகா
என்னினி யாயயி லேந்தா சேசற் றிரக்கம்வைப்பாய்
மன்னினி யாயக டெய்தா திருக்கும் வரந்தரவே. (81)

வரந்தர னன்று பரங்குன்றி லென்று மகிழ்ந்துவந்தார்
அரந்தர னன்றுகட் கென்னும்விண் வாழ்தெய்வ யானைதனைப்
புரந்தர னன்று தரப்பெற் றவர்கதிர் போலொளிமு
திரந்தர னன்றுயர் கூரச் சிறையிட்ட சீர்க்கந்தரே. (82)

சீராக மத்தி னுறைபொரு ளேயிடைச் சேரியில்முன்
னோராக மத்தி னடிபட் டவர்கண் ணிறைமருகா
ஓராக மத்தியு ளீர்ந்தீ ருயிர்கண்ட வொள்ளொளிவேல்
வீரா கமத்திரு வார்பரங் குன்றை வியப்பவனே. (83)

வியப்பா னலகில் மறைமுற் பொருளை விளாததனால்
நயப்பா னலன்பிர மாவையென் றன்பருள் நாடுகந்தா
பயப்பா னலங்கெடல் போல்வினை ரோடு பயின்றுகெட்டேன்
கயப்பா னலங்கல ரும்பரங் குன்றிலென் கன்மயிதே. (84)

---

(80) திரு-சிறந்த. அங்கம்-சரீரம். கரு-கருப்பாயசப்பைக்குள். அம்-அழகிய. கமலை-இலக்குமி. இன்னினியே-இப்பொழுதே. (81) இன்னினி-இப்பொழுது. ஆய-ஆராய்ந்துபார்க்க. உன்னில்-நினைக்குமிடத்து. இனியாய்-இனிமையுடையாய். மன்-அசை. இனி-இனிமேல். யாய்அகடு-தாய்வயிற்றில். (82) வரந்தால்-வரம்அருளுதல். தரன்-ஒப்பு. அன்று-அல்ல. கதிர்-சூரியன். அந்தர்-அழகுடையவர். அனன்-அன்னவாகனத்தையுடையபிரமன். (83) சீர்-சிறந்த. கண்ணிறை-கண்காட்சிக்கு நிறைந்த. ஓர்ஆகம்-ஒரு சரீரத்தின். மத்தியுள்-நடுவில். ஈருயிர்-சூரன்பதுமனென்னும் இருவருயிரை. கமம்-நிறைந்த. (84) வியப்பான்-மகிழும்பொருட்டு. மறைமுற்பொருள்-பிரணவப்பொருள். விளாததனால்-சொல்லாததனால். நயப்பானலன்-விரும்பாதவன். பயப்பால்-நீரொடு கலந்தபால். கயம்-தடாகத்தில். பானல்-நீலோற்பலம்.

கன்மங் கலக்கந் தரவன்மங் கொண்டு கடுத்ததந்த
வன்மங் கலக்கந் தரஞ்செய் பரங்கிரி மாமயிலோய்
பொன்மங் கலக்கந் தரமட மாதர்சம் போகம்விரும்
பன்மங்க லக்கந் தரம்பணிந் தேனுனைப் பார்த்துவந்தே. (85)

பாத்தாரப் பாவலர்க் கீயேனிப் பார்மயற் பற்றறுத்து
நீத்தாரப் பாவ லதுந்தணி யேனித னின்றுநினை
காத்தாரப் பாவலர் கொய்வேடர் வாழ்பரங் கற்கடப்பம்
பூத்தாரப் பாவலஞ் சூழே னுனையெற்கென் புத்தியிதே. (86)

புத்திரத் தானம் பெறக்கரு வூடினும் போயடையீர்
அத்திரத் தான வரைக்கொல் பரங்கிரி யாள்குகனை
நத்திரத் தாலவ மேன்மேலு மாமவ னற்பதத்தைப்
பத்திரத் தானன் மலரா லருச்சனை பண்ணுமினே. (87)

பண்ணப்பம் பாயசம் போலுமின் சொல்லியர் பாற்பருந்துண்
புண்ணப்பம் பாய விழிவலை யுட்சிக்கிப் போயலைந்தோர்
விண்ணப்பம் பாய புகழ்ப்பரங் குன்றில் விளம்பிடினும்
உண்ணப்பம் பாய ரளைகவர்ந் தான்மரு கோற்குவப்பே. (88)

ஓரஞ் சவையக லாநட மாடி யுவக்குமைந்தர்
நீரஞ் சவையன் பணிபரங் குன்றர் நிறையசுரர்
மாரஞ் சவையயில் விட்டார் புலவர் மயங்குபொருட்
சாரஞ் சவையறி யப்புகன் றார்நந் தமிழ்த்தெய்வமே. (89)

---

(85) கன்மம்-தீவினை. கடுத்து-கோபித்து. வன்மம்-வைராக்கியத்தை. கலக்கு-கலங்கச்செய். அந்தரஞ்செய்-நாசஞ்செய். கந்தரம்-கழுத்து.விரும்பல்-இச்சித்தல்.மங்க-கெட. (86) பாத்து-சோறு. ஆர-உண்ண. நீத்தார்-தள்ளியமுனிவர். அப்பு-நீரினது. இதண்-பரண்மேல். ஆரம்-சந்தன மரத்தில். பா-பரவிய. பரங்கல்-பரங்கிரி. (87) புத்திரத்தானம்-புத்திரப்பருவமாகும் இடம். அ-அந்த. திரம்-வலிமையுடைய. தானவர்-அசுரர். நத்திர்-விரும்பமாட்டீர். அத்தால்-அவ்விருப்பத்தால். (88) பண்-இசை. புண்-இறைச்சி. அம்பு-பாணம். பாய-பரந்த. பம்பு-நிறைந்த. அளை-தயிர். (89) அஞ்சு அவை-பஞ்சசபையில். ஆடி-ஆடிய சிவபிரான் (ஆடி-வினையாலணையும் பெயர்.) நீர்-நீரிடத்துள்ள. அஞ்சம்-அன்னவாகனத்தையுடைய.ஐயன்-பிரமன். (அயன் ஐயனென்பது போலி.) மார்-மார்பு, வை-கூரிய, சவை-சபையிலுள்ளவர்,

தமிழ்வா ரியபெருஞ் செந்நா வுடையவர் தாமருந்தி
யுமிழ்வா ரியலற வேலேவி னார்பதம் உள்ளுகிலார்
சிமிழ்வா ரியலுந் தனமென மாதர்தந் தீமயற்குள்
அமிழ்வா ரியல்மலி யும்பரங் குன்றி லறிநெஞ்சமே. (90)

அறிவா கரனெனுந் தன்னையென் னைக்கண் டறிவிப்பனஞ்
சறிவா கரனிகர் மேனியன் பல்லுயிர்த் தாய்தனத்தின்
குறிவா கரன்மகன் றென்பரங் குன்றுறை கோனவன்சொல்
நெறிவா கரனிரண் டுங்குவித் தேபெதி னின்னெஞ்சமே. (91)

நின்றா ரகத்திய விந்திரன் பெற்ற நிகரறுபெண்
ணென்றா கத்திய ரூபத்தி லுந்தெரி யேனெனையாள்
நன்றா ரகத்தியன் போற்றும் பரங்கிரி நண்ணுகடம்
பின்றா கத்தி யனையகண் ணார்மயக் கின்றறவே. (92)

இன்னம் பலமற வெய்த்தாலென் செய்வ வியலளிகள்
மன்னம் பலமர மங்கையர் பாற்கொண்டு மாட்டுமிதைப்
பொன்னம் பலமகிழ் வார்கும ராமுற்றும் போக்கியருள்
அன்னம் பலமலி யும்பரங் குன்றினி லன்புவைத்தே. (93)

அன்பத் தனையருள் செய்வான் பரங்குன் றமர்பரம
ரின்பத் தனயனென் றேகேள்விப் பட்டுன் னிடத்தில்வந்தேன்
முன்பத் தனையக டுற்றான் மருக முருகவினி
யென்பத் தனைய விடேனென்று காப்பதற் கென்றடையே. (94)

---

(90) வாரிய-அள்ளிய. உடையவர்-உடைய அகத்தியர். உமிழ்-கக்கிய. வாரி-கடல். வார்-கச்சு. அமிழ்வார்-அழுந்துவார். இயல்-தமிழ். (91) அறிவா கரன்-ஞானத்தினிருப்பிடமான முருகன். அஞ்சல்-பயப்படாதே. திவாகரன்-சூரியன். தாய்-உமாதேவி. குறி-அடையாளம். வாகு-புயம். நெறி-வழியில். வா-வருவாய். நில்-நிற்பாய். (92) தாரகத்து-பிரணவமந்திரத்தின். தார-மனைவி யையுடையாய். கத்தியரூபம்-வசனவடிவம். தார-மாலையுடையாய். (93) பலம்-வலிமை. அம்பு-பாணம். அலமர- சுழல. (94) அத்தனை-அவ்வளவு. தனையன்-புத்திரன். பத்தனை-பத்துத்தரீய். அகடு-வயிறு. பத்தன்-தொண்டன். நைய-வருந்த.

என்றென் றுயரிளைப் போக்குவை வானத் தினிலெழுந்து
நின்றென் றுயரி புகாப்பொழி லூடு நிறையளிகள்
இன்றென் றுயரிய சீர்ப்பரங் குன்றி லிவையிரண்டு
குன்றென் றுயரிய கொங்கைத்தெய் வானையைக் கொண்டவனே. ()

கொண்டலைத் தந்திரத் தாவின மென்று குழீஇச்சுமக்குந்
தண்டலைத் தந்திக ளுச்சிப் பொழுதையுந் தந்திறத்தால்
மண்டலைத் தந்திர வாக்கும் பரங்கிரி வாய்க்குகனாற்
பண்டலைத் தந்தி லெனையாக்கு மாணவப் பற்றறுமே. (96)

பற்றற்ற வஞ்சியர் பாலாசை கொண்டு பரங்கிரியின்
முற்றற் றவஞ்சிறி தாற்றேன் புகலு மொழியினிற்பொய்
எற்றற் றவஞ்சிந் தையிலுன் டெனையம னீர்த்துக்கயிற்
றிற்றற்ற வஞ்சினங் கொண்டுறிற் கந்தனங் கெய்துவனே. (97)

எய்த்த விடத்திரு டன்யான் பரங்குன்றி லின்சுவைகொள்
நொய்த்தவி டத்திருச் சேந்தன் கொடுக்க நுகர்ந்தவர்முன்
னுய்த்தவி டத்திருக் கேய்வள்ளி நாயகர் தூயநல்லோர்
மெய்த்த விடத்திரு வாவென் றெனையும் விரும்பலென்றே. (98)

விரும்புஞ் சரியையுஞ் செய்யேன் மலர்மது மெத்தவுண்டு
சுரும்புஞ் சரியை விடாப்பரங் குன்றைத் தொழேன்மனமும்
இரும்புஞ் சரியை மயிலோய் கருவிக ளென்னுமென்னுட்
பொரும்புஞ் சரியை பறவிளம் பொன்னடிப் போதருளே. (99)

(95) என்று-எந்நாள். என்று-சூரியன். உய்-செலுத்துகின்ற. அரி-கிரணம். இன்-இனிய. தென்-தேனை. (விகாரம்) துய்-உண்ணுகின்ற. உயரிய-உயர்ந்த.(96) திரத்தால்-வலிமையால். தண்டலை-குளிர்ந்ததலை. மண்டு-நெருங்கிய. அலை-இருளை. (விகாரம்) இரவு-இராத்திரி. அலைத்து-வருத்தி. யாக்கும்-கட்டும். (97) பற்று-அன்பு. முற்றல்-முதிர்தலையுடைய. எற்று-எத்தன்மையுடையது. அற்று-அத்தன்மையுடையது. ஈர்த்து-இழுத்து. தற்ற-கட்ட. வஞ்சினம்-சபதம். (98) விடத்திருடன்-விடனாகிய கள்ளன். அத்திரு-அந்தச் சிறப்புப்பொருந்திய. சேந்தன்-(திருவிசைப்பாபாடிய) சேந்தனார். நுகர்ந்தவர்-உண்ட சிவபிரான். துய்த்த-உண்ட. விடத்திருக்கு-ஆலகாலவிடம் போன்ற கண்-(99) உஞ்சு-உய்ந்து, பிழைத்து. சரியை-சோலையை. சரி-சமானம். ஐ-அழகிய. கருவிகள்-தத்துவங்கள். பொரும்-போராடும். புஞ்சர்-கூட்டத்தவர். இயைபு-சம்பந்தம். அற-கெட. இளம்பொன்-உருக்கியோட விட்டபொன்.

இளகா தனல்மெழு காயென் னிதய மிதையிளக்கும்
அளகா தனமிசை யுற்றளி பாடுதெய் வானைதன்பா
லுளகா தனன்கு பரங்கிரி யிற்கண் டுடன்கலந்த
புளகா தனதென யான்கொண்ட நின்னடிப் பொன்மலரே. (100)

(100) இளகாது-உருகாது. அளகாதனம்-கூந்தலாகிய ஆசனம். நன்கு-நன்றாக. புளகா-மகிழ்ச்சியுடையாய்.

முற்றிற்று

இங்ஙனம்,

மு. ரா. அருணாசலக்கவிராயர்.

# பரங்கிரிப் பதிற்றுப்பத்தந்தாதி.

## கற்பக விநாயகர் துதி.

பதிற்றுப்பத் துப்பாப் பரங்கிரியிற் பாடித்
துதித்துக் குமரனெதிர் சொல்லக் —கதித்துப்
பொருந்துதிக்கைக் கற்பகமென் புந்தி வசத்தாய்
இருந்துதிக்கை வாக்கருளு மே.

## நூல்.

பார்க்கு ளுயர்ந்த பரங்கிரியிற் பன்னூ லாய்ந்த பலபுலவர்
ஆர்க்கு முயர்ந்த புலவனென அயில்வே லேந்தி யாசிருந்து
சீர்க்குஞ் சரியைத் திருமணஞ்செய் தேவன்வள்ளிதிருமணமுங்
கார்க்குஞ் சாமா முகனருளாற் கண்டோ னென்னைக் காப்பவனே. ()

காப்பார் கடைமை செலுத்தாரேற் காக்கப் படுவார் காப்பவரை
நீப்பா ரதன்மேல் வருநிந்தை நினைக்கில் யார்க்கோ நீசொல்லாய்
பாப்பார் பரவும் பரங்கிரியிற் பயிலு மயில்மேற் பவனிவருஞ்
சேப்பார் வேலா எனைக்காத்தல் செய்யா யென்னுன் றிருவுளமே. ()

திருந்தா ரென்ன சொன்னாலுந் திகழ்பே ரறிவு சிறிதுமிலார்
இருந்தா ரிறந்தா ரென்றெண்ணு தென்று மிருட்போ மெனநினைவார்
குருந்தார் குருவின் குருவாமெய்க் குன்றூர் பாதங் குறிக்கொண்டு
பொருந்தா ரவர்போந் தீநெறியிற் போகா திருவென் புன்மனமே. ()

மனமா தியமூன் றொருத்துநேர் வழிச்செல் லாத மாந்தரொடு
தனமா தியபொய்ப் பொருள்தேடித் தவித்துத் திரியுந் தமியேனைத்
தினமா தருமைத் தருமயக்கஞ் செய்யா திருக்கத் திருவருள்செய்
அனமார் வயல்சூழ் திருப்பரங்குன் றதில்வீற் றிருக்கு மயிலரசே. ()

அரசே குன்று தோறாட லமர்செய் செந்தூ ரன்பரெலாம்
பரசே ரகநற் பழமுதிர்காப் பழநி தமிலும் பரங்கிரிபோல்
வரசே யாய நீயிருக்கு மாண்பு தெரிந்தேன் மனத்துண்மதன்
முரசே யன்ன பேரன்பு மூளத் தீயூழ் முடிந்ததுவே. (5)

---

குறிப்பு:—பொரும்-மோதும். இரும்-பெருமை பொருந்திய. துதிக்கை-தோத்திரஞ்செய்தல். (1) அயில்-கூர்மை. கண்டோன்-செய்தோன். (தாற்பரியம்.) (2) நீப்பார்-நீக்குவார். பா-பரந்த, விரிந்த. சேப்பு-சிவப்பு. (3) குருந்து-(திருப்பெருந்துறையிலுள்ள) குருந்தமரம். மெய்க்குன்று-பரங்கிரி. (4) மனமாதிய மூன்று-மனம் வாக்கு காயமாகிய மூன்று. அனம்-அன்னப்பறவை. (5) பரசு-துதிக்கின்ற. வரசேய்-விசேடமாகிய முருகன். மதன்முரசு-கடல்.

முடிக்குங் கரும மேதேனு முயாலும் போதே முன்வந்து
பிடிக்கும் பிடியை விடாதுபுறம் பெயர்த்துத் தள்ளும் பெற்றிபெற்ற
மிடிக்கும் பிணிக்கு மென்செய்வேன் வேலா விவற்றை வீட்டுவையேற்
படிக்கும் பரங்குன் றிடைநின்சீர் பயிலுங் கிள்ளைப் பறவையுமே. (6)

பறக்கும் பறவை யாதிவெறும் பாழ்போஞ் சன்மம் படையாமற்
சிறக்கு மரிய மனிதசன்மம் சேர்ந்தே னுனது திருவருளால்
மறக்கும் பால தோவிதுதான் வாய்த்த பயனுன் மலரடி நான்
இறக்கும் வரையும் பரங்கிரியி லிறைஞ்ச முருகா இனியருளே. (7)

இனியே துய்யும் வகையென்ன ஏங்கி யிடமா தியஇன்றித்
தனியே யிருந்து வாடியுளந் தளர்ந்தேன் குற்றந் தனைநோக்கி
முனியே லாறு முகங்கொண்ட முதலே மதுர முதிர்செழுந்தீங்
கனியே யமுதே பரங்கிரியிற் கருணை மலர்ந்த கற்பகமே. (8)

கற்பார் பிறர்க்குப் போதிப்பார் கடுகத் தனையுங் கற்றநிலை
நிற்பா ரல்ல ரவரிணக்கம் நேரா தியற்றி நீடுபர
வெற்பா ரரசே நன்னெறிக்கண் மேவு நினது மெய்த்தொண்டர்
அற்பார் நெஞ்ச மடியேற்கும் அருள்வா யுனைவந் தடைவதற்கே. (9)

அடைந்த கூடு கணக்கிட்டா லனந்த கோடி யவையனைத்தும்
உடைந்த தவமே தற்போதிங் குற்றகூடு முடையுமுனங்
கடைந்த வமுதாஞ் சரவணப்பொய் கைநீர் கார்த்தி கைந்நாளிற்
குடைந்த மாந்தர் பேறுபரங் குன்றாய் தந்தாட் கொண்டருளே. ()

வேறு.

கொண்டலுங் கயமுந் தம்மைவெவ் வேறு குறித்தறி யாக்குறை தீரத்
தண்டரு மமுத தாரையு மதநீர்த் தாரையும் பொழிதரு சாரல்
கண்டவர் மகிழும் பரங்கிரி முருகக் கடவுளைக் கருணைமா கடலை
யெண்டகுமென்னெஞ்சுள்ளடக்குவதற்கிடம்விரிந்திட்டதென்வியப்பே. (11)

---

(6) பெயர்த்து-திருப்பி. வீட்டுவையேல்-கெடுப்பாயானால். (7) பாலதோ-பகுப்புடையதோ. (8) இடமாதிய-இடம், பொருள், ஏவல். முனியேல்-கோபஞ்செய்யாதே. (9) பரவெற்பு-பரங்கிரி. அற்பு-அன்பு. (10) கூடு-சரீரம். குடைந்த-மூழ்கிய. பேறு-பயன். கயம்-யானை. (11) சாரல்-மலைப்பக்கம்.

வியப்பினுன் வியப்பாம் பரங்கிரிக் குமர வேளொரு வேங்கையாய் வெய்ய
வயப்புளி நருக்கு மகளெனுஞ் சிறுமி வாயிதழ்க் கலந்துற வருந்தி
நயப்புளம் பெருக நின்றது மன்பி னலமிலா எனக்கெதிர் வைபங்கே
கயப்புள்வா கனமேற் காட்சிதந் தளித்த கருணையுங் கண்டவர் தமக்கே. (12)

தமக்குமா றாய புலப்பகை கடக்கத் தக்கவர் தம்முயிர்க் குறுதி
யெமக்குவந் தெய்து மெனப்பரங் கிரிவே ளிடைவிடா திருப்பதற் கிடமாம்
நமக்குமா ராய மந்திரங் கணிப்பர் நாமுமந் நன்னெறி நடந்தாற்
சுமக்குமிப் பெரிய தத்துவத் தொகுதிச் சுமையினித் தொலைந்திடுந் தானே.()

தான்வா லுறுமிச் சனனமின் னகற்றுத் தாமெனச் சற்றுமெண் ணாமல்
மீன்வலைப் படுதல் போற்பிர வஞ்ச வேலையுள் வீழ்ந்தவென் னெஞ்சம்
யான்வளி தீநீர் மண்மய மாமிவ் வஞ்சக வுடலினி மாய்ந்தால்
தேன்வரு கடம்பன் பரங்கிரி சென்று திருப்பணி செய்துய லென்றே. (14)

என்றுநீ யன்று நானெனப் பெரியா ரிரட்டுற மொழிந்தசொல் லியலுக்
கொன்றுதான் பொருளென் றகங்கரித் திருப்பர் யோசனை செய்துனக் காளாய்
நின்றுநான் வேறென் றெண்ணில ரிவர்வீழ் நீந்தரு நிரயத்தி லியானுஞ்
சென்றுவீ ழாநல் லறிவுறத் தருள்வாய் திருப்பரங் கிரியமர் சேயே. (15)

சேயெனும் பெயர்நீ கொண்டது நிறத்தின் சிறப்பினோ தேவரு மறையுந்
தாயநின் னிலைமை காண்பதற் கரிய தூரமென் றிடுந்தொடர் பானோ
ஆயநா ளனைத்து மிளமைநீங் காத அதனினோ பிறஎதனாலோ
பாயசெஞ் சுடரே பண்ணவர் சேனா பதியெனும் பரங்கிரிப் பரனே. (16)

பரமசற் குருவைப் பரங்கிரித் தேவைப் பழமறை பகர்பெரு மானை
வரமனைத் துதவும் வள்ளலைக் கருணை வாரியை மாணிக்க மலையைப்
பிரமனைச் சிறையில் வைத்துவிட் டருளும் பிரமமாம் பெருந்தகைப் பிரானைச்
சிரமசைத் தெளியன் பாடலைக் கேட்குஞ் செவியனைச் சேர்ந்தனன் யானே.()

---

(12) வேங்கை-ஒருமரம். புளிநர்-வேடர். கேகயப்புள்-மயிற்பறவை. (13) புலப்பகை-பஞ்சேந்திரியங்களின் விரோதம். கணிப்பர்-செபஞ்செய்வர். தொகுதி-கூட்டம். சுமை-(சரீரமாகிய) பாரம். (15) இரட்டுறமொழிதல்-ஒரு வாக்கியத்தில் இரண்டு பொருள்படச்சொல்லுதல். அஃதாவது என்று நீ அன்று நான்-நீயென்று இருக்கிறாயோ நானும் அன்றேயிருக்கிறேனென்ப தொன்றும், என்றைக்கும் நீயல்ல நான் (வேறு) என்பதொன்றுமாம்.

யானினி யஞ்சேன் யமனெதிர் வரினு மித்துணை வலிமையா தென்னிற்
கானினின் றிலகுங் கணிமலர் கமழுங் கருங்குழற் கற்றையங் காட்டு
மானினி கிடைக்க மகிழ்பரங் கிரியில் வதிதரு பசியமா மயிலோன்
தேனினி தொழுகு மலரடி யிரண்டென் சிந்தையிற் சிக்கிய திறனே.

திறந்திடா தடைத்துத் திருக்கடைக் காப்புச் செய்யுமுன் சினகரத் துள்ளே
மறந்திடா தெதிர்போய்ப் பரங்கிரிக் குகனே வரதனே யெனத்தொழு வாரேற்
பிறந்திடா வாறும் பிறந்தவிப் பிறப்பிற் பிணிமிடி பெறுப்பெரு வாறும்
இறந்திடா விதனல் லுறுதியிற் பெறலா மிதுசெயார் தொழிலிழி செயலே. ()

செய்வதுஞ் செய்யா தொழிலதுந் தெரியாச் சிறுமையாற் சீரழிந் திட்டேன்
உய்வது வேண்டி லொருகவி பேனு முருகிமெய் யன்பினு லுரைப்பாய்
மெய்வது வைசெய் மனைவியோ டென்று மெய்ப்பர வெற்புறை வேலோன்
வைவது தமிழி லெனிலதுங் கொள்வான் வாழ்த்திடின் மறுக்குமோ மனமே.()

வேறு.

ஏயும் பல்புகழ்ப் பெரும்பரங் கிரிக்குக னின்னரு ளிடையின்றித்
தோயுஞ் சிந்தையின் வம்மினென் றுல்வெகு தாரமென் றுரைசெய்வர்
நாயும் பன்றியும் போலவே நாணற நங்கையர் நலமென்றுற்
காயுங் கானினு மெய்வருந் தாதுபல் காவதங் கடப்பாரே. (21)

கடம்ப னைப்பரங் குன்றினிற் காண்பரோ கற்பகக் காநீழல்
இடம்பெ றற்கொரு சிறிதுசந் தேகமு மில்லையினி யென்னெஞ்சே
யுடம்பை மக்களை மாதரைப் பொருளென வுவகையுற் றுழலாமற்
றிடம்பெ றச்சென்று காலமுண் டாகவே சேவைசெய் திடுநீயே (22)

நீயும் நானுமா யேகபோ கங்கொடு நிற்குநன் னிலையெய்த
ஏயு மென்சிறு போதமீ டழிந்துவீழ்ந் திற்றுமாய்ந் திடலென்றே
தாயுந் தந்தையுந் தெய்வமுங் குருவுநீ தானெனச் சார்வார்க்குப்
பாயு மின்னருள் சுரக்கும்வே லேந்திய பரங்கிரிப் பதிக்கோவே. (23)

---

(18) கானில்-காட்டில். கணி-வேங்கைமரம். கற்றை-திரட்சி. மானினி-வள்ளிநாயகி. திறன்-வலிமை. (19) சினகரம்-ஆலயம். (20) வதுவை-கல்யாணம். மனைவி-தெய்வயானை. பரவெற்பு-பரங்கிரி. (21) வம்மின்-வாருங்கள். நாண்-வெட்கம். காவதம்-காதம். (22) காலமுண்டாக-அதிகாலையில். (23) ஏகபோகம்-இரண்டறக்கலந்தநுபவிக்கும் பேரின்பம். சிறுபோதம்-தற்போதம்.

கோயி லாப்பரங் குன்றினைக் கொண்டருள் குமரனே குருவாகும்
நீயி லாக்குறை யென்மன மென்றுதா னீங்குமோ நீங்கிற்றேல்
னோயி லாக்குடி கொண்டிருந் தெனைத்துயர் நுழையினில் நுழைவித்துப்
பாயி லாக்கையைக் கிடத்தியே மருந்துவாய்ப் படலினிப் பண்ணுதே. (24)

பண்ணு ளோசைபோற் பழத்தினுட் சுவைபோற் பல்லுயிர்ப் பரப்பெல்லாம்
உண்ணு ழைந்துறை யுன்பெருந் தகைமையை யுய்த்துணர் வார்யாரே
அண்ணு மன்பினிற் பரங்கிரி யடைந்துநின் னருளி னாலறிந்திட்டேன்
கண்ணு நெஞ்சமுங் களித்தன பிறபொருள் கந்தனே காணேனே.()

காண வேடுவர் மகள்முனஞ் சென்றவன் கருணையங் கடலானோன்
மாண வேதமுங் காண்பரி தாகிய வலியவன் வருவாரைப்
பேண வேலொடு நின்றவன் யாவர்க்கும் பெரியவன் பிறப்பில்லான்
பூண வேகட்டம் பேற்றவன் பரங்கிரிப் புண்ணியப் புலவோனே. (26)

புலைய ராயினுங் குமரவேள் பரங்கிரி போய்வலம் புரிவாரேற்
றலைய ராவொன்று தாங்குமித் தாரணி தனிலுயர்ந் தாரேபோற்
சிலைய ராசையின் வாய்மலர்ந் தருள்மறைச் செம்பொருள் தேர்ந்தேகன்
னிலைய ராகிய பெரியவர் யாவரிந் நிச்சயம் நிகழ்த்தாரே. (27)

நிகமம் யாவையு மளவையாற் பரம்பொருள் நிச்சய நிலையோர்ந்து
புகல வுந்தெரி யாமலே பிறப்பிறப் புத்துயர் போகாரை
இகலு நம்பிறப் பறுத்திடுந் தெய்வமென் றேத்துவ ரிவர்பாவம்
அகல்வ தும்பரங் கிரியர சேநினை யடைவது மாங்கொல்லோ. (28)

ஆகுங் காலமெய் வருந்தவேண் டாவெனு மெளவைசொல் லதையெண்ணி
யேகு நெஞ்சமே முயற்சிநற் றிருவினை யியற்றுமென் றிடலோராய்
மாகுன் றும்பரங் கிரியொடு முருகனை வலஞ்செய்து வருவாயேற்
போகு மின்மையும் பிணியுமே யதற்பினும் பொருளொடு புகழ்மாதோ. (29)

---

(24) இல்-வீடு. ஆ-ஆக. நுழை-துவாரம். (25) பண்-பாட்டு. ஓசை-இசை. பரப்பு-விரிவு. பிறபொருள்-(உன்னையல்லாமல்)மற்றைப்பிரவஞ்சப்பொருள்களை. (26) வேடுவர்-வேடர். மாண்-மாட்சிமைப்பட்ட. அவேதம்-அந்தவேதங்கள். (27) தலை-முதன்மையாகிய. பொற்சிலையர்-மேருமலையைவில்லாகவுடைய சிவபிரான். (28) நிகமம்-வேதம். அளவையால்-அநுமான முதலிய அளவைகளால். இவ்வளவைகள் சித்தாந்த சாத்திரங்கற்றோர்க்கு நன்குதெரியும். போகார்-போகாத தெய்வங்கள். இகலும்-விரோதிக்கும். (29) இன்மை-வறுமை. பினும்பொருள்-பின்னுள்ள பொருள், புத்திரன்.

மாத ராசையிற் றீர்ந்தவர் முனிவருள் வானவர் வகுப்பென்ன
ஓத லாயமுப் பத்துமுக் கோடிய ருள்ளெவ ருளர்சொல்லாய்
ஆத லாலெனை யடிமைகொண் டருள்செயா தகற்றுத லறனன்றாற்
போத மேவிய பரங்கிரி யுறைபரம் பொருள்பெறு பொருட்கோவே.

வேறு.

பொருட்கு மாதர்க்கும் பூமிக்கும் போயலைந்
தருட்கு வேண்டுமன் பாற்றிலே னையகோ
ப்ருக்கு மின்பப் பரங்கிரிப் பாலரன்
றிருக்கு மாரனைச் சேவியென் னெஞ்சே. (31)

தீய மும்மலந் தீர்திறந் தேர்கிலேன்
ஆய பேரின்ப மாவதெவ் வாறருள்
பாய நின்ற பரங்கிரிப் பண்ணவன்
சேய பங்கயச் சேவடி சேரவே. (32)

சேர வேண்டுநெஞ் சேகுகன் சேவடி
யார வேயதற் கன்பொன் றும் ஆற்றிலாய்
கூர வேற்குமெய்க் குன்றிற் குலாவிய
வீர வேற்கையவ் வேளுள மெய்க்கவே. (33)

மெய்யைப் பொய்யென்று விட்டலை வீணரிம்
மெய்யை நீத்துவிண் மேலெழும் வேளையில்
ஐயை யோமெய் யசலத் தமர்ந்துறை
ஐயை சேயின் னருளடை யாரரோ. (34)

அரோக ராவென்ப ரன்பமை யாரவர்
அரோக ராதலு மல்ல ரருட்குகன்
பரோப காரப் பரங்கிரி பற்றுமன்
பரோப காரப்பின் பாடிப் பணிவரே. (35)

---

(32) திறம்-வலிமை. (33) ஆரவே-நிறையவே. கூர-மிக. எற்கும்-எற்றுக் கொள்ளும். (34) மெய்ம்மை-சுவர்க்கம், நரகம், இருவினை முதலியவை. மெய்யை-சரீரத்தை. மெய்யசலம்-பரங்கிரி. ஐயை-பார்வதி. (35) அரோகர்-நோயில்லாதவர். அன்பரோ-பக்தர்களோ. பகாரப்பின்-பகர எழுத்துக்குப்பின்னுகிய. பா-பாட்டு.

பணிவ ரைக்குணம் பண்ணு பரங்கிரி
யணிவ ரைப்பினி லைந்தரு வாழ்க்கையை
விணிவ ரைக்கருள் வித்தகன் மேல்வளர்
கணிவ ரைக்குறக் கன்னி கணவனே. (36)

கணங்கள் தோறு மிறக்கின்ற காயமாம்
பிணங்க ளென்னைப் பெயர்த்துப் பெயர்த்துவந்
திணங்க லில்லை யெனவரு ளீபவன்
றுணங்க ளார்பரங் குன்றிற் குமரனே. (37)

குமர னேபரங் குன்றிற் குலவிய
அமர னேரயி லாலவ் வசுரர்தஞ்
சமர னேர்கதிர் தானெனத் தாக்கினான்
எமர் னேக ரெதிர்நின் றிறைஞ்சவே. (38)

இறைக்குந் தேனமல ரீர்ம்பொழி லெய்திவான்
பிறைக்கு மேற்செல் பெருமெய்ப் பிறங்கலுள்
ளுறைக்கு மாரனை யுன்னிநின் தோறெலாந்
தறைக்குள் நாதமர் தாந்தனி நெஞ்சமே. (39)

நெஞ்ச மேயினி நீள நினைத்தியேல்
வஞ்ச மேதும வாறு வனசமேல்
அஞ்ச மேறி யமர்மெய் யசலத்தான்
கஞ்ச மேய கழலிணை காககுமே. (40)

வேறு.

காக்கு மருட்கடலே கருணைநிறை கற்பகமே
தேக்குபர மானந்தத் தெள்ளமுதே செழுஞ்சுடரே
மேக்குயரும் பரங்கிரியில் வீற்றிருக்கும் வேலரசே
யூக்குமறை முன்மறையி னுள்ளொளிரு மொண்பொருளே. ()

---

(36) வரைப்பில்-இடத்தில். விண்-வானுலகத்தில். இவர்-எழுகின்ற. ஐக்கு-இந்திரனுக்கு. கணி-வேங்கைமரமுடைய. (37) பெயர்த்துப் பெயர்த்து-திரும்பத் திரும்ப. (38) அமரன்-தேவன். ஏர்-அழகு. சமர் அல்-யுத்தமாகிய இருளில். கதிர்-சூரியன். (39) மெய்ப்பிறங்கல்-பரங்கிரி. உறை-இடம். (40) அஞ்சம்-அன்னப்பறவை. ஏய-ஒத்த. (41) தேக்கு-நிறைந்த. மேக்கு-மேல். ஊக்கும்-செலுத்தும். மறைமுன் மறை-வேதத்துக்கு மூலமாகிய பிரணவ மந்திரம்.

வேறு.

பொருதெதிர்த்த சூரனைமுன் பூதகணம் புடைசூழச்
செருவகுத்த களத்தடர்த்துச் செகுத்தனைமுன் சித்தசன்றன்
உருவழித்த பெருந்தழற்க ணுதித்தவனக் குது பெரிதோ
திருமிகுத்த பரங்கிரியின் றெய்வமாஞ் சேவகனே. (42)

சேவகத்திற் பிடியொடுசித் திரைசெய்தெழுஞ் சிந்துரங்கள்
மூவகைத்த மதத்தொன்று முரணறவுள் முதிர்மகிழ்ச்சி
யாவகத்திற் செறுக்குறுமெய் யசலத்தே யயிலேந்து
கோவகத்தென் மனஞ்சென்று குடியிருந்து கொண்டதுவே. (43)

கொண்டபே ராசையின்மெய்க் குன்றமருங் குமரனைநேர்
கண்டவர்பின் றமைவேறு காணாராய்க் கரைந்துகரைந்
தண்டருமற் புதப்பெரும்பே ரானந்தத் தழுந்துதல்மை
யுண்டவிழி யாரின்ப வுருசியென வுரைப்பரிதே. (44)

உரைபெருகப் பெருகமே லுயர்சீர்த்தி யுடையதாய்த்
தரையிறைபொன் முடியெனலாய்த் தாங்கியமெய்ச் சாரலிடைக்
கரைகடந்த கருணைநிறை கந்தபிரான் கழற்கமலந்
திரையெனுமா ணவமறைப்புட் சிக்கினார் தெரியாரே. (45)

தெரிவரிதென் றுரைப்பதுமெய்த் தியானத்தின் றிறமிலர்க்கே
பிரிவரிய பலபிறவிப் பிணியகற்றப் பெறல்வேண்டில்
கரியொடுபின் பிடிதிரியுங் கானெலாங் கமழ்மலரில்
வரியளிபண் பாடுபர மலைக்குகனை மருந்தினையே. (46)

(42) செகுத்தல்-அழித்தல். சித்தசன்-மன்மதன். (43) சேவகம்-யானை நித்திரை செய்யுமிடம். மதத்தொன்று-கோசமதம். முரணற-வலிகெட. அதாவது புணர்ச்சிமிகுதியால் பலங்குறைய என்றபடி. மெய்யசலம்-பரங்கிரி. (44) தலைமைவேறுகாணார் என்றது, முருகனோடு அத்துவிதமாய்க் கலப்பரென்றபடி. அண்டுஅரு—நெருங்குதற்கரிய. உரைபெருக-(சொல்லுவார்) வார்த்தை யடங்காமற் சொல்லிக்கொண்டிருக்க. (45) தரையிறை-பூமியாகிய அரசன். மெய்ச்சாரல்-பரங்கிரி. (46) தியானத்தின்றிறம்-யோகபலம். வரி-கீற்றுக்களையுடைய.

மருந்தெனினுந் தாமுண்ண வாய்த்ததேல் வந்தமையும்
விருந்தினரோ டிருந்தருந்தும் வேளாளர் விதியெலாந்
திருந்துதமிழ் வேதமனுஞ் செய்தருளுந் திருப்பரங்குன்
றிருந்தகுகன் றிருவடியை யேத்தினர்வீ டெய்துவரே. (47)

எய்தவரை கோவாம லம்பினைகொண் டிடுவார்போற்
செய்ததீ வினையைவிட்டுத் தெய்வத்தைச் சிறலெவன்
கொய்தழைமல் கியசோலை குழுமுபரங் குன்றினிற்சென்
றய்தமிழ்ப்பா முருகனடிக் குரைத்தறியா வூமர்களே. (48)

ஊமைபோ லுரையொடுங்க யோகநிலை யுறுதல்பெறீஇ
யாமைபோ லைந்தடக்கி யருள்விளைக்கு மன்பதுகொண்
டேமைபோ லிருண்டகளத் தெந்தைகுரு வினைச்சேர
காமையோ பரங்கிரியை நண்ணுவதெந் நாள்மனமே. (49)

மனைப்பேயைக் கட்டிமிக யாரடித்து நாயென்ற
முனைப்பேயத் திரிந்தலைவாய் முந்துபரங் குன்றினிடை
யுனைப்பேதா பேதமின்றி யுட்கலத்த லொண்ணுமதோ
அனைப்பேயின் பாலருந்தி னுன்மருக னுங்குகனே. (50)

## வேறு.

குகனென்று நின்ற குறியொன்றி யெங்கள் குருவாய கோல மயிலான்
முகனைந்தொ டெண்ணு முகனென்று கொண்ட முதலெந்தை முளரி விழியில்
மகனென்று வந்து சுரரங் கிழந்த வளமன்று தந்த வரதன்
அகனைந்து நொந்த வடியேனை யாள்மெய் யசலத் தமர்ந்த வரசே. ()

அரியன்று தந்த மலருந்தி வந்த அயனின் றிறைஞ்சி யபரங்
கிரியொன்றி முந்து முனிமைந்த ரறுவர் கிளர்சாப மோவு கிருபை
புரிகின்ற செங்கை வடிவேலெடுத்த புனிதன் பொருந்து மறைமுன்
வரியொன் றெனுது சன்னந் தவிர்க்கு மற்றைந்து மென்செய் வதுவே.

---

(47) மருந்து-அமுதம். (48) குழுமு-கூடுகின்ற. (49) உரை-சொல். மை-மேகம், அல்லது இருள். களம்-கழுத்து. (50) மனைப்பேய்-மனைவி. ஏய-பொருந்த. அனைப்பேய்-தாயாகிய (பூதனையென்னும்) பேய். (51) குறி-திருவுருவம். முளரி-அக்கினி. வளம்-செல்வம். மெய்யசலம்-பரங்கிரி. (52) அரி-விஷ்ணு. மலருந்தி-கொப்பூழாகிய தாமரை. ஒன்றி-பொருந்தி. முனி பராசரன். ஓவு-நீக்குகின்ற. மறை-ஆறெழுத்து மந்திரம். வரி-எழுத்து.

வதுவைச் சடங்க மார்பெட் கியற்றி மகிழ்மெய்க்கு மானன்மறை முன்
பதுமத் திருந்த பகவற்கு மெங்கள் பரமற்கு மன்று பகர்வோன்
அதுபற்ப மென்ற கழலைப் பராவி யருகுற் றிருப்ப னடியேன்
விதுவைப் புனைந்த முடிமெய்க் கிரிக்கண் வினையைத் தவிர்ந்து விடவே (53)

விடமுண்ட கத்தி யெனநின் றொறுக்கும் விழியார் மயக்கம் விரவு
மடமுண்ட கத்தி னறிவைத் தவிர்ந்து வலிகெட் டலைந்த மனமே
திடமுண்ட கத்தி குடிகொண் டிருந்து திகழ்செல்வ மெய்ய சலமே
விடமுண்ட கத்தி யனையும் புரந்த விறையுண்டு செல்வ மினியே. (54)

இனிப்பற்பல் கோடி சனனங்கள் தோறு மிடையுந் திறத்தி னெளியேன்
சனிப்பற்ப மேனு முறவந் திடாது தயைசெய்வ தோடுதளர்கால்
நனிப்பற் படாமல் நுகர்நண் மருந்தும் நோயும் பெறும லருள்வாய்
தனிப்பற்ப வாவி புடைசூழு மெய்ய சலமன்னு சாமி வேளே. (55)

வேளைச் சிவந்த விழியா லெரித்த விமலன்கண் வந்த விபுதன்
றாளைப் பணிந்த சிவயோக சித்தர் தணவாத மெய்ய சலநீள்
வாளைக் குலங்கள் மலிவெய்தி யசர வணநீரி லாடி வரலாம்
நாளைக் கெனுஞ்சொல் பழுதாகு மின்று நமனம்மை நணுகி வரினே.

வரிவண் டாற்று திருநங் தனத்து மலர்சென் றெடுத்து வளர்மெய்க
கிரிவந் தடுத்து முருகன் சிறந்த கிளர்தண்டை யிட்ட கழலிற்
சொரிகின்றபத்தரெதிர்நின் றுசொற்றதுதிசென் றுசொற்கமிசைநல்
அரிசந் தனத்து ளுறையண்டர் மொய்க்கு மவையுங் களிக்க வுறுமே. (57)

உறுகண் பெருக்க இடர்மூந் தியற்று முயர்சூர ஞதி தகுவர்
தறுகண் குறைக்க வுருவன் றெடுத்த தலையாறு தங்கு சாதன்
மறுகண் டருக்கு வரகன் றளித்த வளமேவி யபர மலையன்
சிறுகண் சினத்த கரியொன் றுரித்த சிவனு ரவாவு குருவே. (58)

---

(53) சடங்கு-கிரியை. பெட்கு-பெண்ணுக்கு. பற்பம்-தாமரை. முடி-சிகரம். (54) மடம்உண்டு-அறியாமையிலகப்பட்டு. முண்டகத்தி-இலக்குமி. (55) இடையும்-வருந்தும். சனிப்பு-பிறப்பு. தளர்கால்-தளர்ந்த இடத்து. பற்பம்-தாமரை. (56) தணவாத-நீங்காத. வாளை-ஒரு மீன். (57) வரி-பண், அல்லது இராகம். அரிசந்தனம்-கற்பகத்தருவினொன்று. (58) உறுகண்-துன்பம். தகுவர்-அசுரர். தறுகண்-அஞ்சாமைமறுகு-சுழலுகின்ற.பரமலை-பரங்கிரி. சினத்த-கோபத்தையுடைய.

குருவிற் சிறந்த குணமுற் றெழுந்த குமரேச னாய குழகன்
உருவிற் பொலிந்த பரவெற்பி லன்பின் உயர்ஞான போத முழுதுங்
கருவிற் கழிந்த வெனைபற்ப னென்று கருகாது நாளு மருளுங்
கிருபைக்குள் நெஞ்ச மறைபட் டிருந்து கிளராது மீள வாவே. (59)

வரவுக்கு மிஞ்ச செலவுக் கிசைந்த மனமேவி வறுமை வரலால்
இரவுக் கெழுந்து திரியத் துணிந்த வெனைபாள வுரிய தெறுவேல்
அரசர்க் குயர்ந்த அரசர்க்கு மென்று மகலாத அருமை யிடமாம்
பரவெற் பிருந்த பரன்மெய்க் குமைந்தர் பதமான பதும மலரே.(60)

வேறு.

பவப்பெரும் பௌவத் தாழும் பாழ்மனப் பாவி யோடு
தவப்பெருங் காலம் போகச் சரித்துமெய் தளர்ந்தே னந்தோ
சிவப்பெரும் பொருளே போல்மெய்ச் சேர்தனைச் சேர்தற் காம்பக்
குவட்பெரும் பத்தி வாய்க்குங் குணமினிக் கூடுங் கொல்லோ. (61)

கொல்லையா னிரைமேய்ப் பார்முன் குரூஉச்சுடர் கொழிக்கு முத்தம்
தொல்லைவேய் வெடித்து வீழ்த்துந் தூயசீர்ப் பரங்குன் றத்தி
னெல்லைபோய் முருக னோரா றெழுத்தினை யெண்ணிப் போற்ற
வல்லையே லென்னெஞ் சேநல் வளமெலாம் வாய்க்கு மன்றே. (62)

வாய்வழுத் தாது கையோ வணங்கிட மாட்டா துன்னைக்
காய்பழுத் தொழுகு மின்றேங் கனியெனக் கண்கா ணாது
நோய்பழுத் தழுந்தும் போதந் நோயற நோக்கு வாயோ
தீபழுத் தொழுகும் வேற்கைத் திருப்பரங் கிரிச்செஞ் சேயே. (63)

கிரிபுரந் தருளும் வேந்தாய்க் கிளர்பரங் கிரிக்க ணுற்றோன்
திரிபுர மெரித்த தேவன் தேசிகச் செம்ம லானோன்
பரிபுர மொலிக்கும் பாத பங்கயம் பணியும் பத்தர்க்
கரிபுரந் தான்வாழ் வெல்லா மற்பமா யமையு மன்றே. (64)

---

(59) குழகன்-பேரழகுடையவன். உரு-சொரூபம். பரவெற்பு-பரங்கிரி. கழிந்த-மிகுந்த. கிளராது-வெளிப்பட்டுவாராது.(60) இரவு-யாசகம். பரவெற்பு-பரங்கிரி. (61) பவம்-பிறப்பு. பௌவம்-கடல். சரித்து-சஞ்சரித்து. (62) கொல்லை-முல்லைநிலம். குரூஉ-நிறம். (64) தேசிகச்செம்மல்-ஆசாரியரிற் சிறந்தோன். பரிபுரம்-பாதத்திலணியும் சிலம்பு.

அன்றுநாம் செய்த தீமைக் களவிலே யாமென் றூலும்
இன்றுபோ யெம்மைக் காவா யென்றெதி ரிறைஞ்சி நின்றாற்
குன்றுபோ லுயரு மஞ்ஞைக் குகன்பரங் குன்றிற் றோன்றி
யொன்றுநீ யஞ்சேல் வாவென் றுனக்கெலா முதவு நெஞ்சே. (65)

நெஞ்சம்பா வனையா லேனும் நினைத்தெதிர் நின்று வாழ்த்திக்
கொஞ்சம்பா மலராற் பூசை குயிற்றிடக் கூடு மாகிற்
செஞ்சம்பா விளையுஞ் செய்சூழ் திருப்பரங் கிரிச்செஞ் சேயென்
வஞ்சம்பா ராமற் காக்கும் வன்மையார் வழுத்து வாரே. (66)

வழுத்தபு மாறெ ழுத்து மந்திர மறையுள் வைகும்
விழுத்தகு கருணைக் குன்றாய் விளங்குமெய் வெற்பி னானை
பழுத்தபுன் புலால்கொள் யாக்கை பயனுறப் பரமா னந்தத்
தழுத்தவேண் டுதற்கா வொன்று மையகோ வாற்றி லேனே. (67)

ஆறிடு மேடு குன்றி யகன்மடு வாகு மாபோல்
ஏறிடு மின்ப நீங்கி யின்னலெய் திடவி டைந்தேன்
சோறிடு வார்யா ரென்றார் தொறுந்திரி துயர்தீர் சூரைக்
கீறிடு வைவேல் கைமேற் கிளர்பரங் கிரிக்கோ மானே. (68)

கோவைநூல் பாட நெஞ்சிற் குறித்தனன் குறிக்கு மந்தப்
பாவையி னீயே மேலாம் பாட்டுடைத் தலைவ னென்ன
லாவையா லதற்கு நின்னா ரருள்கனி யமைதல் வேண்டும்
பூவையுங் கிளியும் வேதம் புகலுமெய்ப் பொருப்பிற் சேயே (69)

சேயபங் கயப்பூ வெல்லாஞ் செஞ்சுடர் சிவண வாவி
மீயம ரெகின நோக்கி வெருண்டுபின் மிஞிறு நண்ண
லாயது தெரிந்து தாமு மணுகுமெய் யசலச் செவ்வேள்
ஞேயம்ஞா துருயா னுயிர் நீர்மையற் றிருப்ப தென்றே. (70)

---

(65) மஞ்ஞை-மயில். அஞ்சேல்—பயப்படாதே. (66) குயற்றிட-செய்ய. செய்-வயல். (67) வழுத்தபு-குற்றநீங்கிய. விழு-சிறப்பு. (68) அகன்மடு-விரிந்த பள்ளம். சூரை-சூரனை. (69) பாவையின்-பாட்டினிடத்து. ஆவை-ஆவாய். பூவை-சாரிகைப்பறவை. (70) சிவண-ஒப்ப. எகினம்-அன்னப்பறவை. மிஞிறு-வண்டு. ஞேயம்-அறியப்படுபொருளாகிய பதி. ஞாதுரு-அறிபவன். இந்நீர்மை யற்றிருத்தல்-அறியப்படுபொருளும் அறிபவனு மில்லாதிருத்தல்; அதாவது, இரண்டறக்கலந்து அத்துவிதமாயிருத்தல்.

வேறு.

இருப்பு மெய்ப்பொருப் பென்ன வேரணி
விருப்பு மேவிய வேற்கை வித்தகன்
நெருப்பு நேர்வினை நீக்கி நெஞ்சமே
திருப்புந் தன்வசஞ் சென்று சேவியே. (71)

சேவிப் பார்க்குமெய்ச் சிந்தை தன்னிலே
பாவிப் பார்க்குநீள் பரவை சூழுற
மேவிப் பார்புகழ் மெய்க்கி ரிக்குகன்
கூவிப் பார்வைபாற் குறைகள் போக்குமே. (72)

போக்கில் பூரணன் புகழ்ந்து பாடுமென்
வாக்கில் வந்தமெய்ம் மலையில் வாழ்குகன்
ஆக்கில் யாவையு மாக்க மன்னவை
காக்கி லென்னையுங் காக்கும் வள்ளலே. (73)

வள்ளல் மாண்பினன் வான்வ ழங்குநீர்
வெள்ள மார்பர வெற்பி ருந்தவன்
குள்ள மாமுனி குருவு மானவன்
உள்ள வுள்ளவென் னுள்வி ளங்குமே. (74)

விளங்கு சோதியாய் மேவி யென்னுளக்
களங்க மும்மலக் கருளொ ழிப்பவன்
அளந்து காணுதற் கரிய தம்பிரான்
குளங்கு லாவுமெய்க் குன்றில் வேலனே. (75)

குன்ற வில்பரங் குன்றில் வேலனை
யென்று மன்புகொண் டிடைவி டாமலே
சென்று சென்றுநீ தேய்ந்து தேய்ந்துநா
னென்ற வொன்றற வெய்தி வாழ்தியே. (76)

---

(71) இருப்பு-இருப்பிடம். (72) பாவிப்பார்க்கும்-பாவனை செய்வார்க்கும். மேவு-பொருந்துகின்ற. பார்வை - சட்சுதீக்ஷை. (73) போக்கில்-இறத்த லில்லாத. (74) குள்ளமாமுனி-அகத்தியர். (75) கருள்-இருள். (76) சென்று சென்று தேய்ந்து தேய்ந்து-நினைத்து நினைத்து அந்நினைப்புஞ் சிறிதுமில்லாம லிரண்டறக்கலத்தல். "சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாம்" என்னுந் திருவாசகச் சுருதியா லுணர்க. நான்-ஆணவமலம். "நான்கெட்ட வாபாடி" என்ற திருவாசகச் சுருதியாலறிக.

வாழு மாறுமெய் மலையை மாவலஞ்
சூழு வார்குகன் றெண்ட ராகியே
யேழு மேழுமா மிருநி லத்திடை
யாழு மின்னலுள் ளழுந்தி டார்களே. (77)

ஆர்த்த பூங்கடம் பணிகொள் மொய்ம்பினுன்
பார்த்த பார்வையிற் பவங்கள் பாறின
கூர்த்த சீர்ப்பரங் குன்றுள் வைகுமத்
தீர்த்தன் செய்கையைச் செப்ப லாவதோ. (78)

செப்பு நேர்முலைத் தெரிவை மார்மயல்
கப்பு விட்டெழுங் கவலை தீர்ந்தனன்
ஒப்பு நீங்குமெய் யோங்க லுட்குகன்
இப்பு விக்கண்வந் தென்னை யாளவே. (79)

என்னை யாள்வதற் கென்னு ளேயிருந்
தன்னை போலவே யருள்சு ரந்தனன்
றன்னை நேருமெய்த் தாணி சாரும்வேள்
பின்னை யெய்தரும் பேறி யாவதே. (80)

வேறு.

யாவை யும்படைத் தளித்தழித் திடுமிய விறைவன்
பாவை கைம்மக வாகிய பரங்கிரிப் பதிவேள்
பூவை நேர்பதம் வரத்தவம் புரிதினைப் புனம்போல்
நீவை யத்திடை யென்றவம் செய்தனை நெஞ்சே. (81)

நெஞ்சம் நிச்சலும் வயிற்றினை நிரப்புதற் காகப்
பஞ்சு நேர்பெரும் பாடுயிர் போம்வரை பட்டாற்
கொஞ்சும் வள்ளியின் கொண்கனும் பரங்கிரிக் கோவே
யஞ்சும் யானினைத் தொழுதற்கு நேரமே தருளே. (82)

(77) ஆழும்-ஆழமாகிய. இன்னல்-துன்பம். (78)ஆர்த்த-கட்டிய. பார்த்த பார்வை-சட்சுதீக்ஷை. பவம்-சனனம் (79)கப்பு-கவர். மெய்யோங்கல்-பரங்கிரி. (80) மெய்த்தரணி-பரங்கிரி. பேறு-பயன். (81) பாவை-உமாதேவி. (82) நிச்சலும்-தினமும். கொண்கன்-நாயகன்.

அருவி யோசையின் வரைசெலும் பரங்கிரி யாறு
பொருவி லாமுகங் கொண்டருள் புங்கவன் பொற்றாள்
மருவி னோரினி யின்னுமோ ரன்னைதன் வயிற்றிற்
கருவு றாரிது மறைகளே யுரைத்தமெய்க் கதையே. (83)

கதைகள் யாவையு நிறைபெருங் கந்தபு ராணத்
துதைய நாயகன் சத்திய கிரியெனு முயர்பேர்
ததைப ரங்கிரி தனில்வரு வார்பிணி தவிர்க்கும்
அதையு ணர்ந்தவர் மருந்துவே றெதுவுந்தே டாரே. (84)

ஆர்க்கு மிக்கலி யுகத்தினில் வாதனை யயில்வேற்
சீர்க்கு மாரவேள் பரங்கிரிக கண்ணமர் செய்தி
யூர்க்குள் யாவரு மோதல்கேட் டுள்ளநெக் குருகிப்
பார்க்குந் தோறுமென் வசமின்றிப் பரவசப் படுமே. (85)

படுக்கை யிற்கிடை நோயொடு கிடக்குமப் பருவத்
துடுக்கை யற்றவன் காமென விரைந்துவந் துதவுங்
கடுக்கை பெற்றசெஞ் சடையினான் றானெனுங் கந்தன்
இடுக்க ணுற்றழி யாதிரு பரங்கிரி யிடத்தே. (86)

இடமு மேவலும் பொருளுமொத் திலாமையா லின்னல்
படமெ லிந்துள நலிந்துதென் பரங்கிரிப பதியுள்
அடல்கொள் வேலினாய் நின்சரண் சரணென அடைந்தேன்
புடவி மேலிதும் யான்செய்த புண்ணியப் பேறே. (87)

புண்ணி யம்புரி வார்க்கிட மாமிது போலும்
விண்ணில் மண்ணில்வே றிலையெனும் பரங்கிரி வேலோன்
எண்ணி யின்னருள் சுரந்திடா தொதுக்கினு மினியென்
உண்ணி கழ்ந்தபே ரன்பவ னிடத்திலே யுறுமே. (88)

(83) பொருவில்-ஒப்பில்லாத. (84) ததை-நெருங்கிய. தனில்-தன்னிடத்து. (85) நெக்கு-நெகிழ்ந்து. (86) கடுக்கை-கொன்றைமாலை. இடுக்கண்-துன்பம். (87) நலிந்து-வருந்தி. அடல்-வலி. புடவி-பூமி.

உறுதி நெஞ்சமே யுனக்குப தேசிப்ப துண்டொன்
றறுதி யிட்டுரை செய்குவன் கேட்டிமெய் யசலத்
திறுதி யெய்திலு மாறெழுத் துட்பொரு ளெண்ணப்
பெறுதி யாமினிப் பிறந்திற வாநிலை பெறற்கே. (89)

பெறுபொ ருட்குறை செய்தகட் டுறுபெரும் பிணியை
யறுவை யிட்டகற் றிடவருள் புரிந்தனை யயில்வே
லுறுதி ருப்பரங் கிரியம ரெந்தையே யுன்னை
மறுபி றப்பினுஞ் சிறிதுமென் மனமற வாதே. (90)

வேறு.

வாது கொண்டெழு சூர பன்மனை
வடிகொள் வேலினால் வகிர்ந்த போதவன்
ஓது சூரனே பன்ம னேயென
வோங்கு மோரிரு வோர்க ளாயுறீஇத்
தீது தீரநீ யெம்மை யாளெனச்
சிகண்டி சேவலாய்த் திருமு னிற்கவப்
போது பேரருள் புரிந்து நின்றசீர்ப்
புகழ்ப்ப ரங்கிரிப் புனித மூர்த்தியே. (91)

புனித நீர்நிறை யினிய நன்னிறப்
பொய்கை பூத்தலர் பூவொ ராறிலே
யினித மர்ந்தவா றருவை யம்பிகை
யெடுத்தி யைக்கவொன் றெய்து கந்தனாய்
மனிதர் வானவர் வாழ வந்தருள்
வள்ள லேபர மலையுள் வைகியே
கனியு மன்பினோர் காண மஞ்ஞைமேற்
காட்சி தந்தநின் கருணை போற்றியே. (92)

---

(89) அறுதியிட்டு-வரையறைசெய்து. கேட்டி-கேட்பாய். பெறுதி-பெறுவாய். (90) அகடு-வயிறு. அயில்-கூர்மை. (91) வகிர்ந்த-பிளந்த. உறீஇ-உற்று. சிகண்டி-மயில். சேவல்-கோழி. (92) பொய்கை-இமையமலைப்பக்கமுள்ள சரவணப்பொய்கை. இயைக்க-பொருந்த. மஞ்ஞை-மயில்.

கருவி லேயிரு மதியு மூன்றுகை
காலமு டங்கியே கருவு யிர்த்தபின்
உருவ ளர்ந்துமே லோங்கல் போல்வினை
யும்வ ளர்ந்துமே லோங்கி யேமுதிர்
பருவ மெய்தலு மின்ப துன்பமாம்
பயன்கள் துய்த்துநின் பதம றந்தனன்
தெருவெ லாமண முரசொ லித்திடுந்
திருப்ப ரங்கிரிச் செய்ய வேலனே. (93)

செய்ய தாமரை வாவி யின்முகஞ்
சிவண வேயதிற் செல்வ யாவளை
பைய.வீனும்வெண் முத்தம் யாவுமாம்
பல்லெனத்திகழ் பரங்கி ரிப்பதி
யைய னேயுன தடிமை யாமடை
யாள மொன்றுநீ யாற்றி லாயெனில்
வைய மீதெனை மதிப்பர் யாவர்நின்
மயிலை யென்முனம் வரவி டுப்பையே. (94)

வரவு சற்றெனிற் செலவு தற்குளே
வைகு மேலொரு வருத்த மில்லையால்
இரவு புக்குநா னேகி லேனினி
யெந்த நாளும்வந் திடைவி டாமலுன்
புரவு வைத்தநின் சரண பங்கயம்
போற்று வேன்பிழை பொறுத்து நீயருள்
பரம சற்குரு வாய மர்ந்தநின்
பரங்கி ரிப்பதிப் பாணி வேலனே. (95)

(93) கருவுயிர்த்தபின்-(தாயானவள்) பெற்றபின். துய்த்து-அனுபவித்து. (94) சிவண-ஒப்ப. வயாவளை-சூல்கொண்ட சங்கு. ஆம்-ஆகின்ற. திகழ்-விளங்குகின்ற. (95) இரவு-யாசகத்தொழிலில். புரவு-காத்தல். பாணி-கை.

பாணி யாதுகா லங்கள் தோறுநின்
　　பரங்கி ரிப்பதி பணிந்து போற்றவே
யேணி யாதுமில் லாது கால்களோய்ந்
　　திருக்கி லென்செய்வே னிடருற் றூர்களுக்
காணி யாமெனை யாள வல்லையே
　　லாற்றல் சாலநீ யாற்ற வேண்டுமால்
காணி யாகவே யன்பர் நெஞ்சினைக்
　　கருதி நின்றருள் கந்த மூர்த்தியே. (96)

கந்த வெற்பினில் வந்து வானவர்
　　கவலை தீர்பெருங் கருணை காட்டியே
செந்த முற்சிகைப் பூத வீரருஞ்
　　சேனைசூழ்வரச் செங்கை வேலொடு
முந்த மெய்ப்பரங் கிரியில் வந்தறு
　　முனிம கார்பெற முன்னு ருத்தனைத்
தந்த தற்பர னகில லோகமுஞ்
　　சார்ந்து கைதொழத் தக்க தெய்வமே. (97)

தெய்வத் தாமரைச் செல்வி தங்கிய
　　திருப்ப ரங்கிரிச் சேர்ந்த னேதமிழ்
வைவைத் தேனினு மதுர மாமென
　　வார்செ விக்குளே வாங்கு கின்றநீ
பொய்வைத் தேயொரு சிறிது மன்பிலார்
　　போல வொன்றுமே புகல்கி லாமலே
யுய்வைத் தாவென வேட்கு மென்றுதி
　　யுவந்தி டாததென் னுண்மை சொல்வையே. (98)

---

(96) பாணியாது-காலதாமதஞ்செய்யாமல். ஏண்-வலிமை. யாதும்-சிறிதும். இடர்-துன்பம். ஆணி-மாற்றறியுங்கருவி. வல்லையேல்-வல்லமையுடையாயானால். ஆற்றல்-வலிமை. ஆற்ற-செய்ய. (97) கந்தவெற்பு-கந்தகிரி, இது இமயமலைப்பக்கமுள்ளது. சிகை-குடுமி. அறுமுனிமகார்-பராசர முனிவர் பிள்ளைகள் அறுவர், இக்கதை கந்தபுராணத்துள் நன்கு விளங்கும். (98) உய்வை-பிழைத்தல். வேட்கும் விரும்பும்.

உண்மை யாயினு யின்மை யாயினு
யுருவு மாயினு யருவு மாயினுய்
திண்மை யாயினு யிலகு வாயினுய்
சிறிது மாயினுய் பெரிது மாயினுய்
அண்மை யாயினுய் சேய்மை யாயினு
யரிது மாயினு யெளிது மாயினுய்
வண்மை மேவிய பரங்கி ரிப்பதி
மயிலி லூருதி யாய மென்கொலோ. (99)

என்னில வேறுநீ யென்று ரைத்திடற்
கேது வாமிரு ளென்று நீங்குமோ
உன்னில் வேறலே னென்ன நின்பணி
யுஞற்று நாளுமெற் குள்ள தோவுயர்
சென்னி யாறுசீர் கொண்டி லங்கிய
திருப்ப ரங்கிரிச் சேந்த னேயெனைப்
பன்னி ரண்டருட் கண்க ளாலுநீ
பார்க்க வேண்டுநின் பதங்கள் போற்றியே. (100)

---

(99) அண்மை சமீபம. சேய்மை-தூரம். (100) இருள்-ஆணவ மலம். உஞற்றும்-செய்யும்.

முற்றிற்று.

இங்ஙனம்,

மு. ரா. அருணாசலக்கவிராயர்.

# பரங்கிரி வெண்பா அந்தாதி.

## காப்பு.

பத்தர் பணியும் பரங்கிரிவெண் பாமாலை
சித்த முவந்தடியேன் செய்துய்ய—உத்தமமாம்
கற்பகமா தங்கங் கலந்தபிரான் காலென்னுங்
கற்பகமா தங்கமுயர் காப்பு.

## நூல்.

பார்கொண்ட தெய்வப் பரங்கிரிவாழ் பண்டைமறைச்
சீர்கொண்ட மெய்ப்பொருளாஞ் சேந்தன்மேல்—நார்கொண்ட
சொன்மலர்த்தார் நெஞ்சே தொடுத்தென்றுஞ் சூட்டியவன்
நன்மலர்த்தா ளெய்துதற்கு நாடு. (1)

நாடும் பரங்கிரியா நன்றுறுபொன் னாடுவரை
நீடும் பரங்கிரியார் நின்மலனே—பாடும்
புலவருக்கன் போவாவுட் புக்கவிருள் போக
நலவருக்கன் போல்வாயிந் நாள். (2)

நாளாக நாளாக நானறு நானுனக்கே
யாளாக வென்றுநீ யாக்குவாய்—வாளா
இருக்கிற் பரங்கிரியா யென்னெஞ் சினைவந்
துருக்கிற் பவரா ருரை. (3)

உரைதடு மாற வுரோமஞ் சிலிர்ப்பக்
கரைகடந்து நெஞ்சங் கரைய—நிரைநிரையா
அன்பரங்குன் றுட்கீ ழுடுத்தா ரவருடனே
தென்பரங்குன் றுயெனையுஞ் சேர். (4)

---

(குறிப்பு) கால்-மகன். மாதங்கம்-யானைமுக விநாயகன். (2) உம்பர்-தேவாது. அம் - அழகிய. கிரியாநன்று-பூசனை முதலிய நன்மை. ஓவா-நீங்காத. இருள்-(மலமாகிய) இருள். (3) நான்-ஆணவ மலம். உருக்கிற்பவர்-உருகச்செய்பவர்.

சேராத நோயெல்லாஞ் சோத் திரண்டுவந்தா
லாரா தரிப்பா ரயிலாசை—நோராகப்
பாரா திருந்தாய் பரங்கிரியிற் பார்த்தனையேற்
றீரா திருக்குமோ செப்பு. (5)

செப்புங் கவலத் திரண்டசசி செந்தனந்தோ
யப்புங் கவற்குவாழ் வன்றளித்தோன்—ஒப்பும்
படிதுதிக்கை செய்து பரங்கிரியைப் பாடி
நெடிதுதிகை நோக்கிநெஞ்சே நில். (6)

நில்லா தவற்றை நிலையென்று நீநெஞ்சே
பொல்லா தவரோடு போய்க்கால—மெல்லாங்
கழித்தாய் பரங்கிரிவாழ் காங்கேயன் கண்பார்த்
தழித்தாலுன் துன்ப மறும். (7)

அறந்தா னியற்று மடியார்க்கன் பாற்ற
மறந்தான் பரங்கிரியை வாழ்த்தா—னிறந்தானென்
றெள்ளற் கிடமா யிருந்தே னெனையுங்கா
வள்ளற் குகனேநீ வந்து. (8)

வந்துவந்து சன்ம மரணம் வருத்தமனம்
நொந்துநொந்து நைந்து நொறுங்கினேன்—முந்து
பரம்பொருளாங் கந்தா பரங்கிரியி லன்பு
நிரம்பொரு நல்வரந்தா நீ. (9)

நீக்க முடியா நிறைதுணங்கள் நீங்குமா
றூக்கமிடி யுற்ற தயிலிறையே—காக்கள்
பழுங்கனிகட் கீயும் பரங்கிரியாய் பைம்பொன்
வழங்க விசைவரோவர் மற்று. (10)

---

(5) பாராது-தரிசியாமல். (6) கவல-கவலையடைய. சசி-இந்திராணி. துதிக்கை-தோத்திரம் (7) நில்லாதவற்றை-பிரபஞ்ச வாழ்வை. (8) எள்ளற்கு-இகழ்தற்கு. (9) நிரம்பு-நிறைகின்ற. (10) கவிகள்-குரங்குகள்.

மற்றொரு தெய்வத்தை வாழ்த்தேன் வணங்கேன்முன்
னூற்றொருமே லூரு மொருவனே—கற்றுயர்ந்தோர்
பத்திமென் மேலும் பரங்கிரியிற் பாலிப்பாய்
முத்திநெறி தோன்று முறை. (11)

முறைதவறு தென்று முழுமும் முரசாம்
பறையொலிசெய் கின்ற பரங்குன்—றிறையே
யயிலுந் துயிலு மறந்தவஞ்செய் யார்முன்
மயிலுமயி லும்வருமோ மற்று. (12)

வருமே பெருவாழ்வு மாடுமனை மக்கள்
கருமேகம் போலுதவு கையா—திருகையிலுங்
கொண்டவன் றென்பரங் குன்றினைக்கை கூப்பினுற்
கண்ட நிசமிதுவே காண். (13)

காணுப் பெருங்காட்சி காண்பதற்குக் காசினியில்
ஆணுப் பிறந்தும் அறிவிருந்தும்—வாணுளை
வீணுக் கழித்தேமெய் வெற்புறைவெள் வேற்குகனைப்
பேணு திருத்தல் பிழை. (14)

பிழைநூறு செய்யப் பெறினும் பெரியோர்
மழைபோ லருள்சுரத்தல் மாண்பாங்—குழைபா
திரண்டுகொண்டு மெய்வெற் பிருந்தின் னருளே
திரண்டுவந்த மேனியாய் தேர். (15)

தேர்ப்பாரார் தேசிகனுஞ் சேர்ந்தன் திருவடியைப்
பார்ப்பார் பரங்கிரியிற் பார்ப்பாரேல்—தூர்ப்பார்
பிறவிக் கடலினையிப் பெற்றியைப் பெட்பீர்
மறவிக் கிடங்கொடா மல். (16)

---

(11) ஒருமேல்-ஆட்டுவாகனத்தின்மேல். (12) மும்முரசு-படையெழுச்சியிலும், கொடையினிலும், விவாகத்தினிலும் முழங்கு முரசுகள். பறை-வாத்தியம். அயில்-உணவு. அயில்-வேல். (13) உதவுகை-கொடுத்தல். (14) பெருங்காட்சி-நிரதிசயானந்தம், அதாவது மோக்ஷநிலை. மெய்வெற்பு-பரங்கிரி (15) மாண்பு-குணம். குழை-காது. (16) தேர்ப்பாரார்-பூமியைத் தேராகவுடைய சிவபிரான். பார்ப்பார்-தரிசிப்பார். பெற்றி-தன்மை.

மற்குயர்ந்த வீமன் வழங்குகைக்கு மாகன்னன்
சொற்கரிச் சந்த்ரனெனச் சொன்னாலு—மெற்கனுவு
மீயாரித் துன்ப மிலாதிருக்க எம்பிரான்
சேயாம் பரங்கிரியாய் செய். (17)

செய்வா யினவளைகள் சேருந் திருப்பரங்குன்
றைவா யினால்வாழ்த்து மன்பனுக்கு—மெய்வாய்கண்
ணோதியவை யாலெய்து மல்லலறுப் பாயாற்கோம்
ஓதியவை யாகருணை யுற்று. (18)

உற்றார்பெற் றூர்நட் புறவாரென் னூரிலுள
மற்றாரெல் லாங்கூடி வந்தழுது—சுற்றுமுன்
கூர்வடிவே லையபரங் குன்றிற் குலவியநின்
சீர்வடிவு காட்டியெனைச் சேர். (19)

சேரத் தகாதவரைச் சேர்ந்து திரிந்தலைந்து
தூரத்த காதவழி சுற்றினனங்—கோரத்திற்
றூய பரங்கிரியைச் சூழேன் சுடர்வடிவேற்
சேயருளெவ் வாறு செயும். (20)

செய்யுந் தொழிலெல்லாந் தீயவையே செய்தக்கால்
உய்யுந் துணையா யுறுவரார்—மெய்யும்பொய்
யாயுனைநீங் கும்மெய் யசலத்தா னப்பொழுது
காயுநெஞ்சே நம்மையெதிர் கண்டு. (21)

கண்டுபோ லாயினுநின் காதெனன் கவிகளையுட்
கொண்டுமகி ழாதென்மெய்க் குன்றிடத்திற்—பண்டுநீ
தொண்டுசெயும் வள்ளியின் சொலனுக்குத் தோற்குமென்றால்
விண்டுமரு காமுருகா விள். (22)

(18) இனவளை-கூட்டமாகிய சங்கு. அன்பனுக்கு—அன்புடைய அடியேனுக்கு. ஓம-பிரணவமந்திரம். (20) தூரத்த-தூரமுள்ள. (21) மெய்யும-சரீரமும. மெய்யசலம-பரங்கிரி. (22) கண்டு-கற்கண்டு. விண்டு-விஷ்ணு.

விளங்குமொளி யாவுந்தன் மென்முகத்தின் மேவித்
துளங்குதலில் கண்களிற் றோற்றி—யுளங்குளிருங்
கோக்குரு வாயபரங் குன்றினிற் கும்பிட்டார்க்
காக்குருவாங் காற்றா னயன். (23)

ஆற்றுவெள்ளம் போலும் அருள்வெள்ளத் தாழ்த்தியெனை
வேற்றுமையில் லாதுநின்றாள் மேவவைத்தாற்—கூற்றும்
பிரமனுமென் னால்வருந்தும் பெற்றி பெறாரே
பரமலைவா ழுங்கந்தப் பா. (24)

கந்தப்பா நீயே கதியென்று கைதொழுவார்க்
கெந்தப்பா வத்தொகுதி யெல்லாமுஞ்—செந்தழலிற்
புக்கதுய் போல்மெய்ப் பொருப்பினிற் போய்விடத்
தக்கதென்று சொல்லத் தகும். (25)

தகுந்தபே ரன்புசெய்துன் றன்னருகிற் றங்கு
முகுந்தன் மருகா முருகா—பகுந்தருளை
யெல்லார்க்கு மீபரங்குன் றேநின் னிருப்பென்று
நல்லார் சொலத்தெரிந்தே னான். (26)

நான்போனால் மீண்டுவரா நன்னெறியை நன்குபெற்று
மான்போல் விழிவள்ளி வாஞ்சைமிக்க—கோன்பரங்
குன்றினை யெய்தியவன் கூடக் குலவியே
யொன்றி யிருப்பா ருவந்து. (27)

உவப்பார் பிரவஞ்சத் துள்வாழ்வை யோங்குந்
தவப்பான்மை சற்றுமெண்ணா தாரே—சிவப்பார்
வடிவேல் பரங்கிரியில் வைத்திருக்கும் வள்ள
லடிசேர மாட்டா ரவர். (28)

---

(23) துளங்குதல்-சலனம், கண்கள்-(சூரிய சந்திரராகிய) கண்கள், கோ-சிவபிரான், உரு-சரீரம், (24) பெற்றி-தன்மை, பரமலை-பரங்கிரி, (25) தொகுதி-கூட்டம், துய்-பஞ்சினது நுனி, மெய்ப்பொருப்பு-பரங்கிரி. (26) இருப்பு-இருப்பிடம், (27) நான்—ஆணவமலம், ஒன்றி-(அத்துவிதமாக)பொருந்தி, (28) பான்மை-தன்மை.

அவரிவ ரென்றுரை யாடி யலைந்து
கவர்மன முற்றுண்மை காணார்—எவரும்
பவக்கடலை நீந்தப் பரங்கிரிச்சேய் பாதம்
உவப்புறு ரென்பாவ மோ. (29)

ஓவா வறுமை பொறுத்தாலு முன்புகழை
யாவாசொல் வாரனப ரல்லாதார்—தாவாத
செல்வமுறி னும்மெய்ச் சிலம்பா சிறுகணவிற்
சொல்வதுஞ் செய்யாரந் தோ. (30)

அந்தோ கலிகால மாதலினோ அன்பகத்தில
வந்தோர் கணமுநிற்க மாட்டாமல்—வெந்துகரும்
பாறைமூனை போலாம் பரங்கிரியாய் பண்டேயிவ்
வூறைவ ராற்ற வுளர். (31)

உளதிலது மெய்பொய்யென் றோரா ருனது
பளகில் பரங்கிரியைப் பாரா—ரளமரலே
யெய்தியலை வாரயில்வே லேந்திறையே யெந்தநா
ளுய்தி பெறுவா ருவர். (32)

உவர்க்கடல்நேர் செல்வ முளாரிடத்து மோடி
யவர்க்கிதமே கூறி யலைந்தேன்—எவர்க்குமொரு
தாயாம் பரங்கிரியாய் சாம்வரையி தாவேலை
நீயா தரிக்க நினை. (33)

நினைப்பார்க்குப் பேராசை நீடுவர நெஞ்சில்
நினைப்பார்க்கும் நேருமது நோரா—எனைப்பார்க்குப்
பாரமா வைத்தானப் பாவி பரங்கிரிவாழ்
பாரமா வைத்தாக்கப் பா. (34)

(29) கவர்-பிளவுபட்ட. உண்மை-உண்மை நிலையாகிய பரம் பொருளை. (30) ஓவா - நீங்காத. ஆவா-ஆச்சரியம் ஆச்சரியம். தாவாத-கெடாத. மெய்ச்சிலம்பா-பரங்கிரியுடையவனே. (31) ஊறு-இடையூற்றை. ஐவர்-இந்திரியங்களாகிய ஐவர். (32) பளகு-குற்றம். பாரார்-தரிசியார். அளமரல்-சுழற்சி. உய்தி-பிழைத்தல் உவர்-இவர். (34) பார்க்கும்-தரிசிக்கும். ஆர்க்கும்-எவருக்கும். அப்பாவி-அந்தப் பாவியாகிய பிரமன். பாரம்-கனமாகிய. மா-(சூரனாகிய) மாமரத்தை.

பாவியே னின்னைநெஞ்சிற் பாவியேன் பாதமலர்
சேவியே னொன்றுந் தெரியாஎன்—ஆவிபோங்
காலம் பரங்கிரிவாழ் கந்தாநின் காற்கமலம்
ஏலவந்து காக்க இசை. (35)

இசையுடன்வா ழாம விருந்தே னெடுத்த
வசையுடன்மா யுங்காலம் வாராய்—தசையொடுங்க
மூத்தேன் பரங்கிரியாய் மூதறிவால் முந்தியுனைப்
பார்த்தேனு மல்லேன் பரிந்து. (36)

பரிந்தெனக்குப் பேசப் படுஞ்சீர் பலவும்
இரிந்தெனைவிட் டேக இடைந்தேன்—தெரிந்தருள
வல்லாய் பரங்கிரியாய் மாட்டே னெனவாயாற்
சொல்லாம லீவாய் சுகம். (37)

சுகம்போலத் துக்கத் தொடக்கினைச் சூழ்ந்தேன்
அகம்போற் பகையில்லை யச்சோ—மகம்போம்
சனியுமித் துன்பந் தராதேமெய்ச் சாரற்
கினியதெய்வ மாமெந்தை யே. (38)

எந்தாய் பரங்கிரியி லெவ்வுயிரு மேத்தியே
தந்தா யெனத்தக்க சாமியாய்—வந்தநீ
தேவ ரிடர்தீர்த்த தீர்த்தனெனச் சிந்தித்தி
யாவரும் வந்தடைந்தே மிங்கு. (39)

இங்குவைத்த பாத்திரம்போ லேடணைக ளேகிடினுந்
தங்குமவற் றாசை தவிர்ந்திலே—னெங்கும்
பரிபூ ரணங்கலக்கப் பண்ணிற் பரங்குன்
றுரியா யுஃதென்செய் யும். (40)

---

(35) பாவியேன்-பாவமுடைய யான். ஏல—பொருந்த. இசை—சொல்வாயாக. (38) தொடக்கு - சம்பந்தம். அகம்—மனம். மகம் போம் சனி-மக நக்ஷத்திரத்திற்புகுந்த சனி. மெய்ச்சாரல்-பரங்கிரி. (39) தீர்த்தன்-தேவன், முருகன். (40) இங்கு-பெருங்காயம். ஏடணை-இச்சை. அவற்று-அவ்விச்சைகளில். பரிபூரணம்-நிறைவு. உஃது-இந்த ஆசை.

உம்மையற வேண்டுவ தொன்று முளூற்றிலோம்
செம்மை யுறுநற் றிருமேனி—யெம்மைக்
குறைதவிர்த் தாட்கொள்ளக் கொண்டபரங் குன்று
மிறையு மறவோ மிதை. (41)

இதையகம லத்திலுனை யேற்றியன்பி னென்றும்
புதையந் தரியாக பூசை—யதையியற்று
மர்ச்சகந் தனைமெய்ம் மலையினின்று வந்தருளாற்
சிர்க்கந்த சாமிநீ தேற்று. (42)

தேற்றுவிக்கு மாறென்னைத் தேற்றுவாய் சேந்தனே
வேற்றுவிக்கு ளுண்ணின்று மேல்வருமுன்—காற்றுப்
படிநும் வியாதி பறக்கும் பரங்குன்
றடியினில்வைத் துன்கருணை யால். (43)

ஆலடியி லேகுருவா யன்றிருந்தார்க் காங்குருவே
வேலடியேன் காண விடுவித்து—மூல
மலமறுக்க வாமெய் வரையிருந் தென்முன்
சலனமற்று வாழ்வதற்குத் தான். (44)

தானந் தவம்புரிவார் தங்கட்குத் தக்கபே
ரானந்தஞ் செய்பரங்குன் றுயுன்னை—மோனநி
யானநிலை யிற்கண் டகமகிழ்வா ரந்தமெய்ஞ்
ஞான நிலையெனக்கு நல்கு. (45)

நல்குவா யாளூறு நல்காயா ளூறுன்னைப்
புல்குவா ருன்னைவிட்டுப் போவரோ—சொல்குமரா
பல்குசீர் மிக்க பரங்கிரியைப் பற்றிவிட்டேன்
அல்குமா றில்லா தருள். (46)

---

(41) உம்மை-வருபிறப்பு. உளூற்றிலோம்-செய்யோம். (42) புதை-மூடுகின்ற. அந்தரியாக பூசை-மனத்திலுள்ளே செய்யும் பூசை. (43) விக்குள்-விக்கல். (44) மூலமலம்-ஆணவமலம். சலனம்-சலித்தல். (45) மோனம்-மௌனம். (46) புல்குவார்-பொருந்துவார். அல்குமாறு-சுருங்கும் விதம்.

அருளினை யாக்குவதற் கன்பொருதா யாமிப்
பொருளினைத் தோராத புல்லர்—மருளிற்
கலந்து பரங்கிரிமெய்க் கந்தனினைக் காணு
தலந்து திரிவான்பாக் கார். (47)

ஆர்வந் தழைக்கி லருள்பழுக்கு மஃதறிவார்
ஆர்வந் தழைத்தென்னை யாளாக்கச்—சீர்வந்த
தெய்வப் பரங்கிரியிற் சேர்ப்பரோ சேர்ந்தனுஞ்
சைவப் பரம்பொருளே சாற்று. (48)

சாற்றூர வாரந் தழங்குமெய்ச் சாரலினைப்
போற்றூர் பொருளாற் புகழ்மக்கட்—பேற்றூல்
அறத்தாற் குமா னருளாலன் பால்மெய்த்
திறத்தாற் பெறூர்பெருமைச் சீர். (49)

சீர்த்திக்கு நல்லிருப்பாஞ் செய்ய திருப்பரங்குன்
றார்த்திக்கு நோக்கி யுறைந்துமும்—மூர்த்திக்கு
முன்னூங் குமாகுரு மூர்த்தியை முன்னிணுற்
பின்னூங்கு மல்குமுயர் பேறு. (50)

பேறு பதினூறும் பெறநல்கு பிஞ்ஞகன்சேய்
கூறுபதி யாறுமுதற் கொண்டபதி—தேறு
பரங்குன்று மென்றுகவி பாடிப் பணிவார்
வரங்குன்று தெய்திமகிழ் வார். (51)

மகிழம்பூக் காமனென்னேர் வந்துநின்று வண்டு
மகிழம்பூக் காமலருள் வான்முன்—முகிழுங்கண்
ஆரனலா யுற்றபா லத்தா னருளவந்தான்
ஆரனலாய் பெற்றமெய்க்குன் றூன். (52)

---

(47) மருளில்-மயக்கத்தில். (48) ஆர்வம்-அன்பு. (49) சாற்று-திருவிழாவின். ஆரவாரம்-முழக்கம். மெய்ச்சாரல — பரங்கிரி. (50) முன்னிணுல்-நினைத்தால். ஆங்கு-அவ்விடத்து. மல்கும் - நிறையும். (51) பதினூறு-புகழ், கல்வி, வலி, வெற்றி, நன்மக்கள், பொன், நெல், நல்லூழ், நுகர்ச்சி, அறிவு, அழகு, பெருமை, இளமை, துணிவு, நோயின்மை, வாழ்நாள் என்பனவாம். (52) மகிழம்பூ-மகிழம்பூமாலை. வண்டுமகிழம்பு-புட்பபாணம், ஊக்காமல்-செலுத்தாமல. முகிழ்-மூடிய. ஆர்—அரிய. அனலாய்-அக்கினியாய். பாலத்தான்-நெற்றியை யுடையவன். ஆரல்—கார்த்திகை நக்ஷத்திரமாகிய. நல்-நல்ல.

ஆனேறு வாகன மாக்கியக்கண் ணப்பனிடும்
ஊனேறு வாயுட னுள்ளழற்கண்—வானேறும்
இந்திரவிக் கண்ணுற்றா னீன்றசெம்ம லேபரங்குன்
றந்திரவில் லாக்கி யவன். (53)

அவன வளதுவென லாயமூன் றாலே
புவன மடங்கநின்ற புத்தேட்—சிவனொருபால்
வைகத்தன் னுள்ள மகிழ்மெய் வரையிலருள்
செய்கத்தன் சேர்தனென்னெஞ் சே. (54)

சேவலஞ் செய்யகொடிச் சேய்மெய்த் திகிரிதனை
மாவலஞ் செய்ய வருவார்க்குப்—பூவலஞ்
செய்தருமந் தப்பாது சேருமென் றுந் தீராத
பொய்தருமந் தப்பாவம் போம். (55)

போங்கால முண்டது போகாது போந்தக்கால்
ஆங்கால முண்டவன்சே யாருளின்—பாங்காற்
பரங்கிரியைப் பாடினரைப் பாசத்தான் பற்றற்
காங்கிருந்துன் பாற்றா னடுத்து. (56)

அடுத்தடுத்துச் சென்றா லவமதியா தன்பா
லெடுத்தெடுத்து வேண்டுவன வெல்லாங்—கொடுத்துக்
கொடுத்துப் பரங்கிரியிற் கூட்டியாட் கொண்டு
மடுத்துட் கலப்பனயில் மன். (57)

மன்னர் முனிவருயர் வானவர் மாலயனமற
றென்ன ரெனினு மினிமதியேன்—உன்னடிமை
யாகினாற் றென்பரங்குன் றத்தி லருந்தவத்தோர்
யோகினாற் றேர்முருகா ஓர். (58)

---

(53) இந்து இரவி—சந்திர சூரியன். திர இல்-உறுதியாகிய வீடு. (54) புத்தேள்-தேவன். வைக—தங்க. (55) மெய்த்திகிரி-பரங்கிரி. பூவலம்—பூமிப் பிரதக்ஷணம். பொய் தரும்-பொய்யைக் கொடுக்கும். (56) ஆங்கு-அவ்விடத்து. பாசத்தான்-யமன். ஆங்கு-அழுந்துகின்ற. இரும்-பெரிய. (57) மடுத்து-நிறைந்து, (58) யோகினால்-யோக ஞானத்தால்.

ஓராமற் குற்ற முரைத்திடலா மோபார்த்தன்
பேராமற் குற்ற பிரான்மைந்தா—சீரார்
கதிக்குரிய மெய்க்கிரியுன் கட்கருணை யெய்தார்
துதிக்குமா றெவ்வாறு சொல். (59)

சொல்லும் பொருளுமந்தச் சூரன் றொலைந்தழிய
வெல்லும் பெருமைபெற்ற வேலரசேல்—அல்லும்
பகலுமியான் பாடும் பரங்கிரிவெண் பாவை
யிகலுமா றென்றவனுக் கில். (60)

இலைமலர் காய்கனிதே னெல்லா நிறையுங்
குலையுறுகாச் சூழ்பரங் குன்றத்—தலையி
லிருக்குமுரு கன்பா லிராதா ரிடத்தும்
உருக்குமுரு கன்பா லுளன். (61)

உளனல னெங்குமென் றோது மொருவன்
வளனல மெல்லாம் வழங்கும்—பளகறுசீர்
கொண்டமதி மூன்றுமழை கொட்டுபரங் குன்றினைநேர்
கண்டவர்தன் னேர்வந்தக் கால். (62)

காலங் கடக்கக் கருத்தழிந்தேன் காரிகையார்
மாலங் கடக்க வகையறியேன்—வேலங்கைக்
கொண்ட வரசேமெய்க் குன்றிற் கொடியபிணி
யண்டவர வொட்டாம லாள். (63)

ஆளாக்கி யாதியில்நீ யாண்டிருந்தா லாம்பிறப்பில்
மீளாக் கியாதிவந்து மேவுமது—வாளா
கழிந்தது கந்தாநிற் கண்டார் கவலை
யொழிந்ததுவா வர்மெய்க்குன் றுள். (64)

(59) ஓராமல்—உணராமல். (60) இகலுமாறு-விரோதிக்கும் விதம். (61) கா-சோலை. பால்—வழி. (62) ஒருவன்—ஆட்டு வாகனத்தையுடைய முருகன். பளகு-குற்றம். (63) அண்ட-நெருங்க. (64) ஆள்-அடிமை. வாளா-வீணாக. அது-பரம் பொருள்.

உள்ளாயா சந்தோட முற்றென் றுடையாவென்
றுள்ளாயா சந்தோட மோடுதற்குத்—தள்ளாதென்
பாவையெலாங் கேட்டுப் பரங்கிரியிற் பற்றுறுமப்
பாவையா வேல்கொள் பரா. (65)

பாரரை மரம்போலும் பாமரர்நிற் பார்க்க
வாரைவர் கூட்டத்துள் வாழ்வார்—ஒராரெனையும்
ஆகையால் நின்மெய் யசல மடைந்திலேன்
ஈகையீ ராறுடையா யென். (66)

எற்குவடு வில்லா திருக்கநீ யென்றுசெய்வாய்
பொற்குவடு வில்லாம் புராணகுரு—சற்குருவா
யுற்றபரங் குன்று யுனதுமறை யுள்ளடியேன்
கற்றபரங் குன்றுமற் காத்து. (67)

காத்திருக்கு வந்துநேர் காணுங் கருணைமிகப்
பூத்திருக்கு நின்கழலைப் போற்றுவார்க்—கேத்துமுயர்
பத்தி ரசம்பத்துப் பங்காம் பரங்கிரியாய்
புத்திரசம் பத்துப் புகு. (68)

புகுந்த திசையெல்லாம் பொருந்துநிலம் பொன்போய்த்
தகுந்ததிசை யாமற் றளர்ந்தேன்—மிகுந்தவொரு
தாதாவாய் மெய்வரைவாழ் சண்முகநீ தந்துதவப்
போதாதா வென்கவியிப் போது. (69)

போதெலாம் வீணாகப் போக்கினேன் பொற்புழலை
மாதெலா மாதர் மயக்கில்யான்—மீதெலா
மென்னத் திருப்பரங்குன் றில்லிவ் விருள்நீத்தென்
முன்னத் திருப்பன் முருகு. (70)

---

(65) உள்ளாயா - நினைக்கமாட்டாயா. பாவை-பாடலை. (66) பாரரை - பருத்த அரையினையுடைய. ஐவர் - பஞ்சேந்திரியங்கள். ஒரார்-நீங்கார். ஈ-கொடுக்கின்ற. (67) பொற்குவடு-மகாமேருமலை மறையுள்-ஆறெழுத்து மந்திரத்துள். பரம்-மெய்ப்பொருள். (68) இருக்கு-வேதங்கள். புகு—சேர்க்கருள். (69) தகுந்தது-தக்கதாகிய ஒன்று. போதாதா-பற்றாதா. (70) மா-பெரிய. தெல்-தெலலுக்காய். மீது-மேலிடத்துள்ள. எல்-சூரியன். இவ்விருள்-இந்த மயக்கமாகிய இருட்டு. முன்னத்து—எண்ணத்து. முருகு-முருகக்கடவுள்.

முருகாவந் தோயான் முறைகடந்து மூத்தேன்
அருகாவந் தோயாதோ வல்லல்—பருகா
அருமாந்த நின்மெய் யசலத் தடியேன்
உருமாந்த லெங்கா ளூறும். (71)

உறையுறையாச் சேரி லுயர்வெள்ள முண்டாம்
முறையுறையா என்பால் முருகா—இறையிறையா
உன்னருளீந் தாலுமெய் யோங்கல்போ லோங்குமே
யன்ன தரிதோசொல் லாய். (72)

ஆகா தெனினு மகத்துநெய் யார்ந்திருந்தாற்
போகா தெறும்பது போலமுரு—காகாவாய்
என்றாலுங் காப்ப தியலுனைவிட் டேகிலன்மெய்க்
குன்றுறைசை மேன்மேலுங் கொண்டு. (73)

கொண்ட லனைத்துங் குழூஉம்பரங் குன்றினிலா
கண்டலனை மாமனுக் கண்டநீ—யுண்டுநா
னுண்டுசேர்ந் தென்னோடொன் றுண்டுவை யல்லாமற்
பண்டு பிறவெல்லாம் பாழ். (74)

பாழ்பட்ட வாழ்விற் பயின்று பசையற்று
வீழ்பட்ட கட்டையாய் விட்டனன்பொன்—சூழ்பட்
டரையன்மரு காமெய் யசலத் தாசே
யுரையன்மற் றுன்று ளுதவு. (75)

உதவிவரைத் தன்றுபய னுற்றுழியொன் றீதல்
அதனருமை யானே யறிவன்—இதமே
தினைத்துணையாக் கொள்மெய்ச் சிலம்பா தினமும்
நினைத்துணையாக் கொள்ளெனக்கு நேர். (76)

---

(71) அருகா-பக்கமாக. பருகா-உண்ணக்கூடாத. அருமாந்த-அரியமருந்து போன்ற மருந்து. (அமிர்தம்) மெய்யசலத்து-பரங்கிரியில. உரு-சரீரம. மாந்தல்-இறத்தல. (72) உறை-துளி. முறை—நீதி. இறை-சிறிது.மெய்யோங்கல-பரங்கிரி. (73)ஆர்ந்து-நிறைந்து. இயல்-பொருந்திய. (74) குழூஉம்-கூடும. ஆகண்டலன்-இந்திரன். ஒன்று-ஆணவமலம். பாழ்-இல்லை. (75) பயின்று—பழகி. பொன்சூழ்பட்டு-பீதாம்பரம்.உரையல்-சொல்லாதே. மற்று-வேறு. (76) வரைதன்று-அளவுடையதல்ல. உற்றுழி-ஆபத்துவந்த இடத்து. ஆககு-செய்வாய். ஒள்-ஒளிபொருந்திய. நேர்-எதிரே.

நேர்வந் திளைக்குமருள் நீங்காநோய் நீக்காயேல்
ஆர்வந் திளைக்குமரு ளாக்குவரார்—ஓர்வந்
தனஞ்செ யமரரிடர் தன்னைத் தவிர்க்கும்
அனஞ்செ யமர்பரங்குன் றாய். (77)

ஆயாயா யென்றுயிர்க ளத்தனையு மன்புசெய்தல்
ஆயாயா மெய்யசலத் தண்ணலே—நோயாய்
பிடியாய் வருத்தும் வினையெலாம் வீட
இடியாயுன் கைவே லினால். (78)

இனமுந் தனமு மிடமுமிலா தேங்கி
மனமுந்த நான்பிந்த வந்தேன்—கனமுந்த
வெள்ளங் குலவுமெய் வெற்பாசே வேண்டுவன
உள்ளங் குளிரநல்கா யுங்கு (79)

உம்மவ்வோ டுற்றமறை யுட்பொருளி னுண்மைநிலை
யம்மம்ம கண்டாலா மானந்தம்—செம்மலெனுங்
கந்தா பரங்கிரியிற் காட்டிக் கருப்புகுதுஞ்
சிந்தா குலமுழுதுந் தீர். (80)

தீர்த்தனே நின்பாத தீர்த்தந் திருந்தன்பு
கூர்த்தருந்தி நீறுகையிற் கொண்டணிந்து—பார்த்தறிஞர்
பற்றும் பரங்கிரியைப் பாடிப் படித்தற்குச்
சற்றுந் தளர்ச்சி தவிர். (81)

தவிரா யமவாதை தன்னைத் தமிழ்தேர்
கவிராய கீரன் கவிக்கன்—புவிராய
கந்தா பரங்கிரியிற் கைதொழுது கற்றவர்கள்
தந்தா பரமெனும்பா தா. (82)

---

(77) இளைக்குமமருள்-வருந்துகின்ற மயக்கம். ஆர்வம்-அன்பால். திளைக்கும்-அநுபவிக்கும். அனம்-அன்னப்பறவை. செய்-வயல். (78) ஆய் ஆய்-தாய் தாய். ஆயாயா-ஆராய மாட்டாயோ. வீட-கெட. இடியாய்-இடித்தருளுவாய். (79) இனம் - சுற்றம். கனம்-மேகம். உந்த-செலுத்த. நலகாய்-கொடுத்தருளுவாய். உங்கு-இவ்விடத்து. (80) உம அவ்வோடு-உம என்பது அகரத்தோடு. உற்ற-பொருந்திய. மறை-பிரணவமாகிய மந்திரத்தின். உட்பொருள்-பரம்பொருளை. சிந்தாகுலம்-துன்பம். (81) கூர்த்து-மிகுத்து. (82) தவிராய்-தவிர்ப்பாய் விராய-கலந்த. தாபரம்-ஆதாரம்.

தாபர மன்னவொரு தன்னறிவு சற்றுமிலேன்
மாபர மன்னன் மகனெனுநீ—யேபரமென்
றெவ்வா றுணர்வே னியற்பரங்குன் றில்முகங்க
ளொவ்வாறு கொண்டுவந்தாற் றேய். (83)

ஓயா விருந்தவா வுண்மகிழ்வா ரொப்பவென்றுந்
தாயா விருந்துலகந் தாங்கியருள்—சேயா
வரங்கிரியி ரண்டிணையும் வாழ்த்தி வணங்கிற்
பரங்கிரியி லெய்துமின் பம். (84)

பந்துவர்க்க மாதர்மக்கள் பற்றற்ற காலத்திற்
சிந்துவர்க்க மாகவெண்ணிச் சேரார்பின்—செந்துவர்க்குஞ்
சேயர் திருத்தி செயுமெய்ச் சிலம்பிலமர்
தூயர்திருத் தாளே துணை. (85)

துணையாய மாந்தர் சுடுகாட்டுக் கப்பால்
அணையார் குறிஞ்சியென லாகுந்—திணையாா
வாழ்ந்து பரங்கிரியில் வைகினான் மாமலர்த்தாள்
சூழ்ந்து பணிமின் றொடர்ந்து. (86)

தொடரும் வினைவலிமை தூளாய்த் தொலைய
அடரும்வை வேல்மெய் யசலத்—திடாகலச்
செல்லு மெதிர்நின்று சேந்தனைச் சேவித்து
நில்லுஞ் சிறுபொழுது நீர். (87)

நீர்வளம் நல்ல நிலவளம் நீடுபயன்
சீர்வளஞ் சேர்மெய்ச் சிலம்பனெதிர்—யார்வரினும்
வேண்டுவன வெல்லாம் வெறுப்ப வெறுப்ப நல்கும்
யாண்டுமிவன் போல்வார் இலர். (88)

---

(83) தாபரம்-ஆதாரமாக. மன்ன-நிலைபெற. ஒ-ஒத்த. (84) சேயாவர்-இளமையாயுள்ள குமாரக்கடவுள். அங்கிரி-திருவடி. (85) உவர்க்கம்-உவர்ச்சலம். துவர்க்கும்-பவளத்தைப்பார்க்கினும். சேயர்-சிவந்த திருமேனியுடையவர். மெய்ச்சிலம்பு-பரங்கிரி. (86) திணை-நிலத்தில். ஆர-பொருந்த. (87) வைவேல்-கூரிய வேலாயுதமானது. (88) யாண்டும்-எவ்விடத்தும்.

இலர்பலரும் யாரே வியற்குமா நின்றான்
மலரி லிலைமலர் தூய் வாழ்ந்தார்—அலரென்று
சொன்னாலு மெய்வரையிற் சொற்புத்தி கேளாத
அன்னார் நினையர்ச்சி யார். (89)

ஆரார் வணங்கவரா தாரென் றவர்முகத்தைப்
பாரா திருக்கும் பரங்கிரியாய்—கோரக
வந்தியான் காண மயில்மேல் வருங்காட்சி
தந்தருளற் கென்னோ தடை. (90)

தடையெனச் சொல்லென் சகசமலந் தானின்
றிடையில் மறைத்த திரைவே—லுடையபரங்
குன்றாய் கிழித்திரண்டு கூறுசெயிற் கும்பிட்டு
நின்றாள் கலந்துய்வ னோர். (91)

நோரா ருரம்பிளந்து நின்றவேல் நின்மலனைச்
சீரா ருருமைச்செஞ் சேந்தனை நீ—பாராயுன்
னுள்ளும் பரங்கிரியி னுள்ளு முணர்வையது
விள்ளுந் தாத்ததன்று மேல். (92)

மேலாந் தரத்திருவார் மெய்க்கிரிவெள் வேலரசே
காலாந் தரத்திற் கடுகியெனை—மூலாந்
தாங்க வருமைநிலை தன்னிலே சார்த்தி
யரங்க வருள்செய்வா யால். (93)

(89) இலை-பத்திரம். அன்னார் - அத்தன்மையுடையார். (91) சகசமலம் — கூடவேயிருக்கும் ஆணவமலம். நோ்-சம்மதித்தருள். (92) நோரார்-சூரனுதிய பகைவர். உணர்வை-அறிவாய். (மனமே) விள்ளும்-சொல்லும். (93) தாத்திரு-தகுதியாகிய செல்வம். கடுகி-விரைந்துவந்து. மூலாந்தரங்கம் - பரம்பொருளின். அரங்க-அழுந்த.

ஆலவாய்த் தென்மேற் கமர்மெய் யசலத்திற்
சாலவாய்த் தென்னெஞ்சன் றுன்பணிய—நீலச்
சிகண்டிதனி லேறிவந்தஞ் சேலென்று செப்பி
யகண்டிதனு நீகாத் தருள். (94)

அருணு சலம்பரங்குன் றத்திருந்தா லன்ன
கருணு சலதியெனுங் கந்தன்—றிருநாமம்
ஒன்று புகன்றுெ ரொருபிறப்பி னுள்ளுமினித்
துன்றுபுகன் றூர் தொறும். (95)

தொறுவியர் வைத்தவெண்ணெய் துய்த்தோன் மருகா
உறுவியர் வைத்துளி யோட—மறுகியன்பா
லோடிப் பரவசப்பட் டுன்பரங்குன் றுள்வந்தேன்
பாடிப் பரவப் பணி. (96)

பணியாவென் றேவள்ளி பாதம் பணிவோய்
தணியாவென் றேகநோய் தன்னைக்—கணியாயேல்
கோற்றேன் வடிபரங் குன்றுய் கொடியதுயர்
ஆற்றேன் வடிவே லவா. (97)

அவாவறுத்த வித்தகரை யாட்கொண் டருள்தந்
தவாவறுத்த வித்தாயென் சன்மம்—உவாமதியை
யொப்பாப் பரங்குன்ற உன்னருள்செய் யோர்குறையும்
அப்பாப் பரங்குன் றதில். (98)

---

(94) ஆலவாய்-மதுரைக்கு. மெய்யசலம் - பரங்கிரி. வாய்த்து-கிடைத்து. சிகண்டி-மயில்வாகனம். அகண்டிதன்-கண்டிக்கப்படாதவன். (95) அருணுசலம்-செந்நிறமுடைய மலை. கருணுசலதி கிருபைக்கடல். துன்றுபு—நெருங்கி. கன்றூர்-மெய்வருத்தப்படார். (96) தொறுவியர்-இடைச்சியர். துய்த்தோன் - உண்டருளிய திருமால். வியர்வை-வேர்வை. மறுகி—சுழன்று. (97) பணியா-வேலைகள் எவை. கணியாயேல்-கவனியாவிட்டால். கோற்றேன் - பூங்கொம்புத்தேன். (98) அவா-ஆசையை. அறுத்த-கெடுத்த. தந்தவா-கொடுத்தருளியவனே. உவாமதியை-பூரணசந்திரனை. ஒப்பா-நிகராக. பரம்-பாரம். குன்ற-நாளுக்குநாள் குறைய.

அதிசய முற்ற வமைமெய் யசலன்
அதிசய முற்றவே லண்ணல்—விதிசெய்
பிணிமுகந் தாங்கு பிணித்தலெற்குப் பேர்ப்பன்
பிணிமுகந் தாங்கு பிரான். (99)

பிரான்பர வெற்பார் பெருந்தகை பின்னம்
இரான்பர வெற்பா ரிளஞ்சேய்—ஓரானன்
'திருப்பா ருளத்தை யிவனுக்கெஞ் ஞான்றுந்
திருப்பாரு ளத்தை திரு. (100)

---

(99) அதிசயம்-ஆச்சரியமாகிய விஷயங்கள். முற்ற-முழுவதும். சயம்-வெற்றி. விதி-ஊழ். பிணி-நோய். முகந்து-கவர்ந்து. பிணித்தல்-கட்டுதலை. பிணிமுகம்-மயில். (100) பரவெற்பு—பரங்கிரி. பின்னம்-குற்றம். பரவு-துதிக்கின்ற. எற்பார்-என்னைக்கண்பார்க்கின்ற. ஓரான்-நீங்கான். அத்தை—மாமியார். திரு-இலக்குமி.

100ஆவது பாடலின் கடைஅடியில் முதற்சீரின் இரண்டாவது அசையாகிய பாரென்பது முதற்பாடலுக்கு அந்தாதியாகக்கொள்க.

முற்றிற்று.

இங்ஙனம்,

மு. ரா. அருணசலக்கவிராயர்.

# பரங்கிரி யலங்காரம்.

## கற்பகவிநாயகர் துதி.

ஆரலங் காரத் தருபால் மணங்கம ழும்புயவாய்ச்
சீரலங் காரந் திகழும் பரங்கிரிச் சேர்தனென்மேற்
சாரலங் காரகன் றோடந் தவிர்த்தருள் சாமிக்கியான்
பேரலங் காரஞ் செயச்செயுங் கற்பகப் பேர்க்களிறே.

## நூல்.

பார்த்திகை யாவும் புகழா லமரும் பரமகுரு
மூர்த்திகை யாலெடுத் துள்ள மகிழு முருகனுயர்
கார்த்திகை யானம் பரங்கிரி காக்குங் கடவுளவன்
சீர்த்திகை யாம லெழுதியெங் குஞ்சென்று செப்புவனே (1)

ஏற்க மறந்துங் கொடுக்க நினைந்து மிருக்கநமைச்
சூற்கனஞ் சூழும் பரங்கிரிக் கந்த சுவாமிசெய்தால்
பாற்கா னேருந் திருமேனி கொண்டவப் பண்ணவன்சீர்
நாற்கவி யாலுல கெங்கணும் போய்நின்று நான்சொல்வனே. (2)

மத்தாற் கடையுந் தயிர்போற் கலங்கி மயங்கியயான்
செத்தாற் பிறப்பது வாராமற் செய்யத் திருவுளநீ
வைத்தா லிரண்டற்ற வொன்று நிலையுற்று வாழ்வனுன்பால்
சத்தா லுயரும் பரங்கிரி வைகிய சண்முகனே. (3)

கண்டா ரெனையிவன் செத்த பிணத்திற் கடையெனவாய்
விண்டா ரதனுள வென்றோ வதற்கு மெலிந்தயரேன்
உண்டா லகலும் பசியாத நோய்களுக் குள்ளுடைந்தேன்
தண்டா யுதங்கையிற் கொண்டார் பரங்கிரித் தற்பரனே. (4)

---

(காப்பு) ஆரல்-கார்த்திகைத்தாய். ஆரம்-சந்தனமரம். சாரல்-சேருதலுடைய. அங்காரகன்-செவ்வாய். அலங்காரம்-அலங்காரமாகிய நூல். களிறு-யானைமுகவிநாயகர். (1) திகை-திசை. கையாமல்-வெறுக்காமல். (2) சூற்கனம்-நீருண்டமேகம். நாற்கவி-ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம். (3) இரண்டற்ற ஒன்றும்நிலை-அத்துவிதநிலை, இதுவேமோக்ஷம். சத்து-உண்மை. (4) உளவு-இரகசியம், அஃதாவது வறுமை.

கரையுந் திரையு முடலெங்கு மெய்த கலிந்துமெலிந்
தரையுந் தளர்ந்துள் ளுனையு நினைய அயர்ந்தனன்கா
இரையுந் திரையொலி விண்போஞ் சரவணத் தெய்தியபின்
பரையுந் திடவரு கந்தா பரங்கிரிப் பண்ணவனே. (5)

வாடாத மாலையென் றன்பர் செயுந்தமிழ் மாலைக்கலந்
தேடா வதுகொண் டெழுதிப்பெற் றானுந்தை யிந்தப்பெரும்
பாடான் றின்றிப் பரங்குன்றில் யான்செயும் பாத்தொடைநீ
சூடா தகற்ற வழக்குமுண் டோகொஞ்சஞ் சொல்குகனே. (6)

கறியார் கொடிபட ரும்பரங் குன்றினைக் கைதொழுவார்
பிறியா திருக்கும் பெருவீடு பின்றரும் பெற்றிக்கறி
குறியா இவண்சிறு வீடா யினுமுன் கொடுத்திலையேற்
சிறியார் களுமதை நம்பா ரயில்கொண்ட சேவகனே. (7)

சோறு தராத்தெய்வஞ் சொற்கந் தருமெனச் சொல்லுவது
மாறு படாவழக் காமோ பரங்கிரி வாழ்குகனே
வேறு படாமலங் கேதரு வோமிக வேண்டுசெல்வம்
ஈறு படாவுனக் கிங்கொன்று மீந்தில மென்றிடினே. (8)

வாய்கட் குடிக்கவும் பொய்பே சவுமின்றி மாமரத்தைக்
காய்கட் டுமரனைப் பாடா திருக்கக் கருத்தழிந்தார்
நோய்கட் கிடஞ்சற்று மீயாப் பரங்கிரி நோக்கிலராய்த்
தாய்கட்குப் பாரமெனப்போய்ப் பிறப்பர் சாதமிதே. (9)

பாசத் தகப்பட் டுனையன்றித் தெய்வம் பலவுளவென்
றேசத்த மிட்டுப் புகழ்வாரைக் கண்டித் தெழுந்துமிகப்
பேசத் தடையொன்று மில்லேனை யாண்டருள் பின்னென்றிடேல்
வாசத் தமிழ்ப்புல வோனும் பரங்கிரி வானவனே. (10)

---

(5) அரை-இடை. இரையும்-முழங்கும். பரை-உமாதேவி. (6) ஏடு-மாணிக்கவாசக சுவாமிகளருளிய திருக்கோவையாரை எழுதிய ஏடு. உந்தை-உன்பிதா. (7) கறி-மிளகு. பெருவீடு-மோக்ஷவீடு. அறிகுறியா-அடையாளமாக. (8) ஈறு-அழிவு. (9) காய்-கோபிக்கின்ற. (10) பாசத்து-ஆணவமலத்துள்.

வந்தாரை வாழ்வித்து வாராரைத் தாழ்வித்து மன்னுகடப்
பந்தாரை யாபரங் குன்றிருந் தாய்நமைப் பார்க்கவந்த
தெந்தாரை நீயென்று கேளா திருந்தனை யென்னிருகண்
ணுந்தாரை யாக வொழுக்கிய நீர்கண்டும் ஓகொடிதே. (11)

பாகு கனிமொழி வள்ளிக் கொடிபடர் பன்னிரண்டு
வாகு கமழப் புனைதரு நந்தமிழ் மாலைகண்டா
லேகுகன் றற்பரங் குன்றினில் வேண்டிய வெச்செல்வமும்
ஆகுக வென்றுமென் றுசீர் வதிப்ப னருள்புரிந்தே. (12)

நாமுப வாச விரதம் பலமுற்றி நம்பெருமாற்
கோமுப தேசம் புரிந்தான் பரங்குன் றுறைந்தனமேல்
ஆமுப யோகமென் னென்றால்மண் பொன்னில மாக்குதற்காம்
ஏமுப யோகங் கிடைக்குமங் கேவம்மி னிப்பொழுதே. (13)

விப்பிர பந்தங் கிளைக்கும் பரங்கிரி வேலவனை
யிப்பிர பந்தத்துக் கேற்றவொர் தெய்வமென் றெண்ணிவைத்தேன்
அப்பிர பந்தகற் செற்றான் குருவென் றறிந்திருந்துங்
கைப்பி ரபந்தனக் காளாகி டாதினிக் கைதொழுமே. (14)

கோலா கலமஞ்ஞை மீதேறிக் காட்சி கொடுத்தருளுஞ்
சீலா கலக மொடுக்கிப் பரங்கிரி சேர்ந்தவடி
வேலா கலகல வென்னுஞ் சிலம்பொலி மேவுதண்டைக்
காலா கலகல வென்றெடு நாளுங் கலப்பதற்கே. (15)

உடல்பட வோடு முயிரந்த வேலை யுனையழையேன்
கடல்பட வேலெறி கந்தா பரங்கிரி காத்தமர்நீ
மிடல்படர் வேலொடு மாமயி லேறி விரைந்துதுன்பப்
படல்படல் என்றுரை யாடிவந் தால்நற் பலனுண்டுமே. (16)

---

(11) எந்து-என்ன. ஆரை-யார். ஆரையென்பதில்ஐ-சாரியை. தாரை-நேரோடுதல். ஓ-ஐயோ. (12) வாகு-தோள். தற்பரங்குன்றி னில்-தன்னுடைய பரங்கிரியில். (13) ஓம்-பிரணவமந்திரம். ஏம்—இன்பம். (14) விப்பிரபந்தம்-பிராமணர் கிளைகள். அப்பிரபு-அந்தப்பிரபு. கைப்பிர்-வெறுப்பீர். அபம்-வீண். (15) கலகல-கலப்பாய் கலப்பாய். (16) பட-இறக்க. மிடல்-வலிமை. படல்படல்-படாதே படாதே.

அளவு படாத பொருளேறிற் பண்டியி னச்சிறல்போற்
பிளவு படாநெஞ் சனந்தம் பிணிகள் பெறிலுடையுந்
துளவு படாமெனப் போர்த்தான் மருகவித் துன்பந்தவிர்
களவு படார்மனத் தெய்தும் பரங்கிரிக் கண்ணெனக்கே. (17)

கடுகத் தனைபிணி யுற்றால் மருந்துக்குங் காணப்பற்று
திடுகத்த னையத் திருவுள மோசற் றிரங்குகிலாய்
வடுகத் தனையனைப் பெற்றானுக் கோம்சொன்ன வாகைமண்ணைத்
தொடுகத் தனைமுன் னெனச்சொல் பரங்கிரித் தூயவனே. (18)

பொன்னோ டுவமிக்கு மேனிச்செவ் வேற்கைப் புராதனன்றன்
உன்னோடு வைகியுங் காண வுபாயமொன் றோர்ந்திலையால்
என்னோடு நீவரிற் காட்டுவன் சம்மத மென்னிலென்றன்
பின்னோடு வாபரங் குன்றின்முன் றின்முனென் பேதைநெஞ்சே. ()

நற்றாட்குப் பற்ப விடையூ றுறுமிதென் னுளனது
பொற்றாட் குயரன்பு பூணவந் தாலைவர் போகவொட்டார்
சற்றாட் படுத்திப் பரங்கிரிப் பால்வை சகமுழுதும்
பெற்றாட் கிருகண் மணியா யருட்சத்தி பெற்றவனே. (20)

சித்தாந்த நூற்பொரு ளாங்கந்த நின்னைத் திறலரக்கன்
பத்தாந் தலைக ளறுக்குமுன் னேயிந்தப் பாரைமிதித்
தத்தாந் தலைவன் றொழும்பரங் குன்றினிற் றொல்வினைபோ
கத்தாந் தனியிருந் தியோகியற் றாரெதிர் காண்பதற்கே. (21)

மருட்டி யலைக்கு மடவார் பொருட்டும் வளர்பொருள்கள்
இருட்டிற் பகலிற் பறிக்கும் பொருட்டுமிங் கேவருவார்
அருட்டிற னெய்தும் பொருட்டு வராரிவர்க் காகுங்கொலோ
தெருட்டிறன் மேவும் பரங்கிரிக் கந்தன் றிருவருளே. (22)

---

(17) படாம்-போர்வை.(18)இடுகு-சுருங்கிய.அத்தன்-பொருளை யுடையான். வடுகத்தனையன்-வயிரவராகிய பிள்ளை. ஓம்-பிரணவம். கை-துதிக்கை. கத்தன்-விநாயகக்கடவுள். முன்-தமையன். (19) வை யியும்-தங்கியும். முன்றின்முன்-முற்றத்திடத்தில். (20) நல்தாட்கு-நல்ல முயற்சிக்கு. ஐவர்—பஞ்சேந்திரியங்கள். ஆட்படுத்தி-அடிமை யாக்கி. வை-வைத்தருள்வாய். சத்தி-வேலாயுதம். (21) அரக்கன்-இராவணன். தாம்-தாவுகின்ற. தலைவன்-திருமால். யோகு—யோகம். (22) மருட்டி—மயங்கச்செய்து.

காரண முள்வழிக் காரிய முண்டென்று கண்டுபரி
பூரண மாமன்பு தேடிவைத் தேனென் பொருட்டதுதான்
ஆரண முன்னமுங் காணுப் பரங்கிரி யானருளை
ஏரண வின்னமு மீனுத தென்னைகொ லென்மனமே. (23)

சாகத் துணிவர் கடல்முழுங் கால்மட்டுத் தானெனல்போற்
சோகத்து ணின்றவென் னெஞ்சனைக் கைவிட்டுத் தூரத்திலே
யேகத் துணித லெளிதென்று போஞ்சற் றிரங்குவள்ளி
மோகத்து ணின்ற முருகா பரங்கிரி முன்னவனே. (24)

கண்கெட்ட போதி லுயர்சூ ரியகமக் காரஞ்செய
எண்கெட் டிடாம லெழுல்போ லுளநல மியாவுங்கெட்டுப்
புண்பட்ட போதி லெழுந்தோடி யேநினைப் போற்றவந்தேன்.
திண்கெட்ட வேழைக் கிரங்காய் பரங்கிரிச் சிற்குகனே. (25)

தனுதிபர்க் கென்னைக்கண் டால்நகை யெய்தத் தயங்குகின்றேன்
எனுதியற் கைமுற்றும் பார்த்துச்சற் றேனுமொன் றீந்திலையேல்
அனுதரைக் காப்பவ னீயென்பர் சொல்லைப்பொய் யாக்கிவிட்டாய்
மனுதிகட் கப்புற மாய்ப்பரங் குன்றினில வாழ்குகனே. (26)

மேகந் தனையெண்ண முற்று மழைபெயு மெய்யசலத்
தேகந் தனையு மிருங்கொன்றை பூத்தல ரின்மலரின்
பாகந் தனையும் பணியா ரரையிற் பயில்பழைய
மாகந் தனைய மறுகந்த லின்றி வருந்துவரோ. (27)

கருணைசெய் வாயென் பதுநினைப் பாடுங் கவிகளுக்குப்
பொருணையஞ் சொன்னயம் வாய்ப்பதிற் கண்டுளம் பூரிக்கின்றேன்
அருணையி னின்புகழ் பாடும் புலவனை யாண்டதுபோற்
றெருணையஞ் சேர்பரங் குன்றினி லென்னையுஞ் சேர்முருகே. (28)

---

(23) உள்வழி-உள்ள இடத்து. ஏர்-அழகு. அண-அண்ண, நெருங்க. ஈனுதது-பெறுதது. (24) மட்டு-அளவு. (25) எண்-எண்ணம். திண்-(அறிவின்) வலிமை. (26) எனுது-என்னுடைய. அனுதர்-ஆதரவில்லாதவர். மனுதி-மனமுதலிய கரணங்கள். அவை மனம், புத்தி, சித்தம், அகங்காரம். (27) தனை-அளவு. பா-பரவிய. கந்தனையும்-வாசனையுடைய சிவபிரானையும். மா-பெரிய. கந்தல்-கிழிபட்ட துணி. (28) அருணை-திருவண்ணுமலை. புலவன் - அருணகிரிநாதர். தெருள்-தெளிவு.

காயத் திரிபுங் கணியார் கணிகையர்க் கண்டனரேல்
நாயத் திரியெனப் பின்றொடர்ந் தோடி நலிந்துபதந்
தேயத் திரிவர் முருகா பரங்கிரி சென்றறியார்
மாயத் திரிமலந் தீரா திருந்தென்னை மாய்ந்தென்னையே. (29)

அத்தி மலருதல் போலொரு காலத்தி லாயினுமென்
புத்தியி னின்பதம் போற்றன் பெறாது பொருந்துமிட்ட
சித்தி யெனக்கெங்ஙன் னெய்துமெந் தாயிதைச் சீர்திருத்தாய்
முத்தி யுதவும் பரங்கிரி யாறு முகத்திறையே. (30)

மாவாது கொண்டெதிர் போர்புரி சூரனை மாய்த்துயர்ந்த
தேவா துதிசெயுந் தொண்டர்கள் போலத் திருப்பரங்குன்
றோவா துறைந்தில னென்றோ வொன்றேனு முதவிசெயாய்
பூவாது காய்க்கு மரனு முண் டேயிந்தப் பூதலத்தே. (31)

ஆதர மின்றித் திருப்பரங் குன்றை யடைந்தவெனக்
கேதா யினுமொரு வீடரு ளாயயி லேந்துமெந்தாய்
தாதார் குழல்வள்ளித் தாயிடஞ் சென்று சமயமறிந்
தோதா திரேணிதை யாதோ வினைவ துனக்கினியே. (32)

அகமும் புறமு மிருக்குங் கருவிக ளத்தனையு
மிகைநந் தயருமவ் வேளை வராதுவை யேயெடுத்த
குகன்மந் திரமதை நெஞ்சே திருப்பரங் குன்றிலன்பு
தகநின்று கூறிப் பழகுநந் தோற்றந் தவிருதற்கே. (33)

பொய்யான நாடகம் போட்டாடு மைவரும் போயொழிந்தால்
மெய்யாமென் றெண்ணி யதுபார்த்த நானும் விரைந்தொழிவேன்
ஐயாவந் நாடக வீடாமிக் கூட்டை யனல்கொளுவி
வையா வெரிப்பர் பரங்கிரி வேலன் வருவதென்றே. (34)

---

(29) கணியார்-எண்ணூர். அத்திரி-கழுதை. திரிமலம்-மும்மலம். (30) அத்திமலருதல்-அத்திமரம்பூத்தல். (31)மா-பெரிய. ஓவாது-நீங்காமல். (32) வினைவது-உண்டாகுந்துன்பம். (33) கருவிகள்-தத்துவங்கள். தோற்றம்-சனனம். (34) பொய்யானநாடகம்-பிரபஞ்ச வாழ்க்கை. ஐவர்-பஞ்சேந்திரியங்கள், வையா-வைத்து.

பாட்டைச் சுவையறி யாமுடர் பாற்சென்று பாடியவ
ரோட்டைச் செவியி லொழுகவிட் டேனிதொன் றோகெடுவான்
தேட்டைப் பெரிதென் றலைந்தேன் பரங்கிரிச் சேய்பதமாம்
வீட்டைப் பெறமுயல் இல்லேனென் பாவம் விடிவதென்றே. (35)

காமட்டுண் ணுஞ்சுவை யூணடி யாரை நயந்தருந்தேம்
மாமட்டு நாடி வருங்காப் பரங்கிரி வாய்மதநீர்
தூமட் டுழாங்கை முகன்பின்வந் தானைத் தொழேமந்தோ
சாமட்டுங் காலத்தைக் கொன்னே கழித்தனந் தாழ்ந்தனமே. (36)

பத்திர சபுஞ்ச மாகநின் பூசனை பண்ணிலர்நற்
புத்திர சம்பத்தும் பூமிப் பெருக்கும் பொருட்சிறப்புஞ்
சித்திர இல்லமு மெய்தா ரிதுவென் றிறத்தறிந்தேன்
மித்திர சம்புக் குபதேசஞ் செய்தமெய் வெற்பிறையே. (37)

உடுக்கைக்கு முண்ணுதற் கும்முறை தற்கு முறைந்துறங்கப்
படுக்கைக்கு மியான்படும் பாடுசற் றோவிதைப் பார்த்திரங்காய
கடுக்கைத் தொடையன் குமரா பரங்கிரிக் கட்குமரா
மிடுக்கைக் குறைத்து மிடியைத் துரத்தி விடுவதற்கே. (38)

காலாக் கினியைக் கடுக்கும் பிணிகள் கடுத்திடமுன்
போலாக் கினையெனி லந்தோ சிறிதும் பொறுக்ககிலேன்
தோலாக் கிரியைத் தொளைத்த பரங்கிரித் தூயவநின்
பாலாக் கினைதவ றிச்செயுங் குற்றமென் பாலில்லையே. (39)

---

(35) தேட்டை-தேடும்செல்வத்தை. விடிவது-கெடுவது. (36) அட்டு-சமைத்து. ஊண்-உணவுப்பொருள்கள். அருந்தேம்-உண்ணச் செய்யமாட்டோம். மா-வண்டுகள். வாய்-இடத்தில. தூம-தூவுகின்ற. மண்துழாம்-பூமியையளாவும். கை-துதிக்கை. கொன்னே-வீணே. (37) புஞ்சம்-கூட்டம். திறம்-பக்கம். மித்திரம்-நட்பு. சம்பு-சிவபிரானுக்கு. (38) உடுக்கை-ஆடை. உறைதற்கும்-தங்குதற்கும். கடுக்கை-கொன்றை. மிடுக்கு-வலிமை. (39) காலாக்கினி-ஊழித்தீ. கடுக்கும்-ஒக்கும். ஆக்கினை-செய்தாய். தோலா-தோல்வியடையாத. ஆக்கினை-கட்டளை.

விடாம லடர்ந்து தொடர்ந்தெனைப் பற்றிய வெவ்வினையைத்
தடாமல் வளர்த்து வருவே னிதற்குத் தகுந்ததண்டங்
கொடாம லிருப்பையோ லோமுரு காகொஞ்சங் கூறுங்கநீ
யிடாமலுன் பாரென்று மில்லாப் பரங்குன்றி லின்னினியே. (40)

ஆண்டலைக் கேதனங் கொண்டான் பதத்தை யடுத்தடுத்துக்
காண்டலைக் கைவிட்டு வந்தாய் பலதுன்பங் கண்டுநினை
ஈண்டலைக் காமல் விடுமோ வவனெதி ரேசென்றுநீ
வேண்டலைக் காக மெனச்சுழ லாய்பர வெற்பிடத்தே. (41)

அரியயன் றேவர் களுவினுங் காணற் கரியவுனைத்
தெரியவென் றால்முடி யாதென்பர் சிற்சிலர் சிந்தையினி
லுரியவுன் பாலெளி திற்காண லாமென் றுளவறிந்தேன்
பிரிய மொடுபரங் குன்றினில் வாழும் பெருந்தகையே. (42)

தொழவேண்டு மென்னி லுனையே தொழவுந் தொழப்பினுங்கீழ்
விழவேண்டு மேலென் வினையொடி யான்முன் விழவும் பின்மே
லெழவேண்டு மென்னி லியானே யெழவு மிறந்தவருக்
கழவேண்டு மேலெற் கழவுஞ்செய் வாய்மெய் யசலத்தனே. (43)

வீட்டினை மாதரை மைந்தரை மெய்யென்று மெத்தப்படும்
பாட்டினை வாரொடி யானு மொருவனிப் பாவியுறை
கூட்டினை யேமன் குலைக்குமுன் னேபரங் குன்றரசே
யாட்டினை வாகன மாக்கிய நீவந் தருள்புரியே. (44)

பல்லா யிரவண்ட கோடிப் பரப்பிற் பரந்துழலும்
எல்லாப் பிறப்பு மினிப்பிற வாவர மெற்கருளஃ
தில்லா விடிலுன் பரங்கிரிச் சார லிடைப்பசிய
புல்லாய்ப் பிறக்கமட் டும்புரி வேல்கொண்ட புங்கவனே. (45)

---

(40) தடாமல்-தடுக்காமல். இன்னினி—இப்பொழுது. (41) ஆண்டலைக்கேதனம்-கோழிக்கொடி. அலைக்காகம்-கடல் நடுவி லகப்பட்ட காக்கை. (42) உளவு-இரகசியம். (43) எற்கழவும்-எனக்கு அழவும், (தினந்தோறுஞ் சிறிதுசிறிதாக இறக்கும் எனக்காக அழுதல்.) (44) நைவாரொடு-வருந்துவாருடன். (45) புரி-செய்தருள்.

அத்தற்கு வேத முதற்பொரு ளோது மயிலரசே
சுத்தப் பிரம மொருநீயென் றுய்ந்து துதித்திலனின்
பத்தர்க் கியன்ற பணியுஞ்செ யேனிவன் பாவியென்று
சித்தத்தி லெண்ணி விடாமற் பரங்குன்றிற் சேர்த்தருளே. (46)

பண்டைப் பழவினை யாலிந்தப் பாவி பதைபதைக்கத்
தொண்டைப் புகைச்சல்செய் துன்பமெனைத்தென் றுசொல்லுவனீர்க்
கெண்டைத் தடம்புடை சூழ்பரங் குன்றினிற் கேகயமூர்
தண்டைப் பதாம்புய வேலாமுழுதுந் தணித்தருளே. (47)

மொய்யின வண்டுகள் பாடும் பரங்குன்றில் முத்தமிழால்
வையினும் வாழ்விப்பன் கந்தனென் பாரதம் மட்டில்நிற்க
மெய்யினு மெய்யென வாழ்த்துமென் செந்தமிழ் வேண்டிமிகச்
செய்யினு மென்வயி றேய்வந் திடாமற் றிருவருளே. (48)

தேவர்க்கு வாழ்வரு ளும்பரங் குன்றுறை சேந்தனையே
மூவர்க்கு முன்னவ னுமெம் பிரான்குரு மூர்த்தியென்றால்
யாவர்க்குந் தெய்வ மவனேயென் றுய்ந்திலர் யாரெனினும்
பாவப் படுகுழி யுள்வீழ்ந் தழுந்திடும் பாதகரே. (49)

வேலு மயிலுமெய்த் தொண்டரன் போடு விளங்குதண்டைக்
காலுங் கடம்புஞ்செஞ் சேவலுந் தோன்றக் கரடமுமிழ்ந்
தாலுந் துதிக்கைகொ ளத்திபின் வந்த அரசைக்கண்டாற்
போலுமின் பம்பரங் குன்றடை வார்க்கெது பூதலத்தே. (50)

மைகூட்டு மூல மலமறு மன்பரை மாமலரோன்
செய்கூட்டு ளின்னமும் போய்நுழை யாமற் சிவத்தொடுசேர்
மெய்கூட்டும் வேற்கை விமலன் பரங்கிரி மேவுவையேற்
கைகூட்டும் வேண்டு வனயா வையுமென் கடினநெஞ்சே. (51)

(46) வேதமுதல்-பிரணவம். (47) எனைத்து-எவ்வளவு. தடம்-தடாகம். கேகயம்-மயில். (48) இனம்-கூட்டம். மெய்யினுமெய்-உயர்ந்தமெய். செய்-செய்தருள்வாய். இனும்-இன்னமும். வயின்-வயிறு. (49) மூவர்-திரிமூர்த்திகள். (50) கரடம்-மதம். ஆலும்-அசையும். அத்தி-யானையாகிய விநாயகர். (51) மூலமலம்-ஆணவமலம். கூட்டுள்-சரீரத்துள் ஏற்றுக்கு-ஏதற்கு.

உன்போ லொருதெய்வ மில்லையென் றெண்ணி யுனையடைந்தே
னென்போ லடிமை பலருள ரேனு மெனையுங்கொள்வாய்
முன்போ லிராம லிவனெற்றுக் கென்று முனிந்தருளேல்
பொன்போ லிலங்கு முருகா பரங்கிரிப் புங்கவனே. (52)

சித்தச னம்பிற் றிகைத்தேன் பரங்கிரி சேரவரும்
பத்த சனங்க ளொடுபழ கேனன்பிற் பாடுகிலேன்
புத்த சனமன்பர்க் கீயே னிரவியைப் போரிலொறுத்
துத்தச னந்தகர்த் தான்சே யருளென்று தோன்றுவதே. (53)

தடையற நின்றிருத் தாள்மல ரைச்சிந் தனைசெயும்போ
திடையிடை மண்பெண்பொன் னாசையி லேகுநெஞ் சீர்ங்கடப்பந்
தொடையணி யும்பரங் குன்றுய்நின் றொண்டர் தொழும்புசெயாக்
கடையரி லுங்கடை யேனினிச் செய்யக் கடவதென்னே. (54)

சுணங்கார் தனவள்ளி காந்தன் பதத்தைத் தொழவழைத்தால்
இணங்கார் பரங்கிரிக் கேகவப் போதிலொ ரிம்மியெடைப்
பணங்கா னூதிய மென்றுலவ் வேலைக்குப் பார்முழுதுங்
கணங்கால மாகுமுன் செல்வா ரிவர்கதி காண்பதென்றே. (55)

கிடைத்தமண் பெண்ணிரண் டும்போ யினபெருங் கேடனைத்தும்
படைத்தன னச்றருள் பாலிப்பை யேனுன் பதமலர்க்கண்
புடைத்தமி யேனுய்வல் தென்பரங் குன்றுறை யுங்குகையி
லடைத்த வொராயிரம் பேரும் பிழைக்க வருள்குகனே. (56)

நானுக நின்னைத் தொழவழக் கில்லைநின் னல்லருளாற்
றானுக வேண்டும் பரங்கிரி மன்னுந் தயாநிதியே
மேனா ளிடர்செய்த சூரனை மாய்த்திட விண்ணவர்தஞ்
சேனு சமுத்திரத் தென்றா ழெனநின்ற சேவகனே. (57)

(53) சித்தசன்-மன்மதன். புத்து-புதிய. இரவி-சூரியன். தசனம்-பல். (54) தொழும்பு-அடிமை. (55) சுணங்கு-தேமல். ஊதியம்-இலாபம். (56) குகையிலாயிரம் பேரை அடைத்தகதை பரங்கிரிப் புராணத்துட்காண்க. (57) என்றாழ்-சூரியன்.

எட்டாத கொப்பி லிருக்கின்ற தேனை யெடுக்கமுயன்
றிட்டா ரெனநின் னருள்பெற நெஞ்சினி லெண்ணியெண்ணிக்
கிட்டா தயர்ந்துநிற் கின்றேன் பரங்கிரிக் கேவருவல்
மட்டார் கடம்பணி நீயேதந் தாளுண்டு வந்தருளே. (58)

பத்திச் சுவைகனி யக்கனி யக்கவி பாடுமன்பர்
எத்திக் கிருக்கினு மாங்கவர் முன்புசென் றேயருள்வாய்
நித்தித் திருக்குஞ்செந் தேனே பரங்கிரி சேர்கற்பக
அத்திக் கிளைய தருவே யதுநின் னருட்கழகே. (59)

தந்தை யறிவு மகனறி வென்பது தானுண்மையேல்
அந்தக னென்னை யணுகுமப் போதடி யாலுதைப்பாய்
பந்த மகற்றும் பரங்கிரி வேலநின் பாதமல்லாற்
சிந்தனை வேறொன்றுஞ் செய்யா திருந்து தியானிப்பனே. (60)

ஆறாத காமக் கொடுங்கனல் வேவிக்கு மப்பருவத்
தேறாதுன் கீர்த்தி யெவர் சொல்லி னுமெற் கிப்பருவத்
தூறுயொன் றெய்தினு மியானே யுணர்வ னுனைப்பணிவார்
பேறாம் பரங்கிரி வேலா வெனக்கும் பெரிதருளே. (61)

உற்பாதங் காட்டு கிலாய்நீ யுதவு முதவிக்கொன்றும்
பொற்பாதல் கல்வியென் றாராய்ந்து கற்ற புலவர்தொழும்
நற்பாதம் யானுந் தொழுதன னல்லவர் நாடுபர
வெற்பா தமிழ்முனிக் குங்குரு வாகிய வித்தகனே. (62)

சேந்தனை யின்கடம் பாருங் குறிஞ்சித் திணைபுரக்கும்
வேந்தனை வேட ரெடுத்து வளர்த்து விடுத்தவள்ளி
காந்தனைக் கந்தனை நம்பரங் குன்றினிற் கண்டுகண்டு
சாந்தனை யுந்தொழு தாற்குறை யேதென் றனிநெஞ்சமே. (63)

---

(58) மட்டு—தேன். (59) கற்பகஅத்தி-கற்பக விநாயகர். (60) அந்தகன்-யமன். (61) ஊறு—இடையூறுக. பேறு-பயன். (62) உற்பாதம்-பின் வருவதை முன்காட்டும் அடையாளம். பொற்பு—அழகு. பரவெற்பா-பரங்கிரியுடையவனே. (63) திணை—நிலம். சாந்தனையும்—சாமளவும்.

அட்டாங்க யோகம் புரிவார் பயில்மெய் யசலத்தினில்
எட்டாங்கத் தன்வடி வென்பரவ் வெட்டி னுள் யானுமொன்றென்
றட்டாங்க லுற்றன னென்னையென் னோடு முடனுறையப்
பட்டாங் கமர்நினை யான்புறப் பூசனை பண்ணிலனே. (64)

தீய ரொருவர் பழக்கமுற் றூலவர் செய்துயரம்
ஆயது மாற்றப் படாதந்தத் தீயவ ரைவரென்னோ
டேயமர்ந் தாலவர் செய்துய ரெப்படி யான்பொறுப்பல்
தூய பரங்கிரி வாழயில் வேற்செஞ் சுடர்க்கொழுந்தே. (65)

அருளே பழுத்த தருவே பரங்கிரி யாண்டருள்மெய்ப்
பொருளே நிறைபரி பூரண மேயுனைப் போற்றமுனத்
தெருளே மிகவந்து வாய்த்தநி யான்முனஞ் செய்தவத்தால்
இருளே யறுத்தருள் நின்சுடர் வேல்விடுத் திப்பொழுதே. (66)

பொன்னைக்கண் காண வுபாயம் பலசெய்தல் போலவென்றும்
உன்னைக்கண் காண வுபாயம் பரங்கிரி யுட்புரியேன்
என்னைக்கண் காண முருகாசெய் வாயெனி லின்னினியுன்
றன்னைக்கண் காணத் தடையிலை யுன்றொடுஞ் சார்குவனே. (67)

கேட்டது நீதந் திலைமுகம் வாடிக் கிரங்கினனிந்
நாட்டமி யேனதுங் காண்கிலை முன்னொரு நாவலன்பாற்
பாட்டதெய் தாமல் வருந்திமுட் டைப்பெயர் பன்னிநின்ற
வாட்ட மறும்பரங் குன்றாயென் னோசொல்லு வாயெனக்கே. (68)

எல்லா வுறுப்பு மிருக்கநின் பாதத்தை யேதொழுவார்
நல்லாரெல் லாருமவ் வெல்லா வுறுப்பையும் நம்பிவந்த
பொல்லா ரையுமொன்று போற்றுங்க லாவிப் புதுமைகண்டு
கல்லாத யானுந் தொழுதேன் பரங்கிரிக் கட்குகனே. (69)

---

(64) அட்டாங்கயோகம்-யோகம் பலவற்றினொன்று. எட்டு நிலம் நீர் தீ காற்று ஆகாயம் சூரியன் சந்திரன் ஆன்மா. உள்—உள்ளே. உறையப்பட்டு—உறைந்து. (65) ஐவர்-பஞ்சேந்திரியங்கள். (66) வாய்த்தது-கிடைத்தது. (67) உபாயம்-தந்திரம். என்னை-ஆன்மாவை. இன்னினி-இப்பொழுது. (68) நாவலன்—பொய்யாமொழிப் புலவர். (69) உறுப்பு-அவயவம்.

கற்றிருந் தாலுங்கல் லார்க்கிவ னொப்பெனக் கண்டவர்சொல்
விற்றிருந் தாமலின் னும்மிருந் தேனிந்த வேதமறப்
பெற்றிருந் தாலுய் குவனதற் குன்பதம் பேணச்செயாய்
மற்றிருந் தாலம் புகழ்பரங் குன்றினில் வாழ்குகனே. (70)

ஒருகண்ணி னோக்கினு மெல்லா வுலகமு முய்வுறும்பன்
னிருகண்ணி னோக்குகென் றேனிலை யேயிதற் கென்றடைமெய்
கருகண்ணன் மாமரு காமுரு காபரங் கற்கடம்பு
தருகண் ணனைமல ராற்செயுந் தார்புனை தற்பரனே. (71)

கூடிக்கொண் டேமழை பெய்பரங் குன்றிற் குமரனையே
பாடிக்கொண் டேயிரு நெஞ்சே யிதைவிட்டுப் பாரனைத்தும்
ஓடிக்கொண் டேனலை கின்றாய் நினைத்த துனைத்தினமும்
தேடிக்கொண் டேவருஞ் சொன்னே னுனக்குப தேசமிதே. (72)

ஒருகர மீயத் துணிந்தா லுலக மொருமிக்கவந்
தருகமர்ந் தாலும்பற் றாவாங் குதற்குமற் றைக்கரங்கள்
வருகவென் றோரை யழைக்கும் பரங்கிரி வைப்பிடத்தில்
முருகநின் வள்ளற் குணமெனைத் தென்று மொழிகுவனே. (73)

கையொன்று கொண்டசெவ் வேலாற் பகைமுற் றுங் காய்ந்து
ஐயொன்று மற்றைப் பதினொரு கைகொள் ளும் மாயுதங்கள்[விட்டாய்
பொய்யொன்று மெந்தப் பகைகொள்ள வுள்ளன பொற்பொலிவு
மெய்யொன்று சேவற் பதாகைப் பரங்கிரி விண்ணவனே. (74)

ஆறக் கரத்தினுள் ளோரக் கரத்தை யனுவெனினுங்
கூறக் கரத்தவி லன்புகொ ளாய்பரங் குன்றினனி
யூறக் கரட முமிழுங்கை யானை யுரியொடெழில்
ஏறக் கரவம் புனைவான் மகன்குக னின்னருட்கே. (75)

---

(70) ஏதம்-குற்றம், அதாவது உன்னைவணங்காதிருக்கின்ற குற்றம். இருந்தாலம்–பெரியவுலகம். இதற்கு-ஒரு கண்ணாற்பார்க்குமிதற்கு. அண்ணல்-திருமால். பரங்கல்-பரங்கிரி. கள்நனைமலர்-தேனிலே தோய்ந்த பூ. (72) மழை-மேகங்கள். (73) பற்றா-காணமாட்டா. வள்ளற்குணம்-கொடைக்குணம். எனைத்து-எவ்வளவு. (75)ஐ-அழகு. ஒன்று-பொருந்துகின்ற. பொன்-பொன்னிறம். பதாகை-கொடி.

கல்லை வளையவு நீரின் மிதக்கவுங் காட்டுதற்கு
வல்லையுன் றந்தை யவன்போல நீயுமென் வன்மனமாம்
கல்லையுன் பால்வரு காலை வளையவுங் கண்டதன்பின்
வல்லநன் னீரின் மிதக்கவுஞ் செய்மெய் வரையிடத்தே. (76)

வாணாள் பலவுங் கழிந்தன மண்பெண்ணின் வாழ்க்கையெனப்
பேணா தகன்றன கைப்பொரு ளோஎற் பிரியவிட்டு
நாணாளுஞ் செல்கின் றனவினிச் செய்வதென் னெனைநீ
யாணாளெந் நாள்பரங் குன்றினி லோங்கு மயிலரசே. (77)

பெரும்பை யராவணி பிஞ்ஞகன் றந்த பெரியரியாம்
விரும்பை யாரம்பரங் குன்றுறை செய்யபொன் மேனியர்கார்
இரும்பை யராங்கட் குறமானின் சொல்லென வேற்பதற்குக்
கரும்பை யயாநின்ற சொற்காட் டுவரென் கவிகளுக்கே. (78)

கற்றுமெல் லாருங் கவிராய னென்றெனைக் கண்டுமகிழ்
பெற்றா ரதுநின் னருளாலென் றிப்பெரும் பேறுபெற்றே
னுற்றாருங் கைவிடு மூப்புவந் தெய்தி யுதவிசெய
மற்றாரு மின்றித் தளர்ந்தேன் பரங்கிரி வானவனே. (79)

எந்தத் தெருவினுங் கேள்நா மிறக்கினெஞ் சேயரிட்ட
முந்தத் தெருவையுங் கூடும யானத்தி லூக்கியப்பால்
அந்தத் தெருவி னெரிதீயி லேவைத் தகலுவரால்
இந்தத் தெருமரல் மெய்க்கிரிச் சேயரு ளொன்றினின்றே. (80)

வருமாறு துன்பங்க ளப்போதப் போதகல் வான்பரம
குருவருள் கூடும் பரங்கிரி யுற்றவன் கோயிலுட்போய்த்
திருவரு கேநின்று சேவியென் பாட்டினைச் செப்பதன்மே
லுருவரு வாகு மவன்பால் விடைபெற் றுறுநெஞ்சமே. (81)

---

(76) கல்-மேருமலை. திருநாவுக்கரசு சுவாமிகள் தோணியாக நடாத்திய கல். வல்லை-வலிய கடவுள். வல்லை-விரைவில். நீர்-குணம். (77) ஆள் நாள்-ஆளுகின்றதினம். (78) பை அரா-படத்தையுடைய பாம்பு. ஐயர்-பிதாவானவர். அராம்-அராவும். கரும்பையராநின்ற-இனிமையாலொவ்வாமல் கரும்பு சோர்கின்ற. அயராநின்ற என்பது ஐயாநின்ற என்றானது. (79) மகிழ்-மகிழ்ச்சி. (80) அரிட்டமும்-காக்கையும். தத்து-தாவுகின்ற. எருவை-கழுகு. ஊக்கி-செலுத்தி. அந்தத்து-முடிவில். (81) அகல்வான்-நீங்கும்பொருட்டு.

பொய்வாழ்க்கை மாந்தரைப் போய்ப்போ யடுத்தென் பொருளடைந் [தாய்
மெய்வாக் கியப்பொரு ளானுன் பரங்கிரி மேவுயமன்
கைவாட்கு காயிரை யாமுன் றினைப்புனங் காத்தவர்நாள்
வைவாட்கு மின்னரு ளீந்தா னமக்கும் வழங்குவனே. (82)

எத்தனை யோகவி நின்பன் னிருசெவிக் கேற்றினனெள்
ளத்தனை யேனு முதவி செயாய்மெய் யசலத்தனே
பித்தனைத் தந்தை யெனக்கொண்ட நீயும் பெரும்பித்தனோ
பத்தனை யாவர் வெறுப்பா ரிதையெண்ணிப் பாரினியே (83)

அடுக்குந் தொகையினில் லாமல் வினையினு மாறுமுகங்
கொடுக்குங் குமானுக் குண்டென்று கற்றவர் கூறவென்மே
லெடுக்குஞ் சினந்தவிர்ந் தாள்வா யயனை யிருஞ்சிறையில்
விடுக்குந் திறற்கந்த வேளே பரங்கிரி வித்தகனே. (84)

அஞ்சியஞ் சிக்கொண் டியானிருக் கத்துன்ப மத்தனையும்
விஞ்சிவிஞ் சிக்கொண்டு வந்தாற் பரங்கிரி வேலவனே
யெஞ்சியெஞ் சிப்புண் படுமென் னிருதயம் யாதுசெய்வேன்
வஞ்சிவஞ் சித்திருப் பாரை யெனக்குமுன் வந்தருளே. (85)

பகைவ ரிலையென்று சும்மா விருக்கினின் பாரவைவேல்
மிகையுறு கூர்மை மழுங்கு மதையென் வினையில்விட்டுத்
தொகைகுறை யாம லிருப்பது பார்பெருந் தொன்முனிவர்
குகையமர் தென்பரங் குன்றூர் குமர குருபரனே. (86)

விருத்தமொன் றோதுயர் செய்யும் பிணியதன் மேல்வருத்தும்
கருத்தழிந் தேன்சென் றதுபோக நின்றதென் கையிருப்பாம்
அருத்தமுஞ் சற்றொரு கோடியின் மேலசி யாகுமந்தோ
திருத்த முறும்பரங் குன்றா யினியென்ன செய்வதுவே. (87)

---

(82) மெய் வாக்கியம்-வேத வாக்கியம். அதாவது தத்துவமசி யென்பது. (83) ஏற்றினன்-செலுத்தினேன். (84) வினையினி லாறு முகம்-ஆறுதலையுடைய முகம். திறல்-வலிமை. (85) விஞ்சி-மிகுந்து. எஞ்சி-குறைந்து. வஞ்சி-வஞ்சிப்பாய். (86) மிகை-அதிகம். தொகை-எண். (87) விருத்தம்-விருத்தாப்பியம், மூப்பு. அருத்தமும்-பொருளும். அசி-அவமதிச்சிரிப்பு.

செய்யக் கடவதொன் றோராமல் கோயிற் றிகைத்தவன்பா
லுய்யக் கடலரு ளுற்றோ ரிதற்கொ ருபாயமயில்
பையக் கடவிவர் தேதேனுஞ் செய்லை பரங்கிரியில்
ஐயக் கடவு ளலனென் றுனைவர் தடுத்தனனே. (88)

வேம்பாற் கரும்பு விளைக்க நினைப்பரிம் மேதினியில்
நாம்பார்க்க லாதிருந் தும்பரங் குன்றனை நல்லன்பின்றித்
தீம்பாற் கடற்றுயி லான்மகன் றேரெனச் செல்லவெண்ணி
னோம்பார்க்க நன்றுநன் றுல்நம் முடையறி வோர்ந்திடினே. (89)

அனங்க னிலையுண் டெனல்போற் பரங்கிரி ஐயஎன்பால்
மனங்கனி வாய்கனி யாயென் றுளத்தையம் வாய்ப்பநின்றால்
தினங்க னிகரென் மனமெப் படியுனைத் தேடிவரும்
இனங்க னியரிரு வோரு மகிழுயி லேந்தரசே. (90)

ஆறத்து வாவை யறியாத யானின் னருமைப்புகழ்
கூறத்து வாய்சடை யாமற்செய் தாய்பரங் குன்றிருப்பு
மாறத் துவாதச கண்கொண்ட நீசெயின் மாழ்குவனூற்
சேறத்து வார்புனல் சூடிமைந் தாவிது தீர்த்தருளே. (91)

அறிந்த வளவி லொருசிறி தேனு மநுபவத்தில்
முறிந்ததல் லாமல் முனைத்தெழ வில்லை முதிரறிவு
செறிந்த பலகலை கற்றதி லென்பயன் றிண்வரைமே
லெறிந்தவை வேல்கொண் டிருந்த பரங்கிரி யெம்மிறையே. (92)

சிறுகுங் குணத்தென் மனமென்சொற் கேட்டுன் றிருவடியில்
மறுகுஞ் செயலென்று மாறா திருக்க வரந்தருவாய்
அறுகும் புனைபரன் றன்னிருப் பாக்கொண் டமர்ந்தருளப்
பெறுகுன்ற நேர்பரங் குன்றாய்செவ் வேல்கைப் பிறங்கரசே. (93)

---

(88) கடவி-செலுத்தி. ஐயக்கடவுள்-சந்தேகத்தெய்வம். அலன்-அல்லாதவன். (89) தேர்-தென்றலாகிய தேர். செல்ல-(பைய)நடக்க. (90) ஐயம்-சந்தேகம. கல்நிகர்-கல்லை ஒத்த. இனம்-இனிய அழகிய. (91) ஆறு அத்துவா-ஆறுவழி. அவை மந்திரம், பதம், வன்னம், புவனம, தத்துவம், கலை. இவற்றினியல்பு சித்தாந்த நூல் வல்லார்க்கு நன்கு விளங்கும். அத்து-சிவப்புடைய. துவாதசம்-பன்னிரண்டு. சேல்-சேல்மீன்கள், தத்து-தாவுகின்ற (92)முனைத்து-கதித்து.(93)மறுகும்-சுழலும்,சுற்றும். குன்றம்-கயிலாயமலை. பிறங்கு-விளங்குகின்ற.

நல்லார் தமைக்குறைத் தூப்பேசுஞ் சொல்லென நன்றியொன்றும்
இல்லாத வென்சொற்கள் பொய்யன் றிதைக்கொஞ்ச மெண்ணுவை
எல்லாந் தெரியு நினக்கே நினைத்த வெலாமுஞ்செய [யேல்
வல்லாய் பரங்கிரி வாய்த்தெய்வ யானை மணந்தவனே. (94)

உவமான மற்றவற் றுள்ளொன்று மானமென் றுற்றுணர்ந்தேற்
கவமான மின்னும் வராம லிருப்பதற் காவனசெய்
சிவமான வந்த முகமாறு கொண்டநின் சீரருளாற்
றவமா னவைநிறை வேறும் பரங்கிரித் தற்பரனே. (95)

கொடுக்குங் குணத்தை விடாயேற் பிறரைக் குறையிரந்தங்
கெடுக்குந் தலையின்றித் தாழ்தலை யுற்றுநின் றேற்குங்குணம்
விடுக்கும் படிசெய்வ னம்மிரு வோர்க்கு மிருந்தபுக
ழடுக்கும் பரங்கிரி யாண்டவ னேயெனை யாள்பவனே. (96)

ஏற்ப திகழ்ச்சியென் றெண்ணுமற் செல்லுதற் கென்னிருகால்
நாற்பது காத நடக்குநிற் சூழ நடவெனிலோ
ஆற்பதம் போனிற்கு மிந்தக கொடுமையை யார்க்குரைப்பன்
நோற்பர் பரங்குன்றி லாராய்ந்து கண்கண்ட நுண்பொருளே. (97)

காமாரி தந்த பரங்கிரிக் கந்தனைக் கண்டுதினம்
பூமாரி பெய்திலை நெஞ்சே யவன்கட் புகுவதற்கு
நாமா ரினிநமை நீங்கப் பெருந்துயர் நம்மைவிட்டுப்
போமா ரியன்ற வளவேனுஞ் செய்யவன் பூசனையே. (98)

ஆலையி லேறு கரும்பா யுடைந்தன னுயிரங்கா
யோலையி லேனு மெழுதவொண் ணாத்துன்ப முன்மலர்க்கை
வேலை யிலேசம் விடுத்தாற் பரங்கிரி வித்தகனே
காலையி லேயெழு மெல்முன் பனியெனக் காணுவனே. (99)

---

(94) வல்லாய்-வல்லவனே. (95) உவமானம-ஒப்பு. மான-சமான மாக. (96) தாழ்தலை-வணங்குந்தலை. (97) நிற்சூழ-உன்னைப் பிரதக்ஷணஞ்செய்ய. ஆற்பதம்—ஆலமரத்தின் அடிப்பாகம. நோற்பர்—தவஞ் செய்யுமுனிவர். (98)காமாரி-சிவபிரான். நாமார்-நாம எவர். போமார்-போம்பொருட்டு. இது கொண்மார் வந்தார் என்றது போல்வது. (99) துன்பம்-துன்பத்தை. இலேசம்-சிறிது. எல்முன்—சூரியனுக்கு நேரில்.

மூவகைத் துன்பத் திருவகைத் துன்பமு மூற்றியவிப்
பாவனைக் கிட்டிமற் றோர்வகைத் துன்பமும் பற்றுமுன்னே
தேவனைத் தூக்கிரண் டொன்று மெழுபெருந் தேவனெனல்
ஆவனைத் தென்பரங் குன்றனைக் கைதொழு வாய்மனனே. (100)

விளையும் பயிர்முளை யிற்றோன்றல் போலெனை மேவியரு
ளளையும் படிசெய்வை யென்பதுன் பார்வையி னுலறிந்தேன்
வளையும் புகழ்வடி வேலா வினிமற வாமல்வந் துன்
உனையுன் பணிபரங் குன்றினி லேசெய் துறைகுவனே. (101)

ஓங்காரனை மேலிருப் பார்பாற் சுதையெற் குதவுகென்பார்
பாங்காம் பரங்கிரி யேலேறி வைகுநின் பாலருள்கேட்
டீங்கார நிற்ப திதுநிறக வீதியி லெய்துமுலா
ஆங்காலம வேண்டிய எல்லாம பெறுவ மருட்தகனே. (102)

கந்தப்ப னந்தமொ டாதியில லான்வின் கலக்கமற
அந்தப் பனந்தரு நேர்கரத் தையன்பின னுயவையன்
எந்தப் பனந்தம பொறுப்பான் பசிபெனி லின்சுவையே
யுந்தப் பனந்தரு வான்றென் பரங்குன் றுடையவனே. (103)

நானு நெருங்கி லுனகமே நலமது நாடிலைநீ
தானு நெருங்கிற் சுகமுண் டெனக்கது தானுஞ்செயாய்
ஆறுலும் பார்கதி லறவே கொடுமையி தார்சுகுரைப்பன்
போனலும் போக விடாய்பரங் குன்றுறை புங்கவனே. (104)

வேலா வலைய முழுவது நீர்வற்ற விட்டவடி
வேலா வலைய விடாதெனைக் காவல்செய் மெய்க்கிரியிற்
பாலா வலையன் றமுநீசெய்க் கறச்செய் பரமனருள்
பாலா வலையமர் மான்போல் மயங்கினன் பார்த்தருளே. (105)

---

(100) மூவகை-மண் பெண் பொன. இருவகை மண்பெண். ஓர் வகை-பொன. தே-தெய்வம. ஆவனை-ஆயானை. (101) அளைதல்-கலத்தல. உன்உளை-உனனிடத்து. (102) சுதை-சுண்ணுமபு. ஈங்கு-இவ்விடத்து ஆர-நிறைய. (103) பனநதரு-பனைமரம. கரத்து-துதிக்கையுடைய. தப்பு-குற்றம. உந்து-செலுத்துகின்ற. அப்பு-நீர. அனம-அன்னம (104) அறவே-மிகவே. (105) வேலாவலையம-கடல். ஆவலை-ஆசையை. சேய்-உபமனனிய முனிவர்.

எய்ப்பா லயர்ந்தனன் மெய்யே யுமையம்மை யேந்திமகிழ்
கைப்பால னுகு முருகா பரங்கிரிக் கண்ணுறையுஞ்
செய்ப்பா லலர்கம லம்போலு நின்னிரு சேவடிமுன்
பொய்ப்பாலசொல்லிப் பிழைப்பவர் யார்மெய்ப் பொருளருளே.(106)

இனந்தின மொவ்வொர் சிறுசிறு துன்பச் சினப்புலிகள்
இனந்தின வினைன னென்குறை நீசெய்தி யென்மனனே
பனந்தின மீர்ம்புனல் மேலூர் பரங்கிரிப் பால்வடிவேல்
மனந்தினந் தோமறச் செய்வதற் காகும் வழியென்னையே. (107)

அருமாந்த நின்னரு ளெய்தப் பரங்கிரி யண்டியண்மி
வருமாந்த ரோடு பழகா ரவர்வினை வல்லரவுக்
குருமாந் தவமொன் றியற்றுசெவ் வாறினி யுய்குவர்சூர்ப்
பெருமாந் தருவைப் பிளந்தவை வேற்கைப் பெருந்தகையே. (108)

இருள்பகை யாந்துயி லின்பமெய் தாருக் கிஃதொப்பநின்
னருளெய்தி லார்க்கு வினைபகை யாமுற வாகும்வினை
தெருளுற வெற்குக் கிடைத்திடு மோகலை தேர்ந்தவர்தேர்
பொருளென நின்ற பரங்கிரி வேற்கைப் புராதனனே. (109)

கோழிக் கொடிதனைக் கையேற்றல் போனின் குளிர்மலர்க்கால்
தாழிக் கொடியனை யேற்று லதற்குந் தகுபுகழ்நீர்
சூழிக் குவலையத் துண்டா மதற்கிது தோன்றச்சொல்வாய்
மேழித் துவசர் நிறைபரங் குன்றுறை வேலவனே. (110)

குறத்தியைக் கொண்டவன் கோழி பிடித்தவன் கூர்ந்தறியில்
அறக்கொடி யன்பெற் றவனலர்க் கையனென் றுய்ந்திலருக்
குறத்தின முன்னை யுரைத்தது பொய்யல்ல வுண்மையென்றே
புறத்தினிற் கேட்கி லெவருஞ்சொல் வார்மெய்ப் பொருப்பிறையே.()

---

(106) செய்பபால்-வயல்களினிடத்து. பொய்ப்பால-பொய்யின் பகுப்பாயுள்ளவைகள். (107) இனம்-இன்னம். செய்தி-செய்தாய். பல-பல நந்தினம்-சங்குககூட்டங்கள். மன்-முருகன். அந்தில்-அவ்விடத்து. தோம்-குற்றம். (108) அருமாந்த-அரிய அமிர்தம்போன்ற. அண்மி-நெருங்கி. உரும்-இடி. ஆம்-போலும். மாந்தரு-மாமரம். (109) உறவாகும்வினை-நட்பாகும் நல்வினை. தெருளுற-தெளிவாக. (110) தாழ்-வணங்குகின்ற. நீர்-கடல்நீர். மேழித்துவசர்-வேளாளர். அறக்கொடி-தருமவல்லியாகிய பார்வதி. அலர்க்கையன்-தாமரைமலர் போலுங் கையையுடையவன், பழியுடைய கீழோன். (சிலேடை)

அன்புடை யார்பரங் குன்றுய் தமைவந் தடுத்தவருக்
கென்பு முதவுவ ரெண்ணவொண் ணுத இடமிருந்துந்
துன்புறு வேனுக் கிருப்பிடங் கொஞ்சந் துணிந்துதவாய்
உன்புக ழெய்து கொடைத்தன்மை நன்றுநன் றோதிடிலே. (112)

ஓரா யிரம்பெய ருற்றநின் பால்வந் துருகிமெய்க்கண்
ணீரா யிறங்கத் துதிப்பார்நின் றெண்டரிந் நீர்மையிலாப்
பேரா யிரந்துதி மெய்வெற்பிற் பேசினும் பேய்க்கரும்புத்
தூரா யிரங்கப்பு விட்டதொப் பாம்பசுந் தோகையனே. (113)

சாமி யுனைப்பரங் குன்றினிற் றேடித் தவித்துவந்தேன்
காமி யெனத்தள்ள லாகாது தள்ளக் கருதுவையேல்
நீமிக வோடித் தினைப்புனத் தேயன்று நின்றகதை
பூமி யறியு மதைநினை வுற்றுப் புரந்தருளே. (114)

அன்புற் றவர்க்குத் தயிரினெய் போலஃ தற்றவருக்
கின்புற்ற பாலினெய் போற்பரங் குன்றினி லேயிருப்பாய்
மண்பெற்ற நீயெற் கெதுபோ லிருப்பை மலரயனை
முன்பெற் றவன்மரு காமுரு காசொல் முடிவினையே. (115)

உவமை யிலானடி சேர்ந்துநின் றுருக் குளத்தினு றும்
கவலை யொழியுமென் றோத ஞலுன் கழலடைந்தேன்
றிவலை யெனினு மஃதற வில்லை திருப்பரங்குன்
றிவர்முரு காவுவ னியல னேல்வழக் கில்லையின்றே. (116)

நீபத் துதிமலர் சூடும் பரங்கிரி நின்மலனே
பாபத் துழலு மெனையின்னு மன்னையர் பாழ்ங்கருப்பத்
தேபத்து மாத மிருக்கவை யாதுன் னிடத்தில்வைப்பாய்
ஆபத்து வேளையிற் காப்பா ருனையன்றி யாருளரே. (117)

---

(112) எலும்பும-(தமமுடைய சரீரத்திலுள்ள) எலும்பையும். (113) மெய்—சரீரத்தில். கண்-கண்ணுனது. தோகை-மயில். (114) காமி-மிக்க காமமுடையவன். (115) தயிரில்நெய்போலென்றது—மிக வெளிவிளங்கி நிற்குமென்றபடி. பாலில்நெய்போலேன்றது-மறைந்து நிற்குமென்றபடி. மண்—நிலை. (116) உவமையிலான்—ஒப்பிலாத கடவுள். திவலை-ஒரு சிற்றளவு. இவர்—எழுந்தருளியிருக்கின்ற அவன்—அவ்வொப்பிலாத கடவுள். (117) நீபம்—கடம்பமரம்.

ஐயா விளைநில மன்றித் துவர்நில மாமெனவான்
பெய்யா திருப்பதுண் டோஅுன் பிலாதவிப் பேதைக்கருள்
செய்யா திருந்தலென் னேபரங் குன்றுறை சேந்தனைச்சேர்ந்
துய்யாரு முண்டென் றிடில்வசை யாருக் குணரிதையே. (118)

ஓட்டைக் குடத்தி லொழுகாமல் நீர்நிற்ப தொப்பவொன்ப
தோட்டைச் சடத்தினி லோட்டிவைத் தாயெனை யுவ்விதமே
ஓட்டைப்பின் னின்னுஞ் செயிற்பரங் குன்றுறை யுங்குமரா
ஓட்டைக்கை யேந்தி யிரவா வரமு முதவுகவே. (119)

தலையது தாங்கத் தனக்கோர் சிறுபுற் றருபவர்தாள்
இலைமலர் தாங்கும் பெருவாழ் வளிப்ப னியற்குமரன்
கலைபல வாலெதிர் காட்சியி னுலிரு கண்கண்டதிந்
நிலையறி வார்பரங் குன்றினிற் சென்றவ னேர்நின்மினே. (120)

மோனைச் சுவையு மெதுகைச் சுவையு முதிரமுதாம்
ஏனைச் சுவையும் பொருளினிற் சொல்லினி லேய்சுவையுந்
தேனைச் சுவையினிற் றுழச்செய் செய்யுள் திருப்பரங்குன்
றானைச் சுவையென வுண்ணச்செ யார்நுண் ணறிவிலரே. (121)

நல்லதுண் டாக விதைவைத் திருக்குமிந் நானிலத்தோர்
பொல்லதுண் டாக விதைவைத் திரார்நல்ல போதம்வால்
இல்லனென் றோது மெனைவைத் திருப்ப தெதற்கதைநீ
சொல்லது நீயென் றிடும்பரங் குன்றுறை தூயவனே. (122)

வேலேந்த லோங்கு திருப்பரங் குன்றுறை மெய்ப்புலவர்
போலேந் தமிழுந் திருச்செவி யேற்றுப் புரந்தருளன்
பாலேந் தருவதல் லாவின்னு மன்னைய ராலவயிற்றின்
சூலேந்த வோட்டி விடானவ னேநந் துணைநெஞ்சமே. (123)

---

(118) ஐயா-ஐயனே. (119) சடம்-உடல். உவ்விதமே-இப்படியே. ஓட்டை-ஓட்டுதலை. (120) சிறுபுல்-அறுகம்புல். இலை-ஆலிலை. மலர்-தாமரைமலர். எதிர்-நேரில். காட்சி-காட்சிப்பிரமாணம். (121) ஏனை-மற்றை. (122) இலலன்-இல்லாதவன். அது-அப்பரம்பொருள். (123) ஏந்தல்-தலைவன், முருகன். போலேம்-ஒப்பாகமாட்டோம். ஏம்-இன்பம், ஆல்-ஆலிலை போலும்.

ஆரா வதுபரங் குன்றிற்கு வாவென் றழைத்தனரா
ரோராக வந்து வெறும்பஞ்சப் பாட்டு நிகழ்த்துகின்றாய்
போரா யெனில்வடி வேலா திருப்புகழ் பெற்றதமிழ்த்
தாரா னினியொன்றுந் தாராவெனன் றேயுனைச் சாற்றுவனே. (124)

அருவா யொடுங்கிப் பரங்கிரி யுள்ளுறை யாமலரு
ளுருவா யெவருக்கு மீசான் மைந்தனென் றேன்மயில்மேற்
றெருவர் யடிக்கடி நீவர லாலெதிர் சேவித்துநின்
னுருவாயி னுற்சற் றிரங்கே னிதுங்குற்ற மோசொல்லையே. (125)

எப்படி யாவது நின்சீர் மனத்தொ டிருக்கவெழு
திப்படி யாதுபொய்ச் சாதனந் தீட்டித் தினந்தினந்துன்
பப்படி யாவரும் கந்தாமுற் காலநின் பானிலந்தோ
யப்படி யாரென் றறிந்தேன் பரங்குன் றடுத்துவந்தே. (126)

வாவென்று காடு வரவழை யாமற்சும் மாவைகலாற்
போவென்று வீடு புறந்தள்ளப் போகிலன் போமளவுங்
காவென் றுயா முழுதுங் கடிந்து கையிலயிலால்
மாவென்று வந்து பரங்கிரி யாண்ட வரோதயனே. (127)

கொடுக்கக் கொடுக்கக் குறையாத நின்னருள் கொள்கிலன்கால்
கடுக்கக் கடுக்க நடந்தே யுலோபர்தங் காதுகளைத்
தொடுக்கத் தொடுக்கப் பலகவி யேவுமென் றொல்வினையைத்
தடுக்கத் தடுக்க வருவாய் பரங்கிரிச் சண்முகனே. (128)

கரண மொடுங்கக் கருவிக ளோயுமக் காலத்தினில்
மரணம் வருமுன் வருநோய் முழுவது மாற்றுதற்குன்
சரணம் வரநற் றிருவுளந் தான்சற் றுச் சம்மதித்தாற்
றிரணமு மஞ்சிலன் றென்பரங் குன்றிற் றிகழ்குகனே. (129)

---

(124) போராய்-பேர்ந்து செல்வாய். தாரான்-மாலையுடையவன். (125) ஈசான்-கொடுக்கின்ற தேவன். (சிலேடை) (126) தீட்டி-எழுதி. துன்பப்படு-துன்பத்தை யடைகின்ற. படியார்-தாழமாட்டார். (127) வைகல்-தங்கல். கா-காப்பாய். கடிந்து-நீக்கி. (128) தொடுக்க-பற்ற. ஏவும்-செலுத்தும். (129) கரணம்-அந்தக்கரணங்கள். கருவிகள்-தத்துவங்கள். திரணமும்-சிறிதும்.

ஏதேனுங் குற்ற மிலைவித்துப் பூத மெடுத்தெனையப்
போதே குகையுட் புகுத்தாம லாள்மெய்ப் பொருப்பிலுறை
மாதேவன் மைந்தகக் தாநினைப் பாடல் மறுத்தபெருங்
கோதேறு கீரனல் லேன்வேண்டும் பாப்பல கூறுவனே. (130)

பாதார விந்தம் பணியா தவர்க்கும் பணிபவர்க்கும்
நீதார தம்மியம் பாரா தருளுநன் னீர்மையனென்
றோதா ரகிலத் தொருவரின் றேயுற் றுழியுதவ
வாதார மாம்வள்ளி மோகா பரங்கிரி வாய்த்தவனே. (131)

இருமற் றுயரம் பொறுக்கரி தேயெனக் கேவல்செய்யா
வருமற் றுளவித் தருணத்தி லேவந்து வந்தருள்வாய்
திருமற் றுயர்செல்வ மெல்லா முதவுஞ் செழும்பரவை
தருமற் றுறுகளத் தான்மைந்த னுமெய்ச் சயிலத்தனே. (132)

எருமையை வாட்டுந் திறம்பரங் குன்றி லிருக்குமெந்தா
யொருமையி லாமிவ் விரண்டுக்கு மில்லெனி லுன்கையிலேந்
தருமை மிருவடி வேலுக்கு மாவிலை யந்தகனூர்
கருமை யெனவருங் காலெனை நீவந்து காத்தருளே. (133)

ஏது வரினுந் திருவரு ளாலென் றிராமையினிப்
போது வரியி னடங்காத துன்பம் புகுந்ததிதை
யோதுவ ரில்லை யுயர்பரங் குன்றில்வர் துன்னிடத்தில்
மாது வரினொளிர் செஞ்சே வலங்கொடி வைத்தவனே. (134)

---

(130) இலைவித்து-பொருத்தி. பூதம்-(நக்கீரரைக் குகையி லடைத்த) பூதம். (131) அகிலத்து-உலகத்தில். உற்றுழி-துன்பம் வந்த இடத்து. வா-வந்தருளுவாய். (132) யாவரும்-எல்லாரும். அற்றுள-இல்லாத. திரு-பொருட்செல்வம். மற்று-வேறு. அல்-இருள் போன்ற விஷம். துறும்-நெருங்குகின்ற மெய்ச்சயிலம்-பரங்கிரி (133) எருமை-(யமன் வாகனமாகிய) எருமைக்கடா. ஒரு-ஆட்டு வாகனம். மை-மேகம். (134) வரியின்-எழுதினால். துவரின்-பவளம் போல்.

எஃது சனன மரணமில் லாத வியல்புளதோ
அஃது பிரமமென் றுராயி லுன்னையல் லாதெவரும்
உஃதுள தென்றுமற் றென்றையு மோதில ரொன்றுமொன்றும்
பஃதுந் திரண்ட தொகைவிழி யாய்மெய்ப் பருப்பதனே. (135)

மிகமே வியபுண் ணியத்தால் வளர்ந்து விளைபயன்கள்
இகமே வருமென் றறிந்தா றெழுத்தையு மெண்ணியுனை
யகமே விருத்தித் தினமுமர்ச் சித்துமிங் காயவொரு
சுகமேனுங் கண்டில னென்றோ பரங்கிரித் தூயவனே. (136)

எட்கே டெனினும் பரங்கிரி வாழ்மயி லேறுமெந்தாய்
கட்கே டிலாமையுங் கைக்கே டிலாமையுங் காற்குமற்றே
யுட்கே டிலாமையும் வேறுள கேடெய் துறுமையுஞ்செய்
விட்கே டிலாதம ரர்க்கீந்த நீயெந்த வேளையுமே. (137)

எத்தாலுந் துன்ப மிகமனம் புண்பட் டிருப்பதினுஞ்
செத்தால் மிகநன் றதற்கென் பழவினை தீர்தலின்றே
சத்தாதி யைந்தையுந் தாங்காத தெய்வத் தனிப்பொருளாம்
அத்தா பரங்கிரி யையாகை யாமல்வந் தாண்டருளே. (138)

பாடிய பாட்டுப் பயனடை யாமற்செய் பாதகர்தம்
நீடிய வாழ்வு கெடுவது போலெனை நேடிவந்து
கூடிய நோயு மிடியுங் கவலுங் குலைகுலைந்தே
யோடி மறைய வருள்வாய் பரங்கிரி யுட்குகனே. (139)

பொன்போ யினுமண்பெண் போயினு மற்றைய போயினுமென்
அன்போ ரணுவு மகலாம லுன்னருட் காகவைப்பாய்
என்போ யினுமஞ் சிலனிது போகு மெனிலஞ்சுவன்
முன்போ ரசுரரை வெல்வேற் பரங்கிரி முன்னவனே. (140)

---

(135) இயல்பு-இயற்கை. உஃது-இது. பஃது-பத்து. மெய்ப் பருப்பதம்-பரங்கிரி. (136) இகமே-இம்மையிலே. ஆறெழுத்து-சடாக்கர மந்திரம். (137) எள்-எள்ளளவு. கட்கேடு-கண்ணுக்குக்கேடு. அற்றே-அப்படியே. விண்-விண்ணுலகத்தை. (138) எத்தாலும்-எதனாலும். தீர்தல்-நீங்குதல். சத்தாதியைந்து-சத்தபரிசரூபரச கந்தங்கள். கையாமல்-வெறுக்காமல். (139) நேடி-தேடி. கவலும்-கவலையும். (140) என்-எந்தப்பொருள்.

முருகா நினக்கின மாங்குறை பாட்டை மொழியநின்பன்
னிருகாதி னந்நெஞ் சுருகாது கிளைக ளெழுந்தெழுந்து
வருகா தினகரன் மேற்செல் பரங்கிரி வாயுறைநீ
யுருகா தினமிருக் தாலெவ் விதமினி யுய்வதுவே (141)

ஞானமுங் கல்வியும் போலே யுயிர்க்கு நலம்விளைக்கு
மான மெனைவிட்டுப் போகா திருக்க வரந்தருவாய்
போனதென் றூனுயி ருண்டேனும் போனது போலுமந்தோ
வூனமி லாதொளிர் வேலா பரங்கிரி யுத்தமனே. (142)

அளியே நிறையுநின் றொண்டர் குழாத்துள் ளகவிருளுக்
கொளியே லெனக்கு மொளியே லகவிரு ளோட்டியுளங்
களியே வரச்செய்வை யானாற் பரங்கிரிக் கண்ணிருந்து
வெளியே யுலாம்நின் மயில்போ லெழுந்துன் வியன்புகழே. (143)

நாட்பார்த் திடாமல் நினைத்தவெப் போது நடந்துகுகன்
றாட்பார்த்துக் கும்பிடு வாயே துயர்வந் ததுவென்னென்று
கேட்பார்க் கிறைகொடுத் தேமுடி யாதிந்தக் கேட்டினின்றும்
வேட்பார்க் கருள்பரங் குன்றா யெனைவெளி மீட்டுவையே. (144)

பிஞ்செழுத் தாகிய ஓரெழுத் தோடு பெருவெழுத்தும்
அஞ்செழுத் தாறெழுத் தென்னு மறைகளு மன்பெனுங்கூர்
மஞ்செழுத் தாணியி னாலே வரைந்து வரைந்தெனது
நெஞ்சழுத் திக்கொண்டு நின்றேன் பரங்கிரி நின்மலனே. (145)

நிற்பர சிக்கும் பிடுமடி யேனை நிமிரும்வெள்ளி
வெற்பர சிக்கு மகனாய்ப் பரங்கிரி மேவிருந்த
சிற்பர சிக்கும் படிவள்ளி யைச்செய்த சித்தபொல்லா
அற்ப ரசிக்கு ளழுந்தாமல் நின்னடிக் காட்கொள்கவே. (146)

(141) நம்—நம்முடைய. கிளைகள்-மரக்கொம்புகள். கா-சோலை. (142) உண்டேனும்-இருந்தாலும். ஊனம்-குற்றம். (143) அளி-அன்பு. அகவிருள்-ஆணவமலம். ஒளியேல்-ஞானசூரியனால். களி-மகிழ்ச்சி. உலாம்-உலாவும். (144) இறை-விடை. வேட்பார்க்கு—விரும்புவார்க்கு. (145) ஓரெழுத்து-வ. பெருவெழுத்து-சி. மறைகளும்-மந்திரங்களும். வரைந்து-எழுதி. (146) நிற்பரசி-நின்னைத்துதித்து. அரசி-பார்வதி. சிக்கும்-கைவசமாகும். சித்த-சித்தனே. அசிக்குள்-அவமதிச்சிரிப்புக்குள். ஆட்கொள்க—அடிமைகொள்வாயாக.

வானம் பெயலுவர் மட்கிலை யாமெய் மலைவலஞ்செய்
ஞானம் பெயாடி யேனுக்கு நின்னருள் நல்குதிற்பாய்
தேனம்பெ யங்கசன் மைத்துனக் கேண்மை சிறந்திடப்பெற்
றோனம் பெயர்கந்த னென்றுல கேத்த வுயர்ந்தவனே. (147)

சொற்பாந் தரங்க முனக்காக யானென்று சொல்லுவன்கேள்
கற்பாந்த கால மிருந்தாலுஞ் சாவது கண்கண்டதே
நற்பாந்தள் மாலை யிறைசெய் பரங்கிரி நண்ணிநின்று
பொற்பாந் தமிழ்க்கவி நீயுள்ள போதிற் புகல்மனமே. (148)

மாதக்கன் வேள்வி தகர்த்தானைப் போற்பகை மாய்ப்பதற்கு
நீதக் கவனென் றுணராப் பிறர்க்குநின் னீர்மையெடுத்
தோதக் கனவிலு மெண்ணா ரிவரினி யுய்வதெங்கே
வேதக் கரைகண் டவர்சூழ் பரங்கிரி வேலவனே. (149)

பாத் கமல மறுக்கப் பரங்கிரி பற்றிவந்துன்
பாத கமலமன் பாற்பணி யாரெப் படிப்பிழைப்பார்
சூத கமலதொன் றுந்தெரி யாக்கொடுஞ் சூரனெனுஞ்
சூத கமலாங் கைவேலி னீர்ந்த சுடர்க்கொழுந்தே. (150)

பலனிற் குறைவுறு மியான்செய் பழவினைப் பாலுக்குமிந்
நிலனுற் றியற்றும் புதுவினைப் பாலுக்கும் நீபிரையாம்
புலனிற் பெரியர் தொழும்பரங் குன்றிற் பொழிகருணைக்
கலனிற் சிறந்து விளங்கிய பன்னிரு கட்கந்தனே. (151)

பரம்பரை யாக மயற்பேய் பிடிக்கப் படுவரன்பு
நிரம்பரை யோர நிமிரல்குன் மாதர்க்கென் னெஞ்சுருகாத்
திரம்பரை யாமுமை பாலா சிவாகமச் செந்நெறியின்
வரம்பரை யாளும் பரங்கிரி யாய்தர வந்தருளே. (152)

---

(147) மட்கு-மண்ணுக்கு. பெயர்-நீங்குகின்ற தேனம்பு-புட்பபாணம். அம்-அழகிய. (148) சொற்பாந்தரங்கம்-சிறிய இரகசியம். பாந்தள்-பாம்பு. பொற்பு-அழகு. (149) வேள்வி-யாகம். தகர்த்தான்-கெடுத்த வீரபத்திரர். நீர்மை-குணம். (150) மலம்-ஆணவமலம். கமலம்-தாமரைமலர். சூதகம்-வஞ்சகமனம். சூதகம்-மாமரத்தின்றலையை. ஈர்ந்த-பிளந்த. (151) வினைபபால்-வினையாகிய பால் பிரை-உறைமோர். புலனில்-அறிவில் கருணைக்கலனில்-கிருபையாகிய ஆபரணத்தால். (152) நிரம்பு-நிறைகின்ற. நிமிர்-உயர்ந்த. திரம்-உறுதியை. வரம்பரை-ஒழுங்குடையவரை.

உள்ளுவை யாவையு நல்குவை நீயென் றுனையடுத்தேன்
கொள்ளுவை யென்று கொடுத்ததை வாங்கக் குறித்தனையேல்
அள்ளுவை வேற்பரங் குன்றா யிதைச்சொல்வ தாரிடத்தில்
விள்ளுவை யாடென் வினைக்கன லாய்நின்ற வித்தகனே. (153)

துள்ளிய சேல்வயற் சேலோ டுலாவுஞ் சுனைச்சுவைநீர்
அள்ளியள் ளித்தர்ப் பணஞ்செய் தருச்சனை யாற்றியருள்
வள்ளி கணவனை நம்பரங் குன்றில் வணங்கிலர்தாம்
வெள்ளிபொ னாளினல் லாற்கையிற் கண்டிலர் மெய்யிதுவே. (154)

சிறப்பார் கவியுனைப் பாடியென் னெஞ்சினிற் சேமித்துப்பின்
னுறப்பார்த் தெழுதுவ னென்றுவைத் தாலதி னுள்நுழைந்து
மறப்பா கியகள்வன் வாரிக்கொண் டோடுவன் மற்றவனை
யறப்பார் பரங்கிரி வேலா விஃதொ ரவசியமே. (155)

உரோமஞ் சிலிர்ப்ப விழிநீர் துளிப்ப வுருகுமெய்ப்பத்
தரோமஞ் செழுத்துட னெண்ணும் பரங்கிரி தன்னிலுன்பால்
வரோமஞ் சலித்திட மாட்டோ மெமக்கருள் வாய்கொலினி
யரோமஞ் செழுத்துணை யாகிய பன்னிரண் டம்புயனே. (156)

வண்டாடு வார்குழல் வான்றெய்வ யானை மணமகனைக்
கண்டாடு வார்முது கேறுகந் தாவென்று கைதொழுது
கொண்டாடு வாரல்ல ரேபரங் குன்றினிற் கூழுக்குமே
திண்டாடு வாரவ ரல்லே னெனக்கொரு தீங்குமின்றே. (157)

கடம்பா டவியில் முளைத்தெழு முக்கட் கடவுள் பெற்ற
திடம்பா டமைதரு சேய்விண் ணிறைபுத் திரிதழுவும்
உடம்பா டகமொப் பவன்பரங் குன்றி லுறைதருநல்
விடம்பாட வந்தவர்க் கீவானங் கேகுக வென்மனமே. (158)

---

(153) உள்ளு-நினைக்கின்ற. ஐ-அழகிய. கொடுத்ததை-கொடுத்த நலத்தை. வை-கூரிய. விள்ளு-சொல்வாய். வை-வைக்கோல். (154) நாள்-வெள்ளிக்கிழமை, வியாழக்கிழமைத் தினங்கள். (155) அற-கெட. (156) சிலிர்ப்ப-மயிர்க்கால் தடிப்ப. ஓம்-பிரணவ மந்திரம். அரோ-அசை. மஞ்சு-அழகுள்ள. எழு-தூண். துணை-ஒப்பு. (157) வண்டாடு-வண்டுகள் விளையாடுகின்ற. வார்-நீண்ட. ஆடுவார்-ஆட்டு வாகனத்தினீண்ட. அல்லரே-அல்லாதவரே. (158) கடம்பாடவி-கடப்பங்காடு. திடம்பாடு-வலியின் பெருமை. சேய்-பிள்ளையாகிய முருகன். உடம்பு-திருமேனி. ஆடகம்-பொன்.

மூப்புரி நூலன் பரங்கிரி மூலன்மெய் முத்திபத்தர்க்
குப்புரி சீலன் கடம்பணி கோலன்கை கூப்பிவந்தார்
தப்புரி வேலன் சிவனருள் பாலன் றமிழெனைத்தும்
செப்புரி யாயென்று கேட்பன் சலிப்பிலன் சென்மனமே. (159)

எட்டி லெழுதிய பாமா லையையாங் கேற்றியுன்றாள்
சூட்டி மகிழ்தற் கிடங்கொடுத் தாயெனிற் றொன்றுதொட்டுப்
பாட்டில் விருப்புறு வள்ளலென் றேயுனைப் பார்த்தவரிந்
நாட்டி லெவர்சொல்ல மாட்டார் பரங்கிரி நற்குகனே. (160)

அடியார்கள் போற்பலர் வெண்ணீ றணிவ ரவர்நடந்த
படியார் நடப்பவ ரோஅவ ரேயெற்குப் பண்டை நண்பர்
கடியார் கடம்பலர் மாலிகை யாய்நின் கழல்வணங்காக்
கொடியார் குழாத்தெனைக் கூட்டாம லாள்பரங் குன்றிடத்தே (161)

வேதாள மாகணங் கொண்டு பகைவரை வென்றுவெற்றி
மாதாள மேளத் துடன்வரு வேலன்றன் வைபவச்சீர்
பாதாள மேழினுக் கப்பாலும் விண்ணுக்கப் பாலுஞ்செலப்
போதாள வந்த பரங்கிரி யேயென் புகலிடமே. (162)

பூமியை யாசையைப் பெண்ணை நினைந்தெங்கும் போயுழல
நாமியை யாமலுன் பாதார விந்த நயந்துவந்து
சாமியை யாவென் றிரந்தேம் பரங்கிரி தன்னிலெமைச்
சேமியை யானனன் கண்ணுறிற் றோன்றுஞ் செழுஞ்சுடரே. (163)

ஏது தெரிய விலைப்போ லும வேலவ னேபரமென்
றோதுவன் வம்மி னறிவிலி காள்விண் ணுறுமடவார்
காது கழுத்தி லணியிறங் காமல்முன் காத்தவன்யார்
சூதுசொன் னேனல னின்னே பரங்கிரி சூழ்மின்களே. (164)

---

(159) புரி-செய்கின்ற. தபபு-குற்றத்தை. உரி-கழற்றுகின்ற. செப்பு-சொல்லுவாய். உரியாய்-உரிமையுடையாய். செல்-(அவனிடத்துப)போவாய். (160) சூட்டி-அணிந்து. (161) யார்-எவர். கடி-வாசனை. குழாத்து-கூட்டத்தில. (162) வேதாளம்-பூதம். பகைவர்-சூரன்முதலிய விரோதிகள். வைபவம-செலவச்சிறபபு. செல்-செல்லுகின்ற. (163) ஆசையை-பொனனை. உழல-வருந்த. இயையாமல்-சம்மதியாமல். சேமி-காத்துவைப்பாய். ஐயானன்-சிவபிரான். (164) ஏது-காரணம். வம்மின்-வாருங்கள். அணி-ஆபரணம் சூது-வஞ்சகம்,

செப்போ தனமெனு மின்னா ரறிவு திறம்பச்செயும்
அப்போ தனையு ளகப்பட லின்றி யகன்றனுவும்
ஒப்போ தரிய பரங்கிரி வேலனை யுற்றுநெருங்
கிப்போ தனித்த சமயமி தேயொன்றுங் கேடிலையே (165)

அடுக்கக் குமாரன்முன் றானுண் கடுநிக ராயகொடுங்
கடுக்கக்கு மாரன் கழல்பணி யேனைக் கடுக்கும்பிணி
நடுக்கக் குமாரன் குடையொடு தோன்றிய நன்மருந்து
கொடுக்கக் குமா ரிருக்கின் றனன்பரங் குன்றிடத்தே. (166)

மூதண்ட மாயிரத் தெட்டுந்தன் னாணை முரண்செலுமப்
போதண் டருக்கிட ரேபுரி சூரனைப் போர்க்களத்தில்
மாதண்டஞ் செய்துயிர் மாய்த்துவந் தானை வசப்படுத்தித்
தீதண்ட லின்றி யுறைபரங் குன்றினைச் சேருவமே. (167)

சந்தத் திருப்புகழ் கேட்டு மகிழ்ச்சி தழைந்திருக்கும்
அந்தத் திருச்செவிக் கென்புன் கவிகளு மாகுமென்றால்
பந்தத் திருக்கு மடியேன் படும்பெரும் பாடுசற்றுச்
சிந்தத் திருப்பு பரங்கிரி யாயுனைச் சேருதற்கே. (168)

ஆங்கால மாமென் றிராமல் முயற்சியி னாகுமெனும்
பாங்கா லநேக விதமோடி யோடிப் பலனடையா
தீங்கால முண்டவன் மைந்தா பரங்கிரி யெய்திநின்ற
நாங்காலன் வாயிற் புகாமலுன் சீரடி நல்குகவே. (169)

(165) ஒப்பு-உவமை. ஓதரிய- சொல்லுதற் கில்லாத (166) அடுக்கு-அடுக்குகின்ற அக்கு-உருத்திராக்க மணிந்த. மாரன்-மார் பையுடைய சிவபிரான். கடு-விடத்தை. ஆரன்-பாம்பு மாலையுடைய வன். நடுக்கக்கு-நடுக்கத்துக்கு. மாரன்குடை-சந்திரன். மருந்து-அமிர் தமாகியமருந்து. (167) மூது-பழைய. முரண்-வலிமை. அண்டல்-நெ ருங்குதல். (168)பந்தத்து-பாசத்துள். சிந்த-கெட. திருப்பு-(என்னை) நன்மைமாகச்செய். (169) நங்கு-இவ்விடத்து. காலன்-யமன்.

இடமாடு வீடு மனைமக்க ளாதி யெனைத்துந்துயர்
படமா டுயரக் தருமென்று விட்டுப் பரிந்துதுடி
நடமாடு கந்தன் கொடிவா கனமென நண்ணியகுக்
குடமாடு கொண்டவன் வாழ்பரங் குன்றினைக் கூடுமினே. (170)

கொடுப்பையென் றுலது நீரிடத் தென்பர் கொடாயெனினுங்
கடுப்பையென் னெனி லதுபாம் பிடத்தினிற் காணுகெம்பர்
அடுப்பை விடாத அனல்போற் சினக்கு மவரிலின்னும்
விடுப்பைகொ லோமிடி தீராய் பரங்கிரி வேலவனே. (171)

சாங்கா றுஞ் சாண்வயிற் றுக்கே யுலோபத் தனத்தரிடம்
போங்கா றலையுறப் புண்பட்ட போதினும் போதலரு
தோங்கா று மாமுக வேலா பரங்கிரி யூர்புகுத்தும்
பாங்கா று செலலெனிற் செல்லாதந் தோவென்றன் பாழ்மனமே. ()

செய்யன் பழையன் புதியன் பெரியன் சினவடிவே
லையன் பரங்கிரி யாள்வா னெனைமுற்று மாய்ந்தறிந்து
மெய்யன் பமைகிலன் வீணுதி வீணர்க்குள் வீணன்வெறும்
பொய்யன் பணிகில னென்றெண்ணி யோபுறம் போக்கியதே.(173)

காணுநன் மார்க்க மறிந்தில னேனுநின் னல்லடியா
ராணுர்சொன் னுலு மறியேன் விழிவலி யாற்பிடிக்கு
மாணுர் மதியி லகப்பட்ட துற்புத்தி மானெனநின்
றேனு ரினிவந்து மீட்பார் பரங்குன் றிறையவனே. (174)

---

(170) பட-உண்டாக. மாள் துயரம் - இறக்குந்துன்பத்தை. துடிநடம்-துடியென்னும்நடனம். குக்குடம்-கோழி. (171) கொடுப்பை-கொடுப்பாய். நீரிலுள்ள ஓர் பச்சிலைமருந்து. (சிலேடை) கடுப்பை-கோபிப்பாய், விடத்தையுடைய பாம்பின்படம். (சிலேடை) அவரில்-அவரிடத்து. மிடி-வறுமை. (172) கால்துளை-காலிற்றுவாரம், ஓட்டை. பாங்குஆறு-அழகியவழி. (173) பணிகிலன்-வணக்கமில்லாதவன். (174) மதியில்-அறிவில், *சந்திரனில் (சிலேடை) ஆர்-எவர். மீட்பார்-திருப்புவார்.

அஞ்சாயஞ் சாவகை செய்யாப் பொறிக ளலைத்தலைத்துப்
பஞ்சாய்ப் பறக்க விடும்பெரும் பாட்டினிற் பட்டுழன்றேன்
னெஞ்சா யிருந்து குடிகேடு செய்கின்ற நீயினிமேற்
செஞ்சாயல் மென்மயி லூர்வான் பரங்கிரி சேர்வதென்றே. (175)

போன வியாதி திரும்பித் திரும்பிப் புகுந்திடுமேல்
நானவி யாதிங் கிருந்தத னாலெங் கலமுண்டுபூந்
தேனவி யாஞ்சொல் விழிவள் ளியைமணஞ் செய்முருகா
ஞான வியாதன் பிதாவேத்து மெய்வெற்பி னன்கருளே. (176)

சூலத்தி னாற்செய்வ தொன்றிலை யேனுநற் சூரனென்றெத்
தாலத்தி னருஞ் சொல்வதைக் கொண்டவன் றனெனநீ
பாலத்தி னாழற் கண்கொண் டனையென்பர் பார்த்திலம்யாம்
கோலத் திவாகரன் போலொளிர் மெய்ப்பரங் குன்றிறையே. (177)

பண்டக் தகனை யுதைத்தார் மகவெனப் பட்டவொரு
வெண்டந்த வேழத்தின் பின்வந்த வேளையிம் மெய்க்கிரியிற்
கண்டந்த நாள்முதற் கண்ணு மனமுங் களிக்கப்பெற்றேன்
தொண்டந்த மேவிய தொண்டர்க்குள் யானுமொர் தொண்டனன்
[றே. (178)

நேர்வந்தி யான்சொலிற் கேளாய் பரங்கிரி நின்மலனே
ஆர்வந்து சொல்லிடிற் கேட்பாயென் றுய்ந்தெமர் யாயெனலாஞ்
சீர்வந்த வள்ளியை வாழ்த்தியென் னல்லலைச் செப்புகென்றேன்
ஆர்வந் தழையு மவள்சொல் லினுமங்ங னவைகொலோ. (179)

---

(175) அஞ்சாய்-ஐந்தாகி. பொறிகள்-இந்திரியங்கள். நெஞ்சாய்-மனமாய். சாயல்-அழகு. (176) அவியாது-இறவாமல். நவி-மான். பிதா-பராசரமுனிவர். மெய்வெற்பு-பரங்கிரி. (177) தாலம்-உலகம். பாலம்-நெற்றி. கோலம்-அழகு. குமாரக்கடவுளுக்கு நெற்றிக் கண்ணுண்டென்பது, அவரது சகஸ்ரநாம மந்திரத்திற்காண்க. (178) வேழம்-யானையாகியவிநாயகர். தொண்டந்தம்-அடிமையழகு (179) யாய்-தாய். ஆர்வம்-அன்பு. அங்ஙன்-அவ்விதம். ஆவை-ஆவாய்.

ஓடித் தவிப்பவர் போலெனை நோய்க ளொறுத்துயர்போ
ராடித் தவிப்பதல் லாமலுன் னாரு ளாலினைத்து
வாடித் தவிர்த லிலேயேற் பரங்கிரி வாழ்முருகா
நீடித்த காளெப் படிப்பொறுப் பேனவை நீக்குவையே. (180)

எறும்பூர வூரக்கல் லுங்குழி யாம்மெய் தேய்ப்பவியான்
உறும்பூவி னுலர்ச் சனைசெய்து செய்கிங் குஞற்றியபா
வெறும்பாவென் றுகி விடாமற் பரங்கிரி வேள்சரண
நறும்பூமெய்ஞ் ஞான மணங்காட் டியதெங்ங னுன்சொல்வனே. ( )

நின்மல னாகிய நீயே பிறவியை நீடுதரும்
என்மல நோய்தவிர்ப் பானது நிற்கவின் றென்வயிற்றில்
வன்ம மிகவெய்தி வைகும் பிணியினை மாற்றியருள்
தன்ம. தயாநிதி யேபரங் குன்றுறை சண்முகனே. (182)

மாந்தரு ளேபத ராகப் பிறந்து வளர்ந்திருந்தே
மாந்தரு நோய்கொள முன்செய்த தீவினை மாற்றினியான்
மாந்தரு மாமருந் தொன்றறி யேன்மற்று வான்வரைநீள்
மாந்தரு வேயும் பரங்கிரி மாமயில் வாகனனே. (183)

தொண்ணூறு பாட லெனினுந் துடியினிற் சொல்வனெனுங்
கண்ணூறு சற்றும் வராமற் பரங்கிரிக் கட்குகனே
மண்ணூறு நீரெனப் பாடலென் வாக்கில் வரவருள்வாய்
நண்ணூறுண் ணென்னப் பலவுணர்ந் தார்களு நோக்குதற்கே (184)

---

(180) தவிர்தல்-நீங்குதல். (181) ஏய்ப்ப-ஒப்ப. உஞற்றிய-செய்த. எங்ஙன்-எவ்விதம். (182) நீடு-மிக. (183) மாந்தருள்-மனிதருக்குள்ளே. ஏமாந்து-பொய்யை மெய்யென்றுநம்பிக் கெட்டு. மாற்று-நீக்குவாய். மற்று-அசை. மாந்தரு-மாமரம். ஏயும்-பொருந்தும். (184) துடி-ஒரு சிற்றளவு காலம். கண்ணூறு-திட்டி. பாடல்-பாடுதல். நண்ணூல்-நட்பமாகிய சாத்திரங்கள். துண்ணென்ன-விரைவாக.

கற்பத் தமரர் வணங்கும் பரங்கிரிக் கந்தனுக்கு
நற்பத்த னென்றெனை யானே வியப்பவ னன்றொன்றிலா
அற்பத் தனத்தி லளவுக்கு மிஞ்சி யவன் அவன்முன்
னிற்பத் தகானன்றித் தக்கவனாவதெந் நீர்மையினே. (185)

நெல்விற் கரும்பும் கரும்பிற்பைம் பூகமு நீண்டுயர்வாஞ்
சொல்விற்கண் கூடி தெனும்பரங் குன்றிறை தூய்மலர்த்தாள்
கல்விற் கமல மலர்ந்தது போலென் கடினநெஞ்சாம்
இல்விற் கருணை மனஞ்செய்து பூத்த திதுவியப்பே. (186)

வாத முதலிய மூன்றால் வரும்பிணி மாய்ந்தொழிந்து
போத லுறச்செயல் புன்பண் டிதர்செயல் போலுமென்றோ
எத முறாதுயர் மெய்ஞ்ஞான பண்டித னென்றிருக்கும்
நீதமி யேன்பிணி தீராய் பரங்கிரி நின்மலனே. (187)

சிந்தனை யாவுநின் காணிக்கை யாகச் செலுத்துதற்கு
வந்த தடைகள் மிடிநோய் கவலை வராததடை
சொந்த முறுமிட மாதிய மூன்றினிச் சொல்வதென்யான்
கந்த சுவாமியென் றோதும் பரங்கிரிக் காவலனே. (188)

உடலு முயிரும் புறத்து மகத்து முயர்வருத்தப்
படலடி யேன்சொலப் பற்றாது வாயொன்று பார்த்திரங்கி
யடலுறு வேற்பரங் குன்றாய் அருளி லனுவருள்வாய்
கடல்பிறர்க் கோர்துளி தந்தாற் குறையுங் கணக்கிலையே. (189)

ஊறு வராமற் செயுந்தெய்வ நிற்குமுன் னோனென் றுணர்ந்
தாறு முகங்கொள் பரங்கிரி யாயவ னர்ச்சனைசெய்
தேறு வரம்பெற வந்தேன் விரும்பு மெனைத்துமருள்
மாறுசெய் தாலவ னீவரத் திற்கு மதிப்பென்னையே. (190)

---

(185) கற்பம்-கற்பகவிருட்சம். அவன்-அக்கந்தன். நீர்மை-குணம். (186) பூகம்-கமுகு. கண்கூடு - பிரத்தியக்ஷம். கமலம் - தாமரை. இல்-இடம். (187) மூன்று-வாத பித்த சிலேட்டுமம். (188) மூன்று-இடம் பொருள் ஏவல். (189) அடல் - வலிமை. (190) ஊறு-இடையூறு. முன்னோன்-விநாயகர். எனைத்தும்-எல்லாம். ஈ-கொடுத்த.

கொடுக்குங் குணமொன் றிருந்தால்வெவ் வேறுள குற்றங்களை
யொடுக்குமென் றெண்ணிப் பொருட்சுவை சொற்சுவை யுள்ளனவாத்
தொடுக்குந் தொடைபரங் குன்றுயுன் றண்மலர் சூடத்தந்தேன்
அடுக்கும் பரம பதமே யெனக்கிங் கருளுவையே. (191)

ஒன்றுய் யுயரிய நீயென் றுயரை யொறுத்தகற்றுய்
கொன்றுயு மில்லையை யையோ கொடுமை கொடுமையிஃ
தென்றுயுந் தந்தையு நின்னையல் லாதிங் கியாவருளர்
நன்றுயு மன்பர் தொழும்பரங் குன்றுறை நாயகனே. (192)

பட்டாற் றெரியப் படும்பெரும் பாடு படுத்திணையான்
கெட்டா லுனக்கென் கிடைக்கும் பரங்கிரிக் கேகயனே
இட்டாற் பெரிய ரிகையெண்ணி யின்ப மெனக்கருள்வாய்
எட்டாற் றிருவுருக் கொண்ட நினக்கரி தென்றுமின்றே. (193)

உன்னை நினைக்கில னென்றே நினைந்துன்ப மூட்டுகின்று
யன்னை நிகர்பரங் குன்று யதனை யகற்றியப்பா
லென்னை யெதிர்வந்து பார்நினை யாம விருந்தனனேற்
பின்னையுந் துன்ப மிகச்செ யதற்கொன் றும் பேசிலனே. (194)

துயிலில்லை யேற்சுக மின்றெனக் கண்டுந் துயிலகன்றென்
செயிலில்லைச் சூலன் மகன்வரு மென்றுசிந் திக்குமென்றுன்
மயிலில்லை யாபரங் குன்றி லிருந்து வரற்கு வந்தா
லயிலில்லை யாவென் வினைவேர் முழுது மறுப்பதற்கே. (195)

எப்பா ணினிதென் று தேர்ந்துனைப் பாடு மெனக்கருள்செய்
யப்பாணி யாது வருவாய் கவிகளை யாய்ந்தளந்து
செப்பாணி யாகப் பரங்கிரி வாழ்கந்த சேய்ப்பருவச்
சப்பாணி கொட்டி விளையாட லாற்றிய தற்பரனே. (196)

---

(191) தொடை-பாமாலை. பரமபதம்-மேலானபதவி. (192) ஒன்றுய்-தனிப்பொருளாய். உயரிய-உயர்ந்த. ஒறுத்து-தண்டித்து. (193) எட்டு-பஞ்சபூதம், சூரியன், சந்திரன், ஆன்மா. (194) எதிர்-கேரிலே. (195) துயில்-நித்திரை. என்செயில்-என்னசெய்தால். வரும் -வருவான். (196) எப்பாண்-எந்த இசைப்பாட்டு. பாணியாது-தாமதியாது. ஆணி-உரையாணி. சேய்ப்பருவச் சப்பாணி-பிள்ளைப் பருவத்தில் விளையாடும் ஓர் விளையாட்டு.

சக்கரம் போல மனஞ்சுழ லாமற் றனித்திருந்துன்
னக்கர மாறு நினையேன் பரங்கிரி யண்மியங்கை
யெக்க ரமைய வணங்கே னெனைமுத்திக் கேற்றுவையோ
செக்கரம் பன்னிரண் டுற்றுறை தெய்வத் திறற்கந்தனே. (197)

கனிந்து கனிந்து கவிபாடு மென்னைக் கருணையின்றி
முனிந்து முனிந்து துயரத்து ளாழ்த்தினை முந்துமன்பர்
தணிந்து தணிந்து பரங்குன்றில் வந்துநின் றாளருகிற்
குனிந்து குனிந்து தொழுமுரு காநின் குறிப்பென்னையே. (198)

காவியப் பாவொன் றுங் கல்லேன் புகலுங் கவிகளையும்
நீவியப் பாக நினைந்தருள் வாய்கொலுன் னெஞ்சில்வரை
யோவியப் பாவை நிகர்வள்ளி பாலன் புறுநின்முன்னான்
பாவி யப்பா வரு னென்றுவந் தேன்மெய்ப் பரங்கிரிக்கே. (199)

தேங்குமெல் லாம்வல்ல சித்தன் மகனெனச் செப்புவதற்
காங்கு மானமக் கெல்லா வாழும் அருளுவதா
லீங்கு பரங்கிரி கைதொழும் வாழ்க்கைநன் றென்றெண்ணியே
யோங்கு சகலசம் பத்தும்பெற் றுண்மகிழ்ந் துய்குவமே. (200)

---

(197) அக்கரம்-எழுத்து. அண்மி-நெருங்கி. எக்கர்-குவிதல். செக்கரம்-(விகாரம்) சிவந்தகை. (198) தணிந்தென்பது மெல்லின வெதுகை. அருகில்-பக்கத்தில். என்னை-யாது. (199) ஓவியப்பாவை-சித்திரப்பதுமை. பாவி-பாவமுடையேன். (200) தேங்கும்-நிறையும். உய்குவம்-பிழைப்போம்.

முற்றிற்று.

இங்ஙனம்,

மு. ரா. அருணசலக் கவிராயர்.

# பரங்கிரி மும்மணிக்கோவை.

## கற்பகவிநாயகர் துதி.

தோய்ந்ததிரு மேகங்கள் சூழ்பரங்குன் றத்திறைக்கு
வாய்ந்த திருமும் மணிக்கோவை—பாய்ந்தறிவிற்
பாடி முடிக்கும் படிகற் பகவேழந்
தேடியருள் செய்யுந் தினம்.

## நூல்.

பாரெலாந் தோய்ந்த பரஞ்சோதி பார்வையினிற்
சீரெலா மென்னவந்த சேந்தனே—லெரெலாந்
தெய்வமெனப் போற்றத் திருப்பரங்குன் றத்திலிருந்
துய்வது செய்தா னுவந்து. (1)

கலித்துறை.

உவக்கும் படியுனக் கேகேனுஞ் செய்தில னும்பரொடு
தவக்கும் பரும்பணி நீயெனை யாளத் தயைசெய்வையோ
சிவக்கும் பரம னுபதேசங் கேட்கின்ற தேசிகனாய்
நிவக்கும் பரங்கிரி மேல்வந் திருந்த நிருமலனே. (2)

ஆசிரியப்பா.

மலரவன் படைத்த மன்னுயிர்த் தொகுதியு
ளிலகிய மனித யாக்கை யெய்தி
வயாவினு ளாறிரு மதிய மிருந்து
தயாமிகு மன்னை தன்வயி றுளோந்தே
5. யீனுங் காலை யிடுக்கியு ளெவியை

(காப்பு) அதிரும்-முழங்கும். (1) பார்வை-கண். எல்-சூரியன். (2) கும்பர் - அகத்தியர். நிவக்கும்-உயரும். (3) வயா - கருப்பம். ஆறிருமதியமென்றது - பிதாவயிற்றிலிருக்கும் இரண்டுமாதத்தை யுஞ் சேர்த்து. (4) உளோந்து-வருந்தி.

மாணுங் கொடிய வருத்த மெய்திப்
பிறந்து பிள்ளைப் பிணிகளிற் பிழைத்துத்
திறம்பெற வளர்ந்து செழுங்கலை பயின்று
யௌவனப் பருவத் திளைமை வாய்ப்ப
10. மௌவல் மூரலார் மயற்பேய் பிடித்துச்
செலுத்து நெறியெலாஞ் சென்று சென்றே
யலுத்தலுத் திளைத்தன னம்மட் டேயோ
வறுமைக் கடலுள் மறுகி வீழ்ந்து
சிறுமைப் பட்டுச் சின்னா ளுழன்று
15. பரிதபித் தந்தோ பட்ட பாடு
விரிதமிழ்க் கவியால் விளம்பப் போமோ
அதனை நாவா யமைந்தது கொண்டே
யிதமுற வெளிவந் தியன்ற மட்டும்
பற்பல நயஞ்சார் பாக்களா லன்பால்
20. அற்பர் மேலு மள்ளி யள்ளி
யிறைத்து மின்ப மெந்த வகையுந்
தறைக்கு ளின்றிச் சஞ்சரித் திடுங்கால்
நோயுங் கவலையு நொறுக்கி யென்னை
வீயுந் துயர்செய்து விட்டழுத் தியதை
25. யாயுங் காலை யாரே யறிவார்
நீயும நானும் நேரே தெரிவம்
ஆத லாவிவ் வல்ல லெல்லாம்
நிதவிர்ப் பாயென நினைந்து நெஞ்சங்
கரைந்து கரைந்து கண்ணீர் மல்க
30. விரைந்து வந்தேன் வேரல் வேலி
ஏனற் புனத்தி லிதண்மே லிருந்து
கூனற் பிறைநுதற் கொடிச்சியர் குரல்கவர்
கிளிகளை யோச்சுங் கிளவிகள் கேட்டுக்

(10) மௌவல-முலலையரும்பு. (17) நாவாய்-நாவும் வாயும்-(மரக்கலஞ் சிலேடைப்பொருள்) (30) வேரல்-மூங்கில். (31) ஏனல்-தினை. இதண்-பரண் (32) குரல்-(தினைக்)கதிர். (33) ஓச்சும்-ஓட்டும். கிளவி-சொல்.

களியுளங் கொண்டக் காதற் பிணிகள்
35. அகலா தின்னு மச்சொற் சுவையை
நுகர்வா மென்று நூறு கோடி
திரண்டு சூழ்வரு திருப்பரங் கிரியில்
இரண்டு திருவடி யிறைஞ்சுவார்க் கெளிதில்
அருளவிற் றிருந்த வயில்வே லரசே
40. மருளுறு மென்னுடல் மாயு மட்டும்
ஒன்றுக் கேனு முறுக ணின்றி
யென்று நின்பணி யியற்ற வருளே. (3)

வெண்பா.

இயற்றமிழா யும்புலவ னென்னுநினை யெய்தா
அயற்றமிய னுமெனைநீ யாள்வாய்—வயற்கணளி
கோகனக நாடுபரங் குன்றாய்நின் கோமகற்கு
மாகனக நாடுதந்த வா. (4)

கலித்துறை.

தந்தார மன்றிப் பரதாரந் தாயெனுஞ் சற்சனர்வாழ்
மந்தார மன்றிது மாவென நீள்மெய்ம் மலையினிற்பூங்
கொந்தார மன்றிரு முன்றி லிலங்கிய கோயிலன்பர்
வந்தார மன்றிற் றுடியாடல் வேலனை வாழ்த்துநெஞ்சே. (5)

ஆசிரியப்பா.

நெஞ்சே நீயினி யஞ்சேல் வள்ளிசெம்
பஞ்சே ரடிமலர் தஞ்சே யென்று
கானகந் தன்னிற் போன கந்தன்
ஞான கந்தம் ஆனது நிறைய
5. அன்பர் நெஞ்சி னின்ப மதுவைப்
பெருக்கும் பதமல ரிருக்கின் றதனால்
உனக்கு வேண்டிய எனக்கினி தாய

(36) நுகர்வாம்-அநுபவிப்பாம். (41) உறுகண்-துன்பம். (4) அயல்-வேறு. அளி-வண்டு. கோகனகம்-தாமரை (5) மந்தாரம்-கற்பகம். கொந்து-கொத்து. ஆரம்-மாலை. மன்-நிலைபெற்றுத்தூங்கும். முன்றில்-முற்றம். ஆர-நிறைய. துடி-குமாரனுடல் (2) தஞ்சே-ஆதாரமே.

அன்னமு மாடையுஞ் சொன்னமு மிடமும்
ஏவ லாளு மாவன வனைத்துங்
10. குறைவி லாமல் நிறைபெற வெய்துவை
அதற்கி யான்சொல் லெதற்கு முடன்பட்
டொப்ப வேண்டுஞ் செப்பக் கேண்மதி
விடியலி லெழுந்து மடிசிறி தேனும்
இன்றி யூக்க மொன்றிய திறனொடு
15. நித்திய கன்மம் பத்தியின் முடித்து
கன்மல ராகப் பன்மலர் வில்வம்
அறுகு முதலிய வுறுவன வெடுத்து
மெய்மிகு சரவணப் பொய்கை யாடி
யாசை மிகுசிவ பூசை புரிந்து
20. நிலம்புகழ் பரங்கிரி வலம்பெற வந்து
கோயிலின் சந்நிதி வாயிலுள் புக்குக்
கொஞ்சம்நெக் குருகி யஞ்சலித் தெதிரே
தாழ்ந்துடல் வளைந்து வீழ்ந்து வீழ்ந்து மேல்
எழுந்து நின்றுள் ளழுந்து மன்பால்
25. முருகாற் றுப்படை யொருகாற் படித்து
வரினும் போது மரிதன் றஃதே (6)

வெண்பா.

அஃதென்பார் சொற்கு ளடங்கா யஃதன்றி
இஃதென்பார் சொற்குமற்றே யென்றால்—எஃதென்றுட்
கொண்டுநினைக் கைகுவிப்பல் கூறுபரங் குன்றிலன்பர்
மண்டு வடிவேல வா. (7)

கலித்துறை.

வாதிகள் யாரும் வழக்கிட நின்றநின் வன்மைபன்னூ
லோதிய பேரறி வுள்ளோருங் காண்பதற் கொல்வதன்றால்
ஆதியு மந்தமு மின்றிப் பரங்கிரி யாண்டசுயஞ்
சோதி நிறவடி வேலா வெனக்கெங்ஙன் றோன்றுவையே. (8)

---

(13) மடி-சோம்பல் (7) அற்றே-அப்படியே. மண்டு-நெருங்குகின்ற. (8) ஒல்வது-கூடியது. சுயஞ்சோதி-தானே பிரகாசிப்பதாகிய இயற்கை ஒளி.

ஆசிரியப்பா.

தோற்றந் துடைத்துத் தொல்லுயிர்க் கெல்லாம்
ஏற்ற மாகி யேக போகமாய்
நானு நீயு நயந்தினி தன்பின்
வானு முயிரு மொப்ப நிற்கும்
5. அந்த நாள்வரு மளவு மெல்லாப்
பந்தமு மகற்றுநின் பதமல ரிணையென்
கண்கள் காணவுங் கரங்கள் முகிழ்க்கவும்
எண்களி கூரவு மிருகால் சூழவும்
வாசனை மிகுமலர் மாலை புனைந்து
10. பூசனை புரிந்து புகழ்ந்து போற்றி
வாய்பல பாடல் வகுத்துப் பாடவும்
ஆய்தொறும் ஆய்தொறு மன்புள் ளூறவும்
பார்மெய் தோய்ந்து பன்முறை பணியவும்
எந்த நாளு மிடையீ டின்றிச்
15. சிந்தனை நின்பாற் செலுத்தவு மின்னே
வரந்தரு வாயேல் மற்றது போதும்
புரந்தரன் முதலிய புத்தே ளுலகும்
மாலய னாதியோர் வைகு முலகமும்
ஞால மதனில் நல்லற மியற்றிப்
20. பெற்றா ரின்பம் பெரிதெனப் பேச
லுற்றாங் காங்கவை யூக்கினுஞ் செல்லேன்
கரிசறு நம்முகங் கைகொண் டிருந்து
பரிவொடு தன்னைப் பணிவார் யார்க்கும்
எண்ணிய யாவு மீதற் கறிகுறி
25. பண்ணிய தென்னும் பான்மை போலக்
கற்பகப் பெயர்கொள் களிறாந் தெய்வம்
அற்புத வைகு மதனைக் காண்பா
மென்று கரியின மீரிரு புறத்துந்

---

(1) தோற்றம் - சலனம். (2) ஏகபோகம் - ஒன்றாயநுபவிக்கும் இன்பம், அதாவது அத்துவித ஆநந்தம். (7) முகிழ்க்க-குவிக்க. (13) பன்முறை-பலமுறை. (14). இடையீடு-தடை. (21) ஊக்கினும்-செலுத்தினும். (22)கரிசு-குற்றம் (23) பரிவு-அன்பு. (26) களிறு-யானை.

துன்று மன்பொடு சூழ்ந்து கேடுதல்
30. ஒப்ப வுலாவு முயர்பரங் கிரியாய்
அப்பெருந் தெய்வ மாகிய களிற்றை
முழுக்கனி ருக முன்வரச் செய்த
விழுப்பொரு ளாஞ்செவ் வேற்கைக் கோவே. (9)

வெண்பா.

வேற்கைக் குகனே வெறுவினர் வீடுதொறும்
ஏற்கைக் குகந்தின்னு மேகாமல்—சூற்கைம்மா
உண்ணவரு விப்பாய்நீ ரொண்களிறாட் டும்பரங்குன்
றண்ணவரு விப்பாயென் னை. (10)

கலித்துறை.

ஐயா னனன்பெறு மாறு னனங்கொண்ட வையனுயர்
உய்யானஞ் சூழும் பரங்குன்றி லிந்த வுகத்தினுக்கு
மெய்யான தெய்வ மெனவிருந் தான்பிற வித்துயரில்
வையா னவனைப்பின் பற்றிச்சென் றேயினி வாழ்மனமே. (11)

ஆசிரியப்பா.

வாழ்வெனு மயலும் வறுமையாஞ் சிறுமையும்
எய்தா திருக்கு மிங்கிலை நன்னிலை
யென்று பெரியா ரியம்பக் கேட்டும்
குன்றுபோ லுயர்நிதி கொண்டிருந் தாலும்
5. பொன்று மளவும் புலையுடல் போற்றப்
படாப்பெரும் பாடு பட்டுப் பொருளே
தேடி யலைவர்நின் சீரடி யேத்துஞ்
செல்வஞ் சிறிதுந் தேடா ரந்தோ
எத்தனை யூழி யிருப்பினு மரணம்
10. வருமெனச் சற்று மனத்தி லெண்ணார்
இவரறி யாமைக் கென்ன சொல்வேன்

---

(29) கேடுதல்-தேடுதல். (33) விழுப்பொருள்-சிறந்தபொருள். (10) ஏற்கைக்கு-யாசிப்பதற்கு. உகந்து-மகிழ்ந்து. சூற்கைமா-சூல்கொண்டயானை. பாய்-ஓடுகின்ற. களிறு-ஆண்யானை. அண்ண - நெருங்க. (11) ஐயானனன்-ஐந்து முகங்களையுடைய சிவபிரான். உய்யானம்-இளஞ்சோலை. (5) போற்ற-காப்பாற்றுதற்கு.

நின்னடித் தொண்டு நிறைவே றுதற்கு
வறுமையாஞ் சிறுமை வாராத வாறுநீ
யடியனேற் கருள்வா யஃதே சாலும்
15. அமரருக் கிடரி ழைத்திடு மாற்றல்
டண்டமுந் தன்னா சாட்சியில் நிறுவிய
சூர பன்மன் றொன்மை யிஃதெனக்
கண்டவர் வியப்பக் கதிர்வடி வேலால்
ஒருடல் பிளந்தி ருயிரைக் காட்டித்
20. திருச்செந் தூரிற் சிறந்தினி திருந்து
கருச்சென் றுறுமற் கைதொழு மன்பர்க்
கருளிய பின்ன ரங்கு நின்றும்
பரங்கிரி யாமுதற் படைவீ டெய்தி
யிந்திர னரசுவாழ் வெல்லா மவன்பெறத்
25. தந்தரு ளியபின் றந்தி மாதை
மணம்புரிந் தின்ப மருவி வீற்றிருந்
தெம்ம னோருக் கிகபர சுகமிக
வழங்கு மாறிரு மலர்க்கை யோனே. (12)

வெண்பா.

மலமாயை கன்ம மயக்க மயங்கிப்
புலமாயை மேவிடும் போதும்—நலமேய
அன்பரங்குன் றுள்மலரை யன்றி நினையாரோ
தென்பரங்குன் றுயதெற்குஞ் செய். (13)

கலித்துறை.

செய்கையும் வாக்கு மனமுமொவ் வாத சிறியனுக்கும்
வைகையுண் டாக்கி யொருகுறட் கீந்தவன் மாமகவாம்
பொய்கையும் பூத்தலர் சோலையுஞ் சூழ்மெய்ப் பொருப்பரசே
யுய்கையுங் காக்கி யருள்வான் றிருவுள முண்டுகொலோ. (14)

(12) தொண்டு-பணிவிடை. (14) சாலும்-போதும். (17) தொன்மை-பழைய நிலைமை. (21) கரு-கருப்பம். (25) தந்திமாது-தெய்வயானையம்மை. (13) புலம்மாய்-அறிவைக்கெடுக்கின்ற. ஐ-கோழை. அதாவது கபம். அது-அச்செயல். (14) ஒருகுறள்-குண்டோதரன். மெய்ப்பொருப்பு - பரங்கிரி. உங்கு - இவ்விடத்து. அருள்வான்-அருளும் பொருட்டு.

ஆசிரியப்பா.

உண்டெனமறைக ளோதி யோதிப்
பண்டை யூழி பலபல சென்றுங்
காணற் கரியாய்க் கருதுங் காலை
நின்னை யீன்ற நின்மல வடிவாம்
5. அன்னையு மப்பனு மத்தன் மையரே
வழிமுறை வந்த வழக்கி தாகலின்
மலமா யையினுள் மயங்கிக் கிடந்து
தெளித லில்லாச் சிற்றறி வுடைய
யானோ காண்ப னியம்பரு நின்னை
10. வானோர் யார்க்கும் வாழ்வருள் வைவே
லேந்திய செங்கை யெந்தா யெந்தாய்
நாரத னொருபால் நயந்தினி திருப்பச்
சீர தோன்றிய தெய்வ யானை
யொருபா லிருப்ப வுவந்து திருப்பரங்
15. குன்றி லமர்ந்த குமர வேளே. (15)

வெண்பா.

குமரா நமவென்று கும்பிட் டிறைஞ்சார்
தமரா நமக்குத் தகுசூ—ரமராடு
வேலங்கை யானை விளங்குபர வெற்பிலன்பர்
சீலங்கை யானைத் தினம். (16)

கலித்துறை

தினங்காக் குளிர்மலர் சிந்தும் பரங்கிரிச் சேந்தனைப்புன்
புனங்காக்கும் வள்ளியைப் போய்க்கலந் தானைப் புவியருந்த
முனங்காக்கு மாயன் மருகனை வாரி முரசுடைக்கா
மனங்காக்கு மாமய லெற்கொழிப் பானை வணங்குமினே. (17)

---

(7) மலம்-ஆணவமலம். மாயை-மாயாமலம். (12) நாரதன்-நாரத முனிவர். (16) குமராநம-சடாக்கரமந்திரம்., இதில் குமராயவென்ற தன்யகரம் மறைந்து நின்றது. நாதாகுமாரநம என்று அருணகிரி நாதாருளிய கந்தரநுபூதிச் செய்யுளைக்காண்க. (16) தமரா-சுற்றத்தார். அமராடு-போர்செய்கின்ற. (17) கா-சோலை. அங்காக்கும்-வாய்திறக்கும். வாரி-கடல். அங்கு-அவ்விடத்து.

ஆசிரியப்பா

வணக்க வணங்கு மலைவில் லான்பெறு
குணக்கட லேயருட் குன்றே குரைபனி
கணக்க வருபூங் கடப்ப மாலை
மணக்க மிலைந்த மார்பா நின்பால்
5. இணக்க இணங்கு மென்னெஞ் சதனைத்
தணக்க விடாமற் றண்ணருள் புரியக்
கடைக்கண் சிறிது காட்டு வாயேல்
இடைக்கண் முரியா தெந்த ஞான்றும்
அடைக்கல மாகு மடியே னின்கைப்
10. படைக்கல மாகப் பயிலு ஞான
சத்தியாம் வேலையுந் தருபெருங் கிரியா
சத்தியு மிச்சா சத்தியு மாகிய
தெய்வப் பிடியையுந் திறல்சால் வேடுவர்
மைவைத் தமர்விழி மானையு நினையுந்
15. தியானஞ் செய்தென் சிற்றுயிர்த் துச்சில்
மயான மேகினு மறவேன் மறவேன்
சரியையுங் கிரியையுந் தனித்த யோகமும்
அரிய ஞானமு மமைந்த பெரியார்
போல நான்கு புறத்துஞ் சுலாவிச்
20. சால வோர்திறற் றாளால் நின்றே
யரும்பு மலர்கா யாங்கனி யடைந்து
விரும்பிவந் தடைந்தார் மெய்யுளங் குளிரக்
கேட்டன வுள்ளக் கிளர்ச்சியி னல்கும்
பாட்டளி ததையும் பசும்பொழில் நாப்பண்

---

(1) வணக்க-வளைக்க. வணங்கு-வளையும். (2) குரை-ஒலிக்கின்ற. (3) கணக்க-கள்ளையுண்ண. (4) மிலைந்த-அணிந்த. (6) தணக்க-நீங்க. (8) இடைக்கண்-மத்தியில். (10) படைக்கலம்-ஆயுதம். (15) துச்சில்-ஒதுக்குக்குடி, அதாவது இரவை வீடாகிய சரீரம். (19) சுலாவி-சுற்றி. (20) தாள்-மரத்தின் அடிப்பாகம். (24) ததையும்-நெருங்கும். நாப்பண்-நடுவில்.

25. சேணுற நிவந்த திருப்பரங் குன்றில்
மாணுறு சுதையின் வடிவா யிருந்த
முருகா முருகார் முளரியங் கண்ணன்
மருகா நின்சீர் வாழ்த்தார் யாரே. (18)

வெண்பா.

வாழ்க்கைத் துணையாதி மற்றவைபோல் மைந்தருக்கிப்
பாழ்க்கைத்து மின்றேற் படுவதெவன்—தாழ்க்கையினிச்
செய்யாதே வாகருணை செய்யத் திருப்பரங்குன்
றையாதே வாவேல வா. (19)

கலித்துறை.

வேலங் கணத்தியை வேட்டோனை விட்டுப்பொய் வினைர்த
பாலங் கணத்தி லுகுத்திடல் போற்கவி பாடிப்பல [மைப்
காலங் கணத்திற் கழித்தேன் பரங்கிரிக் கட்பயில்வார்
போலங் கணத்தினம் பத்திசெயேனெங்குப் போயுய்வதே (20)

ஆசிரியப்பா.

போய்ப்போய் மீளும் புன்புலால் யாக்கை
மாய்ப்போ செயாமல் மலரவன் படைத்துப்
படைத்தலுந் தின்னும் படைத்திடு தற்குச்
சடைத்திட மாட்டான் சமன்வன் றாதரும்
5. புடைத்துப் புடைத்துப் புண்கொப் புளிக்க
இடைக்கிடை யேதன் பியற்றி யெனைக்கொண்
டேகுவ ரிளைப்ப ரினியுமப் படியே
யாகுவ ரந்தோ வாற்றில னடியேன்

---

(25) சேண்-ஆகாயம். நிவந்த-உயர்ந்த (26) மாண்-மாட்சிமை. (27) முளரி-தாமரை. (19) வாழ்க்கைத்துணை-மனைவி. கைத்து-திரவியம். படுவது-உண்டாவது. எவன்-யாது. தாழ்க்கை-தாமதம். (20) அத்தி-தெய்வயானை. அங்கணம்-சலதாரை. உகுத்திடல்-சொரிதல். கணத்தின்-கணப்பொழுது போல இலேசாக. அங்கு-அவ்விடத்து. அண-அண்ண,நெருங்க. (1) யாக்கை-சரீரத்தை. (2) மாய்ப்பு-கெடுத்தல். (4) சமன்-யமன். (5) புடைத்து-அடித்து.

என்னென் றுரைப்ப னிப்பெருங் கொடுமை
10. முன்னஞ் செய்த மோயா வினையே
யதற்குக் காரண மதுவு மூன்று
யிதத்தொடு படாம லின்னல் விளைக்கும்
அந்த மூன்றுளொன் றாகிய சஞ்சிதஞ்
சிந்த வநுபவித் திடும்போ தெல்லாம்
15. ஆகா மியம்வந் தளவற வளரும்
போகா தென்றால் போக்கு வரவெனக்
கெந்நா ளொழியு மெம்பி ரானே
யந்தமு மாதியு மற்ற பரம்பொருள்
மைந்த ளுகி வளர்சர வணத்திற்
20. கந்த வேளாங் கருணைக் கடலே
தெய்வப் பிடியைத் திருப்பரங் கிரியில்
கைதொட் டணைத்துக் கலாப மயில்மேல்
எழுந்தருள் வடிவே யிறையே யாடி
யுழுந்துருள் பொழுது முன்னை மறவேன்
25. சிறிது கடைக்கண் செய்தென் பாடல்
வறிதுபோ காமல் வழங்குக வருளே. (21)

வெண்பா.

வழங்குகடம் பாய்முகன்பின் வந்தவரி ...ண்டு
முழங்கு கடம்பா முதிருங்—கிழங்குலவும்
இச்சமையம் நின்பரங்குன் றேத்துபல மில்லேன்போ
யச்சமைய வாரா தருள். (22)

(10) மோயா-கெடாத. மோய்தல், கெடுதலென்பதை "மோய வுரைப்பன்யான்" என்ற திருவாசகச்சுருதியிற் காண்க. (13) சஞ்சிதம்-கட்டுப்பட்டிருக்கும்வினை. (15) ஆகாமியம்-தற்போது சம் பாதிக்கும் வினை. இவையெல்லாஞ் சித்தாந்தசாத்திரத்திற் றெளிவா கத்தெரியும். (16) போக்குவரவு-மாணம் செனனம். (23) ஆடி-கண் ணாடி. (26) வறிது-வீண். (22) கடம்பாய்முகன்-மதமொழுகுகின்ற யானைமுகவிநாயகர். கிழம்-விருத்தப்பருவம். போய்-இறந்து. அச்ச- (வேறொரு) சரீரம்.

கலித்துறை

அருட்சத்தி யங்காங் கொண்டது நான்மறை யாகமத்தின்
பொருட்சத் தியம்ப முடியா நிலையது பூங்கடம்ப
விருட்சத் தியங்கு மலர்மா லிகைத்து விளங்குமெய்யன்
பருட்சத் தியகிரி போலக் கலந்த பரம்பொருளே, (23)

ஆசிரியப்பா.

பொருளெ னப்படும் பொய்ப்பொருள் மெய்ப்பொருள்
என்னு மிரண்டி லென்சிற் றறிவிற்
போந்த பொருளெலாம் புனரா லோசனை
செய்து பார்க்கிற் சிதையும் பொய்ப்பொருள்
5. அன்றி யொன்றில யறிந்த மேலோர்
தம்மைக் கேட்கிற் சனன மரணப்
படாம லுள்ள பரம்பொரு ளொன்றே
மெய்ப்பொரு ளென்ன விளம்பி அதுதான்
நீயே யென்று நிச்சயமாகச்
10. சொற்றார் நின்னைத் தருவியெவ் வகையினுங்
காணு மறிவிலேன் கற்றவ ரன்றி
மற்றவ ரறியா மணியா மென்ன
நற்றமிழ்ச் சுருதி நவின்றது கேட்டதற்
காகிய கலையோ ரணுவுங் கல்லேன்
15. பத்தி வலையிற் படுவோ னென்று
சொல்லிய பெரியார் சுருதியை நம்பி
யன்புசெய் வோமென் றடுத்து முயலிற்
புன்புலால் குருதி புறம்போ காமற்
றிரட்டிய பொதியாக் தெரிவைமார் கொங்கையிற்
20. சிக்கி நெஞ்சஞ் சோரா தென்பால்
ஆதலி னிவற்று லாகா தென்று

(23) சத்து-சாரம். மாலிகைத்து-மாலையுடையது. சத்தியகிரி-பரங்கிரி. (3) புனர்-இரண்டாவது. (4) சிதையும்-அழியும். (10) தருவி-தேடி. (16) பெரியார்-மாணிக்கவாசக சுவாமிகள். சுருதி-(திருவாசகமாகிய) வேதம். (18) குருதி-இரத்தம்.

வெறுத்து விட்டு வேறு வழிபெறதென்
ருயுங் காலநின் னருட்கண் கொண்டு
பார்க்க லாமெனப் பகர்ந்த தமிழ்மறை
25. யொன்றைக் கண்டுள் ளுவகை பூத்தேன்
இன்றைக் கேநீ யென்பா லிரங்கிக்
கருணை நோக்கங் காட்ட வேண்டும்
வீந்தா யெந்தா யேழை யேழையான்
நொந்தே னொந்தே னுன்றிரு வுள்ளம்
30. அறியா தொன்றிலை யமரர்சே னாபதி
யாகிச் சூரனை யடர்த்த வேல்கொடு
திருப்பரங் குன்றமர் தேவ தேவே. (24)

வெண்பா.

தேவா மிருதநிகர் தீஞ்சொலார் செண்பகச்செம்
பூவா மிருதங்கம் போய்த்தழுவும்—ஓவா
விருப்பங் கடவார்செவ் வேலோன் மெய் வெற்பிற்
கருப்பங் கடவாரே காண். (25)

கலித்துறை.

காணிக்கை யாவொரு காசேனு நின்பொற் கழற்குதவேன்
ஏணிக்கை யார்மக வாகிச் சரவணத் தேர்ந்துமெந்தாய்
கேணிக்கை யாயிரங் காவி மலர்மெய்க் கிரியிலின்னும்
பாணிக்கை யாது மிலாதவன் றென்னையும் பார்த்தருளே. (26)

ஆசிரியப்பா.

பார்ப்பன மாக்கள் பழையன வொருவிப்
புதியன புகுதல் பொருத்த மென்று
வேறு வேறு வினைபல செய்து
காலங் கடத்துமிக் கால வழக்கங்

(24) தமிழ்மறை-(திருநாவுக்கரசு சுவாமிகளது) தேவாரம். (25) மிருது-மெல்லிது. ஓவா-நீங்காத. தவார்-கெடார். (26) ஏணி-மான். கேணிக்கு-(ஒவ்வொரு)சுனைக்கும். பாணிக்கை-தாமதித்தல். யாதும்-சிறிதும். (1) ஒருவி-நீங்கி. (3) வினை-தொழில்.

5. கொண்டு பிழைக்குங் குறிப்பி லாமற்
பண்டைத் தமாது பழக்க வாசனை
முறையே நான்மறை முழுது மோதி
யுயர்ச்சி தருநல் லொழுக்கம் விடாமற்
செபதப தியானஞ் செய்து மாரி
10. பெய்யும் வேள்விகள் பெரிது மியற்றி
யந்தண ரெனும்பேர்க் கமையவென் றுன்றுஞ்
சகல வுயிர்க்குந் தண்ணளி யாற்றுஞ்
சீர்சால் தெய்வத் திருப்பரங் கிரியில்
கார்வாய் வெண்டிரைக் கடலு மன்றிற்
15. பொருப்புஞ் சூரனும் போலப் பகைஞர்
இன்னுமுண் டாயி லிறுத்தம ரர்க்கும
எம்ம னோர்க்கு மிடர்தபுத் திடுவோ
மென்று வடிவே லேந்தி யிருந்தருள்
குறிஞ்சி யரசே குறவர் மடமான்
20. பெருந்தவப் பேறாப் பெறும்பெரு மானே
யானே துறக்கு மெல்லாப் பொருளுந்
தானே துறக்கத் தமிய னாகியுந்
துறக்கப் படாநின் றூய்மல ரடிகள்
மறக்கற் பாலனாய் வாடு கின்றேன்
25. என்செய் கோயா னெய்து வனவெலாம்
உன்செய லேயென் றுணர வுணர்த்திநின்
பொன்செய் திருவடி புகப்புகுத் துகவே. (27)

வெண்பா.

புக்கவரைத் தன்றாட் புகுத்துகுகன் சீர்புகலத்
தக்கவரைத் தன்றாலென் றன்னெஞ்சே—யிக்கணமே
சென்றுபரங் குன்றிலவன் சேவைநீ செய்தாயேல்
ஒன்றுபா மானந்த முண்டு. (28)

---

(6) தமாது-தம்முடைய.(12) தண்ணளி-குளிர்ந்த கருணை(14) அன்றிற்பொருப்பு-கிரௌஞ்சகிரி. (16) இறுத்து-கெடுத்து. (17) இடர்-துன்பத்தை. தபுத்து-கெடுத்து. (21) துறக்கும்-நீக்கும். (24) பாலன் - பகுப்புடையவன். (25) என்செய்கோ-என்செய்வேனோ. (28) வரைத்தன்று-அளவல்ல. ஒன்று-பொருந்துகின்ற.

## கலித்துறை.

உண்டிக்கு மாத்திர மேனும்பொன் னின்றி யுறுமிடிவை
யெண்டிக்கு மாதங்கம் போலே மழைமுழக் கெய்திநிற்கும்
பண்டிக்கு மாரனைப் பெற்றான் பணியும் பரங்கிரியாய்
கண்டிக்கு மாரருள் செய்தடி யேனையுங் காத்தருளே. (29)

## ஆசிரியப்பா.

காக்குங் கடவுளாங் கமலக் கண்ணனும்
ஆக்குங் கடவுளா மருமறை யவனும்
எம்மனோர் போலன் பில்லா தேகொ
ளகங்கா ரத்தா லன்னமு மேனமும்
5. ஆகிச் சிறிது மறியப் படாத
பரமசற் குருவும் பணியும் பரம
குருவா யமர்பரங் குன்றி லன்பர்
கருவா சனையைக் கழிக்குங் கந்த
வேளே நினக்கு மேலொரு தெய்வம்
10. உண்டென நினைத்தற் குபாய மொன்றுங்
கண்டன மென்று கரைந்தவ ரில்லை
யாதலி னினக்கே யடைக்கல மாகி
வந்திவ ணிருந்தேன் வயோதிக முதிர்ச்சி
பொறுக்கி லேனிப் பொறையுடல் போதற்
15. காங்கா லத்தி லநாயா சத்துடன்
நின்னை மறவா நிகழ்ச்சி காட்டும்
அறிவு மயங்கா தருட்கண் பாரே. (30)

---

(29) மாதங்கம்-யானை' இக்குமாரனை-கரும்புவில்லுடைய மன் மதனை. ஆரருள்-அருமையாகிய கருணை. (4) ஏனம்-பன்றி. (6) பரம் சற்குரு-சிவபிரானாகிய உயர்ந்தகுரு. பரம-உயர்ந்த. (11) கண்டனம்-பார்த்தோம். கரைந்தவர்-சொன்னவர். (13) வயோதிகம்-விருத்தப் பருவம். (14) பொறை-பாரம். அநாயசம்-ஆயாசமில்லாமை.

முற்றிற்று. இங்ஙனம்,

மு. ரா. அருணாசலக் கவிராயர்.

# பரங்கிரி அநுபூதி.

## கற்பகவிநாயகர் துதி.

கூறுமறு பூதிபரங் குன்றிறையுட் கொண்டருள
ஆறு மறுபூதி யமையுமன்பர்—தேறுமுயர்
அற்பக வாரணங்க ளர்ச்சித் தடிபணியுங்
கற்பக வாரணங் காப்பு.

## நூல்.

பாரின் மன்னு பரங்கிரி பற்றிநின்
றோரின் யாவு முணர்ந்தா துணர்தரு
சீரின் மிக்க சிவன்செம்ம லாகிய
காரின் நல்குங் கருணைக்கட் கந்தனே. (1)

அப்ப ரங்கல் நடத்தச்செய் தான்குரு
இப்ப ரங்கிரி யேத்திநின் றேனெனை
யொப்ப ரங்குமிங் கில்லையென் னுள்ளன்பு
வைப்ப ரங்கவன் மாமலர்ப் பாதமே. (2)

பூதி யானஞ் செயுமெய்ப் பொருப்பறு
பூதி யாய புதுத்தமிழ் மாலையும
பூதி யாசையிற் பூசுவர் போலினும்
பூதி யான்கொளப் பூணுமக் கந்தனே. (3)

என்னை யேயறி யாத வியானினி
யுன்னை யேயறிந் துன்னொடு கூடுதற்
கன்னை நேர்நின் னருளுமுண் டாகுமோ
தென்னை யேய்மெய்ச் சிலம்பினிற் சேர்ந்தனே. (4)

---

(காப்பு) ஆறுமறு-ஆறெழுத்து மந்திரம். பூதி-விபூதி. அற்பு-அன்பு. (1) செம்மல்-புத்திரன். காரின்-மேகத்தைப்போலும். (2) அப்பர்-திருநாவுக்கரசு நாயனார். நடத்த-நடக்கும்படிசெய்ய. செய்தான்-செய்த சிவபிரான். வைப்பு-வைத்தலாகிய. அரங்கு-அறைவீடு. (3) பூ-பூமியிலுள்ளார். இறும்பூது-மகிழ்ச்சி. (4) என்னை-ஆன்மா
(4) மெய்ச்சிலம்பு-பரங்கிரி.

உரிய யாவையு மோவினு மோங்குயர்
பெரிய ரானவர் பிழையிற் பேதுறூர்
அரிய மெய்க்கிரி யாண்டவ னேயொன்றுந்
தெரிகி லாத சிறியனென் செய்வனே. (5)

அருவந் தற்கொரு நான்குள வாமான்
குருவந் துற்றமெய்க் குன்றினைக் கும்பிடாப்
பிருவந் தப்பிய பாழ்மனப் பாவிநீ
வெருவந் தெய்க்க விடுத்தனை யென்னையே. (6)

கிட்டிக் காலன் கிளர்ந்தெழு கின்றநாள்
வட்டித் தேவர் மறுப்பரென் வாழ்வெலாங்
கொட்டிக் கீழ்விடுத் தாய்பரங் குன்றினை
யெட்டிப் பார்க்கந்த னின்னரு ளெய்துமே. (7)

வயிற்று நோயின்னும் வந்து வருத்தமே
குயிற்று மந்தக் கொடுமையென் கூறுகேன்
அயிற்று திக்கை யரசரு ளாம்படி
பயிற்று வாரிப் பரங்கிரிப் பாவின்றே. (8)

உடம்பி டிக்கவெங் கூற்ற னுறுமுனம்
உடம்பி டிக்கா றும்பர்பெண் ணொண்முலைக்
கடம்பி டிக்க வருமலைக் கந்தன்மேற்
கடம்பி டிக்க வலையறு கைக்கின்றே. (9)

ஆறும் ஆறும் அஃதிரண் டாயதும்
ஏறு மூன்றி னியல்பு மெளிதினிற்
றேறு மாறு பரங்கிரிச் சேய்செயில்
வேறு நாமொன்றும் வேண்டுவ திக்லையே. (10)

(5) ஓவினும்-நீங்கினும். பிழை-துன்பம். பேதுறூர்-மயங்கார். (6) தற்கு-தனக்கு. கும்பிடாப் பாவியெனக் கூட்டுக. வெருவந்து-பயந்து. (7) வட்டித்து-ஆணையிட்டு, அல்லதுவளைந்து. (8) குயிற்றும்-செய்யும். அயில்-வேல். பயிற்றுவார்-பழக்குவார். (9) உடம்பிடி-வேலாயுதம். உம்பர்பெண்-தெய்வயானையம்மை. கடம்-குடம். மலை-பரங்கிரி. கடம்பு-கடப்பமாலையை. (10) ஆறும்ஆறும்-பன்னிரண்டும். அஃது-அப்பன்னிரண்டு. இரண்டாயதும் - இரட்டிப்பாகிய இருபத்துநாலும். என்கிற முப்பத்தாறு தத்துவமும். மூன்றினியல்பு-(பதிபசுபாசமாகிய) முப்பொருளினியற்கையும்.

சென்ம நோயையுந் தீர்த்தருள் செய்குகன்
றன்ம மேய பரங்கிரி சார்வரேற்
குன்ம மாதி கொடும்பிணி கூட்டுதீக்
கன்மம் யாவுங் கவன்று கலையுமே. (11)

ஆல கால மருந்திய அண்ணலார்
பாலர் சாலப் பயிலும் பரங்கிரி
மூல காரணர் மூர்த்து முருகர்கை
வேல ரெண்ணில் விளைவன யாவுமே. (12)

மரிக்குங் காலம் வரும்வரை வண்பொருள்
தரிக்கு மாறுகந் தாவரந் தாபிறர்
சிரிக்கு மாறு செயாது திருப்பரங்
கிரிக்கு மாரநின் கீர்த்தி கிளைக்குமே. (13)

தொலைவில் யாக்கைத் துயர்பிணி தோன்றினால்
நிலைகு லைந்து நினையு நினைக்கிலேன்
அலைவி லாமெய் யசலத்தி லன்புடன்
இலைகொள் வேல்கொண் டெழுந்தரு ளெந்தையே. (14)

பாவந் தங்கப் படாத பரங்கிரிக்
கேவந் தங்க ணிருப்பதற் கெண்ணுமென்
றூவந் தத்தைத் தவிர்த்தருள் சங்கரன்
கோவந் தற்புதங் கொண்ட குமரனே. (15)

சிற்ப ரங்கிரித் தெய்வத மாகிய
நற்ப ரம்பொருள் காக்கு நமைக்கலை
கற்ப ரங்குணர் வாரது கற்றிலா
அற்ப ரங்கறி யாரவர் பாவமே. (16)

(11) தன்மம்-தருமம். கவன்று-கவலையடைந்து. (12) விளைவன யாவும்-எல்லாப்பொருளும் உண்டாகும். (13) தரிக்கும்-தங்கும். (14) யாக்கைத்துயர்-சரீரத்துன்பம். இலை-இலைவடிவத்தை. (15) கோ-நெற்றிக்கண்ணிடத்து. (16) சிற்-ஞானமயமாகிய. பரம் பொருள்-முருகக்கடவுள். பாவம்-பாவபலன்.

பற்றி லாதவர் பற்றும் பரங்கிரி
யுற்றி டாயுனக் கூழொத் துறுமையால்
நற்றி யானத்தில் நன்குக னல்லருள்
பெற்றி யாயிற் பெறுதியப் பேறரோ. (17)

குறிஞ்சி வேந்தன் கொளும்பரங் குன்றினை
யறிஞ்சி யான்சென் றடையி லவனருள்
நிறிஞ்சி சூழ்கடல் நேர நிறையுநீ
யுறிஞ்சி யாது மொருதடை யூங்கின்றே. (18)

பாடி யாவையும் பட்டமுப் பத்துமுக்
கோடி தேவருங் கொள்ளக் கொடுத்தபொன்
னாடி யாம்பெற நல்கினு நல்குவன்
றேடி யாங்குச் செலின்மெய்ச் சிலம்பனே. (19)

இருநெ றிக்க ணெழுந்துசென் றேவரா
தொருநெ றிக்க ணுறவளி யுய்த்துநல்
லருநெ றிக்க ணமர்வர்க் கருள்குகன்
வருநெ றிக்கண்மெய் மாதிரம் வைகுமே. (20)

பாம ரற்குப் பரங்கிரி பற்றொணா
தோம ரற்குணர்த் துங்குக னோங்கிய
மாம ரத்தை வகிர்ந்த வலியவன்
காம ரற்புதங் காண்மினங் கட்சென்றே. (21)

---

(17) பற்று-ஆசை. ஊழ்-முன்செய்தநல்வினை. பெற்றியாயில்-பெற்றாயானால். பெறுதி-பெறுவாய். (18) அறிஞ்சு-அறிந்து. நிறு-நிறுத்தப்பட்ட. இஞ்சி - அண்டச்சுவர். கடல் - பெரும்புறக்கடல். நேர-ஒப்ப. உறிஞ்சு-உள்ளேயிழு. (மனமே)யாதும்-சிறிதும். ஊங்கு-இவ்விடத்து. (19) பாடு-துன்பம் செலின்-சென்றால். (20) இருநெறி-இடைபிங்கலை யென்னும் வழிகள். ஒருநெறி-சுழுமுனையாகிய நடு வழி. வளி-பிராணவாயுவை. உய்த்து-செலுத்தி. அருநெறி-அரிய யோகமார்க்கம். வருநெறி-(திருச்செந்தூருக்கு) எழுந்தருளும் வழியில். மெய்மாதிரம-பரங்கிரி. (21) பற்றொணாது-சேரமுடியாது. ஓம்-பிரணவ மந்திரத்தை. மாமரம்-(சூரனாகிய) மாமரம். வகிர்ந்த-பிளந்த. காமர்-அழகிய. அற்புதம்-ஆச்சரியமாகிய சரிதத்தை. காண்மின்-அறிந்துகொள்ளுங்கள். (தாற்பரியம்).

பார்த சீர்த்திப் பரங்கிரி பாடுவார்
தார்தெ ரிந்தவர் தாம்பெறத் தண்ணருள்
சார்த கர்தர் தொழார்கட்குத் தோன்றிலார்
நிரந்த மெய்யன்பர் நேர்வந்து நிற்பரே. (22)

பட்டுப் பட்டுப் பழகிப் பழவினைக்
கட்டுச் செய்திறங் கண்டு கலங்கினேன்
விட்டுக் கந்தர்மெய் வெற்பில் விலக்கினால்
இட்டுக் காப்பவர் யாருள ரென்னையே. (23)

எட்டி ரண்டு மியம்பா விறைதனைக்
குட்டி நின்ற குமரன்மெய்க் குன்றினை
யெட்டி வந்தவர்க் கிதவி னெய்திய
செட்டி நாமச் சிறப்புறுந் தேர்மினே. (24)

ஆவ லங்கொடி யாமெய் யசலத்திற்
சேவ லங்கொடிச் சேர்ந்தனைச் சேவித்து
நீவ லங்கொடி யானஞ்செய் நெஞ்சமே
மேவ லங்கொடி யார்வெவ் வினையையே. (25)

விரத வேதியர் மேவுமெய் வெற்பினிற்
காத லாமல கத்திற் கவியுக
வரத னுங்குகன் வாய்த்தது வானவர்
சாத மாதவத் தன்மையிற் றனரோ. (26)

அலகற் றூரென் னவல மளக்குங்கா
லுலகற் றூரிதை யோட்டுவ.ரோங்குநூல்
பலகற் றூர்செய் பரங்கிரிப் பாகடம்
பிலகற் றூரென வேற்கு மிறைவனே. (27)

---

(22) பார்த-விரிந்த. நிரந்த-நிறைந்த. (23) இட்டு-கொடுத்து. (24) எட்டு இரண்டும்-அகாரமும் உகாரமும் ஆகிய பிரணவ மந்திரத்தை. இயம்பா-சொல்லத்தெரியாத. இறை-பிரமன். எட்டி-நெருங்கி. செட்டி-இலாபமுடையவன். உறும்-உறுவன். (25) ஆவல்—ஆசை. ஒடியா-கெடாத. வலங்கொள்-பிரதக்ஷணஞ்செய். மேவலம்-அடையமாட்டோம். (26) காதலாமலகத்தில்-உள்ளங்கை நெல்லிக் கனியைப்போல. சாதம-உண்மை. (27) அலகற்றூர்-எண்ணிலாதவர். உலகு அற்று-உலகம் போலும் அளவுபடாத அத்தன்மையுடையது. நூல் பல-சாத்திரங்கள் அநேகத்தை. பா-பாட்டுகளை. கடம்பு-கடம்ப மலர். இலகல்-விளங்குதலையுடைய. தார்-மாலை.

ஓங்கு பாடலொ ராயிர முன்றன்மே
லீங்கு பாடுதற் கெண்ணியென் னெண்ணத்தில்
ஆங்கு காமெய் யசலத் தமர்ந்தனன்
றீங்கு தீரருள் செய்திடு சேந்தனே. (28)

அன்ப ரன்பி னகப்படற் காயதாங்
தென்ப ரங்கிரிச் சேய்பதஞ் சிந்தையி
லென்ப ரங்க இருத்தி வினையிலாத்
துன்ப ரந்தை தொலையுந் தொலையுமே. (29)

முன்னைச் செய்தவ முற்ற முடித்தவன்
அன்னைக் கேயனை யான்மெய் யசலத்தன்
றன்னைக் கண்டிடிற் றானவ னாகியே
பின்னைக் காணப் பெறுமற் பிறங்குமே. (30)

பாடை யேறிப் படுக்கும் பருவத்தும்
ஆடை யாதி யவாவற்றி லார்மணற்
கூடை யேறுகங் கொண்டார் குமரன்றாள்
வீடை யோபெற் றிலர்பர வெற்பினே. (31)

திருந்த ளிக்குச்செந் தேன்செழுந் தீம்பொழில்
விருந்த ளிக்குமெய் வெற்பினில் வேலன்றன்
அருந்த ளிக்கு ளனுதி யவனருள்
இருந்த ளிக்கொடிங் கெய்துக வென்னெஞ்சே. (32)

பட்டி மண்டபம் பல்கு பரங்கிரி
யொட்டி நின்ற வுருக்குக வெண்புகழ்
இட்டி தேனு மியம்பவல் லேனலேன்
மட்டி லின்பம் வருவதெவ் வாறரோ. (33)

---

(28) குகா-குமரக்கடவுளே. (29) அரங்க-அழுந்த. துன்பரந்தை-துன்பமாகிய அரந்தை. (30) முற்ற-நிறைவேற. முடித்தவன்-செய்தவன். அவன்-பரம்பொருள். பின்னை-பின்பு. காணப்பெறுமல்-(தன்னைக்)காணமுடியாமல். பிறங்கும்-(அப்பரம்பொருளோடு அத்துவிதமாய்) விளங்குவன். (31) கம்-தலை. தாள்வீடு-திருவடியாகிய மோக்ஷவீடு. பரவெற்பு—பரங்கிரி. (32) தளிக்குள்-கோயிலுக்குள். அளிக்கொடு-அன்ளிக்கொண்டு. (33) பட்டிமண்டபம்-கல்விபயிலு மண்டபம். உரு-திருமேனி. இட்டிது-சிறிது.

அம்ம லர்த்திரு வார்மெய் யசலத்தின்
மும்ம லத்தின் முரணற மும்மதப்
பொம்ம லத்தியின் போந்த புராதனன்
செம்ம லர்த்திருச் சேவடி சேர்துமே. (34)

இந்தத் தேக மெடுத்தபய னெனக்
கந்தத் தேவன் கழலிற் கலந்திடல்
அந்தத் தேகமக் காமெய் யசலத்தில்
வந்தத் தேவன் மனஞ்சற்று வைக்கினே. (35)

மனைவி மக்கள் மகிழ்ச்சியின் வைகுதற்
கெனைவி தித்தன னெண்கண னென்செய்வேன்
உனைவி கற்ப மொருவி யுறுதற்கென்
வினைவி டச்செய்மெய் வெற்புறை வேலனே. (36)

கேவ லத்திற் கிடந்து சகலத்தில்
மேவ லுற்றுமெய் வெற்பினை யற்புநீங்
காவ லத்தினிற் கண்டனன் கந்தனே
யாவல் சுத்தத்தி னாக வருள்வையே. (37)

ஏற்ற மூன்று மிலாமலிங் கெய்திய
தோற்றம் வீண்பெருந் துன்பமித் துன்பத்தைப்
பாற்ற வேண்டிப் பரங்கிரிப் பால்வந்தேன்
ஆற்றல் வேலங்கை யாயரு ளன்பினே. (38)

---

(34) முரண்-வலிமை. பொம்மல்-பொலிவினையுடைய. அத்தி-யானையாகிய விநாயகர். சேர்தும்-சேர்வோமாக. (35) அந்தத்தே-மரணகாலத்திலே. அத்தேவன் - அக்குமாரக்கடவுள். (36) எண்கணன்-பிரமன். ஒருவி-நீங்கி. விட-நீங்க. (37) கேவலத்தில்-கேவலநிலையில். அஃதாவது ஆன்மா சிருட்டிக்குமுன் தனியேகிடக்குநிலை. சகலத்தில்-சகலநிலையில். அஃதாவது ஆன்மா வினைக்குத்தக்க சரீரத்தையெடுத்தகாலம். அற்பு-அன்பு. வலத்தால்-வலிமையால். ஆவல்-ஆசை. சுத்தத்தின்-சுத்தநிலையில். அஃதாவது எடுத்த சரீரத்தைவிட்டு இறைவனோடிரண்டறக்கலக்கும் அத்துவிதநிலை. (38) மூன்று-இடம் பொருள் ஏவல். பாற்ற-கெடுக்க. ஆற்றல் - வலிமை.

தத்து வத்திற் சமைந்த சடப்பெருங்
கொத்து ளின்னுமுட் கூடக் குறிக்குமா
பத்து நீங்கப் பரங்கிரி பற்றிய
சித்து மெய்ப்பொருட் சேந்தனைச் சேர்மினே. (39)

முத்திக் கேற்ற முருகனை முன்னுவார்
பத்திக் கேற்ற பரங்கிரி பாடுவார்க்
கெத்திக் குங்கலந் தேறு மிசையுறுஞ்
சித்திக் கும்பெருஞ் செல்வமுஞ் சேருமே. (40)

குருவுந் தாரமுங் கூறும் விதிப்படி
மருவுந் தொல்வினை வந்துவல் மாய்ந்தக்கால்
பருவந் தெய்க்கப் படார்கொல் பரங்கிரி
யொருவந் தேறு முயர்மயி லூர்தியே. (41)

சிற்றின் பத்தினிற் சீரழிந் தேனினி
மற்றின் பத்தினில் வாஞ்சை வரமயற்
பற்றின் பற்றறப் பண்ணு பரங்கிரி
யுற்றின் பத்தினி லோங்கும் ஒருவனே. (42)

அழியு மின்பத்திற் காமுட லற்றுவீழ்ந்
தொழிய வின்னு முடல்வந் திடாவகை
மொழியும் பேரின்ப மூழ்க முருகர்தம்
பழியி லாமெய்ப் பரங்கிரி பண்ணுமே. (43)

(39) தத்துவத்தில்-(முப்பத்தாறு) தத்துவங்களால். சடம்-உடலாகிய. கொத்துள்-கூட்டத்துள். சித்து-அறிவுருவாகிய. (40) எற்ற-எற்றிவிட. எற்ற-ஒத்த, பொருத்தமாகிய. இசை-புகழ் சித்திக்கும்-கைவசமாகும். (41) வல்-சீக்கிரம். பருவந்து-துன்பப்பட்டு. ஒரு-ஆடு. உவந்து-மகிழ்ந்து. மயிலூர்தியே-முருகக்கடவுளே. (42) மற்றின்பம்-சிற்றின்பத்தின் வேறாகிய பேரின்பம். பற்றற-அன்புகெட. பண்ணு-செய்கின்ற. (43) மெய்-உண்மை.

கீரன் பாட்டிற் கிளர்மெய்க் கிரியுள்வை
கீரன் பாட்டி லிணையி லிருபது
மாரன் பாட்டி வதஞ்செய்த மால்மகள்
ஓரன் பாட்டியென் றுட்கொ ளொருவனே. (44)

அம்மைக் கண்ட ருநெற்றி யாமழற்
செம்மைக் கண்டரு சேய்மெய்த் திகிரியார்
தம்மைக் கண்டவர் தம்மைச் சகலரும்
இம்மைக் கண்டரென் றேத்த விருப்பரே. (45)

பதியு மன்பிற் பரங்கிரி பாடுவார்
நிதியுங் கல்வியு நீடு நிலமும்பெண்
பொதியு மின்பமும் பூரணம் புக்கநற்
கதியுங் கந்தன் கருணையுங் காண்பரே. (46)

மாந்தர் யாரும் வணங்கும் வனவள்ளி
காந்தன் கந்தன் கடம்பன் கருணைக்கட்
சேந்தன் சீர்மெய்ச் சிலம்பனென் சென்னியி
லாந்தன் பூந்தண் ணடிபதிப் பானரோ. (47)

பழநி செந்தில் பரங்கிரி யேரகம்
கழனி தீர்பிற கற்கள் கவினளித்
தழனி யேய்பழச் சோலை துதிக்கருள்
குழகன் றங்குதல் கொள்ளு மிடங்களே. (48)

தனியி ருந்து தவஞ்செயத் தக்கநன்
முனிவர் வேள்வி முறையுற முற்றுறும்
புனித மெய்ப்பொருப் புக்குகன் பொற்பதத்
தினிய வாநந்த மென்றெனக் கெய்துமே. (49)

---

(44) வைகு-தங்குகின்ற. பாட்டில்-பெருமையில். மாரன்-புயங்களையுடைய இராவணன். பாட்டி - பாட்டியாகிய தாடகை. வதம்-கொலை. அன்பாட்டி-அன்புடைய மனைவி. (45) மைக்கண்டர்-நீலகண்டத்தையுடைய சிவபிரான் செம்மை-சிவப்பு. மெய்த்திகிரி-பரங்கிரி. இம்மைக்கு-இப்பிறப்பினிடத்து. (46) பூரணம்-நிறைவு. (47) காந்தன்-கணவன் (48) கழனி-வயல்வளம். தீர்-நீங்கிய கற்கள்-மலைகள். தழனி-முழக்கம. பழச்சோலை-பழமுதிர்சோலை. குழகன்-குமாரக்கடவுள். (49) வேள்வி-யாகம். மெய்ப்பொருப்பு-பரங்கிரி.

பாங்க ளின்புற வேயிரு மாதர்தம்
பாங்க ரின்பம் பயில்பரன் பாலர்மெய்
யோங்கல் கண்டவ ருழிதோ ரோங்குவ
தாங்கல் மேவ லநுபூதி யாகுமே. (50)

செயிரிற் றீர்ந்தநின் சீரடி ஞானமென்
றுயிரிற் றோன்றின்மெய் யோங்கலி னுய்குவன்
தயிரிற் றேங்குநெய் தானெனத் தக்கவர்
அயிரிற் றோன்றும் அயிற்கரத் தண்ணலே. (51)

---

(50) இருமாதர்-தெய்வயானை,வள்ளியம்மை. பாங்கர்-அழகிய. மெய்யோங்கல்-பரங்கிரி. ஓங்குவதாம்-வளர்வதாகிய. கல்-கயிலாயமலை. அநுபூதி-அநுபவத்தறிந்தது. (51)செயிர்-குற்றம். அடிஞானம்-சிவஞானம். உயிரில்-ஆன்மாவில். அயிரில்-அன்பில்.

முற்றிற்று.

இங்ஙனம்,

மு ரா. அருணாசலக்கவிராயர்.



உ

சிவமயம்.

# பரங்கிரிக் கோவை.



## கற்பகவிநாயகர் காப்பு.

முருகன் பரங்கிரி யைந்திணைக் கோவை மொழிந்திடுதற்
கருகன் பலகலை யாய்ந்தறிந் தேனல னாயினுமுள்
ளுருகன் பரங்கிரி யுட்கொண்டு போற்று மொருகொம்பன்மால்
மருகன் பசுங்கற் பகவேரம் பன்றுணை வந்திடுமே. (1)

(குறிப்புரை.) ஐந்திணைக்கோவை-குறிஞ்சி பாலை முல்லை மருதம் நெய்த லென்னும் ஐந்து நிலத்தின் முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள் பற்றிய கோவையென்னும் பிரபந்தம். அலன்-அல்லாதவன். அங்கிரி-திருவடி. கற்பக வேரம்பன்-கற்பகவிநாயகர், இவர் தலவிநாயகர்.

## நூல்.

## முதலாவது—களவியல்.

அஃதாவது பொருளதிகாரத்துட் கூறப்பட்ட உருவும் திருவும் பருவமும் குலனும் குணனும் அன்பும் பிறவும் தம்முளொத்த பதினோராண்டும் பத்துமாதமுஞ்சென்ற தலைவனும் பதினோராண்டும் பத்துமாதமுஞ்சென்ற தலைவியும் கொடுப்போரும் பிறருமின்றி யூழ்வயத்தாற் றாமேயெதிர்ப்பட்டுப் புணர்தற்றன்மை. இவ்விதம் புணர்தல் வேதத்துட் கூறிய எண்வகை மணத்துட் காந்தருவ மணமாய்க் கைக்கிளை முதல் வரைவிடை வைத்துப் பொருள் வயிற் பிரிதலீறாகிய பதினெட்டுக் கிளவித்தொகைகளையுடையது.

மேற்கூறிய பதினெட்டினுள்

### முதலாவது — கைக்கிளை.

அஃதாவது தலைவனிடத்தாவது தலைவியினிடத்தாவது உண்டாகும் ஒருதலைக்காமம். அவற்றுள் இது தலைவனிடத்துண்டாகும் ஒருதலைக்காமமாய்க் காட்சி, ஐயம், துணிவு, குறிப்பறிதல் என நான்குவகைப்படும் அவை வருமாறு:—

## காட்சி.

(இ-ள்) தலைவன் தலைவியை ஒரு பூஞ்சோலையினிடத்துக்காணுதல்.

மாதங்க மேவு மருப்பிரண் டுற்றொரர் மடப்பிடிபல்
காதங் கமழ்பசுங் காவரு கம்புலி காட்டுறுமான்
போதங்க ணாம்பல் மணஞ்செய நின்றது போற்றினருக்
காதங்க நீக்குங் குமரன் பயில்மெய் யசலத்திலே. (1)

(கு-ரை.) மருப்பு-கொம்பு, தனம். பிடி-பெண்யானை, பெண். கா-சோலை, கூந்தல். அம்புலி-அழகியபுலி, சந்திரனாகிய முகம். காட்டுறும்-காட்டிற்பொருந்தும், காட்டுகின்ற. மான்-மான், முயலகனாகிய மான். போது-வருகின்ற. அங்கண்-அவ்விடத்து. ஆம்பல்-ஆண்யானை, ஆம்பற்பூவாகிய வாய். மணம்-விவாகம், வாசனை. எனச்சிலேடைப்பொருள் கண்டுகொள்க. ஆதங்கம்-துன்பம். மெய்யசலம்-பரங்கிரி.

## இதுவுமது.

பார்கொண்ட செந்தமிழ் நால்வகைச் சொறகள பலகலபபுற்
றேர்கொண்ட செய்யு ளெனவீ ரிருவகை யின்மலர்பூத்
தோர்கொண்ட லேந்திய மின்மண்ணி னுற்ற தொருவியப்பாங்
கூர்கொண்ட வேற்கைக் குமரன் றிருப்பரங் குன்றகத்தே. (2)

(கு-ரை.) நால்வகை-பெயர் வினை இடை உரி. ஈரிருவகையின் மலர்-கோட்டுப்பூ கொடிப்பூ நீர்ப்பூ நிலப்பூ. அவையாவன-முருக்கம்பூவாகிய இதழ். முல்லைப்பூவாகிய பல். தாமரை அல்லது காவியாகிய கண். எட்பூவாகிய நாசி.

## ஐயம்.

(இ-ள்) மேற்கூறியபடி கண்ட தலைவன் இவள் எந்தவுலகத்துப் பெண்ணோவென்று சந்தேகப்படுதலைக் கூறுதல்.

மின்னோ வுருப்பசி யோரதி யோவிண்ணின் மேனகையோ
பொன்னோ மதுர ரசபுஞ்ச மோகடற் புத்தமுதோ
என்னோ முருகன் றிருவரு ளோவிஃ தெவ்விதத்துந்
தன்னோ டுயர்வொப்பில் சேய்வாழ் பரங்கிரிச் சாரலினே. (3)

(கு-ரை.) புஞ்சம்-கூட்டம். சாரல்-மலைப்பக்கம்.

## துணிவு.

(இ-ள்) சந்தேகிக்கப்பட்ட தலைவியைப் பல காரணங்களாற் பூலோகத்துப் பெண்ணென்று துணிதல்.

மின்னேல் மறையு முருப்பசி யாதினின் மெல்லியலார்
என்னேரிம் மண்வாற் கேதுவொன் றில்லை யெளிதினிலென்
கன்னேர் மனமு முருகச்செய் சேய்பரங் கல்லகத்திற்
பின்னே தெனிலென் னுயிர்காக்கு மானிடப் பெண்ணமுதே. (4)

(கு-ரை.) கன்னேர்-கல்லையொத்த. பரங்கல்-பரங்கிரி.

## குறிப்பறிதல்.

(இ-ள்) தெளிந்த தலைவன் தலைவியின் வேட்கை (ஆசை) அவள் பார்வையால் தன்னிடத்துள்ளதென்று அறிதலைக் கூறுதல்.

நஞ்சினைக் காட்டி யமிழ்தையுங் காட்டுமிந் நங்கைகண்கள்
அஞ்சிடற் காகிய காரண மில்லென் றறிமனமே
வெஞ்சினத் தாலசு ரற்கொன் றருளுமொள் வேற்படையோன்
மஞ்சினத் தாற்பல் வளஞ்சால் பரங்கிரி வைப்பிடத்தே. (5)

(கு-ரை.) காட்டுமென்பதனோடு ஆதலால் என்னுஞ்சொல் வருவித்துக் கொள்க. மஞ்சினம்-மேகக்கூட்டம். சால்-மிகுந்த.

1-கைக்கிளை முற்றிற்று.

---

## இரண்டாவது—இயற்கைப் புணர்ச்சி.

அஃதாவது தெய்வத்தாலாவது தலைவியாலாவது கூடுதல்; அவற்றுளிது தலைவியாற் கூடுதலென்க; அது: வேட்கையுணர்த்தல, மறுத்தல், உடன்படல், கூட்டல் என நான்கு வகைப்படும். அந்நான்கும் இரந்து பின்னிற்றற் கெண்ணல் முதலிய பதினைந்தும் பிறவுமாகிய விரிகளையுடையன. அவைவருமாறு:-

### இரந்து பின்னிற்றற்கெண்ணல்.

(இ-ள்.) தலைவன் தலைவியை யாசித்துப் பின்னிற்றற்கு நினைத்தல்.

உரையாட லின்றிப் புடைபெயர்ந் தேக வொருபுறத்தும்
விரையா டனிநின்ற தாலிவ ளின்பம் விழைவதற்காம்
பரையா டனிமைந்த னுகித்தென் கூடற் பதியமர்ந்தித்
தரையா டமிழ்ப்புல வோன்வாழ் பரங்கிரிச் சாரலினே. (6)

(கு-ரை.) உரையாடல் - பேசுதல். புடைபெயர்ந்து-இடம்விட்டு நீங்கி. விரையாள்-விரைந்து செல்லமாட்டாள். விழைவதற்கு-விரும்புதற்கு. பரையாள்-உமாதேவியார். தமிழ்ப்புலவோன்-முருகக்கடவுள்.

## இரந்து பின்னிற்றல்.

(இ-ள்.) அவ்விதம் எண்ணிய தலைவன் தலைவிக்கு இரந் சொல்லிப் பின்னே நிற்றல்.

மாரி யறுமழ் பொழியும் பரங்கிரி மாமயிலோன்
சீரிய வேற்கெதிர் நின்றாலுங் கூட்டுமை நீட்டுநின்கட்
கூரிய வேற்கெதிர் நிற்றலொல் லேனென் குறிப்பறியாக்
காரிய மாதற்குக் காரணங் காண்கிலன் காரிகையே. (7)

(கு-ரை.) நிற்றலொல்லேன்-நிற்றற்குமுடியாதவனாகிய.

## இதுவுமது.

பங்கம் பிகைபெறத் தந்தார் விழிதரும் பாலரன்பர்
பங்கம் பிளவு படவிடும் வேலர் பரங்கிரியின்
சிங்கம் புலியரு கார்மான்கண் டாரைச் செறுவனது
சிங்கம் புலியரு கார்மான் செறுப்பதென் சேயிழையே. (8)

(கு-ரை.) பங்கம்பிளவுபட-குற்றம் பிளவுண்டாக. சிங்கு-குறைந்த. அம் புலி-சந்திரனாகிய நெற்றியின். அருகு-பக்கத்தில. மான்-மான்போன்ற கண். செறுப்பது-கோபிப்பது. இதில், சிங்கம், புலி,மான் எனச் சிலேடைப்பொருள் காண்க.

## முன்னிலை யாக்கல்.

(இ-ள்.) தலைவி நிற்பது தன் காரியத்திற்கு வேண்டுங்காரண மென் றெண்ணி அவளைத் தலைவன் முன்னிலையாக்கி மொழிதல்.

மெய்யாய தெய்வப் பரங்கிரிவேலனை வேண்டினர்போல்
எய்யா மனநிலை யெய்திய நீமெல் லிணர்மலருங்
கொய்யாய் சுனையுங் குடையாயென் னொவொன்றுங் கூறுகிலாய்
பொய்யா மிடைநுடங் கத்தனி யேநின்ற பூங்கொடியே. (9)

(கு-ரை.) எய்யா-அறியப்படாத. நுடங்க-அசைய.

## மெய்தொட்டுப் பயிறல்.

(இ-ள்.) தலைவன் தலைவியின் சரீரத்தினொருறுப்பைத் தீண்டிப்பழகு தல், அஃதாவது கூந்தலிலுள்ள வண்டுகளை யோட்டுதல்போலத் தோளைத் தொட்டுப்பேசுதல்.

ஏற்றே மலர்க்குழல் மொய்த்தி ரிவட்கிடை யிக்லையென்றே
அற்றே யிரண்டுபொன் னங்குட மந்தரத் தாய்நிற்குமா
மற்றோர்கொள் வேலன் பரங்கிரி வாயனு மானவியல்
சற்றேனுங் கற்றிலிர் வண்டி னுமக்கிது தக்கதன்றே. (10)

(கு-ரை.) எல்-பிரகாசமும். தேம்-வாசனையுமுடைய. அற்றேல்-அப்படியானால். குடம்-குடம்போன்ற கொங்கைகள். மற்று-அசை. அனுமான வியல்-காரியத்தைக்கண்டு காரணமுண்டென்றறிதல்.

பொய் பாராட்டல்

(இ-ள்.) தலைவன் தலைவியினிடத்து உள்ளதுமில்லதுங் கூறிப்புகழ்ந்து கொண்டாடுதல். ஆனால் உள்ளது கூறுதலும் பொய்பாராட்டலோவெனில், அப்படியல்ல. வேறு யாதென்றால் இல்லது கூறுவான் உள்ளதைவிட்டுவிட மாட்டானென்க.

எனக்கிவள் போல்நடை யைப்படைக் கச்சொல் லெனவெழுந்து
மனக்கினி தாம்பரங் குன்றினிற் சென்று மலரயனைச்
சினக்கு முருகனைத் தாங்கு மயிலித் திறத்தவறி
வனக்கின்மை யாலெவ் வயனைச் சுமந்தங் கலுத்ததுவே. (11)

(கு-ரை.) மனக்கு-மனத்துக்கு. திறத்த அறிவு-உறுதியாகிய அறிவு. அனக்கு-அன்னப்பறவைக்கு. மயில் பெண்கள் நடைக்குவமையாதலை "மயில் கண்டன்னமடநடைமகளிர்" என்பதனாலறிக. (திருமுருகாற்றுப்படை.)

இடம்பெற்றுத் தழாஅல்.

(இ-ள்) தலைவன் தலைவியைத் தழுவுதற்கு வாய்த்த இடத்தைக்கண்டு கூறுதல்.

உருக்கத்தியாம்விழியிற்போழ்ந்தவென்னெஞ்சையொட்டிவைத்திங்
கிருக்கத் தி,னின் னமுத குடமிவ ளீவதற்காங்
குருக்கத்தி நீழ லொதுக்கிடம் வாய்த்த குமரனருட்
பெருக்கத்தின் மாண்பினை யென்னசொல் வேன்மெய்ப் பிறங்கலினே.

(கு-ரை.) உரு-நிறம். விழியில்-கண்ணால். போழ்ந்த-பிளந்த. குடம்-குடம் போன்ற தனம். வாய்த்த-வாய்த்தது. இது முற்றிறுதிதொக்கது. மெய்ப்பிறங்கல்-பரங்கிரி.

வழிபாடு மறுத்தல்.

(இ-ள்) இரந்துபின்னிற்றல் முதலாகப் பொய்பாராட்ட லீறாகத் தலைவன்வழிபட்டதனைத் தலைவி மறுத்தல்.

சேண்காப் பெற்ற வருகந்த வேள்மெய்ச் சிலம்பிலுயர்
மாண்காப் படர்கொடி மாமலர் வாய்மது மாந்தளிகாள்
ஆண்காப் பிலரவென் செவிபிறர் வாய்ச்சொ லடாவிதமென்
நாண்காப்ப வின்னிசை பாடுவி ரேலது நல்லறமே. (13)

(கு-ரை.) சேண்-தேவலோகம். மெய்ச்சிலம்பு-பரங்கிரி. மாண்கா-மாட்சிமைப்பட்டசோலை. நாண்-வெட்கம்.

## இடையூறு கிளத்தல்.

(இ-ள்.) தலைவி வெட்கமுற்றுக் கண்ணை மூடிக்கொண்டு நிற்றலினு லெழுந்த துன்பத்தைத் தலைவன் கூறுதல்.

பல்லார்க்கு மின்னருள் செய்யுங் குமரன் பரங்கிரிவாழ்
நல்லார்க்குச் சின்னத் தனமில்லை யென்பது நானறியச்
சொல்லாமற் காட்டினிர் நன்றேநுந் தண்ணளி தோன்றச்செய்து
நில்லாக் குறையென் னிகழ்த்தீர்மெய் யின்ப நிகழுதற்கே. (14)

(கு-ரை.) சின்னத்தனம்-சிறுமை, சிறியகொங்கை. அளி-அன்பு, வண்டு போன்றகண். மெய்யின்பம்-மெய்யுறுபுணர்ச்சி. மெய்யுறபுணர்ச்சியெனவே, உள்ளப்புணர்ச்சிமுன்னரே யுடையானென்பது குறிப்பு.

## நீடுநினைந் திரங்கல்.

(இ-ள்.) புணர்ச்சி யெய்தாமையால் இவள் மனம் எந்நாள் இயையுமோவென நெடுநேரந் தலைவனினைந்து தலைவியைப்பார்த்துக் கூறுதல்.

வான முதம்பெறி னுந்திரு வேநல் வசிட்டமுனி
யான முதம்பெறி னுந்தணி யாதவென் னுசைவிடாய்க்
கீன முதவுதற் குள்ளெூறு நின்செவ் விதழமுத
பான முதவுத லென்றோ முருகன் பரங்கிரிக்கே. (15)

(கு-ரை.) ஆன்-காமதேனுவாகிய பசு. அமுதம்-பால். விடாய்-தாகம். ஈனம்-கேடு. பரங்கிரிக்கு-பரங்கிரியினிடத்து.

## மறுத்தெதிர் கோடல்.

(இ-ள்.) முன் வழிபாடுசெய்ததனை மறுத்துத் தலைவி தலைவன் கூறிய சொல்லை யேற்றுக்கொள்ளுதல். "போரேற்றானென்பதற்குப் போரெதிர்ந்தான்" என்பதுபோல், ஏற்றல்-எதிர்தல்.

கோணாத பேரருட் குன்றாங் குமரன்மெய்க் குன்றினிற்செங்
தேணாகம் பூண்டவர் புன்னகை யாலுஞ் சிதைக்கருமென்
னாணா கியவாண் சற்றுச்சற் றாக நலிந்துமுற்றுங்
காணமற் போனதிந் நின்றவர் காமக் கணைப்படைக்கே. (16)

(கு-ரை) தேணாகம்-தேனும்பாம்பும். தேன்-தாருகாவனத்து இருடிகளால் விடுத்த தேனென்பது கந்தபுராணமுதலிய புராணத்திற்காணலாம். சிதைக்கரும்-கெடுத்தற்கரிய. நாண்-வெட்கம். அரண்-கோட்டை. நலிந்து-கெட்டு. படைக்கு-ஆயுதத்தால். (உருபுமயக்கம்)

## வறிதுநகை தோற்றல்.

(இ-ள்.) தலைவி முகத்திற் சிறுநகை தோன்றல்; சிறுநகை-புன்சிரிப்பு.

பொற்போது போலுங் கழற்கும ரேசன்மெய்ப் பூதரத்தென்
முற்போது மெல்லிய பூங்கொடி வாயுள்வெண் மூரல்முகிழ்
தற்போது காட்டு மதுவறி தேனுமென் றன்னையிங்கு
நிற்போது மன்பென இன்னுயிர் தன்னையு நிற்பித்ததே. (17)

(கு-ரை.) பொற்போது - பொன்மலர். மெய்ப்பூதரம் - பரங்கிரி. முற்போதும்-முன்னேவரும். மூரல்முகிழ்-பல்லாகிய (முல்லை) அரும்பு. தற்போது-தற்காலம். வறிது-சிறிது. நிற்போதும் - நிற்றலைச்சொல்லும், இதுவுமில்லாவிடில் இங்கே இல்லேனென்பது குறிப்பு.

## முறுவற் குறிப்புணர்தல்.

(இ-ள்.) தலைவி சிறுநகையின் குறிப்பைத் தலைவன் ஆராய்ந்தறிதல்.

தேறுமன் பர்க்குப் பரங்கிரி வேலன் றிருவருள்வந்
தூறுதல் போலென் னுயிர்ப்பயி ரோங்க வொளியிழைநன்
கேறு முகமதி யிற்றோன் றமுத மெனுமுறுவல்
வீறு பெறப்பிர காசித் தெழுந்து விளங்கியதே. (18)

(கு-ரை.) நன்கு-அழகு. முறுவல்-புன்சிரிப்பு. வீறு-பெருமை.

## முயங்குத லுறுத்தல்.

(இ-ள்.) தலைவி புணர்ச்சிக்கு உடன்பட்ட அருமையை வற்புறுத்திக் கூறுதல்.

நினையாமல் வந்தொன்று நேர்நிற்கு மென்று நிகழ்த்துதற்கிப்
புனையா யிழையை யிலக்கிய மாவென்கண் பூணக்கண்டேன்
சுனையாவு மேயிவள் கைபோலுங் காந்தள் சொரிசெழுந்தேன்
றினையார நல்கு முருகன் பரங்கிரித் தேத்தினிலே (19)

(கு-ரை.) தினையார-தினைப்புனம்நிறைய. தேத்தினில்-இடத்தில்.

## புணர்ச்சியின் மகிழ்தல்.

(இ-ள்) தலைவன் தலைவியைக் கலத்தலால் மகிழ்தல்.

முருக்கலர் போல்மண மில்லே னிவளை முயங்கியபின்
மருக்கமழ் முல்லை மலரா யின்புற்று மகிழ்ந்தனனால்
தருக்க மெவற்றினுந் தானே பரமெனத் தங்குருகன்
இருக்கநன் மாதவ முன்செய் பரங்கிரி யின்பொழிற்கே. (20)

(கு-ரை.) தருக்கம்-தருக்கசாத்திரம். இன்பொழிற்கு-இனியசோலையினிடத்து.

## புகழ்தல்.

(இ-ள்) தலைவியினது நலத்தைத் தலைவன் வியந்துபாராட்டல்.

மதிதொறு மேனி வளர்ந்துநின் னெற்றிக்கும் வாண்முகத்தி
னுதியெழி லுக்குமொவ் வாமையி னால்வெளுத் துட்கறுத்துக்
கதிர்மதி நந்தங்கந் தன்றன் பரங்கிரிக் கண்மயிலே
புதிது புதிதுடல் கொண்டே யலைந்தது புட்கரத்தே. (21)

(கு-ரை.) புட்கரத்து-ஆகாயத்தினிடத்து.

இப்பதினைந்து துறைகளுள் இரந்து பின்னிற்றற்கெண்ணல் முதல் நீடுநினைந்திரங்கலீறாகிய ஒன்பதினுள் வழிபாடு மறுத்தலொழிந்த எட்டும் வேட்கையுணர்த்தற்கும் வழிபாடு மறுத்தலொன்றும் மறுத்தற்கும் மறுத்தெதிர் கோடலும் வறிதுநகை தோற்றலுமாகிய விரண்டும் உடன்படற்கும் ஏனைய நான்கும் கூட்டத்திற்கும் உரியன.

2-இயற்கைப்புணர்ச்சி முற்றிற்று.

---

## மூன்றாவது—வன்புறை.

அஃதாவது தலைவி ஐயுற்ற இடத்து ஐயந்தீரத் தலைவன் வற்புறுத்திக் கூறுதல். அது-ஐயந்தீர்தல், பிரிவறிவுறுத்தலென இருவகைப்படும். அவை-அணிந்துழி நாணிய துணர்ந்து தெளிவித்தல் முதல் இடமணித் தென்றலீறாகிய ஆறுவிரிகளையுடையன. அவைவருமாறு:—

## அணிந்துழி நாணியதுணர்ந்து தெளிவித்தல்.

(இ-ள்) புணர்ச்சியிடத்துத் தலைவி புனைந்த முத்தாரமுதலிய குழலணிகள் வேறுபட்டவற்றைத் தலைவன் தன் கையினால் அவ் வேறுபாடுதீரப் புனைந்துழித் தலைவி பாங்கியாலணியப்பட்ட அணிக்கு இவர்கையால் அணியும் அணி வேறுபடுமென்றும் அதைப் பாங்கிகண்டால் ஐயம் உண்டாகுமென்றும் வெட்கமுற்றாளாக, அதைத்தலைவனறிந்து தலைவியைத் தெளிவித்தல்.

மன்னும் பதங்கண் டியற்கைப் புணர்ச்சி வகையறிந்தேன்
மின்னுமைம் பாலணி கற்றேனென் மாட்டைய மேவற்கநீ
பன்னுமென் பாடலு மேற்கு முருகன் பரங்கிரிவாய்ப்
பொன்னு மிரதியு மோருருக் கொண்டன்ன பூங்கொடியே. (22)

(கு-ரை) பதம்-சொல், சமயம். இயற்கைப்புணர்ச்சி-இயல்பாக எழுத்துக்கனொன்றோடொன்று சேர்தல், தெய்வத்தாலாவது தலைவியாலாவது கூடுதல். ஐம்பால்-ஆண்பால் பெண்பால் பலர்பால் ஒன்றன்பால் பலவின்பால், கூந்தல். அணி-அணியிலக்கணம், அணிதல். எனச் சிலேடைப்பொருள் கண்டுகொள்க. பொன்-இலக்குமி.

## பெருநயப் புரைத்தல்.

(இ-ள்.) இனி, தலைவன் வருவானோ வாரானோ வென்று தலைவி முகம் வேறுபட, அதைத் தலைவன் குறிப்பாலறிந்து தனது மிகுந்த காதலைக் கூறுதல்.

பொற்கவின் காட்டுங் கொடியொன்று தாமரை பூத்தலர்ந்து
நிற்க அஃதெண் மலரோடு காவி நிறைதளவ
நற்கவி ரின்மலர் பூத்ததுண் டாயி னயந்துரையீர்
எற்கனி காளயில் வேலோன் பரங்குன் றிரும்பொழிற்கே. (23)

(கு-ரை.) கொடி-பெண். தாமரை-முகம். எண்மலர்-எள்ளின்பூ, நாசி. காவி-நீலோற்பலம், கண். தளவம்-முல்லையரும்பு, பல். கவிர் - முருக்கம்பூ, இதழ். எனச் சிலேடைப்பொருள் கண்டுகொள்க.

## தெய்வத்திறம் பேசல்.

(இ-ள்.) மேற்கூறியதைத் தலைவி தெளியாளாக, தலைவன் அவளது வழிபாட்டின் திறத்தைக் கூறுதல்.

தேசத்தி லேனுங் குலத்தினி லேனுஞ் சிறிதுமொவ்வா
நேசத்தி ஞளையென் னேர்காட்டிக் கூட்டிய நீர்மைமிக்க
மாசற்ற தெய்வத் திறத்தினை யென்னென்று வாழ்த்துவனென்
பாசத் திறனறப் பாற்றிய வேலன் பரங்கிரிக்கே. (24)

(கு-ரை.) தெய்வத்திறம்-ஊழின் வலி. பாசம்-ஆணவமலம். பாற்றிய-கெடுத்த. பரங்கிரிக்கு-பரங்கிரியினிடத்து.

பிரியே னென்றல்.

(இ-ள்.) தலைவன் பிரிவானென்னுங் கவற்சியால் தலைவியின் உடல் விளர்ப்பக்கண்ட தலைவன் உன்னைவிட்டுப் பிரியமாட்டேனென்று கூறுதல்.

விண்மணி தண்மணி போலக் குளிரினு மேவுமொளிக்
கண்மணி நீப்பினுங் கற்ற கலைய கலினுமரி
யுண்ம ணியம்பு துதிரும் குமரன்மெய் யோங்கலன்ன
பெண்மணி யேநிற் பிரியன் பிரியனென் பேச்சுமெய்யே. (25)

(கு-ரை.) விண்மணி-சூரியன். தண்மணி-குளிர்ந்த முத்து. நீப்பினும்-நீங்கினும். அரி-விஷ்ணு உண்மண்-உண்ணப்பட்ட மண்ணுலகம். மெய் யோங்கல்-பரங்கிரி. பிரியன்-பிரியமாட்டேன். பிரியன்-அன்புடையயான்.

இதுவுமது.

மாரன்றன் றேர்வழிச் சூரியன் றேர்சென்று வந்திடினுஞ்
சூரன் பதுமன்முன் போலோ ருடலினிற் றுன்றிடினுங்
காரன் றெனுங்குழ லாய்நங் குமரன்மெய்க் கல்லினுபர்
போரன் பொருவி யுனையொரு ஞான்றும் பிரிகிலனே. (26)

(கு-ரை.) தேர்வழி-தென்றற்றேர்வழியாகிய வடதிசை. கார்-மேகம். அன்று-அல்ல. மெய்க்கல்-பரங்கிரி. ஒருவி-நீங்கி.

பிரிந்து வருகென்றல்.

(இ-ள்.) பிரியேனென்றது கேட்டு மகிழ்ந்த தலைவிக்குத் தலைவன் பின் பிரிந்து வருவேனென்று கூறுதல்.

மணியொளி மாசின் மறையினு மீண்டு வயங்குதல்போற்
பணியுமென் போலிய ரெண்ணரு காலம் பயில்பிறவிப்
பிணியற நீக்கும் பரங்கிரிக் கந்தன் பிறங்கருள்போல்
அணியொளிர் நிற்பிரிந் தாற்றுவ னேவந் தணுகுவனே. (27)

(கு-ரை.) மாசின்-தூசியில். அணியொளிர்-அழகுவிளங்காநின்ற.

### இடமணித் தென்றல்.

(இ-ள்.) தலைவனூர் தூரத்திலுள்ளதோ சமீபத்திலுள்ளதோவென்று தலைவிவருந்திய அதனைக் குறிப்பாலறிந்த தலைவன் ஊரிருக்குமிடமிகச் சமீபமென்று கூறுதல்.

ஆணன்று பெண்ணன் றலியன்றென் சேய்மெய் யசலமன்றாய்
கேணன்றுன் னூர்வண்டர் பாடுங் குறிஞ்சியைக் கேட்டகினி
யூணன் றருமலென் னூ நுள் மகிழ்ந்திடு முவ்வளவே
சேணன்று மெய்யிது யாரை வினவினுஞ் செப்புவரே. (28)

(கு-ரை.) என்சேய்-என்றுசொல்லப்பட்டகுமாரக்கடவுள். கேள்-கேட்பாய். நன்று-நன்மையுடைய. குறிஞ்சி-ஓர்பண். ஊண்-உணவு. உவ்வளவு-இவ்வளவு. சேண்-தூரம். அன்று-அல்ல.

3-வன்புறை முற்றிற்று.

---

## நான்காவது—தெளிவு.

அஃதாவது தலைவன்கூறிய சொல்லைத் தலைவி மெய்யெனத் தெளிந்து தன்னை ஆற்றுவது. இதற்கு வகையும் விரியுமில்லை.

விண்ணைவிட் டுத்தனி யாகாது காலொளி மேவியகற்
கண்ணைவிட் டுத்தன் மணிபிரி யாது கருதுமிசை
பண்ணைவிட் டுப்புறம் போகாது கந்தன் பரங்கிரித்தன்
பெண்ணைவிட் டுப்பிரிந் தங்கே யிரானம் பெருந்தகையே. (29)

(கு-ரை) கால்-காற்று. இசை-இராகம். பண்-பாட்டு.

4-தெளிவு முற்றிற்று.

---

## ஐந்தாவது—பிரிவுழிமகிழ்ச்சி.

அஃதாவது பிரிந்துபோகுமிடத்துப் போகின்ற தலைவி தன்மையைக் கண்டு தலைவன் மகிழ்தல். இது, வகையின்றிச் செல்லுங்கிழத்தி செலவு கண்டுளத்தொடு சொல்லலும் பாகனொடு சொல்லலுமாகிய இரண்டு விரிகளையுடையது, அவை வருமாறு:—

### செல்லுங்கிழத்தி செலவுகண்டுளத்தோடு சொல்லல்.

(இ-ள்.) புணர்ச்சிக் குறியிடத்தினின்றும் பெயர்ந்து செல்லாநின்ற தலைவியினது செலவைக்கண்டு தலைவன் தன்னெஞ்சொடு சொல்லுதல்,

பாகங் கலந்த மொழிவள்ளி கொண்கன் பரங்கிரிவாய்
மேகங் கவியு மிருகுன்றந் தாங்கியோர் மின்னல்கடந்
தேகந்தம் போற்குழல் சோர விருதன மேந்தியென
தாகங் கலந்த வுயிர்செல் லுதலை யறிநெஞ்சே. (30)

(கு-ரை.) கொண்கன்-நாயகன். ஏகு-செல்லாநின்ற. அந்தம்-அழகு. மேகம் கூந்தலுக்கும், குன்றம் தனங்களுக்கும் மின்னல் பெண்ணுக்கும் உவமானமாதலைக்கண்டுகொள்க.

பாகனொடு சொல்லல்.

(இ-ள்.) தலைவன் தன்னைத் தேடிவந்த தேர்ச்சாரதியிடத்தில் தலைவி செல்லுதலைக்காட்டிக் கூறுதல்.

பாழ்த்த பிறவி யறுக்குஞ்செவ் வேலன் பரிங்கிரிக்கா
ஆழ்த்த மலர்நெறி முன்பார்த் தொதுங்கி யுறுதுணையாய்
வாழ்த்த வருமென் மனத்தைப்பின் பார்த்துநல் வல்லவா
தாழ்த்த லுறநடக் கின்றது பாரொரு தையன்மின்னே. (31)

(கு-ரை.) பாழ்த்த-வீணாகிய. ஊழ்த்த-உதிர்த்த. வலவா-சாரதியே.

5-பிரிவுழிமகிழ்ச்சி முற்றிற்று.

---

## ஆறாவது—பிரிவுழிக் கலங்கல்.

அஃதாவது தலைவிபிரிந்த இடத்துத் தலைவன் வருந்துதல். அது, மருளுற்றுரைத்தல் தெருளுற்றுரைத்தலென இருவகைப்படும். அவை-ஆயவெள்ளம் வழிபடக்கண்டிது மாயமோவென்றல் முதல் கண்படைபெறாது கங்குல் நோதலீறாகிய ஐந்து விரிகளையுடையன. அவை வருமாறு:—

ஆயவெள்ளம் வழிபடக்கண்டிது மாயமோவென்றல்.

(இ-ள்.) தலைவியைப்பிரிந்த மாதர் கூட்டம் வந்து வழிபடுதலைக்கண்டு இம்மாதர் கூட்டத்துள்ளாள் தனித்து வந்தென்னைக்கூடியது என்னமாயமோவென்று தலைவன் மயங்கிக் கூறுதல்.

இழந்தகண் பெற்றென நல்லார் பலரைய மேகவந்த
பழந்தமிழ் கண்டென ஆயங்கண் டேத்தும் படியுள்புக்க
குழந்தை மயிலெனைக் கூடிக் குகன்பரங் குன்றின்மன
முழந்துய ரச்செய் தகன்றபொய்ம் மாய முறைப்பரிதே. (32)

(கு-ரை) நல்லார்-நல்லவர், பெண்கள். ஆயம்-மாதர்கூட்டம். உழந்து அயர-வருந்திச்சோர.

## வாயில் பெற்றுய்தல்.

(இ-ள்.) தலைவி உயிர்ப்பாங்கி முகத்தை நோக்கிச் சொல்லுதலைப் பார்த்துத் தலைவன் அப் பாங்கியைத் தூதாகப்பெற்று உய்வதாகக் கூறுதல். பாங்கி-பக்கத்திலிருக்கும் உயிர்த்துணைவி.

கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கில வாயிற் கரைதலெற்றுக்
கெண்ணிடி லென்றற் கிலகிய மீதெ ாவென் னுயிராம்
பெண்ணிணை நோக்குமற் றோர்பெண் ணி னோகொடு பேசியதால்
மண்ணினில் மெய்க்கிரிச் சேயருள் போலவள் வாழ்விப்பளே. (33)

(கு-ரை) கரைதல்-பேசுதல். எற்றுக்கு-எதற்கு. நோக்கு-கண். மெய்க்கிரி-பரங்கிரி.

## பண்பு பாராட்டல்.

(இ-ள்.) தலைவியினதழகைத் தலைவன் வியந்து கொண்டாடுதல். பண்பு இவ்விடத்து அழகின்மேல் நின்றது.

வாயில்பெற் றுய்யும் வழிகாட் டியமட மங்கைசெவ்வாய்ப்
பாயிர சத்தெகள் ளமுதிற்கந் நாட்கடை பட்டதனுல்
மீயியல் விண்ணவ ருண்ணமு தொப்பென விள்ளுகிலேன்
மாயிரு ஞாலம் பணிசேய் பரங்கிரி வாயினியே. (34)

(கு-ரை.) வாயில-தூது. வாய்ப்பாய்-வாயில்நின்றுவரும். கடைபட்டதனுல்-கடையப்பட்டதனுல். மீ-மேலாக. மாயிரு-மிகப்பெரிய. வாய்-இடத்து.

## பயந்தோர்ப் பழிச்சல்.

(இ-ள்.) தலைவியைப் பெற்றோரைத் தலைவன் வாழ்த்துதல்.

ஆயபல் காலங் கொடுத்துத் திரட்டும் அறங்களைத்தான்
மாய வருபொழு தோர்மறை யோற்கருள் வள்ளலைப்போல்
ஏய தவப்பய னுப்பெற்ற விப்பொன்னை யெற்களித்தார்
சேய மரும்பரங் குன்றென நீடு சிறந் துய்கவே. (35)

(கு-ரை.) மறையோற்கு - பிராமணவடிவங்கொண்டுவந்த கண்ணபிரானுக்கு. வள்ளல்-கன்னன். பொன்னை-இலக்குமிபோலும் பெண்ணை. சேய்-முருகக்கடவுள்.

### கண்படைபெறாது கங்குல் நோதல்.

(இ-ள்.) தலைவிகொடுத்த ஆசையால் அன்றிரவிலே நித்திரை பெறாது இருட்காலத்தைத் தலைவன் நொந்துகொள்ளுதல்.

மழலைக் கிளிமொழி வள்ளிக்கன் பார்மெய் வரையனையாள்
குழலைப் பொரமுடி யாதறத் தோற்றக குழலைக்கொண்டாள்
கழலைப் பணியுமென் கண்டுயிலாமற் கறுத்திருள்வந்
தழலைச்செய் திட்ட ததற்கென்னை யான்குறை யாற்றியதே. (36)

(கு-ரை.) மெய்வரை-பரங்கிரி. கறுத்து-கருநிறங்கொண்டு, கோபித்து. அழலை-காமாக்கினியை, அழுதலை. ஆற்றியது-செய்தது. தோற்று என்பது செய்திட்டதென்பதனோடுமுடியும்.

இவற்றுள் முன்னைய தொன்று மருளுற்றுரைத்தற்கும் பின்னைய நான் குந் தெருளுற்றுரைத்தற்கு முரியன.

6-பிரிவுழிக்கலங்கல் முற்றிற்று.

காட்சிமுதல் கண்படைபெறாது கங்குல் நோதல் முதலிய முப்பத்து மூன்று துறைகளும் முதல் நாள் நிகழ்ச்சி யென்க.

---

## ஏழாவது— இடந்தலைப்பாடு.

அஃதாவது—இயற்கைப்புணர்ச்சியிற் கலந்த தலைவன் மறுநாளவ்விடத்தில் வந்து தலைவியைக் கூடுதல். அது, தெய்வந்தெளிதல், கூடல், விடுத்தலென மூன்றுவகைப்படும். அம்மூன்றுந் தந்த தெய்வந்தருமெனச் சேறல் முதல் ஆயத்துய்த்தலீறாகிய ஐந்து விரிகளையுடையன. அவை வருமாறு:—

### தந்ததெய்வந் தருமெனச்சேறல்.

(இ-ள்.) முன்கூட்டிய விதி பினனுமவ்விடத்திற் சென்றால் தலைவியைக் கூட்டுமெனத் தலைவன் சேறல்.

தந்தார் தருவர் தாரோ தாரர்புயந் தாங்குகடப்
பந்தார் முருகன் பரங்கிரிச் சாரற் பசும்பொழில்வா
யிந்தார் நுதலியை முன்றந்த தெய்வ மினியுமங்கு
வந்தார்வ மோடு தருஞ்செல்வம் யாம்வரு வாய்மனனே. (37)

(கு-ரை.) சாரல்-மலைப்பக்கம். ஆர்வம்-அன்பு. செல்வம்-போவோம்.

முந்துறக் காண்டல்.

(இ-ள்.) முன்போலத் தலைவியைத் தலைவன் காணுதல்.

மாறன் குடைகொடி யானை குதிரைவில் வார்முரசு
சீரம் புகள்தனித் தேயும் பலவொன்று சேர்ந்தும்வெவ் வே
றோரங்க மாகி யிறைகொளும் பூங்கொம் பெதிர்நின்றது
பாரன் புறுபரங் குன்றூர் திருவருட் பாங்கிதுவே. (38)

(கு-ரை.) குடை-சந்திரன், முகம். கொடி-மீன், கண். யானை-இருள், கூந்தல். குதிரை-கிளி, சொல். வில்-கரும்பு, சொல். முரசு-கடல், கண். அம்புகள்-காவி தாமரை முல்லை. கண். பல்-பலவொன்றுசேர்தலாவது. கொடி முரசு அம்புகள் ஒன்றுசேர்தலும், குதிரை வில் ஒன்றுசேர்தலும் எனக்கண்டு கொள்க. அங்கம்-அவயவம். இறைகொளும்-தங்கும்.

முயங்கல்.

(இ-ள்) தலைவியைத் தலைவன் புணர்தல்.

பல்குற் றமுந்தவிர் பாற்கட லாடப் படினுமன்பர்
தொல்குற்ற மாகிய வாணவ மாயைத் தொடக்கறுத்துப்
புல்குற்ற கந்தன் பரங்கிரிச் சாரலிற் போந்தவிவள்
அல்குற் றடத்தி லமிழ்ந்தா டியவின்ப மாவதின்றே. (39)

(கு-ரை.) தொல்-பழைய. தொடக்கு-சம்பந்தம். புல்குற்ற-பொருந்திய. போந்த-வந்த. ஆவது-ஒப்பது. இன்று-இல்லை.

புகழ்தல்.

(இ-ள்.) புணர்ந்த மகிழ்ச்சியால் தலைவன் தலைவியைப் புகழ்ந்து கூறுதல்.

குறையும் பொழுதிவள் நெற்றியொவ் வாய்மெய் குளிர்மதியே
நிறையும் பொழுது முகநிக ராயிது நிச்சயமென்
றிறையுந் தெரிந்திலே யோமதி தோறு மிவைபுரிவாய்
மறைமுந் துறுகுகன் வாழ்மெய் வரைதொடும் வானிடத்தே. (40)

(கு-ரை.) இறையும்-சிறிதும், மதி-மாதம். முந்துறு-முற்படுகின்ற. மெய் வரை-பரங்கிரி.

ஆயத்துய்த்தல்.

(இ-ள்.) தலைவன் தலைவியை மகளிர் கூட்டத்துள் விடுத்தல்.

ஏரா மாதர் சுடுச்சசி போல இலங்கு தற்கென்
ஞாமு தேசம் பாங்கிரிப் பாங்கர்நின் ஞயத்தினுட்
சீரமை யன்புறச் செல்வாயென் னுள்ளுறை சேந்தனுயர்
பேரரு ளாலினிச் சற்றே கரந்து பெயர்குவனே. (41)

(கு-ரை) ஏர்-அழகுடைய. சசி-இந்திராணி. பாங்கர்-பக்கம். ஆயம்-மாதர் கூட்டம். சேந்தன்-முருகக்கடவுள். கரந்து-மறைந்து. பெயர்குவன்-திரும்பி வருவேன்.

இவற்றுள் தந்ததெய்வந் தருமெனச் சேறலொன்றுந் தெய்வந் தெளி தற்கும் காண்டல் முயங்கல் புகழ்தலாகிய மூன்றுங்கூடற்கும் ஆயத்துய்த்த லொன்றும் விடுத்தற்கு முரியன. தெய்வந்தெளிதல்-தெய்வத்தாற் றெளிதல்.

7-இடந்தலைப்பாடு முற்றிற்று.

இதுவரை இரண்டாநாள் நிகழ்ச்சி.

---

## எட்டாவது—பாங்கற்கூட்டம்.

அஃதாவது மூன்றாநாள் தோழனோடு தலைவன் கூடுங்கூட்டம். அது சார்தல் கேட்டல் சாற்றல் எதிர்மறை நேர்தல் கூடல் பாங்கிற் கூட்டலென எழு வகைப்படும். அவ்வேழும் தலைவன் பாங்கனைச் சார்தல் முதல் பாங்கிற் கூட்டலீறாகிய இருபத்துநான்கு விரிகளையுடையன. அவை வருமாறு:—

### தலைவன் பாங்கனைச் சார்தல்.

(இ-ள்) தலைவன் தலைவியால் வந்த ஆசைநோய் தோழனாலன்றித் தீராதென்றெண்ணி அவனைச் சாருதல்.

மனக்குறை நீக்கி யருளுங் குகன்மெய் வரையிலென்றும்
எனக்குறு துன்ப மெவையா யினுமவை யெண்மடங்கு
தனக்குவந் துற்றன வென்றெண்ணித் தீர்த்திடத் தக்கநண்பன்
இனக்குமுன் னேயவன் பாற்போந் திடிலொரு தீங்குமின்றே. (42)

(கு-ரை.) நண்பன்-தோழன். போந்திடில்-போனால்.

### பாங்கன் தலைவனை உற்றது வினாதல்.

(இ-ள்) பாங்கன் தலைவனது மனமும் புயமும் வாடிய வேறுபாடுகண்டு இவ் வேறுபாடு வந்ததற்குக் காரணம் என்னவென்று கேட்டல்.

பொன்னூர் வரையைப் பொருந்திண் ணியநின் புயங்களிள
மின்னூர் புயமென மெல்லிய வாகி மெலிந்துவாற்
கென்னாய் காரண மேந்தால் பரங்கிரி யெய்தயில்வேள்
ஒன்னாருள் நீயு மொருவனன் றேமற் றுரையெனக்கே. (43)

(கு-ரை.) பொரும்-மோதும், திண்ணிய-வலியுள்ள. ஏந்தால்-தலைவனே. ஒன்னார்-பகைவர். மற்று-அசை.

## தலைவனுற்ற துரைத்தல்.

(இ-ள்.) அவ்விதங் கேட்ட பாங்கனுக்குத் தலைவன் தனக்குற்ற வேறு பாட்டின் காரணத்தைக் கூறுதல்.

இத்தனை நாளுஞ்செய் வேட்டத்தில் மாண்டன வெத்தனையோ
மத்த கயங்கள் பரங்கிரி வாயொரு மாதர்கொண்ட
உத்தம வாரணக் கொம்பிரண் டால்நென்ன லுள்ளுடைந்து
புத்தமு தாங்குக னின்னரு ளாலிங்குப் போந்தனனே. (44)

(கு-ரை.) வேட்டம்-வேட்டை. மத்தகயம்-மதத்தையுடைய யானை. மாதர்-பெண். மாதரென்பதில் ஆர்சாரியை. "ஆயமாதர் பேர்பொன்னனையா ளெனப" என்றார் பிறரும். கொம்பு-தனம். (உவமையாகு பெயர்) நென்னல். நேற்று. போந்தனன்-வந்தேன்.

## கற்றறி பாங்கன்கழறல்.

(இ-ள்.) வேதாகமங்கள் யாவுங் கற்றுணர்ந்த பார்ப்பனப் பாங்கன் தலைவனை யிடித்துக்கூறல். இடித்துககூறல்-உறுதிச்சொற் சொல்லுதல்.

நன்னீர தாமின்ப மெய்துதற் கேற்றநின் ஞானமெலாங்
கொன்னீர தாகிய காமத் தழலுக்குட் கொட்டிவிட்டாய்
பன்னீர் வளங்கொள் பரங்கிரிக் கந்தன் பதத்தில்விடும்
இன்னீ ரமுதங் கமர்புகுத் திட்டதொப் பிச்செயலே. (45)

(கு-ரை.) நன்னீர்-நல்லகுணம். கொன்னீர்-கொல்லுங்குணம். இன்-இனிய. நீர்-குணமுடைய. கமர்-வெடிப்புநிலம்.

## கிழவோன் கழற்றெதிர் மறுத்தல்.

(இ-ள்.) பாங்கன்கூறிய உறுதிமொழியைத் தலைவன் மறுத்தல்.

உண்டா லினிக்கும் ரசபுஞ்ச மாம்பொரு ளொப்பகற்றும்
வண்டார் குழலி யமுத கடமுங்கொவ், வைக்கனியுந்
தொண்டார் செயினு மருள்குகன் மெய்க்கிரிச் சூழலிடைக்
கண்டாலுன் போலேந் தவித்தாருங் கூறக் கருதிலரே. (46)

(கு-ரை.) புஞ்சம்-கூட்டம். கடம்-குடம்போன்றகொங்கை. கனி-பழம்போன்றஇதழ். தொண்டு-அடிமை. யார்-எவர். சூழல்-இடம். ஐந்தவித்தார்-முற்றத்துறந்தமுனிவர்.

## கிழவோற் பழித்தல்.

(இ-ள்.) அவ்விதங்கூறிய தலைவனைப் பாங்கன் நிந்தித்துக்கூறுதல்.

புலியைவெல் வீர னெனும்புக ழாயப் புலிக்கிடையும்
வலியில் கரிநிக ரோர்மான்மென் கொம்புநின் மார்பிற்பொர
நலியுந் திறத்தினை யாயினை நின்செயல் நன்றுநன்றி
தொலிபுனல் சூழ்பாங் குன்றெம் பிரான்விதி யூட்டியதே. (47)

(கு-ரை.) இடையும்-வருந்தும். மான்-பெண். கொம்பு-தனம். நலியும்-வருந்தும். ஊட்டியது-அநுபவிக்கச்செய்தது.

## கிழவோன் வேட்கை தாங்கற்கருமை சாற்றல்.

(இ-ள்) தலைவன் பாங்கனை நோக்கி நீ பழிக்கின்ற என்னுள்ளந் தேறுதற்கு வேட்கை (ஆசை) என்னுற் றாங்கமுடியாதென்று கூறுதல்.

புலனற வென்றவர் காணும் பரங்கிரிப் பூங்குறிஞ்சி
நிலனுறை தெய்வமுங் காமப் பெருங்கடல் நீந்தவொல்லா
தலமர லுற்றோர் கொடிச்சியின் பத்துக் கலந்ததென்றால்
உலனிகர் தோள்நண்ப யானே வதைக்கடந் துய்குவனே. (48)

(கு-ரை) வென்றவர்-மகாஞானிகள். தெய்வம்-குமாரக்கடவுள். ஒல்லாது-கூடாது. அலமரல்-சுழற்சி. கொடிச்சி-வள்ளிநாயகி. உலன்-திரண்டகல். (போலி)

## பாங்கன் றன்மனத்தழுங்கல்.

(இ-ள்) அதுகேட்ட பாங்கன் எம்பெருமான் காமத்தைப் பொறுதவனு யிவ்வாறு கூறினால் அதற்கு நானென்செய்வேனென்று தன்னுள்ளே வருந்துதல்.

கொங்கை யமுத குடமெனுங் கொவ்வைக் கொழுங்கனியே
மங்கை யிதழெனும் வாய்மொழி தேனெனு மற்றவள்தன்
செங்கை தொடிலது தித்திக்கும் பாகெனுஞ் சேந்தன்மெய்வெற்
பங்கை மலரண்ணல் மெலினி யான்சொல்லி யாவதென்னே. (49)

(கு-ரை.) எனும்-என்றுசொல்லுவன். சேர்தன்-முருகக்கடவுள். மெய் வெற்பு-பரங்கிரியிடத்து.

## தலைவனேடழுங்கல்.

(இ-ள்) இவ்விதம் வருந்திய பாங்கன் பின்னுஞ் சகியாதவனுய்த் தலைவனேடு வருந்துதல்.

இடித்துரை கூறிற் குகன்பரங் குன்றிறை யேயரவங்
கடித்தது போலக் கடுக்கின் றனையுன் கருத்தையினி
முடித்து விடாவிடில் மோகக் கடலுக்குள் மூழ்குவையால்
படித்துணர் நின்னறி வென்னு மிதூஉம் பழவினையே. (50)

(கு-ரை.) இடித்து-வற்புறுத்தி. கடுக்கின்றனை-கோபிக்கின்றாய்.

## எவ்விடத் தெவ்வியற்றென்றல்.

(இ-ள்) பாங்கனிவ்வாறு கூறியும் தலைவன் வருந்துதலைக்கண்டு இவன் கண்ட பெண்ணைக் கூடாதொழிந்தால் இறந்துபடுவனென்று தெரிந்து தலைவனைநோக்கி நின்னுற் காணப்பட்ட (உரு) எவ்விடத்து எந்த இயலையுடைய தென்று வினவுதல்.

உடையாத நின்னெஞ் சுடைக்கும் படைக்கண் ணுடையவட்கு
நடையா வதுமயி லோவன மோசொற்கள் நற்குயிலோ
இடையாது முள்ளது வோவில்ல தோஇருப் பெவ்விடமோ
அடையாள மாக வுரைசெய் பரங்குன் றமரரசே. (51)

(கு-ரை.) படை-ஆயுதம். யாதும்-சிறிதும். என்-என்றுசொல்கின்ற. அற்றேல்-அப்படியானல்.

## அவனஃதிவ்விடத் திவ்வியற்றென்றல்.

(இ-ள்) தலைவன் என்னுற் காணப்பட்ட உரு இந்த இடத்து இந்த இயலையுடையதென்று கூறுதல்.

கடலே யதனுட் கடுவே நிகர்கண்கள் கண்டவரை
யுடனே மயக்குந் தனமுமமற் றேயதற் குள்ளழியாத்
திடனே பெறீஇ நிற்றி யென்னையிக ழோலஞ்செய் சிற்றிடையாள்
இடனே தெனிலெம் முருகன் பரங்குன் றிரும்பொழிலே. (52)

(கு-ரை.) பெறீஇ-பெற்று. நிற்றி-நிற்பாய்.

## பாங்கன் இறைவனைத் தேற்றல்.

(இ-ள்) இவ்வாறு வருந்தாதிருப்பாய். நீ சொன்ன குறியிடத்துச் சென்று தலைவியைக்கண்டு யான் வருகிறேனென்று தலைவனைப் பாங்கன் தேற்றுதல்.

நினைப்போ லியர்நெஞ் சினைப்பிணி செய்திடு நேரிழைபோ
லனைப்போ லியர்நெஞ் சினையாக்க வல்ல ளியலிடங்கள்
தினைப்போ தினிற்கண்டு செய்வன செய்து திரும்புவன்சூர்
முனைப்போர்செய் வேல னருளாற் பரங்கிரி முன்புறத்தே. (53)

(கு-ரை.) பிணிசெய்திடும்-கட்டுப்படுத்தும். யாக்க-கட்ட. சூர்-சூரன், சேய்-குமாரக்கடவுள்.

## குறிவழிச் சேறல்.

(இ-ள்) தலைவன் கூறிய குறியிடத்துத் தலைவியைக்காணப் பாங்கன் தேடிப்போதல்.

ஆரோடு சொல்வதெம் மண்ணலுண் ணேவை யறவர்பொருட்
டோரோடு கொண்டுசென் றேன்சேய் பரங்குன்றி னொண்பரிதி
தேரோ டுதலைத் தடுக்கும் பொழிலிடைச் செப்புகுறி
சேரோடு காற்றெனச் செல்வேனப் பூங்கொடி நின்றிடத்தே. (54)

(கு-ரை.) அறவர்-தாருகாவனத்து இருடிகள். பொருட்டு-(சீர்திருத்தும்) நிமித்தமாக. குறி-அடையாளம்.

## இறைவியைக் காண்டல்.

(இ-ள்) அங்ஙனந் தேடிச்சென்ற பாங்கன் தலைவியைக் காணுதல்.

வேதா தியகலை தேருங் குகன்பர வெற்பனையாள்
பாதாதி கேச வியலிடம் யாவையும் பார்த்தறிந்தேன்
மாதா தியையிம் மலர்க்குழ லாள்மயல் மற்றவனைக்
காதா தியல விடுத்ததென் னோவது கண்டிலனே. (55)

(கு-ரை.) இயல்-தன்மை. யாவையும்-எல்லாம். மா-வண்டு. தாது-பூந் தாது. காதாது-மோதாமல். இயல-செல்ல. அது-அதனை.

## இகழ்ந்ததற் கிரங்கல்.

(இ-ள்) தலைவி பேரழகைக்கண்ட பாங்கன் காணு முன்னம் எம்பெருமானை யறிவில்லாம லிகழ்ந்தனனென்றிரங்கிக் கூறுதல்.

மைவா ரளகமும் வான்பிறை நெற்றியும் வாண்முகமும்
பெய்வார் கிழித்தெழு கொங்கையும் பெற்றவிப் பெண்ணெதிர்ந்தால்
கைவா ளெவருயி ரோராமல் நண்பனை நாமிகழ்ந்தோங்
கொய்வா ரிணர்மலர் சாலுங் குகன்பரங் குன்றிடத்தே. (56)

(கு-ரை.) பெய்-அணியப்பட்ட. (தாற்பரியம்) இணர்-பூங்கொத்து. சாலும்-மிகும்.

## தலைவனை வியத்தல்.

(இ-ள்) தலைவி கண்வலையிற்சிக்கி அத்தலைடையோடுந் தலைவன் நம்மிடத்து வந்தது வியப்பென்று தலைவனைப் பாங்கன் அதிசயித்துக் கூறுதல்.

வானுர்மரர் மனத்தையுங் கட்டி வளைக்குமிந்தக்
கானார் குழலி கருங்கண் வலையிற் கலங்கிநின்றோன்
தேனார் கடம்ப னருளால் மிகவுந் தெளிந்தபுத்தி
மானு தலிற்பரங் குன்றகன் றங்ஙனம் வந்தனனே. (57)

(கு-ரை.) கான்-வாசனை. புத்திமான்-அறிவுடையவன். அங்ஙனம்-அவ்விடத்து.

## தலைவியை வியத்தல்.

(இ-ள்) தலைவியைப் பாங்கன் வியந்து கூறுதல்.

பெண்ணிற் கணிகல மென்னச் சிறந்தவிப் பேதைகருங்
கண்ணிற் கணியணிந் தாற்போற் கருணை கவின்செயலால்
எண்ணிற் கலந்தநங் கந்தன் பரங்கிரி யேந்தலைச்செம்
மண்ணிற் கலந்த புனல்போற் கலந்தின்ப வாழ்வெய்துமே. (58)

(கு-ரை.) அணிகலம்-ஆபரணம். அணி-ஆபரணம். கவின்-அழகு, ஏந்தலை-தலைவனை. போல்-(செந்நிறம் ஆதல்) போல.

இவ்வைந்து பாடலும் பாங்கன் தன்னுட்கூறியவை.

## தலைவன்றனக்குத் தலைவிநிலை கூறுதல்.

(இ-ள்) தலைவி குறியிடத்துத் தனித்துநிற்கின்ற நிலையைப் பாங்கன் கண்டு வந்து தலைவனுக்குச் சொல்லுதல்.

மாகந்தர் மன்னும் பரங்கிரி யேனல் வனங்கடந்து
சோகந் தரலின் றியசோக நல்கும சோகத்தரு
கேகந் தரம்வரல் நோக்கிபொர் தோகைநின் றென்னப்பொன்னே
யாகந் தரமெனு மின்னொன்று நின்ற தறிந்தனனே. (59)

(கு-ரை.) ஏனல்-தினை. இன்றி-இல்லாமல். அசோகம்-துன்பமில்லாமை. அசோகத்தரு-அசோகமரத்தினது. கந்தரம்-மேகம். தோகை-மயில். பொன்-இலக்குமி ஆகம்-சரீரம். தரம்-ஒப்பு. மின்-பெண்.

## தலைவன் சேறல்.

(இ-ள்) தலைவன் பாங்கன் சொற்படி குறியிடத்துப்போதல்.

புவிமுழு தும்விலை யாயி யினுமிவை போதுமெனுக்
குவிகுயந் தாங்கும் கொடியிடை மின்னைக் குகன்பரங்குன்
றவிர்மணிச் சாரலிற் போய்நா மணைவதற் காழ்கடல்தாங்
கவியென வல்வலி கல்லாநெஞ் சேயென் கரைவதுவே. (60)

(கு-ரை.) ஈயினும்-தந்தாலும். மின்னை-பெண்ணை. சாரல்-மலைபக்கம் தாம்-தாவும். கவி-அநுமார்.

## தலைவியைக் காண்டல்.

(இ-ள்) தலைவன் தலைவியைப் பார்த்தல்.

காணப் படாவென் னுயிரெதிர் தோன்றிக் கலந்துபின்னர்
நாணப் படாமற் புறநோக்கி யேநெரு நல்லகன்று
பேணப் படாமற் பிரிந்தவெற் பார்த்துப் பிணிப்பநின்ற
வூணப் படாதவை யில்குகன் மெய்க்குன்றி னோர்புறத்தே. (61)

(கு-ரை.) உயிர்-உயிர்போன்றவள். புறநோக்கி-திரும்பிப்பார்த்து. நெருநல்-நேற்று. பிணிப்ப-கட்டுப்படுத்த. ஊண்-உணவுப்பொருள்கள். அப்பு-நீர். அடாதவை-கிடையாதவை. இல்-இல்லாத.

## கலவியின் மகிழ்தல்.

(இ-ள்) புணர்ச்சியால் மகிழ்தல்.

மந்தரம் வாலி மதியாமை வாசுகி மாலயன்மற்
றந்தர வாண ரெவருமில் லாம லரிவையல்குல்
தந்த வமுதத்தை யானேதுய்த் தின்னுயிர் தாங்கலுற்றேன்
எந்த வினையையுந் தீர்க்குங் குகன்மெய் யிறும்பிடத்தே. (62)

(கு-ரை.) மதி-சந்திரன். துய்த்து-அநுபவித்து. மெய்யிறும்பு-பரங்கிரி,

### புகழ்தல்.

(இ-ள்) தலைவன் புணர்ந்தபின் தலைவியைப் புகழ்ந்து கூறுதல்.

காவி கயலுன் விழிகண்டு கஞ்சமு கங்கண்டுசீர்
மேவிய வாம்பல் மலர்செய்ய வாய்கண்டு வென்றியுறு
தாவியுள் ளேயடங் கப்பய முற்றன வாறியார்
பாவிகள் காணப் படாச்சேய் பரங்கிரிப் பைந்தொடியே. (63)

(கு-ரை.) ஆவி-தடாகம், உயிர். பயம்-நீர், அச்சம். சேய்-குமாரக்கடவுளது.

### பாங்கியோடு வருகெனப் பகர்தல்.

(இ-ள்) இனி, நீ நின்னுயிர்ப்பாங்கியுடன் வாவென்று தலைவிக்குத் தலைவன் சொல்லுதல்.

பொன்பாங் கியையு முருவமின் னார்சங்கம் புக்கிருக்கும்
நின்பாங்கி யோடினி நீவரல் வேண்டு நிறையடியார்
என்பாங் கிளகும் படியிசை பாடி யிறைஞ்சிடுமெய்
யன்பாங் கியாதி யமையுங் குகன்மெய் யசலத்தினே. (64)

(கு-ரை.) பொன்-இலக்குமி. பாங்கு-அழகு. புக்கு-புகுந்து. என்பு-எலும்பு. ஆங்கு-அவ்விடத்து. மெய்யசலம்-பரங்கிரி.

### பாங்கிற் கூட்டல்.

(இ-ள்) தலைவன் தலைவியை ஆயத்துச்செலுத்தல். ஆயம்-மாதர்கூட்டம்.

கலைநடு ஞானம் புகல்போலெம் மீசன்றன் கண்மணியுள்
விலையறு நாயக மாமணி மேவல் விழைபவென்றும்
உலைவிலன் பேபுரி நின்னைய வெள்ளத்தி னுள்புகுவாய்
மலைவில்லை வேலன் றிருப்பரங் குன்றுறை மாமயிலே. (65)

(கு-ரை.) கண்மணி-உருத்திராக்கம். விழைய-ஒப்பாக. ஆயம்-மாதர்கூட்டம். மலைவு-சலித்தல். வை-கூரிய.

இவற்றுள் முன்னைய மூன்றும் சார்தல், கேட்டல், சாற்றலென்னு மூன்றற்கும் பாங்கன் கழறல் முதல் கிழவோன் வேட்கை தாங்கற் கருமைசாற்ற லீறுகிய நான்கும் எதிர்மறைக்கும் பாங்கன் றன்மனத்தழுங்கல் முதல் தலைவிருகிய நான்கும் ... தலைவி நிலை கூறலீறுகிய பதினொன்றும் நேர்தற்கும் தலைவன்றனக்குத் தலைவி ...

சேறல் முதல் புகழ்தலீறாகிய நான்கும் கூடற்கும் தலைவன் தலைவியைப் பாங்கியொடு வருகெனப் பகர்தலும் தலைவன் தலைவியைப் பாங்கிற் கூட்டலு மாகிய இரண்டும் பாங்கிற் கூட்டற்குமுரியன.

8-பாங்கிற்கூட்டம் முற்றிற்று.

---

## ஒன்பதாவது—பாங்கி மதியுடன்பாடு.

அஃதாவது தலைவி வேறுபாட்டாற் புணர்ச்சியுண்மை யறிந்தாராய்ந்து தோழி தன் மதியை யுடன்படுத்தல். அது-முன்னுறவுணர்தல் குறையுற வுணர்தல் இருவருமுளவழி யவன்வரவுணர்தலென மூன்றுவகைப்படும். அவற் றுள், முன்னுற வுணர்தலாவது தலைவனைப் புணர்ந்து மீண்டுவந்து தன்முன் னுற்ற தலைவி வேறுபாட்டைப் பாங்கிகண்டு அதனானே கூட்டமுண்மை யறிதல். அது வகையின் வகையாய் ஐயமுற்றோர்தல் ஐயந்தீர்தல் பல்வேறு கவர்பொருட் சொல்லினுடலெனமூன்றும். அவற்றுள் ஐயமுற்றோர்தல் பல வகைப்படும். அவைவருமாறு:—

### நாற்றத்தா லாராய்தல்.

(இ-ள்) பாங்கி தலைவியிடத்துப் பண்டுபயின்றறியாததோர் புதிய வாசனையைக்கண்டு ஐயுற்று ஆலோசித்தல். (ஐயுறல்-சந்தேகப்படல்.)

அஞ்சண் முகங்கொண் டமர்வான் பரங்குன் றலர்கொளப்போய்ச்
செஞ்சண் பகமலர் போல்நன் னிறம்பெற்ற தேகமுற்று
மஞ்சண் மணத்தை மறைக்குங் குறிஞ்சி மலர்மணந்தான்
பஞ்சண் மினும்பதைக் கும்பதத் தாள்பெற்ற பான்மையென்னே. ()

(கு-ரை.) அலர்கொள - பூக்கொய்ய. அண்மினும் - நெருங்கினும். பதைக்கும்-வருந்தும்.

### தோற்றத்தா லாராய்தல்.

(இ-ள்) புணர்ச்சியாற் பெற்றதோ ரழகுகண்டு சந்தேகித்தல்.

கூடிய வாயம் பிரிதலி னோமலர் கொய்தலினோ
ஆடிடம் தேடி யலைதலி னோவணங் கச்சுறுத்துங்
கேடிய லெய்தலி னோமெலிந் தேநமைக் கிட்டினளாற்
பாடிய கீரற் கருள்வோன் பரங்கிரிப் பைங்கிளியே. (67)

(கு-ரை.) ஆயம்-மாதர்கூட்டம். ஆடிடம்-விளையாடுகின்ற இடம். தேடி. தேடி. அணங்கு-வனதேவதைகள். அச்சுறுத்தும்-பயப்படச்செய்யும். கீரற்கு-நக்கீரனுக்கு.

ஒழுக்கத்தா லாராய்தல்.

(இ-ள்) தெய்வந் தொழாமைகண்டு சந்தேகித்தல்.

வெற்றிப் பதாகையு மூர்தியு மாகிய வீரருருப்
பற்றிப் பிளக்கு மயிலோன் பரங்கிரி பாடலரிற்
சுற்றித் திரிவதென் னேவான் பிறைபைத் தொழாள்தனது
நெற்றிப் பகையென் றுளத்தெண்ணி யோவென்ன நீர்மையிதே. ()

(கு-ரை.) பதாகை-(கோழிக்)கொடி. ஊர்தி-(மயில்)வாகனம். வீரர்-சூரனும், பன்மனும். பாடலரில்-பாடாதவரைப்போல.

உண்டியா லாராய்தல்.

(இ-ள்) முன்னைநாளிற் குறைந்த வுணவுகண்டு சந்தேகித்தல்.

ஒருநல குரவு முறுமறறற் பாடுநர்க் கோங்குபெருந்
திருநல்கு சேந்தன் பரங்கிரி போலுந் திரள்தனமான்
நெருந லருந்துதல் போலருந் தாமல் நிறைந்தசுவை
தருந லயிர்துங் கடற்கடுப் போல்வெறுத் தாளிதென்னே. (69)

(கு-ரை.) நல்குரவு-தரித்திரம். நற்பாடுநர்-தன்னைப்பாடுவார். சேந்தன்-முருகக்கடவுள். திரள்-திரண்ட. நெருநல்-நேற்று. கடற்கடு-ஆலகாலவிடம்.

செய்வினை மறைப்பால் ஐயமுற்றோர்தல்.

(இ-ள்) தலைவி தலைவன்பாற்பட்ட தன்னினைவுந் தொழிலும் பிறர்க்குப்புலப்படாமல் மறைத்தல்கண்டு சந்தேகித்தல்.

கச்சினை மீறி யெழுமா தனமடங் கக்காத்தாற்
பிச்சியர் போலிழுத் துப்பிணிப் பாளிதென் பேசுகென்றால்
நச்சிய வேள்பரங் குன்றினை யேத்து நமக்கொளித்துப்
பொய்ச்சிறு சொல்லும் பொருள்தெரி யாமற் புகலுவளே. (70)

(கு-ரை.) பிச்சியர்-பயித்தியம் பிடித்தவர். பிணிப்பாள்-கட்டுவாள். நச்சிய-விரும்பப்பட்ட. பொருள் தெரியாமற்புகலுவள்-குளறுபடையாகப் பேசுவாள்.

## சேலவுகண் டையுறல்.

(இ-ள்) தலைவி ஆயத்தை நீங்கித் தனியேபெயர்தல் கண்டு சந்தேகித்தல்.

ஒண்மை மலர்கொய்யப் போய்நாற் றிசையு முலாவிவரும்
பெண்மையில் போலத் திரிவள் விணுவிடிற் பெய்மலர்கள்
அண்மையிற் கிட்டில வென்றேயஞ் சாம லறைவள்குகன்
வண்மை மிகுபரங் குன்று ரிதனை மதித்திலரே. (71)

(கு-ரை.) ஒண்மை-ஒளி. பெய்-அணியப்பட்ட. அண்மை-சமீபம். வண்மை-கொடை.

## பயில்வுகண் டையுறல்.

(இ-ள்) தலைவி யெப்போதும் ஓரிடத்தே நிற்றல் கண்டு சந்தேகித்தல்.

வேலையி லேவிய வேலோன் பரங்கிரி மெல்லிணர்ப்பூஞ்
சோலையி லேமலர் கொய்தோ ழியரைத் துறந்தகன் றங்
கோலையி லேயெழு தொண்ணு ப ளிககறை யுள்ளொளிப்பாள்
ஆலையி லேயமு தன்னசொல லாள்மிக ஐயமிதே. (72)

(கு-ரை.) வேலை-கடல். துறந்து-நீங்கி. பளிக்கறை-பளிங்குக்கற்பாறை. ஆலையில்-கரும்பினிடத்து. எய்-பொருந்திய.

ஐயமுற்றோர்தல் முற்றிற்று.

## அவ்வகை தன்னு லையந்தீர்தல்.

(இ-ள்) மேற்கூறிய எழுவிதத்தானுஞ் சந்தேகம் நிவிர்த்தியாதல்.

கொழுமலர் சாலு முருகன் பரங்கிரிக் கோற்றொடியை
யெழுவகை யானும் பருப்பொருட் டாக வியன்றமட்டும்
பழுதறி வான்பரி சோதிகக வையம் படாமைகண்டேன்
முழுவது நுண்பொருட் டாவினித் தேற முயலுவனே. (73)

(கு-ரை.) சாலும்-மிகும். எழுவகை-மேலேகூறிய எழுவிதம். பழுது-குற்றம். ஐயம்படாமை-சந்தேகப்படாமல். பருப்பொருட்டு-சாதாரணம். நுண்பொருட்டு-நுட்பப்பொருளுடையது.

ஐயந்தீர்தல் முற்றிற்று.

## பல்வேறு கவர்பொருட்சொல்லின் நாடல்.

(இ-ள்) பாங்கி தலைவியினிடத்துத் தெளிந்த வுண்மையை யுறுதிப் படுத்தத் திரும்பவும் பல வேறுவகைப்பட்ட சிலேடைப்பொருட் சொல்லி ஞல் ஆராய்தல்.

பூந்தட்ப மார்புய வேலோ னமர்மெய்ப் பொருப்பிலுறை
காந்தட் சுனைகுடைந் தேனென் றுரைத்தி கடிதடமாம்
பாந்தட் சுனைகுடைந் தாடிய துன்செம் பவளவிதழ்
ஏந்தற்பல் மென்குறி காட்டிய தேன்மறைத் திட்டனையே. (74)

(கு-ரை.) தட்பம்-குளிர்ச்சி. கடிதடம்-அல்குல். பாந்தள்-பாம்பாகிய. உரைத்தி-சொன்ஞய். ஏந்தல்-தலைவன், தாங்குதலுடைய. பல்-பல், பல. மென்குறி-மெல்லிய அடையாளம்.

### இதுவுமது.

கூம்பல் விரிதலில் பூமேற்கொள் சேய்பரங் குன்றினில்வா
யாம்பல் வடுப்பட லென்மாவிற் கிலைகொ லாயசெழுங்
காம்ப லெனும்பசுந் தோளுங் குழலுங் கனிமொழியுந்
தேம்ப லிடையு முடையா யிதனுண்மை செப்புகவே. (75)

(கு-ரை.) கூம்பல் விரிதலில்பூ - மொட்டறுமலர். "மொட்டறுமலர் பறித்திறைஞ்சி" யென்றார் பிறரும். வாயாம்பல்-வாய்த்த ஆம்பற்பூ, வாயினி டத்தாகிய பல். வடு-குற்றம், மாவடு. மாவிற்கு-மாமரத்துக்கு. காம்பு-மூங் கில். அல்-இருள். தேம்பல்-வாடுதலையுடைய.

### இதுவுமது.

மாகம் பிறையொன்று காட்டும் பரங்கிரி மன்னுகின
தாகம் பிறைபல காட்டுமென் றுன்ன ரதைமறைத்துச்
சோகங்கொள் வாய்கலை சோரநிற் பாய்நினைத் தொல்வனத்துட்
போகங்கொள் வார்செய லீதோ குகனருள் போலுமின்னே. (76)

(கு-ரை.) மாகம்-ஆகாயம். ஆகம்-சரீரம். பிறை-பிறைச்சந்திரன் போ லும் நகக்குறி. போகம்-விளைந்தபயன், காம இன்பம்.

இதுவுமது

வாமானொன் ஞேடிப் பிடித்திடச் சேய்மெய் வரைப்புறத்தி
லேமார் திளைத்துவக் தேனென் றியம்பின ளேந்திழையப்
பூமான் கிடைகொளப் பெற்றால்கன் றாமெனப் புன்னகைசெய்
தாமா முகங்கவிழ்ந் தேகா ணினளோய மற்றதுவே. (77)

(கு-ரை.) வாம்-தாவுகின்ற. பூமான்-பூமியிலுள்ளமான், தலைவன். கிடை-கிடைத்தல், படுக்கை. ஆம்-ஆகிய.

பல்வேறு கவர்பொருட்சொல்லி னுடல் முற்றிற்று.

மூன்றுற வுணர்தல் முற்றிற்று.

---

## குறையுறவுணர்தல்.

அஃதாவது, தலைவன் தழை முதலியவற்றைக் கொண்டுவந்து தன் பக்கத்தில் நிற்பப் பாங்கிகண்டு அதனாலே கூட்டமுண்டென்றறிதல். அது பெட்டவாயில் பெற்றிரவு வலியுறுத்தல் ஊர் பெயர் கெடுதி ஒழிந்தவை வினுதலாகிய தேர்தல் தெளிதலென இருவகைப்படும். அவைவருமாறு:—

### பெட்டவாயில் பெற்றிரவு வலியுறுத்தல்.

(இ-ள்.) இயற்கைப்புணர்ச்சிக்குப் பின்னர்ப் பிரிவுழிக்கலங்கல் வாய்தல் பெற்றுய்தலென ஆண்டுவிரும்பப்பட்ட பாங்கியைத் தலைவன் தூதாகப்பெற்றுக் குறையிரத்தலை வற்புறுத்திக்கூறுதல்.

கந்தனைக் காட்டி யதுபோற் பரங்கிரி காட்டுமென்றன்
சிந்தனைக் காட்டிற் றிரிகின்ற மானுயிர்ச் சேடியென
வந்தநற் பாங்கியை நேசித்தி யாசித்து வற்புறுத்தி
யிந்தவெப் பாமதன் செய்துயர் நீத்தின்ப மெய்துவனே. (78)

(கு-ரை.) மான்-மான்போன்ற தலைவி. சேடி-தோழி. காட்டுமென்பது மான் என்பதனோடுமுடியும்.

### ஊர் வினுதல்.

(இ-ள்.) தலைவன் கண்ணியுந் தழையுந் தாங்கிக் குறையுற்றவன்போல் வந்து நின்று பாங்கியை யுன்னூர் எதுவென்று கேட்டல்.

கையிலூர் தழைதுணை யாகவந் தேனிந்தக் காட்டினினீர்
பயிலூ ரெஃதிளைப் பாறியங் குற்றுப் பரங்கிரிவாய்
மயிலூர் குமா னருள்போ லேகிர்ப்பட்ட மானனையீர்
குயிலூர் மொழியொன் றுரையீரொன் னூர்வழிக் கொள்வதற்கே. ()

(கு-ரை.) வளர்-தங்கிய. எஃது-எது. குயிலூர்-குயிலிசையைப்போன்ற.

பெயர் வினாதல்.

(இ-ள்.) வெளி.

போரா தரிக்கும் விழியீர்நும் மூரைப் புகன்றிலிர்நும்
போர வதுசொலு மென்றாலும் பேசிலிர் போரருமைச்
சீரார்சேவ் வேலன் பாங்கிரி நாட்டினைச் சேரலரும்
ஓரா வுலோப மிஃதுமக் கெங்ஙன மூற்றதுவே. (80)

(கு-ரை) சேரலர்-சேராதவர். ஓரா-உணராத.

கேடுதி வினாதல்.

(இ-ள்.) தலைவன் றனக்கு நேர்ந்த கெடுதியைப் பாங்கியைக் கேட்டறிதல்.

தீட்டுசெவ் வேலன் பாங்கிரி வாய்ச்செங் கிளைவிளையுங்
காட்டுளென் கூர்ங்கணை பட்டுக் கலங்கிறுங் கட்பகையாங்
கேட்டுண் மெலிகின்ற மான்வந்த தாவக் கெடுதிவரா
தோட்டுவன் சொன்மி னுயிரனை யீரிடை யூறறவே. (81)

(கு-ரை.) கட்பகை-கண்ணுக்குப்பகை. சொன்மின்-சொல்லுங்கள்.

நெஞ்சு வினாதல்.

(இ-ள்.) தலைவன் றன் மனத்தைப் பாங்கியிடத்துக் கேட்டல்.

தோற்றேகு மானை யெவன் றுவதென் னென்று சொலீரதன்பின்
காற்றே யெனவரு மென்னெஞ்ச நுங்குழற் காட்டிடையோ [தேன்
நோற்றோர்கொள் கொங்கைவெற் பூடோ நுழைந்தது கொந்தயர்ந்
ஆற்றே னுரையின் பரங்கிரி வேளரு ளன்னவரே. (82)

(கு-ரை.) சொலீர்-சொல்லமாட்டீர். நோற்று-தவஞ்செய்து. ஆற்றேன்- (இனிச்) சகிக்க மாட்டேன்.

வழி வினாதல்.

(இ-ள்.) தலைவன் தான்செல்லும் வழியைப் பாங்கியிடத்துக் கேட்டல்.

மொழியீரொன் கேட்கினு நிற்க விஃதென் முதுபதிக்கு
வழியா வதுசொலும் வாய்திறத் தற்கு வருத்தமுண்டேல்
விழியாற்கை யாலெதிர் காட்டுமின் றேற்குகன் மெய்வரைவாய்ப்
பழிசால வந்துநும் பாணிற்கும் பைந்தொடிப் பாவையரே. (83)

(கு-ரை) என்-எது. சால-மிக.

ஊர் பெயர் கெடுதியோடொழிந்தவை வினாதல் முற்றிற்று.

## தேர்தல்.

யாரேயிவர் மனத்தெண்ணம் யாதெனத்தேர்தல்.

(இ-ள்.) மேற்கூறியவாறு பலவாறு கேட்டுநின்ற தலைவனைப் பாங்கி, இவர் எவரே. இவர்மனத்தில் நினைத்தது எதோவென்று தன்மனத்தில் ஆராய்ச்சி செய்தல்.

பேசா திருக்கினும் போகாரெவ் வொன்றினைப் பின்னும்பின்னுங்
கூசாமற் கேட்பர்நங் கோளறி யார்தமமுட் கொண்டகுறிப்
பாசாரம் யாதிவர் யாரே பரங்கிரி யாள்முருகன்
றேசார் நிறச்செங் தழைகாட் டுவரொன்றுந் தேர்ந்திலனே. (84)

(கு-ரை) கோள்-கொள்கை, அல்லது குணம். ஆசாரம்-ஒழுக்கம். யாது-எது. தேசு-அழகு.

தேர்தல் முற்றிற்று.

## தெளிதல்.

(இ-ள்.) தலைவனது நினைப்பைப் பாங்கி தெளிதல்.

மான்வேட்டஞ் செய்பவர் பூந்தழை தாங்கி வருவதுண்டோ
கான்வேட்ட கண்ணியு மேந்திநிற் பார்மலர்க் காவினிறாற்
றேன்வேட்ட வண்டெனத் தென்பரங் குன்றுறை சேயருளால்
நான்வேட்ட பொன்னைப் பெறவந்த மாலிவர் நல்லவரே. (85)

(கு-ரை) வேட்டம்-வேட்டை. கான்-காட்டில். வேட்ட-விரும்பப் பட்ட. இறால்-தேன்கூடு. பொன்னை-இலக்குமிபோல்வாளை. மால்-விஷ்ணு போன்றவர்.

தெளிதல் முற்றிற்று.

இவ்விரண்டுங் குறையுறவுணர்தலின் விரியென்க.

குறையுற வுணர்தல் முற்றிற்று.

## இருவரு முளவழியவன்வர வுணர்தல்.

அஃதாவது தலைவியுந் தானு மொருங்கிருந்த இடத்துத் தலைவன் தனியே வரப் பாங்கி கண்டு அதனானே கலப்புண்மையறிதல். அதன் விரிவருமாறு:—

## தலைவன் கையுறையேந்தி வருதல்.

(இ-ள்.) தலைவியும் பாங்கியுஞ் சேர்ந்திருப்பதுகண்டு தலைவன் கையுறையேந்திவருதல். கையுறை-காட்சிபபொருள்.

இரதியும் பாங்கியை பாங்கியும் போலலரு லெல்லுமுயர்
இரதியும் பாங்கியு மெய்ககிரி யேன லிதணிலுளார்
விரதியர் போற்றுங் குகனரு ளாலவள் மெல்லிதழ்க்க
விரதிய லின்பம பெறுவான செலாலல வேளையிதே. (86)

(கு-ரை) பாங்கியை-பக்கத்திலிசைந்த. இரதியும்-தேரையுடையாளும். மெய்க்கிரி-பரங்கிரி. இதண்-பரண். இதழ்-உதடாகிய. கவிரது-முருக்கம்பூவினது. இயல்-இயற்கை.

## தலைவன் அவ்வகை வினாதல்.

(இ-ள்.) தலைவன் முன் கெடுதிவினாவியதுபோல மீண்டும் யானை வந்ததோவென்று கேட்டல்.

நங்கணை யேறிட்ட புண்ணோ டொருகரி நாடிவர
நுங்கணை யாழலை வன்பகை யென்று நொறுக்கநும
தங்கணை யேவிய துண்டோ குகன்மெய் யசலத்தினிற்
பொங்கணை நீர்வளஞ் சூழ்பூ மலர்மென் பொழிற்புறத்தே. (87)

(கு-ரை) கணை-பாணம். நுங்கள்-உங்கள். ஙையா-சாயாத. அம்-அழகிய.

## பாங்கி யெதிர்மொழி கொடுத்தல்.

(இ-ள்.) பாஙகி தலைவன் வினாவுக்கு விடை கூறுதல்.

இவ்வன மேய கொடிச்சியர் கொங்கைக் கிபங்களெலாஞ்
செவ்வனில் லாமற் புறங்காட்டி யங்கங்குச் செல்வதலால்
மௌவன் முறுவற்றெய் வப்பிடி தன்னை மணஞ்செய்தமர்
யௌவன மார்களி யானைமெய்க குன்றிலிங் கெய்திலவே. (88)

(கு-ரை) கொடிச்சியர்-குறத்தியர். இபம்-யானை. செவ்வன்-நேர். மௌவல்-முல்லையரும்பு. (ஆகுபெயர்) தெய்வப்பிடி-தெய்வயானை அம்மை. யௌவனம்-இளமை.

## இறைவனை நகுதல்.

(இ-ள்.) தலைவன் அப்பாற்சென்றானாகப் பாங்கி தலைவியை நோக்கி அசதியாடல். அசதியாடல்-இகழ்ந்து சிரித்துப்பேசுதல்.

வாவும் பசுமஞ்ஞை யூருங்கு மாரசு வாமியருள்
பாவும் பரங்கிரிப் பாங்கர் விலங்கும் பறப்பதுண்டோ
சீவுங் குழலி யிவர்பூந் தழையம்பு தேகத்திற்பட்
டோவுங் களிறிங்கு வந்தா லடிச்சுவ டொன்றுமின்றே. (89)

(கு-ரை.) வாவும்-தாவும். பாவும்-பரவும். பாங்கர்-பக்கத்தில். குழலி-கூந்தலையுடையவளே. ஓவும்-நீங்கும்.

மதியினவரவர் மனக்கருத்துணர்தல்.

(இ-ள்.) பாங்கி தலைவன் தலைவியென்னுமிருவர் மனக்குறிப்பைத் தன்னறிவாலாராய்தல்.

அன்புறு வார்க்குமெய் வாயாற்சொ லாமற்கை யாற்புகலும்
பொன்புரை மேனிப்பி ரான்குரு வாங்குகன் போற்பாங்குன்
றின்புறு தம்மெண்ணம் வாயா லிவளு மிவனுமிங்ஙன்
முன்புரை யாமற்கண் ணுலுரைப் பாரிது மூதறிவே. (90)

இம்மூன்றும் இருவருமுளவழி யவன்வர வுணர்தலின் விரியென்க.

(கு-ரை.) மெய்-உண்மைப்பொருளை. கையாற்புகலும்-கையினாற்காட்டிச் சொல்லும். அஃதாவது, சின்முத்திரையாற் காட்டுதல். இங்ஙன்—இவ்விடத்து.

9-பாங்கி மதியுடம்பாடு முற்றிற்று.

---

## பத்தாவது—பாங்கியிற் கூட்டம்.

அஃதாவது பாங்கியாற் கூட்டுவிக்கத் தலைவன் தலைவி கூடுங்கூட்டம். அஃது, இரந்து பின்னிற்றல் சேட்படை மடற்கூற்று மடல்விலக்கு உடன்படல் மடற்கூற்றொழிதல் குறைநயப்பித்தல் நயத்தல் கூட்டல் கூடல் ஆயங்கூட்டல் வேட்டல் எனப் பன்னிரண்டு வகையினையுடையது.

தலைவனுட் கோள் சாற்றல்.

(இ-ள்) தலைவன் தன்னுள்ளத்திற் கொண்ட காதலைக் கூறுதல்.

பாலாற் செயுமொழிப் பாவைதன் சேவை பரிவுறும்
மாலாற்ற யான்விருப் புற்றே னதற்கின் னருள்புரிந்தால்
நூலாற் றெரிமுரு கேசன் பரங்கிரி நுண்ணிடையீர்
காலாற் செயச்சொல் பணியாவு மேயென்செங் கைசெயுமே. (91)

(கு-ரை.) சேவை-தரிசனம். ஆற்ற-செய்ய. தெரி-தெளியப்பட்ட.

### பாங்கி குலமுறை கிளத்தல்.

(இ-ள்) தலைவன் கூறியதற்குப் பாங்கி குல முறைமையால் இசையா தென்று மறுத்துக்கூறுதல்.

தீங்கரும் பார்செய்ய வாய்வேம்பின் காயுணத் தேடலொப்பாம்
நீங்கரு மெங்கள் குலத்தொரு பாவையை நீர்விரும்பல்
ஞாங்கருந் தூர்திறற் செவ்வேள் பரங்கிரி நண்ணியுயிர்ப்
பாங்கரு மின்றித் தனித்துவந் தேநின்ற பார்த்திபரே. (92)

(கு-ரை.) ஆர்-உண்ணுகின்ற. ஞாங்கர்-வேலாயுதம். உந்தும்-செலுத்தும். பாங்கர்-தோழர்.

### தலைவன் தலைவிதன்னை யுயர்த்தல்.

(இ-ள்) தலைவன் தலைவியை யுயர்த்திக் கூறுதல்.

எம்மலர்க் கொம்பி னிறாலிருந் தாலு மெடுப்பதலால்
வெம்மலர்க் கொம்பி னிறாலிஃ தென்று விடுப்பவரார்
கைம்மலர்க் கந்தன் பரங்கிரிக் கான்றினை காக்கநடந்
திம்மலர்ப் பாதஞ் சிவந்தீர்நன் காய்ந்திங் கியம்புமினே. (93)

(கு-ரை.) இறால்-தேன். கான்-காடு.

### இதுவுமது.

நல்லா ரெனும்பெயர் பெண்களுக் காமென நாடிச்சொற்றார்
வல்லார் சிலபெண் களையொழித் தப்பெயர் வாய்ந்ததன்றே
கல்லாருந் தேர்வ ரிதனைப் பரங்கிரிக் கந்தனரு
ளில்லா ரெனநின் றிடையு மிடைபெற் றிருந்தவரே. (94)

(கு-ரை.) வாய்ந்தது-பொருந்தியது. இடையும்-வருந்தும்.

### இதுவுமது.

ஈயா ரிழிந்தவ ரீந்தா ருயர்ந்தவ ரென்னவௌவைத்
தாயா ருரைத்த துணர்ந்தாற் பிறப்பினிற் சாதிவழக்
காயா திருப்பிர் பரங்கிரிக் கந்த ரதை யறிந்தே
சாயாத கொங்கைக் குறக்குல மானைத் தழுவினரே. (95)

(கு-ரை.) வழக்கு-வழக்கம்.

இதுவுமது.

நிறைகுண மூள்ளவ ரேயுயர்ந் தாரதை நின்றிவர்பா
துறையெழில் காட்ட வுணர்ந்தே னினியைய மொன்றுமுறீர்
பிறைநுத லார்க்கொரு பேரணி யாகும் பெருந்தகையீர்
கறையிலை வேல னிருப்பாம் பரங்கிரிக கானகத்தே. (96)

(கு-ரை) உறீர்-பொருந்தவேண்டா. தகையீர்-தகுதியுடையபாங்கியரே. கறையிலை-இரத்தந்தோய்ந்த இலைவடிவாகிய.

பாங்கி யறியாள்போன்று வினுதல்.

(இ-ள்) தலைவன் தலைவியிடத்துக் காதல்கொண்ட தறியாதவளைப் போல நீ யெவளிடத்துக் காதல்கொண்டாயெனப் பாங்கிகேட்டல்.

இளங்கா மலர்கொய்துங் காவியுங் காந்தளு மேந்துசுனை
வளங்காண வோடியும் வண்ட லயர்ந்திடு மாதர்க்குளும்
முளங்கா தலித்தவள் யார்கும ரேசனை யுள்ளுணர்ந்து
துளங்கா நிலையுற் றவர்சூழ் பரங்கிரிச் சோலையினே. (97)

(கு-ரை.) காவி-நீலோற்பலமலர். வண்டல்-மகளிர்விளையாட்டு. அயர்ந் திடும்-செய்யும். காதலித்தவள்-விரும்பப்பட்டவள்.

இறையோ னிறைவிதன்மை யியம்பல்.

(இ-ள்) தலைவன் தான் காதலித்த தலைவி தன்மையைக் கூறுதல். தன்மை-இலக்கணம்.

செழியன் சிறைப்பட்ட காரே குழலவன் செய்யதுசம்
விழியவன் செண்டி னடியேற் றதுதன மேவுமவன்
வழிமுத லேமுக மாமயி லோன்மெய் வரைப்புறத்திற்
கழிபெருங் காத லெனக்காக் கியவிளங் காரிகைக்கே. (98)

(கு-ரை.) கார்-மேகம். துசம்-கொடியாகியமீன். ஏற்றது-மகாமேருமலை. வழிமுதல்-சந்திரன். மெய்வரை-பரங்கிரி.

பாங்கி தலைவி யருமை சாற்றல்.

(இ-ள்) தலைவி கிடைத்தற் கருமையுடையவளென்று பாங்கி கூறுதல்.

மூன்னூல் கரன்பின் முருகன் பரங்கிரி மூதறிவீர்
பன்னூன் குலகுங் கொடுத்தாலு மெய்தப் படாததனைப்
*பொன்னு னதுறும் புயம்பூண லாங்கொல் பொருந்தியவா
றென்னூல் முடிந்தமட் டும்பார்க்கின் றேனரி திச்செயலே. (99)

(கு-ரை.) முன்-முற்பக்கம். கால்-தொங்குகின்ற. காள்-துதிக்கையு டையவிநாயகர். பின்-தம்பியாகிய. பன்னான்கு-பதினாறு. பொன்-இலக்குமி போன்றவள்.

தலைவனின்றியமையாமை யியம்பல்.

(இ-ள்) தலைவியில்லாது வாழ்வெனக்கில்லையென்று பாங்கியிடத்துத் தலைவன் கூறுதல்.

மன்றிற் றுடிநட மாடுங் குகன்மெய் வரைப்புறம்வாழ்
அன்றிற் பறவைப் பெடையவள் யானன்றி லாகுமென்றால்
ஒன்றிப் பயில்வதல் லாதவள் நீத்தென் னுயிருய்யுமோ
கன்றித் துயரு மெனையுயிர்ப் பித்தல் கடனுமக்கே. (100)

(கு-ரை.) துடி-முருகக்கடவுள்நடனம். பெடை-பெட்டை. அவள்-அத்தலைவி. கன்றி-வாடி. துயரும்-துன்பப்படும். உயிர்ப்பித்தல்-உயிர்பிழைக்கச்செய்வது. கடன்-கடமை.

பாங்கி நின்குறை நீயே சென்றுரை யென்றல்

(இ-ள்) தலைவியினிடத்து நினக்கு வேண்டுவனவற்றை நீயேபோய்ச் சொல்லென்று பாங்கி கூறுதல்.

தேன்றுளி செய்பொழில் சூழும் பரங்கிரிச் சேந்தனருள்
போன்றுறை யெம்பெரு மாட்டிக்கு நீவிர் புன்றவெலாந்
தோன்றுறு மாறுரை யேற்றி முடிக்கத் துணிந்துநம்பால்
ஏன்றுகொள் வேனல னீரே யெதிர்சென் றிசைத்திடுமே. (101)

(கு-ரை) சேந்தன்-முருகக்கடவுள். உரையேற்றி-வரிசையாகச் சொல்லி. ஏன்றுகொள்வேனலன்-ஏற்றுக்கொள்ளமாட்டேன்.

பாங்கியைத் தலைவன் பழித்தல்.

(இ-ள்) தலைவன் பாங்கியை நிந்தித்துக் கூறுதல்.

வானத்தைப் பாயிற் சுருட்டவல் லீர்நுண் மணல்கயிறு
போனற் புரிபுரி வீர்நுங் குகன்மெய்ப் பொருப்பில்விளை
யேனற் காசிதன் னெஞ்சினை யுங்கரைப் பீரொன்றுமை
கானற்பிற் சொல்ல மறுத்தீர்நுந் தண்ணளி நன்றுநன்றே. (102)

(கு-ரை.) புரிவீர்-செய்வீர். அற்பின்-அன்பினால். அளி-அன்பு.

## பாங்கி தலைவிபேதைமை யூட்டல்.

(இ-ள்) தலைவி பிறர்துயரமறியாளென அவளது பேதைமையைப் பாங்கி தலைவ னுளங்கொளச் சாற்றல்.

பேதைமை யென்பது மாதர்க் கணிகலம் பேசுமிடத்
தாதலி னல்வினை ளளாவும் பரங்கிரி யாறுமுக
நாதன் பதங்கள் மறவாத நீவிர் நயந்துகொண்ட
தீதறு காதல் விளைவறி யாள்நம் சிறுகன்னியே. (103)

(கு-ரை.) அளாவும்-கலக்கும், அல்லது தோயும். காதல்-ஆசை.

## இதுவுமது.

அரும்புள் மணமுங் கருக்காயிற் றித்திப்பு மார்தரத்தார்
தரும்புள் ளிளைமையிற் றுவிப் பறப்பதுஞ் சற்றுமின்றே
சுரும்புண் குழலுந் தனமும் வளருமுன் றேயுமின்பம்
விரும்புங்கொ லோநம் மடமான் முருகன்மெய் வெற்பகத்தே. (104)

(கு-ரை) கருக்காய்-இளங்காய். ஆர்தரு-நிறையும். சுரும்பு உண்-வண்டுகள் வந்து தேனுண்ணுகின்ற.

## காதலன்றலைவி முதறிவுடைமை மொழிதல்.

(இ-ள்) அவ்வாறு கூறிய பாங்கியை நோக்கி முதிர்ந்த அறிவுடையாள் தலைவியாதலின் அவளை அங்ஙனம் சொல்லக்கூடாதென்று தலைவன் கூறுதல்.

கண்ணாற் பிணித்தெனைத் தன்னுளத் தேவைத்துக் கைகலந்த
பெண்ணா ரமுதினை யானுமவ் வாறு பெரிதுசெய்தேன்
உண்ணாடு வீரெனிற் றோன்று நமக்குவிண் ணோர்க்கும்பருந்
தண்ணார்பைங் காவுந் தரும்வேலன் மெய்க்கிரிச் சாரலினே. (105)

(கு-ரை.) பிணித்து-கட்டி. பெரிது-மிகுதியாக. உண்ணாடுவீரெனில்-உள்ளேயாராய்ந்து பார்ப்பீரானால். உம்பரும்-பொன்னுலகமும். தண்-குளிர்ச்சி.

## பாங்கிமுன்னுறு புணர்ச்சி முறையுறக்கூறல்

(இ-ள்) இவ்வாறு கூறக்கேட்ட பாங்கி முன் நின்வேட்கை தணித்தாளென்று கூறினையே. அங்ஙனமே, இன்னமு மவளைச் சேர்வாயென்று தலைவனுக்குச் சாற்றுதல்.

எடுத்த புதையற்கு மூலிகை தேடுவ ரென்னவிவையைக்
தடுத்த வணங்கிற் றுத் தூதொன்று தேட லடாததினித்
தொடுத்த முறையின்முன் போற்றென் றவளின்பக் துய்த்திடுதி
மடுத்த தமிழ்ப்புல வோருங் குகன்மெய் வரையிடத்தே. (106)

(கு-ரை) அடாதது-கூடாதது. தொடுத்த-ஆரம்பித்த. துய்த்தி-அநுபவிப்பாய். மடுத்த-கலந்த.

தன்னிலை தலைவன் சாற்றல்

(இ-ள்) அதுகேட்ட தலைவன் ஆசைநோயால் வருந்துந் தன்னிலைமையைப் பாங்கிக்குக் கூறுதல்.

ஈட்டும் புகழ்ப்பரங் குன்றூர்க் குகன்செய்ய எஃகுருமே
லாட்டு நறும்பனி நீர்சந் தனத்தெனை யாழ்த்திடினும்
வீட்டுமென் காமக் கனலுன் முழுதும விரைந்தொழிய
ஒட்டுநும் மின்னுரை நீராற்றி னலந்த வொண்டொடியே. (107)

(கு-ரை.) எஃகு-வேலாயுதம். வீட்டும்-கொல்லும். ஒட்டும்-ஒட்டுவன். இன்னுரை நீராற்றினல்-இனியவார்த்தை நீர்சொன்னால், இனிய நுரையுடைய நீர்நிறைந்த நதியாலென்று இலேடைப் பொருள்கொள்க.

பாங்கி யுலகிய லுரைத்தல்.

(இ-ள்) உலகத்தில் காமவிருப்பமுள்ளார் சான்றோரை முன்னிட்டு விவாகஞ்செய்வர். ஆதலால், தலைவனே நீயும் விவாகஞ்செய்து தலைவியைச் சேருகவெனப் பாங்கி கூறுதல்.

காரிகை யாப்பிற் கலப்பார்நன் னூல்விதி கற்றுணர்ந்தென்
னூரிது நீரு மறிந்ததொன் றேமெய் யாலச்செவ்வேள்
சீரிய வின்னரு ளால்மணஞ் செய்புஞ்செந் தேன்பொழியும்
பாரிய மாலை புனைவீர்நல் லின்பம் பருகுதற்கே. (108)

(கு-ரை) காரிகை-பெண் +-ஓர் நூல். யாப்பில்-(தாலி) கட்டுதலால் + பாட்டில். நன்னூல்விதி-நன்னூலென்னும் இலக்கண நூல்விதி + நல்லசாத்திர விதி. மணம்-விவாகம் + வாசனை. மாலை-பூமாலை + பாமாலை. பாரிய-பருத்த.

தலைவன் மறுத்தல்.

(இ-ள்) அவ்வுலகியலைத் தலைவன் வேட்கை ஆற்றாய் மறுத்தல்.வேட்கை-ஆசை.

துன்றோதி யீர்மணங் தேபுணர் மென்றிர் சுவரிருந்தா
லன்றோ வுருவம் பொறித்திட லாகுமென் ளுருயிரை
யின்றோ வுறாது நிறுத்துவி ரேற்பின்ன ரேமணப்பன்
சென்றோது கென்குறை சேய்வாழ் பரங்கிரிச் சேயிழைக்கே. (109)

(கு-ரை.) துன்று-மயிர்நெருங்கிய. புணர்ம்-சேரும். (விகாரம்) என்றிர்-என்றுசொன்னீர். பொறித்திடல்-எழுதுதல். ஒவுறாது-நீங்காமல். ஓதுக-சொல்லுவாய்.

பாங்கி யஞ்சியச்சுறுத்தல்.

(இ-ள்) இந்நிகழ்ச்சி பிறரறிவரென்று பாங்கி பயர்தவளாய்த் தலைவனை அப்புனம்விட்டுப் போகப் பயமுறுத்திக்கூறுதல்.

எற்றோகை யற்றுக் குகன்பரங் குன்றிடை யெங்குழற்குத்
தோற்றோ டியவிரு ளின்னும் பொரவருஞ் சூழுமெமர்
காற்றோ வெனத்தினை காக்க விரைந்து கடுகுவர்யாம்
ஆற்றோ மவர்சினம் நீருநும் மூருக் ககலுமினே. (110)

(கு-ரை.) எற்று-எதிர்த்து. எமர்-எங்கள்வேடர். கடுகுவர்-விரைந்து வருவர். ஆற்றோம்-தாங்சமாட்டோம்.

தலைவன் கையுறை புகழ்தல்.

(இ-ள்) இனிக் காலந்தாழ்க்கலாகாதென்று தான்கொண்டுவந்தகாட்சிப் பொருளைத் தலைவன் புகழ்ந்து கூறுதல்.

உற்றகட் டிப்பொன் னனையாள் நிதம்பத்திவ் வொண்டழைதான்
பொற்றகட் டிற்பொதி பட்டெனப் போர்க்கப் பொருந்திடுங்கால்
அற்றகட் டிற்றுயில் வான்மரு மான்மெய் யசலத்திலேர்
முற்றகட் டின்னுரை யீர்மெய்பொய் யாதென் மொழிகொண்மினே.

(கு-ரை.) ஒண்-ஒளியுடைய. தழை-மார்தளிர். காலற்ற கட்டில்-காலில்லாதகட்டில்; அதாவது பாம்பாகிய கட்டில். மருமான்-மருமகன். ஏர்-அழகு. முற்று-முதிர்ந்த. அகட்டு-வயிற்றினையும். இன்னுரையீர்-இனிய வார்த்தையினையுமுடையீர்.

இதுவுமது.

பற்கிது தோற்ற தெனினுங் குழற்குப் பகையெனலாம்
அற்கிது வெல்லுங் கதிர்மதி யாமென் றவளிடம்போய்
நிற்கிதம் பேசிக் கொடுத்தாரேன் றிம்முத்த நீர்கொடுமின்
தற்கியின் ளுர்திரு மால்மரு கன்பரங் கற்புறத்தே. (112)

(கு-ரை.) பற்கு-பல்லுக்கு. இது-இம்முத்தம். அற்கு-இருளுக்கு. கிற்கு-கினக்கு. கற்கி-குதிரையவதாரம். பின்-பிற்காலம். பரங்கல்-பரங்கிரி.

பாங்கி கையுறை மறுத்தல்.

(இ-ள்) தலைவன் புகழப்பட்ட காட்சிப்பொருளைப் பாங்கி மறுத்துக் கூறுதல்.

பாமலை வேலவ னெமரொரு பெட்கிச்சைப் பட்டுக்கணி
மரவுரு வாய்நின் றதற்கே பொருத வனசரர்போற்
றிரமிகெம் வீரர் நுமதுருக் காணிற் செருப்பர்நும்செங்
காமுறு பூந்தழை வாங்கிலெம் மோடவட் காதுவரே. (113)

(கு-ரை.) பாமலை-பரங்கிரி. பெட்கு-பெண்ணுக்கு. கணி-வேங்கை. வனசரர்-வேடர். வீரர்-வீரமிகுந்த எங்கள் வேடர். செருப்பர்-கொலைசெய்வர். அவட்காதுவர்-அவளைமோதுவர்.

இதுவுமது.

நம்முத் தமிழுணர் நண்பீர்நுங் கைம்முத்த நாங்கள்பெற்றால்
இம்முத்தம் வேலன் பரங்கிரிச் சாரலி னேதெவர்க்கு
நும்முத்த மீந்துபெற் றீரென் றெமர்மிக ரோதல்செய்வர்
எம்முத் தமகுண நீக்குமி தேற்றில மேதுமினே. (114)

(கு-ரை.) நும்முத்தம்-உங்களுடைய முத்துதல். எம் - எங்களுடைய. ஏற்றிலம்-ஏற்றுக்கொள்ளமாட்டோம்.

ஆற்றாநெஞ்சினோ டவன்புலத்தல்.

(இ-ள்) பாங்கி மறுத்தலைச் சகியாதநெஞ்சுடனே தலைவன் வருந்திக் கூறுதல்.

கண்ணுக் கினிய தளிர்மணி யீயில்நம் காதலியாம்
பெண்ணுக் கினியவ ரேற்றவள் கையிற் பெயார்மனமே
மண்ணுக் கினியதி யெங்கேகற் றுரிவர் வாடுமெனைப்
புண்ணுக் கினியிட மாக்கினை சேய்மெய்ப் பொருப்பிடத்தே. (115)

(கு-ரை.) இனியவர்-இனிமையாயுள்ள பாங்கியார். பெயார்-கொடுக்கமாட்டார். இனியதி-இல்லாதமுறை. இவர்-இப்பாங்கியார். மெய்ப்பொருப்பு-பரங்கிரி.

### இதுவுமது

தோடார் குழலிதன் மெய்யிற்குத் தோற்ற துயரத்தினும்
வாடாத மாந்தளி ரென்கையிற் பட்டென்னில் வாடியதோர்
கோடார் களிற்றி னிளங்களி றேய்பரங் குன்றிலெனக்
கீடார் பிறர்க்கிடர் செய்வாருட் கூறுக வெண்மனமே. (116)

(கு-ரை.) தோடு-பூவிசழ். மெய்யிற்கு-உடம்பினுக்கு. என்னில் - என்னைப்போல். ஓர்கோடு-ஒற்றைக்கொம்பு. இளங்களிறு-இளைய யானைபோன்ற முருகக்கடவுள். ஈடு-ஒப்பு.

### பாங்கி யாற்றுவித்தகற்றல்.

(இ-ள்) இவ்விதம் வருந்துதலைக்கண்ட பாங்கி தலைவனை யஞ்சாதே நாளைவாவெனக் கூறிவிடுத்தல்.

விண்ணு ளிரவி வரல்போற் குகன்பர வெற்பகத்திம்
மண்ணு ளிரவி யெனவந்து நின்றநும் மையலற
எண்ணு ளிரவின முறையின்றி ராவி லிரந்துரைத்துக்
கண்ணுறக் கண்டுநுங் கையுறை கொண்டெதிர் காட்டுவனே. (117)

(கு-ரை.) இரவி-சூரியன். இரவி-யாசகன். எண்ணுள்-யோசனைநிறைந்த. இரவின்முறை - யாசகமுறைப்படி. இரந்து - யாசித்து. கையுறை - காட்சிப்பொருள்.

இவற்றுள் தலைவன் கூற்றாயினவெல்லாம் இரந்து பின்னிற்றற்கும் பாங்கி கூற்றாயினவெல்லாம் சேட்படுத்தற்கு முரியன. இதுவரை ஐந்தாநாள் நிகழ்ச்சி.

### இரந்து குறைபெறாது வருந்திய கிழவோன் மடலே பொருளென மதித்தல்.

(இ-ள்) மறுநாட்காலையில் வந்ததலைவன் பாங்கியாற் காரியமில்லையெனக் கருதி இரந்து குறைமுடியார்தாயினேமென்று வருத்தமுற்று இனி நாம் செய்யக்கடவது மடலேறுதலேயெனத் தன்னுள்ளே மதித்துக்கூறுதல்.

ஆபத்து வேளை யுதவிசெய் யாதவ ராலினியென்
நீபத்து வேலன் பரங்கிரி வாழுவ னோர்குளா
லேபத்துப் பெண்ணை யிதழ்தேடி யேயினி யேறுவதே
தாபத் துயர்தவிர்க் குய்யும் பெருமருந் தாமெனக்கே. (118)

(கு-ரை,) நீபத்து-கடம்பமாலையுடைய. பத்து-அன்புடைய. பெண்ணை-பனை. இதழ்-மடல். (ஆகுபெயர்) தாபம்-வெப்பம்.

பாங்கிக்கு உலகின் மேல்வைத் துரைத்தல்.

(இ-ள்.) தலைவன் அம்மடலேற்றினைப் பாங்கிக் குலகின்மேல் வைத்துக் கூறுதல்.

ஏலத்தந் நெஞ்சுக் கினியார் தனக்கரி யேறப்பெறார்
தாலத்தி லெய்து மடற்பரி யேறுவர் தாமதியார்
சீலத்தின் மிக்க பரங்கிரிக் கந்தனைச் சேரப்பெறார்
காலத்தி னூற்செயு நன்றறி யாமையைக் கற்றவரே. (119)

(கு-ரை.) ஏல-பொருந்த. தாலம்-பனை + உலகம். கற்றவர்சேரப் பெறாரெனக்கூட்டுக.

மடலேறலாவது-பனங்கருக்காற் குதிரையும் பனந்தருவினுள்ள மற்றவற்றால் பண்டி முதலானவுஞ்செய்து அக் குதிரையின்மேலேறுவது; அங்ஙனம் ஏறுவான் நிருவாணியாயுடலெங்கும் நீறுபூசித் தான் இச்சித்த தலைவியினுருவை யொருபடத்திற் றன்கையாலெழுதி, அப்படத்தின் தலையிலே தன் பெயரை யெழுதித் தன்கையிற்பிடித்து நடுவூருள்ளே நாற்சந்தியில் ஆகார நித்திரையில்லாமல் அப்படத்தின்மேற் பார்வையையு மனத்தையும் வைத்து, ஆசைவசப்பட்டவனாய் வேறுணர்ச்சியில்லாமல் ஆவுரிஞ்சினும் அக்கினி மேற்படினும் அறிதலின்றி, மழை, வெயில், காற்றால் மயங்காதிருக்குமிடத்து, அவற்றைக்கண்ட வூரிலுள்ளார்பலருங் கூடிவந்து நீ மடலேறிச் சோதனை தந்தால் நீ யிச்சித்தபெண்ணைக் கொடுக்கச்செய்வோமென்றுகூற, அதற்கவனிசைந்தானாயின், அரசனுக்கறிவித்து, அவனேவலால் ஏறவேண்டும். ஏறும்போது பூளையெலும்பு, எருக்கலம் பூ இவைகளாற் கட்டிய மாலை புனைந்து கொள்ளல் வேண்டும். அக் குதிரையின் வடத்தை யிழுத்தவுடன் அக்குதிரையந்திரத்தினுருளை யுருண்டோடும்போது பனங்கருக்கு அறுத்தஇடமெல்லாம் இரத்தம் வெளிப்படாமல் வீரியம் வெளிப்பட்டால் அப்போதவனை யலங்கரித்து அவனுக்கு அரசன் கொடுக்கச்செய்தல் வேண்டும். இரத்தம் வெளிப்பட்டால் அவனை யரசனூற் கொலைசெய்துவிடல்வேண்டும். இது, புலவரால் நியமிக்கப்பட்ட வழக்கு.

அந்தணைத் தன்மேல்வைத்துச் சாற்றல்.

(இ-ள்) தலைவன் அம்மடலேறுவேனென்று பாங்கிக்குக் கூறுதல்.

பூளை யெருக்கென்பு கண்டா லிவன்சிவன் போலுமென்பார்
காளை யெருத்தின்றிக் கார்வாய் பனங்கற்கி காண்கிலந்த
வேளை யிவன்மட லூர்வோனென் பாரெனை மேவுயிவை
நாளை யறியினம் வேலோன் பரங்கிரி நங்கையரே. (120)

(கு-ரை.) பூளை - பூளைப்பூ. எருக்கு - எருக்கலம்பூ. காளையெருத்து- காளையாகிய இடபவாகனம். இன்றி-இல்லாமல். கார்-கருமை. கற்கி-குதிரை.

பாங்கி தலைமகளவயவத் தருமை சாற்றல்.

(இ-ள்) அவ்வாறு கூறக்கேட்ட பாங்கி படமெழுதிய பின்னன்றோ மடலேறுவது. ஆதலால் தலைவி அவயவம் எழுத உன்னால் முடியாதென்று தலைவனுக்குச் சொல்லுதல்.

மடலூர்வி ரேலும் மனங்கவர் மாத வயவங்களோர்
படமே லெவையு மெழுதவல் லீர்தன பாரவெம்மை
யுடனுய தண்மையை யெங்ஙனந் தீட்டுவி ரொண்கருணைக
கடலாங் குகன்பரங் குன்றினைக் கைதொழுங் காதலரே. (121)

(கு-ரை) வல்லீர்-வல்லமையுடையீர். எங்ஙனம்-எவ்விதம். தீட்டுவிர்- எழுதுவீர்.

தலைவன் றன்னைத்தானே புகழ்தல்.

(இ-ள்) இவ்வாறெழுத லரிதென்று கூறிய பாங்கியை நோக்கித் தலைவன் றன்னைத்தானே புகழ்ந்து கூறுதல்.

பனைமட லாற்பரி செய்துஞரும் வன்மை படைக்குமயன்
நினைவுறில் யாது செயமுடி யாதது நீர்மைவெம்மை
புனைகுழ லீரொன்றின் சார்பாமவ் வொன்றைப் பொறிப்பனென்றால்
அனையவுஞ் செய்தன வாமேறும் சேய்மெய் யசலத்தினே. (122)

(கு-ரை) பரி-குதிரை. அயன்-பிரமன். யாது-எது. அனையவும்-அத்தன் மையுடையனவாகிய வெம்மை தண்மைகளையும். சேய்-முருகக்கடவுள்.

பாங்கி யருளியல் கிளத்தல்.

(இ-ள்) அவ்வாறு தலைவன் கூறக்கேட்ட பாங்கி அருள்முறைமை கூறுதல்.

அப்பனை மாய்த்துப் பரிபவத் தோற்றமுண் டாக்கியின்னுர்
மெய்ப்பயன் கொள்ள விரும்புதல் சேர்தன்மெய் வெற்புறுநாட்
டொப்பரு நும்மிடத் தல்லர்மல் யார்கண்ணு முற்றறியோம்
செப்ப மிருதலைக் காம சுகமென்று தேர்ந்திலிரே. (123)

(கு-ரை) அப்பனை-அத்தப்பனை + பிதாவை. பரிபவம் - அவமானம் + குதிரைப்பிறப்பு. சேந்தன்-முருகக்கடவுள். நாடு-பாண்டிநாடு. யார்கண்ணும்-யாரிடத்தும். இருதலைக்காமம் செப்பமென்று கூட்டுக.

## கொண்டு நிலைகூறல்.

(இ-ள்) தலைவனுயிரைத் தாங்கிக்கொண்டு நிலைமையாகிய மொழியைப் பாங்கி கூறுதல்.

காதல மாறிரண் டுள்ளா ரருள்செயுங் கார்த்திகைநல்
விரதம் விடினும் வினவுவர்க் கீயும் விரதம்விடாத்
திரமிகு மாந்தர் புயில்பரங் குன்றமர் சேயிழையாள்
வாமுத வாளெண்ணி லேறுக நீர்புன் மடற்பரியே. (124)

(கு-ரை) வினவுவர்-கேட்பவர்.

இவற்றுள் தலைவன் கூற்றாயின எல்லாம் மடற்கூற்றிற்கும் பாங்கி கூற்றாயின எல்லாம் மடல் விலக்கிற்கு முரியன.

## தலைவி யிளமைத்தன்மை பாங்கி தலைவற்குணர்த்தல்.

(இ-ள்) பாங்கி தலைவியினது மங்கைப்பருவம் நிரம்பாமையைத் தலைவனுக்குக் கூறுதல்.

இடையை யிளைஞர் மனத்தை வருத்தி யெழுந்தகொங்கை
யுடையவ ளல்லள் நும் காமக் குறிப்பை யுணரும்வன்கட்
கடையு மிலாவிச் சிறுமியை நீவிர் கலந்துசுகம்
அடைவதென் வேலன் பரங்கிரிச் சார லலர்பொழிற்கே. (125)

(கு-ரை) கட்கடை-கடைக்கண். என்-யாதிருக்கிறது.

## தலைவன் றன்னை வருத்தியவண்ண முரைத்தல்.

(இ-ள்) அங்ஙனம் கூறிய தலைவியின் இளமைப்பருவமே தன்னைவருத்திய விதத்தைத் தலைவன் பாங்கிக்குக் கூறுதல்.

சேயார் பரங்கிரிச் சூழ விளஞ்சிங்கஞ் சிந்துரத்தைப்
பாயா திருக்குங்கொல் சொல்லீ ரிளமைப் பருவத்திலே
வீயாத மாமய லீந்தே வருத்தினள் வீங்குகொங்கை
சாயாத மங்கைப் பருவத்தென் செய்யத் தகாததுவே. (126)

(கு-ரை) சேய்-குமாரக்கடவுள். சிந்தூரம்-யானை. வீயாத - கெடாத. என்-எது.

### பாங்கி தலைவி செவ்வியருமை செப்பல்.

(இ-ள்) பாங்கி தலைவியின் சமயத்தினருமையைத் தலைவனுக்குக் கூறுதல்.

கண்ணிதர் சேடியர் யாருஞ் சமயங் கருதிக்கையாத்
துண்ணிக முன்பினெப் போதெதிர் நோக்குமென றுற்றுநிற்கும்
பெண்ணிவள் பால்நம் பரங்கிரி வேலன் பிறங்கருளால்
எண்ணிய யாவு முடியுமென் றாலுமங் கேகரிதே. (127)

(கு-ரை) சேடியர்-பாங்கியர். கையாத்து-கைகட்டி. நோக்கும்-பார்ப்பள். ஏகரிது-செல்லுதல் முடியாது.

### தலைவன் தலைவியின் செவ்வி யெளிமைசெப்பல்.

(இ-ள்) தலைவன் தன்குறை சொல்லுதற்குத் தலைவிசமய மெளிதெனக் கூறுதல்.

என்பே ரெழுத்தை முறையே யெதிர்நின் றியம்பினுநும்
மன்பே ராசி மணிபொன் னணிகள் மகிழ்ந்தளித்து
முன்பே ரகங்கொள் முருகன் பரங்கிரி மொய்குழலீர்
பின்பே ரவாவி னுமைக்கூ யடிக்கடி பேசுவனே. (128)

(கு-ரை) மன்-அரசன். முன்பு-முற்காலம். ஏரகம் - ஆறுபடைவீட்டி லொன்றாகியதலம். பேரவா-பெரிய ஆசை. கூய்-அழைத்து.

### பாங்கி யென்னை மறைத்தபினெளிதென நகுதல்.

(இ-ள்) நீவிரிருவரு மெனக்குத் தெரியாமல் கலந்தபின் இக்கள வொழுக்க மொழுகுதல் இனி யெளிதென நகையாடிப் பாங்கி கூறுதல். எனவே, இருவர் களவொழுக்கத்தையும் பாங்கி குறிப்பா லறிந்துகொண்டா ளென்பதாம்.

ஏற்றவொன் றுக்கொன் றிணையாகத் தக்க விரண்டுபண்ட
மாற்ற லெனவிரு வீருறுநெஞ்சினை மாற்றிக்கொண்டு
ஆற்ற லெனக்கு மறைத்தீர் நுமக்கென்னி னுவதொரு
தோற்ற மெவனங் குகன்பர வெற்பினைச் சூழ்வெற்பரே. (129)

(கு-ரை) ஏற்ற-பொருந்திய. ஆற்றல்-வலிமை. என்னின் - என்னால். தோற்றம்-தோன்றக்கூடிய விஷயம், என்-யாது. பரவெற்பு-பரங்கிரி.

### அங்நகை பொரு அதவன் புலம்பல்.

(இ-ள்) பாங்கி நகையாடிக்கூறுதல் சகியாமல் தலைவன் வருந்திக் கூறுதல்.

சிரிப்பில் வெதுப்பல் சிவனன்றி யில்லெனச் செப்புவரால்
விரிப்பி னுனைமுன்பு காணு தவர்மனம் வேவதுபோல்
மரிப்பி லுடலமும் வேவச்செய் தாய்மலர் வாய்நகையால்
அரிப்பின் கரிகிரி நீதிச்செவ் வேள்மெய் யசலத்திலே. (130)

(கு-ரை) சிரிப்பில்-சிரிப்பால். வெதுப்பல்-சுடுதல். விரிப்பில்-விரித்துப் பேசுமிடத்தில். மரிப்பில்-மரணமில்லாத. அரி-சிங்கம். கரி-யானை.

### இதுவுமது.

தேள்விடங் தீரெனச் சொல்வார்க்கு நாகத் திறற்கொடிய
நீள்விட மூட்டுதல் போற்காமத் தீத்தெற நேர்ந்தவெனை
யாள்விட மாமென நின்றசி செய்தனை யாற்றலன்முன்
னுள்விட முண்டவர் சேயார் பரங்கிரி நாட்டகத்தே. (131)

(கு-ரை) நாகம்-பாம்பு. தெற-வருத்த. ஆள்விடம்-மனிதவிஷம். அசி-அவமதிப்புச்சிரிப்பு ஆற்றலில்லேன்-ஆற்றுதலில்லேன். சேய்-குமாரக்கடவுள்.

### பாங்கி தலைவனைத் தேற்றல்.

(இ-ள்) அங்ஙனம் வருந்திய தலைவனைப் பாங்கி நின்கருத்தை முடிப்பே னெனத் தெளிவித்தல்.

எல்லா வுறுப்பினுங் கண்சிறங் தென்ன வேனையனையார்
பல்லா ரிருப்பினும் நானே யவட்குயிர்ப் பாங்கியெனை
யல்லாம லொன்று முடியாதண் ணலஞ்ச லஞ்சலுடற்
கல்லார்வில் லார்குரு வைகும் பரங்கிரிக் கானகத்தே. (132)

(கு-ரை) சிறந்தென்ன - சிறந்தாற்போல. அண்ணல் - அண்ணலே. அஞ்சல்-பயப்படாதே. கல்-மலையாகிய. ஆர்-நிறைந்த. உடல்-பொன். குரு-குமாரக்கடவுள்.

### பாங்கி கையுறை யேற்றல்.

(இ-ள்) தலைவன்கொடுத்த காட்சிப்பொருளைப் பாங்கி யங்கீகரித்து வாங்கிக்கொள்ளுதல்.

சதமக ஞதியர் வாழ்வுந் தருங்குகன் றண்மலர்ப்பூம்
பதமிசை யர்ச்சனை பண்ணுந் தளிரிற் பலன்கொடுக்கும்
இதமுறு மித்தழை நம்பாங் குன்றினி லெங்கெடுத்தாய்
மதனனுங் காணிற் சமழ்க்கும் வனப்பமர் மார்பரசே. (133)

(கு-ரை) சதமகன்-இந்திரன். தளிரின்-தளிரைப்போல. சமழ்க்கும்-வெட்கப்படும். வனப்பு-அழகு.

## கிழவோ ஞற்றல்.

(இ-ள்) தலைவன் துன்பம் நீங்கிச் சொல்லுதல்.

ஈவாருக் கேற்பர் கிடையா திருந்துபின் னேகிடைக்க
ஓவா வுவகை யுறல்போல வென்கை யுறைமறுத்தார்
வாவாவென் றேபின்னர் வாங்கவென் னெஞ்சின் மகிழ்ச்சியுற்ற
தாவா விதுநம் பாங்கிரிக் கந்த னருட்செயலே. (134)

(கு-ரை) ஓவா-நீங்காத. கையுறை-காட்சிப்பொருள். ஆவா-ஆச்சரியம் ஆச்சரியம்.

இவற்றுள், பாங்கி கூற்றுயின எல்லாம் குறை நேர்தற்குந் தலைவன் கூற்றுயின எல்லாம் மடற்கூற் றொழிதற்கு முரியன.

## இறைவன்றனக்குக் குறைநேர் பாங்கி யிறைவிக்கவன் குறை யுணர்த்தல்.

(இ-ள்) தலைவன் வருத்தந் தணிப்பேனென்று சொல்லிய பாங்கி அவ் வருத்தத்தைத் தலைவிக்குக் கூறுதல்.

விட்கும் பெருந்தெய்வ மாகுங் குகன்பர வெற்பனையாய்
உட்கு முடலொ டொருவரங் கானி லுலாவுவர்யாம்
பெட்கு மரசி யெனும்நின் விழிகளுநம் பெட்குந்தழை
நட்குங் கருத்தொடென் முன்னேந்தி நிற்பருள் நாணுவரே. (135)

(கு-ரை) விட்கும்-விண்ணுலகத்துக்கும். பரவெற்பு-பாங்கிரி. உட்கும்-நாணும். பெட்கும்-விரும்பும். நட்கும்-சிநேகஞ்செய்யும்.

## இதுவுமது

ஆரோ யிவரென் றறியேன் புறக்கணித் தாலுஞ்செலார்
சீரோனல் காக்குமப் போதாங் குனக்குத் தெரிந்தவரோ
பேரோதுஞ் சொற்றிலர் ஈங்கொளத் தக்க பெருமையுளார்
கூரேறு வேற்கைக் குமாரன் பாங்கிரிக் கோற்றொடியே. (136)

(கு-ரை) புறக்கணித்தாலும்-பராமுகமா யிருந்தாலும். ஏனல்-தினைப் புனம். கூர்-கூர்மை.

## இறைவி யறியாள்போன்று குறியாள் கூறல்.

(இ-ள்) பாங்கி யிவ்வார்த்தை கூறவே தலைவிகேட்டுத் தானொன்றும் அறியாதவள்போல மனத்திற் கருதாத வேறொன்றைக்கருதிக் கூறுதல்.

வெளிறி லறிவினர் தேருங் குகன்பர வெற்பொருசார்
பிளிறு மருவி திரைக்கையின மாமணி பெய்யறைப்பாற்
களிறும் பிடியும் புனல்மாந்தி யாடுங்கண் காட்சிதனை
யொளிறும்வெண் மூரற் சகியேகண் டேனிஃ தோர்வியப்பே. (137)

(கு-ரை) வெளிறு-மந்தம். பரவெற்பு-பரங்கிரி. ஒருசார்-ஒருபக்கத்தில். பிளிறும்-ஒலிக்கும். பெய்-வீசுகின்ற. மாந்தி-உண்டு. ஒளிறும்-பிரகாசிக்கும்.

## பாங்கி யிறையோற் கண்டமை பகர்தல்.

(இ-ள்) பாங்கி நின்வயப்பட்டவனாக வந்த அதனைக் கண்டேனென்று கூறுதல்.

தாயுரை யால்வனஞ் சார்வான் மருகன்மெய்ச் சாரலிடை
வாயுரை யாடல்விட் டென்னை மறைத்து மலர்விழியால்
நீயுரை யாடி விளையா டம்மானினை நேடல்கண்டேன்
வேயுரை யாலன்றி நீசெய்வ தொன்றிலை மேவினியே. (138)

(கு-ரை) தாய்-கைகேயி. மெய்ச்சாரல்-பரங்கிரிப்பக்கம். உரையாடல்-பேசுதல். அம்மான்-அந்தமகான் + அழகியமான். வேய்-தூது. (தாற்பரியம்)

## பாங்கியைத் தலைவி மறைத்தல்.

(இ-ள்) தலைவி தன் களவொழுக்கத்தைப் பாங்கிக்கு மறைத்துக் கூறுதல்.

மங்குல் பொழியும் பரங்கிரி வேலன் மலரருள்போற்
பொங்குநங் கான்வளங் காண்பாரும் வேட்டம் புரிநருமே
தங்குநம் மூர்நெறி போய்மீ ளுவாவர் தம்மையெலாம்
எங்குல மாத ரெதிர்பார்ப்ப ரோவுன் னிசைவசையே. (139)

(கு-ரை) வேட்டம் புரிநர்-வேட்டையாடுகின்றவர். இசை-சொல்.

இதுவுமது.

பொன்னுநன் னூன்மின்னு நட்பாங் குகன்மெய்ப் பொருப்பிடத்திற்
கொன்னுனை வேலெனக் கண்கொளல் போற்சொல்லுங் கொண்டனை
இன்னு மொருமுறை யிவ்வார்த்தை சொல்லற்க வேழையெனப்[யோ
பன்னு மொழிதனக் கேயாக்கிக் கொண்டபொற் பைந்தொடியே. ()

(கு-ரை) கொல்-கொல்கின்ற. பொன்-இலக்குமி. நான்மின்-சரசுவதி. நட்பா மெய்ப்பொருப்பெனக்கூட்டுக.

பாங்கி யென்னைமறைப்ப தென்னெனத் தழாஅல்.

(இ-ள்) இவ்வாறு மறைத்துக்கூறிய தலைவியை யுனக்கு நான் வேறோ வென்று மகிழ்ச்சியாகத் தழுவிக்கொண்டு கூறுதல்.

துள்ளின மாடு பொதிசுமக் கும்மெனுந் தொன்மைகண்டேன்
எள்ளின னென்று முனியேல் பரங்குன் றிறையருளால்
உள்ளிய யாவு மொளியா துரைக்கி லுடன்முடிப்பல்
தள்ளி யகற்றலென் கண்ணேயென் றூரத் தழீஇயினளே. (141)

(கு-ரை) தொன்மை-பழமை. எள்ளினன் - இகழ்ந்தேன். உள்ளிய நினைத்த. முடிப்பல்-முடிப்பேன்.

இதுவுமது.

கடம்பூருக் கேகும் வழியா தெனவயற் கண்ணுழுவோன்
இடம்பூணி யென்பசுக் கன்றன் றெனலொப்ப வேந்தயில்சூர்
உடம்பூ டுருவ விடுத்தோன் பரங்கிரி யூரனையாய்
இடம்பூறு நின்விடை யென்கேள்விக் கொப்பச் சிறந்ததன்றே. ()

(கு-ரை) இடம்பூணி-இடப்பக்கத்து எருது. சூர்-சூரன். விடை-எதிர் வார்த்தை.

இதுவுமது.

யானென் றுயிரொன் றுளமொன் றெனநட் புரிமையுற்ற
நாளென்று கேட்கில் நமர்தொழுஞ் சேய்மெய் நகுலத்தில்நீ
தானென் றுரைத்து மறைத்தாய்நின் மற்றைச் சகிகளைப்போல்
தேனென்று சொல்லி யெனையு நினைத்திகொல் செப்புமெய்யே.(148)

(கு-ரை) மெய்குலம்-பரங்கிரி. சொல்லி-சொல்லையுடையாய். நினைத்தி நினைத்தாய்.

### பாங்கி கையுறை புகழ்தல்.

(இ-ள்) பாங்கி தலைவன்கொடுத்த காட்சிப்பொருளைப் புகழ்ந்து கூறுதல்.

பொருனைத் துறைமுத் தொடுசந்த ஞசலப் பூந்தழையும்
அருமைப் பொருள்நம் பரங்கிரி வாணருக் கன்பர்தந்தார்
இருமைக்கு நற்றுணை யாகுஞ்செவ் வேற்கை யிறையருளாற்
கருமைக் குழால்வந்த பாக்கிய மாமிவை கண்டுகொளே. (144)

(கு-ரை) பொருனை-தாம்பிரபன்னிநதி. சந்தஞசலம் - பொதிய மலை. குழால்-கூந்தலையுடையாய்.

இவ்வாறு துறைகளும் வலிதாகச்சொல்லிக் குறைநயப்பித்தற்கும், மெலிதாகச் சொல்லிக் குறைநயப்பித்தற்கு முரியன.

### தோழி கிழவோன் றுயர்நிலை கிளத்தல்.

(இ-ள்) பாங்கி தலைவனது வேட்கைகொண்ட துயர்நிலைமையைத் தலைவிக்குக்கூறுதல்.

மாலையைக் காண்ப ரிருள்வரு மென்று மயங்குவார்பூஞ்
சோலையிற் கூடத் துயிலும் பறவைத் துணைகளைக்கண்
டாலையிற் பூங்கரும் பாயுள் ளுடைவ ரவர்க்கிரங்காய்
காலையிற் கைதொழு வார்க்கருள் கந்தன்மெய்க் கல்லகத்தே. (145)

(கு-ரை) ஆலை-கரும்பாலை. மெய்க்கல்-பரங்கிரி.

### மறுத்தற்கருமை மாட்டல்.

(இ-ள்) இவ்வாறு பாங்கி கூறிய சொற்களுக்கு விடையின்மையால இனி, அத்தலைவன்வந்தால் என்னால் மறுத்தற்கரிதெனப் பொருத்திக் கூறுதல். மாட்டல்-பொருத்தல்.

ஓமக் கனல்வளஞ் சாலும் பரங்குன் றொருவருமே
காமக் கனலைச் சகியாமல் வள்ளி கழல்பணிந்தார்
சேமக் கனலொடு வந்தே மதன்செய் செருக்கிடைந்தார்
ஏமக் கனலினித் தாழ்த்தாலுண் டாமவ ரென்செய்வரோ. (146)

(கு-ரை) ஓமக்கனல்-யாகாக்கினி. ஒருவர் - ஆட்டுவாகனத்தையுடைய குமாரக்கடவுள். சேமக்கனல்-முன் வில்லொடிந்தபோனால் பின் வேண்டிய

தற்கு வைத்திருக்கும் வில்லாகியகரும்பு. இடைந்தார்-வருந்தினர். ஈமக்கனல்-மயானத்தீ.

இதுவுமது.

இகத்தி லுயர்ந்த சிலம்பருக் கென்சொ லெனைத்தும்பொய்யாய்
மிகத்திறம் புற்ற தினிவிடிந் தாலவர் மென்கமல
முகத்திலெவ் வாறு விழிப்பேன்சொல் லாறு முகத்திறைமெய்
நகத்தில் விளங்குங் கொடிச்சியர் யாவர்க்கு நாயகியே. (147)

(கு-ரை) சிலம்பர்-குறிஞ்சிநிலத்தலைவர். திறம்பு-மாறுபாடு. மெய்நகம்-பரங்கிரி. கொடிச்சியர்-குறத்தியர்.

தலைவன் குறிப்பு வேறாக நெறிப்படக் கூறல்.

(இ-ள்) தலைவனெண்ணுங்குறிப்பு நம்பால் யாசிப்பவன்போற் றோன்றவில்லை. வேறுவினைப்பானாகத் தோன்றியதென்று ஒழுங்குபடப் பாங்கிகூறுதல்.

இரக்கத் தகாதவர் வந்திரந் தாலவர்க் கீயுமின்பஞ்
சுரக்கத் தகாய்மன்முன் போந்தேறிப் போந்துனைத் தோய்வரப்போ
தாக்கத் தனற்படல் போலுரு காநிற்பை யாங்கதுவோ
புரக்கத் தகுநிற் கழகாங் குகன்மெய்ப் பொருப்பணங்கே. (148)

(கு-ரை) இரக்க - யாசிக்க. சுரக்க - செய்ய(தாற்பரியம்.) தகாய்-தக்கவளில்லை. போந்து-பனைமடல். (ஆகுபெயர்) போந்து-வந்து. அத்து-சிவப்பு.

பாங்கி தலைவியை முனிதல்.

(இ-ள்) தலைவி யொன்றுக்கு மறுமொழி கொடாளாக அவளைச்சினந்து பாங்கி கூறுதல்.

எத்தனை யோவிதஞ் சொன்னும் யாது மியம்புகிலாய்
உத்தம மாகுமுன் றோழிய ரோடுண்மை யோதணங்காம்
புத்தமு தேயென் மனமறி யாமற் புகன்றகுற்றம்
அத்தனை யும்பொறுப் பாய்சேய் பரங்குன் றடைவனின்னே. (149)

(கு-ரை) யாதும்-ஒன்றும். சேய்-குமாரக்கடவுள். அடைவன்-சேர்வேன்.

தலைவி பாங்கியை முனிதல்.

(இ-ள்) அங்ஙனங் கூறிய பாங்கி சொற்களைப் பொறாதவளாய்த் தலைவி பாங்கியைக் கோபித்துக் கூறுதல்.

அன்னையர் கோப மயலா ரலாறி யாதவள்போ
லென்னை முனிந்தனை யென்னையர் கண்டிடி லேதமெலாம்
உன்னை யடுத்துத் தலைவர்க்கு மாமிவற் றொன்றுமுள்ளாய்
பின்னை மருகன் பரங்கிரி யாய்நன் றுன் போறிவே. (150)

(கு-ரை) அலர்-பழிச்சொல். என்னையர்-என்பிதாக்கள். தலைவர்க்கும்-தலைவனுக்கும். இவற்று-இவைகளில். உள்ளாய்-நினைக்கமாட்டாய். பின்னை-இலக்குமி.

தலைவி கையுறையேற்றல்.

(இ-ள்) அங்ஙனங் கூறியபின் இனி, பாங்கியையன்றி யொன்றுமுடியா தென்று கருதி அவள்கொடுத்த காட்சிப்பொருளைத் தலைவி வாங்கிக் கொள்ளுதல்.

இதுகாறு நின்சொற் கிணங்கி யிருந்தின் றிணங்கிலனென்
பதுவேண் டுவதிலை கோபமி லாம லளிப்பதளி
பதுமா சனன்விதி யீதே லியான்செயற் பாலதினி
யெதுதா னுளது பரங்கிரி வேலனெற் கேதுணையே. (151)

(கு-ரை) இதுகாறும்-இதுவரையும். அளிப்பதளி-கொடுப்பதைக்கொடு. பதுமாசனன்-பிரமன்.

இவ்வாறு துறைகளும் வலிதாகச்சொல்லிக் குறைநயப்பித்தற்கும், மெலிதாகச் சொல்லிக் குறைநயப்பித்தற்கு முரியன.

இறைவி கையுறையேற்றமை பாங்கி யிறைவற் குணர்த்தல்.

(இ-ள்) தலைவி தழை முதலியவற்றை யேற்றுக்கொண்டமையைத் தலைவனுக்குப் பாங்கி கூறுதல்.

ஆதியி லேயுனைப் பார்த்தது போலுன் னரியதழைப்
பாதியைப் பார்த்தலு மேபசந் தாள்கையிற் பற்றியபோ
தேதிய லாதமெய்ப் பாடஃ தென்னென் றெடுத்துரைப்பேன்
வீதியில் மாமயில் மேல்வரு வோன்பர வெற்பரசே. (152)

(கு-ரை) பசந்தாள்-பசலைநிறமடைந்தாள். இயலாத-ஆகாத. மெய்ப்பாடு-காமத்தாற் சரீரத்திலுண்டாகுந்தோற்றம். என்-யாது. பரவெற்பு-பரங்கிரி.

பாங்கி தலைவனுக்குக் குறியிடங்கூறல்.

(இ-ள்) தலைவன் தலைவியைச் சந்திப்பதற்கேற்ற ஒரு அறிகுறியுள்ள இடத்தைப் பாங்கி கூறுதல். அறிகுறி-அடையாளம்.

தெளியு மருவித் துளிகள்முத் தென்னத் தெறித்துவிழும்
ஒளிசெயு மாணிக்கப் பாறையி னோரத்தி னொண்மலர்த்தேன்
அளியருந் திப்பயில் மாதவிப் பந்தருண் டாங்கெய்துவிர்
தளிர்மெல் லடித்தெய்வ யானை வரன்மெய்ச் சயிலத்தினே. (153)

(கு-ரை) அளி - வண்டு. பயில்-தங்குகின்ற. மாதவி - குருக்கத்திமரம். வரன்-கணவன், மெய்ச்சயிலம்-பரங்கிரி.

பாங்கி குறியிடத்திறைவியைக் கொண்டுசேறல்.

(இ-ள்) முன்சொன்ன அடையாளமுள்ள இடத்துக்குத் தலைவியைப் பாங்கி கூட்டிக்கொண்டு செல்லுதல்.

சேய்வரு காந்தட் சுனையாடிச் சோலைச் செழுமலர்கொய்
தாய்வரு கந்தன் பரங்கிரிச் சீருரை யாடியப்பால்
வாய்வருந் தாமற் சிலம்பெதிர் கூய்மகிழ் வண்டலிழைத்
தோய்வரு மின்பமுற் றேமீள்வம் வாசெம்பொ னொள்ளிழையே. ()

(கு-ரை) சேய்-சிவப்புநிறம். ஆய்வரு-ஆராய்தற்கரிய. உரையாடி-பேசி. கூய்-அழைத்து. வண்டல்-மகளிர் விளையாட்டு. இழைத்து-செய்து. ஓய்வரு-நீங்குதலில்லாத.

பாங்கி தலைவியைக் குறியிடத்துய்த்து நீங்கல்.

(இ-ள்) கூட்டிச்சென்ற தலைவியைக் குறியிடத்து நிறுத்திவிட்டுப் பாங்கி நீங்குதல்.

அருக்கத் திரளெனத் தோன்றி பலவு மலர்சுனைவாய்க்
குருக்கத்தி நீழலிற் றென்ற லுலாவிக் குளிர்செயிவ
ணிருக்கத் திருவுளங் கொள்சேய் பரங்கிரி யேய்முலைக்குச்
செருக்கத்தி முத்தம் வான்றிவல் லேவந்து சேருவனே. (155)

(கு-ரை) அருக்கத்திரள்-சூரியர்கூட்டம். தோன்றி-செங்காந்தள். குருக்கத்தி-ஓர்மரம். இவண்-இவ்விடத்து. எய்-ஒத்த. செருக்கு-கருவமுடைய. அத்தி-யானை. வான்றி-வாரிக்கொண்டு. வல்-விரைவில்.

இதுவுமது.

அச்சந் தவிருமிங் கெம்மா னணுகினு மன்புனைக்காங்
கச்சங் கவிழு முலையாய் மிகுசுகங் கண்டிருப்பாய்
நச்சங்க மேவிய வேலோன் பரங்கிரி நங்குகனின்
பச்சந்தப் பாடல் படிப்பார்க் கொணர்ந்து படிப்பிப்பனே. (156)

(கு-ரை) தவிரும்-நீங்கும். எம்மான்-எந்தமான், + எங்கள் மகானுகிய தலைவன். அவிழும்-கட்டுவிடும். ஈ-நல்ல. சந்தப்பாடல்-திருப்புகழ் முதலிய சந்தப்பாட்டு. படிப்பிப்பன்-படிக்கச்சொல்வேன்.

இறைவி யிறையோனிடத்தேதிர்ப் படுதல்.

(இ-ள்) தலைவியைத் தலைவன் நேரேவந்து காணுதல்.

தேங்கு கருணை முருகன் பராங்கிரித் தீம்பொழில்வாய்
வாங்கு திரைகண்க ளாக இரதம் வளரல்குலாத்
தாங்கு கொடியிடை யானை தனமெனத் தான்புறப்பட்
டோங்கு மாசியென் மார்பினிற் றூககவிங் குற்றனளே. (157)

(கு-ரை) தேக்கு - நிறைந்த. வாங்குதிரை-வளைந்த அலை, + தாவுகின்ற குதிரை: இரதம்-தேர்.

புணர்ச்சியின் மகிழ்தல்.

(இ-ள்) வெளி.

விழிவே லெறிந்து தனவேழம் தாக்க மிகமெலிந்தேற்
கழியா விதழமு தூட்டி யணைத்தணைத் தன்புவளர்
மொழியா லுடலமுன போலப பருக்க முயங்கினளாற்
பழிபாவந் தீர்க்கு முருகன் பராங்கிரிப் பைங்கொடியே. (158)

(கு-ரை) தனம்-கொங்கை. வேழம்-யானை. முயங்கினள்-கலந்தாள்.

இதுவுமது.

அதுவேயென் றோத முடியாக் குகன்மெய் யசலமன்னுள்
இதுபோலு மின்ப மிலையிலை யென்ன விணங்குதொறும்
புதுமா திரியெனச் சேர்ந்து கலவி புலவிசெய்து
விதுமா முகம்வெயர் வெய்திய காட்சி விளம்பரிதே. (159)

(கு-ரை) அதுவே-அப்பொருளே. மெய்யசலம்-பராங்கிரி. இணங்குதொறும்-தோயுந்தோறும். புலவி-ஊடல். விது-சந்திரன்போலும். வெயர்-வேர்வை. காட்சி-தோற்றம்.

இதுவுமது.

போதல் வருதல் கருவினுட் டுன்பம் பொருந்துமென
லாதலல் லாதிவ ளங்கத் திடகக ரடக்குறுப்புட்
போதல் வருதலுக் கில்லையென் றோதிப் பொருந்துமின்பம்
ஆதலை யென்னென் றுரைப்பேன் குகன்மெய் யசலத்தினே. (160)

(கு-ரை) கருவினுள் - கருப்பாசயப்பைக்குள். அங்கத்து - சரீரத்தில். இடக்காடக்கு உறுப்புள்-அல்குலாகிய அவயவத்துள். மெய்ச்சயிலம்-பரங்கிரி.

## புகழ்தல்.

(இ-ள்) தலைவியைத் தலைவன் புகழ்ந்து கூறுதல்.

துன்பமு மின்பமுங் காட்டு மிருவினைத் தொல்வலிமை
நன்பது மந்துணை யாகு மிவளிரு நாட்டங்களே
பின்பறி விக்கத் தொடங்கிய சீர்த்திப் பெருமைபெற்றுள்
அன்பமை வார்க்கரு ளாக்குங் குகன்மெய் யசலத்திலே. (161)

(கு-ரை) இருவினை-தீவினை, நல்வினை. தொல்-பழைய. பதுமம்-தாமரைப்பூ. துணை-ஒப்பு. நாட்டங்கள்-கண்கள்.

## தலைவியைத் தலைவன் விடுத்தல்.

(இ-ள்) தலைவியைத் தலைவன் ஆயமாகிய மாதர்கூட்டத்திற் செல்ல விடுத்தல்.

நக்கீர னீங்கு மதுரைத் தமிழ்ச்சங்க நாவலர்போல்
மிக்கீர மாமலர் மொய்குழ லாயுனை விட்டகன்ற
இக்கீர மென்மொழி யாயமின் ஞர்க ளெதிரமைக்கப்
புக்கீர மோடுறை வேலோன் பரங்கிரிப் பூங்கிளியே. (162)

(கு-ரை) மிக்கு-மிகுந்து. ஈரமாம்-குளிர்ச்சியுண்டாம். இக்கு-கரும்பு. ஆயம்-பெண்கள்கூட்டம். புக்கு-புகுந்து. ஈரம்-அன்பு. உறை-தங்குவாயாக.

## பாங்கி தலைவியைச் சார்ந்து கையுறை காட்டல்.

(இ-ள்) குறியிடத்துத் தலைவியை நிறுத்திப்போன பாங்கி தலைவன் போயினபின் தான் கையுறை கொண்டுவந்து காட்டல். கையுறை-காட்சிப் பொருள்.

பயிர்நீங் கிலாநிலன் சூழுங் குமரன் பரங்கிரியாய்
உயிர்நீங் கியவுட லென்னப் பிரிந்துநின் னொண்கண்மகிழ்
செயிர்நீங் கியமல ராராய்ந் தெடுத்துத் தெரிந்துவந்தேன்
அயிர்நீங் கியகுழற் காவன யாவையு மங்கைக்கொளே. (163)

(கு-ரை.) ஒண்-ஒளி. செயிர்-குற்றம். அயிர்-கருமணல். நீங்கிய-ஒப்பாகாமல் தோற்றுப்போன.

## தலைவியைப் பாங்கிற் கூட்டல்.

*(இ-ள்) பாங்கி தலைவியை மகளிர் கூட்டத்திற் சேர்த்தல்.*

*வேலேனோர் வருபகை வெல்லுங் குகன்பர வெற்புறுசெந்*
*தேனேயுன் சேடிய ரின்னமுந் தாழ்க்கிற்சந் தேகிப்பரால்*
*நானே யுனைக்கொடு சென்றா லவரொன்று நாடிலர்நீ*
*தானே தனிக்கி லுறுமே குறைநந் தமர்கட்குமே.* (164)

(கு-ரை.) வேல்-வேலாயுதத்துக்கு. சேடியர்-தோழிப்பெண்கள். நாடிலர்-ஆராயமாட்டார்.

## இதுவுமது.

*அகன்றவட் காண்கில மெங்கெனத் தேடுமுன் னாயத்துள்ளே*
*மகன்றமக் கென்று சிவனு முமையு மகிழவந்த*
*குகன்றிருக் காதை பாங்கிரி மான்மியக் கோவையென்பாற்*
*புகன்றலுப் பின்றியென் பின்னே நடந்து புகுதுகவே.* (165)

(கு-ரை.) *அகன்றவள்-நீங்கினவளை. திருக்காதை-கந்தபுராணமுதலிய திவ்ய சரித்திரம். அலுப்பு-சோர்வு.*

## நீங்கித்தலைவற் கோம்படை சாற்றல்.

(இ-ள்) *தலைவியை ஆயத்துட்சேர்த்து மீண்டுவந்து பாங்கி தலைவனுக்கு ஓம்படை சொல்லுதல். ஓம்படை-மறவாமை.*

*வலைப்பட்ட மானென மாதுநின் னாசை வலையிற்படத்*
*தலைப்பட் டனளென் றயரே லவட்குநின் றற்குமிடை*
*நிலைப்பட்ட வெற்கொரு பேச்சு வாராதொர் நிலையினிற்பாய்*
*இலைப்பட்ட வேற்கை யிறைபராங் குன்றுறை யெம்மரசே.* (166)

(கு-ரை.) *அயரேல்-மறந்துவிடாதே. இலைப்பட்ட-இலைவடிவமாகிய*

## உலகியல் மேம்பட விருந்து விலக்கல்.

(இ-ள்) *உற்றாரயலூரிலிருந்து வந்தால் அவர்க்கு உணவுகொடுத் துபசரித்தல் உலகியல்பாதலால் அவ்வுலகியல் பெருமைப்படத் தலைவனை யெம்மூர்க்கு வந்திருந்து விருந்துண்டுபோமெனப் பாங்கி தலைவன் செல்லுதலை விலக்குதல்.*

விருந்துவந் தார்க்கொரு வேளை யுணவு விசாரித்திடார்
பொருந்துறு மிம்மலை வாண ரெனுமொர் புரையறவின்
றிருந்தெம் முயற்சியி னெய்து முயலினி னிறைச்சிநல்லூண்
அருந்துக காளைக் ககல்கநம் வேள்மெய் யசலத்தனே. (167)

(கு-ரை.) புரையற-குற்றம்நீங்க. அருந்துக-உண்பாயாக. வேள்-குமாரக்கடவுளுடைய. மெய்யசலத்தன்-பாங்கிரியிலுள்ள தலைவன்.

விருந்திறை விரும்பல்.

(இ-ள்) அவ்வுணவைத் தலைவன் விரும்பிக் கூறுதல்.

செந்தினைக் கானுறு மானூர் காத்தினிற் செய்தினைமா
வுந்தினற் பாலதென் றன்பாற் பரங்கிரி யூர்முருகன்
அந்திலிற் கொண்ட தறிந்தவெற் குங்கள்கை யாலமையப்
புந்தியுற் றுக்குண வெல்லாம்புத் தேளிர்தம் புத்தமுதே. (168)

(கு-ரை.) கான்-காடு. அந்தில்-அவ்விடம். கொண்டது-ஏற்றுக்கொண்டது. புத்தேளிர்-தேவர்.

இதுவுமது.

ஆமாவின் பாலி னடுமை வனத்தி னயினியொடு
பூமா மதுர விறலும் பரங்கிரிப் போர்வடிவேற்
கோமான் மனையின் கிழங்கு நமரெமக் குக்கொடுத்தால்
காமா துரத்தினு மாதுர மாமிகக் கைக்கொள்வமே. (169)

(கு-ரை.) ஆமா-காட்டுப்பசு. ஐவனம்-மலைநெல். அயினி-சோறு. இறல் - தேன். மனையின்கிழங்கு-வள்ளிக்கிழங்கு. காமாதுரம் - காமஇச்சை. ஆதுரமா-ஆசையாக.

இப்பதின்மூன்று துறைகளும் கூட்டல், கூடல், பாங்கிற் கூட்டல், வேட்டல் என்னும் நான்குக்குமுரியன; அவற்றுள், பாங்கி கூற்றாயினவெல்லாங் கூட்டற்கும், தலைவியைப் பாங்கிற் கூட்ட லொன்றும், பாங்கிற் கூட்டலுக்கும், தலைவன் கூற்றாயினவெல்லாங் கூடற்கும் வேட்டற்கு முரியனவாகக்கொள்க. இவ்விதம், தலைவனுட்கோள் சாற்றல் முதல் விருந்திறை விரும்பலீறாகச் சொல்லப்பட்ட அறுபத்தொரு துறைகளும் பாங்கியிற் கூட்டத்து விரியென்றறிந்துகொள்க.

இதுவரையும் ஆறும்நாள் நிகழ்ச்சியென்க.

10-பாங்கியிற்கூட்டம் முற்றிற்று.

## பதினொராவது—ஒரு சார் பகற் குறி.

அஃதாவது, ஒரு கூற்றுப் பகற்குறி, அதுயாதெனில், தலைவன் மறுநாள் தன் வேட்கை மிகுதியால் பகற்குறியிடத்து வந்து நிற்கத் தலைவியைப் பாங்கி குறியிடத்துச் செலுத்தாது மறுத்துக்கூறத் தலைவன் வருந்திப்போதல். ஆதலாற் பகற்குறியாகாது. ஒருசார் பகற்குறியாயிற்று, அது, இரங்கல், வன்புறை, இற்செறிப்புணர்த்தல் என மூவகைப்படும். அம் மூன்றுவகையும் கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி மாலையம் பொழுதுகண்டிரங்கல் முதலாகிய பதினாறு விரிகளையுடையன. அவைவருமாறு:—

### கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி மாலையம்பொழுது கண்டிரங்கல்.

(இ-ள்) மேற்கூறியவாறு தலைவன் பிரிந்துபோகத் தலைவி மாலைக்காலத்தைக்கண்டு வருந்துதல். இக்கூற்றுப் பாங்கியை நோக்கிக் கூறுதலும், மாலையை நோக்கிக் கூறுதலும் தன்னுட் கூறுதலுமென மூன்றாம். அவற்றுளிது தன்னுட் கூறுதல்.

தவந்தரு வாழ்விற் சிறந்தவெஞ் சூரன் றனைப்பொருது
சிவந்த பரங்கிரிச் செவ்வேள்கை வேலினுஞ் சீற்றத்ததோ
உவந்தவர் நீங்கிய பின்மார னென்னை யொறுக்குமுன்னே
யவந்தரு மாலைப் பொழுது சிவந்திங் கடைந்ததுவே. (170)

(குரை.) சீற்றத்தோ-கோபமுடையதோ. உவந்தவர்-மகிழ்ந்ததலைவர். ஒறுக்கும்-வருத்தப்படுத்தும். சிவந்து-சிவப்புற்று, கோபித்து.

### பாங்கி புலம்பல்.

(இ-ள்) தலைவி வருத்தத்தைக்கண்டு பாங்கி வருந்துதல்.

சிறுபொழு தைந்தனுள் மாலையென் றுன்னைத் தினமறைத்தல்
உறுமதி யின்றிப் பிரிந்தவர் தம்முளத் தோங்கியமால்
தெறுமயல் செய்திடு மாலுள தாலெனச் செப்பல்கண்டேன்
மறுவறு செவ்வந்திப் போதே குகன்மெய் வரையிடத்தே. (171)

(கு-ரை.) ஐந்து-மாலை, யாமம், வைகறை, அந்திப்பொழுது, நடுப்பகல். மாலை-மாலைக்காலம். மாலையுடையாய் (சிலேடை) மால்-மயக்கம். ஓங்கியமால்-உயர்ந்தபெருமையை. தெறும்-அழிக்கும். மயல்-மயக்கத்தை. அறிவின்றிச் செய்திடுமெனக் கூட்டுக.

### தலைவனிடத் தலைவி வருந்தல்.

(இ-ள்) தலைவன் வாராது நாழிகை நீடிக்கத்தலைவி வருந்திக்கூறுதல்.

கைப்பொரு கிஞ்சித்து மில்லாம லென்னைக் கலந்தகன்றார்
இப்பொழு தெய்தினு மின்பெய்த லாமவ ரின்னுரையும்
பொய்ப்பொழு காதைய கோவந் திலர்மிகப் புன்கணுற்றேன்
மெய்ப்பொரு ளாங்குக னின்னருள் கூட்டுங்கொல் மெய்க்கிரிக்கே.

(கு-ரை.) கைப்பு-வெறுப்பு. பொய்ப்பு-பொய்த்தல். புன்கண்-துன்பம். மெய்க்கிரிக்கு-பரங்கிரியினிடத்து.

தலைவியைப் பாங்கி கழறல்.

(இ-ள்) பாங்கி தலைவியை நீ வருந்துவது முறையன்றெனக் கட்டுரைத்தல். கட்டுரை-உறுதிச்சொல். அதாவது இடித்துக்கூறல்.

தொல்லருங் கால முடலொன்றிற் றேய்ந்தவெஞ் சூரபன்மன்
வல்ல ரிருவ ரெனத்தெரி யாதுயிர் வாழ்வெய்தியும்
அல்ல லுறீஇப்பிரிந் தாரேற் குகன்மெய் யசலமன்னீர்
புல்லரு மீருடல் கொள்ளீர் பிரிதல் புதுமையன்றே. (173)

(கு-ரை.) தொல்-நீண்டபழைமையாகிய. இருவர்-சூரனும், பன்மனும். அல்லல்-துன்பம். உறீஇ-உற்று. புல்லரும்-பொருந்துதற்கரிய.

இதுவுமது.

ஒன்றைவிட் டொன்றைப் பிரியாச் சிவஞ்சத்தி யும்பிரியும்
என்றநற் கேள்வி சிறிதுமி லாயொவ்வொ ரேதுவினால்
அன்றை யிலும்பிரி வுன்போல் பவர்க்குண் டறிந்தயரேல்
கொன்றை முடியரன் சேயாய வேள்பரங் குன்றிடத்தே. (174)

(கு-ரை) அன்றையிலும்-அக்காலத்திலும். அயரேல்-வருந்தாதே. சேய்-மகன்.

தலைவி முன்னிலைப் புறமொழி மொழிதல்

(இ-ள்) பாங்கி யெதிரேநிற்கவுந் தலைவி அவள்மேல் வெறுப்பா லவளை நோக்கிக் கூறாது புறமாய்க்கூறுதல்.

கற்றார் கலையின் பொருளறி யாமை கடுப்பவெனை
யுற்றாரென் காம மயலினுண் டாந்துய ரோர்கிலரேல்
மற்றா ரறிவர் பரங்கிரி வேலனை வாழ்த்தினர்தஞ்
செற்றா ருறவின ராதலொப் பாமவர் செய்யுகட்பே. (175)

(கு-ரை.) கடுப்ப-ஒப்ப. மயலின்-மயக்கத்தில். செற்றார்-பகைவர். பகைவர் உறவினராய்வந்தால் துன்பந்தருமென்பதுகாண்க.

தலைவி பாங்கியோடு பகர்தல்.

(இ-ள்) வெறுப்பால் முன்னிலைப் புறமொழிகேட்ட பாங்கி தலைவியை யுபசரித்தலா லவ்வெறுப்பு நீங்கிப்பாங்கியொடு தலைவிகூறுதல்.

முந்தி வலியவந் தென்னைக் கலந்தின்ப மூட்டியவர்
வந்திறை கொள்ளினும் வாரா விடினும் வளருந்துன்பம்
இந்தியல் கன்னுத லேயென் னறுபவத் திற்றெரிந்தேன்
செந்திலி னின்று வருகந்த வேள்மெய்ச் சிலம்பிலின்னே. (176)

(கு-ரை.) இறைகொள்ளினும்-தங்கியிருந்தாலும். இயல்-சாயல். செந்தில்-திருச்செந்தூர். செய்ச்சிலம்பு-பரங்கிரி.

பாங்கி யச்சுறுத்தல்.

(இ-ள்) அங்ஙனங் கூறித்துன்பமுறுந் தலைவியை யதுநீங்குமாறு பாங்கி பயமுறுத்திக்கூறுதல்.

காமான் குழாலிங் ஙனங்காமத் தாலுட கலங்கிநின்றால்
வாமான் புனத்துள் வாராவிதங் காத்தநம் மங்கையொரு
சீமான் வரக்கண் டனள்போலு மென்றிற் செறிப்பருனைப்
போமா னமுமினி நோவேல் குகன்மெய்ப் பொருப்பிடத்தே. (177)

(கு-ரை.) கா-சோலையை. மான்-ஒத்த. குழால்-கூந்தலையுடையாளே. வாம்-தாவுகின்ற. சீமான்-பெரியசெல்வமுடையான், சிறந்தமான். இற்செறிப்பர்-வீட்டிற்காவல்செய்வர். நோவேல்-வருந்தாதே.

நீங்கற்கருமை தலைவி நினைந்திரங்கல்.

(இ-ள்) தலைவன்றன்னைவிட்டுப் போதற்கருமையைத் தலைவி நினைந்து தன்னுள்ளிரங்கிக் கூறுதல்.

அருண்மெய்க் குமரன் பரங்கிரி வாயன் பமைந்திடுமெம்
மிருவர்க் கொருமெய் படைத்தல் முறையல வென்றயன்று
ணொருசொற்சொன் னல்முனஞ் சூரன் புதுமனுக் கோருடம்பு
தருதற்கெங் கேகற் றனையெனி லென்சொலித் தப்புவனே. (178)

(கு-ரை.) எம்மிருவர்க்கு-எனக்குந்தலைவனுக்கும். மெய்-சரீரம். சூரன் பன்மன்-சூரபன்மன்.

## தலைவிக் கவன்வரல் பாங்கி சாற்றல்.

(இ-ள்) அங்ஙனம் மனம்வருந்தும் தலைவிக்குத்தலைவன் வருதலைப் பாங்கி கூறுதல்.

மாதேனு வன்ன கொடையாரிப் போது வருவர்வந்தா
லேதேனும் வேண்டும் வரம்பெறு முன்பின்னு மென்சொலொன்றும்
ஓதே னுதியயில் வேலோன் பரங்கிரிக் குத்தமியாம்
நீதே னுகர்வண் டவாராக வாழ்ந்து நிலவுதற்கே. (179)

(கு-ரை.) மா-பெரிய. தேனு-காமதேனுவாகியபசு. ஓதேல்-சொல்லாதே. நுதி-கூர்மை. அயில்வேல்- (இருபெயரொட்டு) நுகர்-உண்ணுகின்ற. நிலவுதற்கு-விளங்குதற்கு.

## சிறைப்புறமாகச் செறிப்பறிவுறுத்தல்.

(இ-ள்) தலைவன் சிறைப்புறமாகக் குறியிடத்துவரப் பாங்கி தங்களுக்குள்ள செறிப்பைக் குறிப்பாயறிவுறுத்திக் கூறுதல். சிறைப்புறம்-காவலுக்கு வெளிப்புறம். செறிப்பு-தினைவிளைந்தவுடன் தினைகாப்பதை நிறுத்தித்தலைவியை வீட்டினிடத்துக் காவல் வைத்தல்.

சொற்கலந் தெய்து சுகங்காளெம் மாது துணைமுலைக்குப்
பொற்கலந் தேரு மவர்போல் மறப்பிர்கொல் போந்துதினை
யிற்கலந் தேறு மிதணெய் திடாதெமை யிற்செறிப்பர்
நற்கலென் றோது முருகன் பரங்கிரி நம்மவரே. (180)

(கு-ரை.) சொற்கு - (எங்கள்) பேச்சுக்கு. சுகம்-கிளி. பொற்கலம்-பொன்னலாகியஆபரணம். தேரும்-ஆராய்ந்துதேடும். போந்து-வந்து. இதண்-பரண். இற்செறிப்பர்-வீட்டிற்காவல்வைப்பர். நற்கல்-நல்லமலை. நம்மவர்-எங்கள்கூட்டத்தார்.

## முன்னிலைப் புறமொழி மொழிந்தறிவுறுத்தல்.

(இ-ள்) தலைவன் எதிரே நிற்பவும் பாங்கி அவனையறியாதவள்போல் அவனுக்குச் சொல்லவேண்டிய விஷயத்தை நேரே சொல்லாமற் பக்கத்தில் நிற்கும் விலங்கு பறவைகளுக்குச் சொல்வதுபோலச் சொல்லியறிவித்தல்.

செய்ய தழற்புகு கைம்மரம் பூத்தன சேந்தநினை
யெய்ய வெமரிங்கு காளைக் குழுமுவர் கூர்வடிவேல்
ஐயர் பரங்கிரிச் சாரற் புனத்தி னயல்கிளிகாள்
பைய வருகலை மான்கா ளுமக்குப் பயிலிடமே. (181)

(கு-ரை.) செய்ய-சிவந்த. தழற்புருகை-வேங்கை. தழல்-அக்கினி. சேந்த-சிவந்த. எமர்-எங்கள்சாதியார். குழுமுவர்-கூடுவர். அயல்-பக்கம். பயி லிடம்-இயலெனக்கூட்டுக.

முன்னின் றுணர்த்தல்.

(இ-ள்) தோழி தலைவனுக்கெதிரே வந்து நின்று நினையறுத்தலால் இனி, யெம்மூர்க்குப்போவோம். நீயிவ்வனத்துக்கு வருதலொழிவாயெனக் கூறுதல்.

பிறைபோலு நின்பெண் ணுதலென வேயுருப் பெற்றிடுவாள்
இறைமேவக் கொண்டு நினைகொய்வர் யாமு மெழுந்துசெல்வோம்
மறையேயுங் காணற் கரிய குகன்மெய் வரையெனவந்
துறைசீ ருறுமெங்க ளூருநின் கூடலுக் கொத்ததுவே. (182)

(கு-ரை) இறை-கையில். மறையேயும்-வேதங்களாலும். மெய்வரை யென-பரங்கிரியைப்போல. கூடல்-சேர்க்கை. ஒத்தது-பொருந்தியது.

இதுவுமது.

கூட்டிய தெய்வம் பிரித்தலுஞ் செய்யுமிக் கொள்கைமுன்னு
ளீட்டிய நல்வினை தீவினை யின்பய னென்றறிவாய்
வாட்டிறல் மன்ன வருந்தேல் குகன்மெய் வரையுறுமிந்
நாட்டிலெம் மூர்கல் வசதியுன் போல்பவர் நண்ணுதற்கே. (183)

(கு-ரை) கூட்டிய-சம்பாதித்த. வாள்-வாளாயுதத்தின். திறல்-வலிமை. வருந்தேல்-வருந்தாதே.

முன்னின்றுணர்த்தி யோம்படை சாற்றல்.

(இ-ள்) அங்ஙனங் கூறியபின் பாங்கி தலைவனைநோக்கி யெங்களை யென்று மறவாது காக்கவேண்டுமென்று கூறுதல்.

உணர்ச்சிநட் பாகு முரிமை தருமினி யோடிச்சென்று
புணர்ச்சி பழகுதல் வேண்டாவென் றேனற் புனமகன்ற
வணர்ச்சின் மலர்க்குழல் மாதை மறந்து வாராமலிரேல்
இணர்ச்சின் மலருமெம் பாலேற்குஞ் சேய்மெய்வெற் பிற்கரசே. ()

(கு-ரை) உணர்ச்சி-மனத்தாலறிதல். புணர்ச்சி-கலந்துபேசுதல். வினை-தினை. வணர்-வளைந்த. இரேல்-இராதே. இணர்-பூங்கொத்திலுள்ள. சேய்-முருகக்கடவுள். மெய்வெற்பிற்கு-பாங்கிரிக்கு.

இதுவுமது.

தாய்தந்தை சுற்ற முதவாமல் நின்னைச் சரணடைந்து
தோய்தந் திடுமிவள் சோருந் துயர்க்கடல் தோயமயல்
நோய்தந் திடாமற் புரப்பது நன்கட னுண்ணறிவா
லாய்தந்த கேள்வி யுடையாய் குகன்மெய் யசலத்தினே. (185)

(கு-ரை) உதவாமல்-(அக்கினி சாட்சியாக விவாகஞ்செய்து)கொடாமல். சோரும்-வருந்தும். தோய-மூழ்க. புரப்பது-காப்பது. ஆய்தந்த-ஆராய்ந்த. கேள்வி-கல்வி.

கிழவோன் றஞ்சம்பெறாது நெஞ்சோடு கிளத்தல்.

(இ-ள்) இவ்வாறு பாங்கி கூறக்கேட்ட தலைவன் வேறொரு பற்றுக்கோடுபெறாமல் தன் மனத்தினிடத்துச் சொல்லுதல்.

முன்னாட் பகைவரை வென்றோன் பாங்கிரி மொய்பொழில்வாய்ப்
பன்னாட் பழகிய நின்போல வேபெறும் பாலுமெண் பாற்
சின்னாட் பழகின ளோடுசென் றுய்பின் றிரும்புவையேல்
அன்னாட் கிதஞ்சொற் றழைத்திங்கு வாவென் னருமைநெஞ்சே. ()

(கு-ரை) பகைவரை-பகையாகிய கிரௌஞ்சகிரியை. அன்னாட்கு-அத்தன்மையுடைய தலைவிக்கு. சொற்று-சொல்லி.

கிழவோன் பிரிந்துழிக்கிழத்தி மாலையப்பொழுது கண்டிரங்கல் முதலிய இப்பதினன்கு துறைகளும் ஒரு சார்பகற்குறியின் விரியெனக்கண்டுகொள்க; இவற்றுள் கிழவோன் பிரிந்துழிக்கிழத்தி மாலையம்பொழுது கண்டிரங்கலும் பாங்கிபுலம்பலுந் தலைவனிடத்தலைவி வருந்தலும் முன்னிலைப்புறமொழி மொழிதலும் தலைவி பாங்கியொடு பகர்தலும் நீங்கற்கருமை தலைவி நினைந்திரங்கலும் கிழவோன்றஞ்சம் பெறாது நெஞ்சொடு கிளத்தலுமாகிய ஏழும் இரங்கற்கும், தலைவியைப் பாங்கி கழறலும் பாங்கியச்சுறுத்தலும் பாங்கியவன் வரல் சாற்றலும் ஆகிய மூன்றும் வன்புறைக்கும், சிறைப்புறமாகச் செறிப்பறிவுறுத்தலும் முன்னிலைப்புறமொழிமொழிந்தறிவுறுத்தலும்முன்னின்றுணர்த்தலும் ஓம்படை சாற்றலுமாகிய நான்கும் இற்செறிப்புணர்த்தற்கும் உரியன,

முன்னைய எழில் நெஞ்சொடு கிளத்தலொழிந்த ஆறும் வரைதல் வேட்கைக்கும், பின்னைய நான்கும் வரைவுகடாதற்கும் உரியன.

11-ஒருசார் பகற்குறி முற்றிற்று.

## பன்னிரண்டாவது—பகற்குறி யிடையீடு

அஃதாவது பகற்குறியிடத்துவந்த தலைவன் குறியிடத்துச் செல்லாது இடையீடு பட்டுப்போதல். இடையீடு-தடை, அது, விலக்கல் சேறல் கலக்கமென மூவகைப்படும். அவைவருமாறு:—

### இறைவனைப் பாங்கி குறிவரல் விலக்கல்.

(இ-ள்) இனி, அடிக்கடி தாய்வருவள். நீவந்தாற் பழியுண்டாமென்று தலைவனைப் பகற்குறியிடத்து வராதேயென்று பாங்கி விலக்குதல்.

எமரங் கனைய ரிடித்துத்தந் தாலமு தென்னவுண் ணுங்
குமரன் பரங்கிரி யேனற் கொழுங்குரல் கொய்யவரும்
பமரம் பிறந்தது தாயுங் குரல்வளம் பார்த்திடவந்
தமரங் கணிவரல் வெற்பா வரிலல ராகுமன்றே. (187)

(கு-ரை) அங்கனையர்-பெண்கள். ஏனல்-தினை. குரல்-கதிர். பமரம்-பேரொலி. அமர்-தங்குகின்ற. அங்கண்-அவ்விடத்து. வரல்-வாராதே. வெற்பா குறிஞ்சிநிலத் தலைவனே. அலர்-பழிச்சொல்.

### இறைவியைப் பாங்கி குறிவரல் விலக்கல்.

(இ-ள்) பாங்கிதலைவியை நோக்கி யுன்னுடைய வடிவத்தினழகைச் சந்தேகப்பட்டுத் தாய்பார்த்துக் கவல்கின்றாள். நீயிப்புனத்திலினிவரவொழிவாயென்று கூறுதல்.

தினைக்காவல் வைத்தவுன் மேனிப் புதுக்கவின் சேரக்கண்டு
மனைக்காவல் வைக்க நினைந்தார் நினையன்னை மார்பலர்சேர்
தனைக்காவல் கொண்ட பரங்கிரிச் சாரலிற் றங்கிப்பெற்ற
அனைக்கா வலுமஃதே புனத் தேகலென் றாணங்கே. (188)

(கு-ரை) கவின்-அழகு. சேர்தனை-குமாரக்கடவுளை. காவல்-காவலாக. சாரலில்-மலைப்பக்கத்தில். ஆவல்-ஆசை. ஏகல்-செல்லாதே.

இதுவுமது.

தாலா னுயர்பன் னிருகர வேள்மெய்ச் சயிலமன்னாய்
விரலார் காத்திற் கவண்கொடு வீசினும் வெய்யதினைக்
குரலார் விருப்பினின் வாய்ச்குரல் கேட்டுக் குழூஉங்கிளிகள்
வரலாறு போலப் புனங்காவ லோய்ந்தது மற்றுனக்கே. (189)

(கு-ரை) மெய்ச்சயிலம்-பரங்கிரி. குரலார்-தினைக்கதிருண்ணும். விருப்பின்-ஆசையால். குரல்-சொல். குழூஉம்-கூடும். வரலாறு-வருகின்ற வழி.

இறைமகளாடிட நோக்கியழுங்கல்.

(இ-ள்) தலைவிதான் விளையாடிடங்களை விட்டுப் பிரிதற்கஞ்சி வருந்துதல்.

கூடற் கிசைந்த குருக்கத்தி நீழலுங் கூடிவண்ட
லாடற் கிசைந்த புதுப்பூம் பொழிலு மடியரொலாங்
தேடற் கிசைந்த குகன்பரங் குன்றினைச் சேரலர்போல்
வாடற் கிசைந்த விதியே பிரித்தென்னை வைத்ததுவே. (190)

(கு-ரை) கூடற்கு-சேர்தலுக்கு. சேரலர்-சேராதவர்.

இதுவுமது.

மனத்தினை யன்பர் வரவிற் செலுத்தி மலர்விழியைத்
தினத்தினை நாடுங் கிளிகள் செலவிற் செலுத்திவைகும்
புனத்தினை யெங்கள் குகன்பரங் குன்றின் புறத்துறுமெம்
மினத்தினை வேயுற் றிருப்பனெங் நாள்வந் தெதிருவனே. (191)

(கு-ரை) அன்பர்-தலைவர். தின-தின்ன. செலவில்-போதலில், ஓட்டுதலில். புனத்தினை-தினைப்புனத்தை, இதுமொழிமாற்று. இனத்தின்-இனத்தாரால். கைவே-துன்பமே. இருப்பேன்-இருக்கின்ற நான். எதிருவன்-எதிர்ப்படுவேன்.

பாங்கியாடிடம் விடுத்துக்கொண்டகறல்.

(இ-ள்) தலைவியைப் பாங்கி விளையாடிடத்தை விட்டுத் தம்மூர்க்குக் கொண்டுபோதல்.

கல்லாட றூலொன்று காட்டினர் மைந்தர்மெய்க் கன்னிகரு
நல்லா டவறறு மிக்கான நீங்கி நடந்தவழி
புல்லா டவ்புக லென்பார்க் கிவள்வளை போனதுவுஞ்
சொல்லாட நீமற வேலெங்கள் பாலன்பு தோன்றநின்றே. (192)

(கு-ரை) காட்டினர்-காட்டிய சிவபிரான். மெய்க்கல்-பரங்கிரி. தவறு-குற்றம். புல்லாடவனே-புல்லாற்செய்த புருடனே. சொல்லாட-சொல்லுதல் செய்ய. மறவேல்-மறவாதே. புல்லாற் புருடன்போலச்செய்து புனங்காக்க நிறுத்திவைத்தல் பண்டை வழக்கம். இக்காலத்திலுஞ்சில இடங்களிலுண்டு.

இதுவரையும் ஏழாநாள் நிகழ்ச்சியென்க.

பின்னாள் நெடுந்தகை குறிவயி னீடுசென்றிரங்கல்.

(இ-ள்) எட்டா நாள் தலைவன் குறியிடமாகிய மாதவிப்பந்தரிடத்து வந்து கால நீட்டித்து நின்று தலைவியை நினைந்து வருந்துதல்.

ஒழியாப் பிறவி யொழிக்குங் குமரன்மெய் யோங்கலிற்றேன்
மொழியாற் கிளிகளை வென்றே துரத்திய மொய்குழலாள்
விழியா னுமையும் பகைத்தே யிதணின்று வீடுசென்ற
வழியா துரையுமின் மான்கரளென் மேற்பகை வையன்மினே. (193)

(கு-ரை) மெய்யோங்கல்-பரங்கிரி. துரத்திய-ஓட்டிய. விழியால்-கண்ணால். இதண்-பரண். யாது-எது. வையன்மின்-வையாதேயுங்கள்.

வறுங்களநாடி மறுகல்.

(இ-ள்) தலைவியில்லாத தினைப்புனத்தை நோக்கித் தலைவன் வருந்துதல்.

சுகமே லுயர்தெய்வந் தானுங் குகன்மெய்த் தடத்தயலிற்
சுகமேலு மேலும் வாவிளை யேனலுந் துன்றுமெனை
யகமே விருத்தி யிதண்மே விருப்ப ரழகுமினி
யிகமேலென் றெய்தும் புனமும் பொலிவிழந் திட்டதுவே. (194)

(கு-ரை) மெய்த்தடம்-பரங்கிரி. சுகம்-கிளி, இன்பம். துன்றும்-நெருங்கும். இதண்-பரண். இகம்-இப்பிறப்பு (தாற்பரியம்.)

இதுவுமது.

கொழுங்குரல் மாந்தப் புனத்தினில் வந்திறை கொண்டுசெவ்வாய்
விழுங்குத லின்றி யகல்கிளி காள்குகன் மெய்வரைபோ
லெழுங்குய மாதின்ப மெய்தப் பெறுதிங் கியானுறும்போ
லழுங்குகின் றேனினி யென்றேமுன் போல்வந் தணைவதுவே. (195)

(கு-ரை) குரல்-கதிர். மாந்த-உண்ண. இறைகொண்டு-தங்கி. குயம்-தனம். அழுங்குகின்றேன்-வருந்துகின்றேன். அணைவது-சேர்வது.

குறுந்தொடி வாழுமூர் நோக்கி மதிமயங்கல்.

(இ-ள்) தலைவியினூர் தேடிச்செல்வோமாஞல் அறிந்திலமென்று தலைவன் மதிமயங்கிக்கூறுதல்.

வானுர் பராங்கிரிச் சாரற் றினைக்கதிர் வந்தறுத்துப்
போனு ருடன்சென் றவளூரைத் தேடிப் புகுவதற்குத்
தேனூர் கடம்ப னருளாற் குறிசொல் திறமையுற்ற
கானூர் குறத்தியர் யாரையு நேடியுங் கண்டிலனே. (196)

(கு-ரை) சாரல்-மலைப்பக்கம். சென்றவர்-போனதலைவர். கானூர்-காட்டிலேதிரிகின்ற. நேடியும்-தேடியும்.

இதுவுமது.

பதியறி யாம விருண்மாயை மூடப் படுபசுப்போ
லதிர்வளை யூர்தெரி யாமல் மயற்கு ளழுந்துகின்றேன்
புதிதுறு சீர்மொய் பராங்கிரி வேளருள் போலவந்தென்
னெதிரெவர் காட்டுவ ரோவவ ரேதெய்வ மெற்கினியே. (197)

(கு-ரை) பதி-பரம்பொருளை. மாயை-இவ்விடத்து ஆணவமலம். பசு-உயிர். அதிர்வளை-தலைவி. புதிது-புதியதாக. எற்கு-எனக்கு.

இவற்றுள் இறைவனைப் பாங்கி குறிவரல் விலக்கலும் இறைவியைப் பாங்கி குறிவரல் விலக்கலுமாகிய விரண்டும விலக்கற்கும், ஆடிடம்விடுத்துக் கொண்டகறலொன்றும் சேறற்கும் இறைமகளாடிட நோக்கியழுங்கல் முதலிய நான்கும் கலக்கத்திற்கும் உரியன.

12-பகற்குறி யிடையீடு முற்றிற்று.

---

## பதின்மூன்ருவது—இரவுக் குறி.

அஃதாவது, தலைவன்றலைவியை இராத்திரிக் குறியிடத்துக்கூடுதல் அது, வேண்டல் மறுத்தல் உடன்படல் கூட்டல் கூடல் பாராட்டல் பாங்கிற் கூட்டல் உயங்கல் நீங்கல் ஆகிய ஒன்பது வகைப்படும். அவைவருமாறு:—

இறையோ னிருட்குறி வேண்டல்.

(இ-ள்) தலைவன் இரவுக்குறியை விரும்பிப் பாங்கியிடத்துக் கூறுதல்.

மருந்தோ டெனினும் விருந்தோ டுணலென்றொர் மாதரசி
முருந்தோர் முறுவ லெனுமடவீர் சொன்ன மூதுரையால்
அருந்தோகை யான்மெய் யசலத்த ராசை யடைவனென்று
திருந்தோர் விருந்தென் றிரவிற் றனித்தும்மிற் சேருவனே (198)

(கு-ரை) மருந்து-அமுதம். மாதரசி-ஔவையார். முருந்து-மயிலிறகி னடிமுள். முறுவல்-பல். மூதுரையால்-பழமொழியால். தோகை-மயில். மெய் யசலத்தர்-பரங்கிரியிலுள்ளவர். இல்-வீட்டில். மாதரசி சொன்ன மூதுரை யா லாசையடைவ ரென்றுகூட்டுக.

பாங்கி நெறியினதருமை கூறல்.

(இ-ள்) அதுகேட்ட தோழி தலைவன் வரும்வழியில் சிங்க முதலிய மிரு கங்கள் சஞ்சரித்தலால் அவ்வழி நீ வாலரிதென்று தலைவனுக்குக் கூறுதல்.

எங்கள்கொங் கைக்கு மிடைக்கும் பகவி லெதிர்தலஞ்சும்
சிங்கங் கரியிரை தேர்ந்து புனத்திற் செறியிருளில்
அங்கங் குலாவித் திரியுங் குகன்மெய் யசலமன்னாய்
பங்க முறுதெப் படிநீ வருவை பகருகவே. (199)

(கு-ரை) எதிர்தல்-நேர்வருதல். இரை-உணவை. தேர்ந்து-ஆராய்ந்து. செறி-நெருங்குகின்ற. பங்கமுறு து-பழுதுபடாமல்.

இறையோ னெறியினதெளிமை கூறல்.

(இ-ள்) அங்ஙனங்கூறிய வழியிலுள்ள மிருகங்களுக்குப் பயப்படே னுதலால் அவ்வழிவருதல் இலேசென்று தலைவன் பாங்கிக்குக் கூறுதல்.

காற்றே யெனவந் தெதிர்க்கினுங் கற்றவர் கைவிட்டநூல்
போற்றேயு நுண்ணிடை மாமுலை யாலுமைப் போரில்வென்ற
கூற்றே யெனுமங்கை கொண்கனி யானெனிற் கோளிழைத்தல்
ஆற்றேமென் றோடு மரிகரி வேள்மெய் யசலத்திலே. (200)

(கு-ரை) கூற்று-யமன். கொண்கன்-நாயகன். ஆற்றேம்-எதிர்நிற்கமாட் டேம். மெய்யசலம்-பரங்கிரி.

பாங்கி யவனுட்டணியியல் வினுதல்.

(இ-ள்) தலைவனது நாட்டுப்பெண்களணியும் அணியையும் இயலையும் பாங்கி கேட்டல்.

உண்டு மலர்பல வேனும் பரங்கிரி யூர்க்குகனுட
கொண்டு மகிழ்தல் கடம்பல ரேயுங்கள் கோற்றொடியார்
அண்டு நவபணி யுற்று லுமெம்மணி யாய்ந்தணிவார்
பண்டு வழக்க முரையாயவ் வேள்மெய்ப் பறம்பரசே. (201)

(கு-ரை) உண்டுமலர்பல்வேனும்-பல மலருண்டேனு மெனக் கூட்டுக. அண்டும்-நெருங்கும். எம்மணி-எந்தமணிகளை. மெய்ப்பறம்பு-பரங்கிரி.

### இதுவுமது.

பாடு மறிஞர் புகழுங்கள் நாட்டிற் பயில்மடவார்
ஆடுநன் னீரு மணியுமென் சாந்து மலங்கலுக்தேன்
கூடு மலர்கொய்யுங் காவும் பரங்கிரிக் கோக்குகன்றாள்
சூடு மெமக்குத் தொகுத்தா யினுமண்ணல் சொல்லுகவே. (202)

(கு-ரை) ஆடும்-மூழ்கும். அணி-ஆபரணம். அலங்கலும்-மாலையும். தொகுத்தாயினும்-பிண்டமாகஆனாலும். அண்ணல்-தலைவனே.

### கிழவோன் அவள் நாட்டணியியல் வினாதல்.

(இ-ள்) பாங்கியின் குறிப்பறிந்து அவளுடைய நாட்டிலுள்ளார் அணியும் அணிகலன் முதலியவற்றைத் தலைவன் கேட்டல். குறிப்பறிதல்-வேண்டுவன கொடுத்தற்கென்க.

அயனில மாகிய வெந்நாட் டணியிய லாலுனக்கென்
பயனில வேயித ழாய்நம் முருகன் பரங்கிரிவாய்
மயனில வாமலென் னுள்ள மகிழும் வகையெடுத்து
நயனி லவாவிய நுந்நாட் டணியியல் நன்றுரையே. (203)

(கு-ரை) எந்நாட்டு-எங்கள்நாட்டு. அணியியல்-அலங்கார இலக்கணம். இலவு-இலவம்பூ. ஏய்-ஒத்த. மயல்-மயக்கம். நிலவாமல்-விளங்காமல். நயனில்-நயமானவிஷயத்தில். அவாவிய-விரும்பிய.

### அவற்குத் தன்னாட்டணியியல் பாங்கி சாற்றல்.

(இ-ள்) வெளி.

நனையி லுறுப்பு வெளியா மிளந்துகில் நன்குடுத்துச்
சுனைதொறு மாடுவர் செங்காந்தள் கார்க்குழற் சூடுவர்தம்
வினைநிக ருசலிற் போய்ப்போய்த் திரும்பி மிகமகிழ்வர்
தினைவன வள்ளி மகிழ்நன் பரங்கிரித் தேசத்தரே. (204)

(கு-ரை) உறுப்பு-அவயவங்கள். வினைநிகர்- (போதலும் வருதலுஞ் செய்யும்) நல்வினை தீவினைகளைப்போல. மகிழ்நன்-கணவன்.

### இறைவிக் கிறையோன் குறையறிவுறுத்தல்.

(இ-ள்) பாங்கி தலைவனை யோரிடத்து நிறுத்திவிட்டுத் தலைவியிடத்திற் சென்று தலைவன் குறையையறிவித்தல்.

*கற்றை யமைசெஞ் சடையார் பெறுகுகன் காமுறுமெய்ப்*
*பொற்றை யனைய முலையா யரிகரி போர்புரியும்*
*இற்றை யிரவி லினைக்கான அன்ப ரெனையிரந்தார்*
*மற்றை யவரன் பளவினைத் தென்று மதிப்பரிதே.* (205)

(கு-ரை) *கற்றை-திரட்சி. மெய்ப்பொற்றை-பரங்கிரி. அரி-சிங்கம். இரந்தார்-யாசித்தார். இனைத்து-இவ்வளவு.*

நேரா திறைவி நெஞ்சொடு கிளத்தல்.

(இ-ள்) *இவ்வாறு கூறக்கேட்ட தலைவி சம்மதியாது தன் மனத்துடன் சொல்லுதல்.*

*கோலக் குழகன் பரங்கிரி வாய்க்கொடுங் கூற்றுருமே*
*போலக் கரடி புலிசிங்கம் யானை புறந்திரியும்*
*ஞாலத் தவர்மருள் நள்ளிருட் போதிலென் னன்பர்வரப்*
*பாலப் பிறைநுதற் பாங்கிநெஞ் சேயுடன் பட்டதென்னே.* (206)

(கு-ரை) *கோலம்-அழகிய. குழகன்-முருகக்கடவுள். உரும்-இடி. மருள்-மயங்குகின்ற. பாலப்பிறை-இளம்பிறை. நுதல்-நெற்றி.*

நேரிழை பாங்கியொடு நேர்ந்துரைத்தல்.

(இ-ள்) *நெஞ்சொடு கூறிய தலைவி பாங்கியோடு உடன்பட்டுக்கூறுதல்.*

*எந்த விரவுகண் டாலுமஞ் சாம லெதிர்ந்துநிற்பார்*
*பந்த விரவு விடியல்செய் வேலன் பரங்கிரிவாய்*
*வந்த விரவுகண் டஞ்சாரென் றெண்ணி வரப்புகன்றாய்*
*சந்த விரவுறு தையாலுன் னெண்ணமென் றன்னெண்ணமே.* (207)

(கு-ரை) *இரவு-யாசகம். பந்தஇரவு-பாசஇருள். சந்தவிரவு-அழகின் கலப்பு.*

நேர்ந்தமை பாங்கி நெடுந்தகைக் குரைத்தல்.

(இ-ள்) *தலைவி யுடன்பட்டமையைப் பாங்கி தலைவனுக்குக் கூறுதல்.*

*சொல்லும் பொருளொரு தானும் பரங்கிரித் தூயசெவ்வேள்*
*புல்லுங் கருத்திற் பெரியீர் நமதெண்ணம் போய்ப்புகன்றேன்*
*அல்லும் பகலும் விடாமல் முயல்கலைப் பார்கலைத்தாற்*
*கல்லுங் கரையுமன் றோவவ ளுள்ளங் கரைந்ததுவே.* (208)

(கு-ரை) *பொருள்-பிரமப்பொருள். புல்லும்-பொருந்தும். முயல்-முயற்சிசெய்கின்ற, முயலென்னு மிருகவர்க்கம்.* (சிலேடை)

### குறியிடை நிறீஇத் தாய் துயிலறிதல்.

(இ-ள்) பாங்கி தலைவனைக்குறியிடத்து நிறுத்தித் தாயினது நித்திரை யையறிதல்.

மஞ்சின மூர்பரங் குன்றூர் முருகன்கை வாயயில்போல்
வெஞ்சின மேவிய சீயங்கண் டோடி விரைந்துவந்திங்
கஞ்சின வேழ மாற்றுங் குரல்செவி டாக்கவுங்கண்
டுஞ்சினர் துஞ்சினர் போற்றுயர் காண்பொற் சுடர்த்தொடியே. ()

(கு-ரை) மஞ்சினம்-மேகக்கூட்டம். வெம்-கொடிய. சீயம்-சிங்கம். வேழம்-யானை. அரற்றும்-அழும். குரல்-முழக்கம். துஞ்சினர்-உறங்கினவர். துஞ்சினர்-செத்தவர்.

### தோழி தலைவிக்குத் தலைவன் குறியிடத்து வருதலையறிவித்தல்.

அளந்தறி யாத வருட்குகன் வாழ்மெய் யசலத்தின்செவ்
விளந்தளிர் தாமிவ் விரவிலெற் கீந்துனை யீகென்றனர்
வளந்தரு மின்ப மயிலே யிதுபண்ட மாற்றொப்பதோ
உளந்தனிற் காணிலுன் னன்பு மவரன்பு மொப்பதுவே. (210)

(கு-ரை) ஈகென்றனர்-கொடுவென்றுகேட்டனர். ஒப்பதோ-சமான மாவதோ.

### அவட்கொண்டு சேறல்.

(இ-ள்) தலைவன் வந்து நிற்குங்குறியிடத்துத் தலைவியைப் பாங்கி யழைத்துக்கொண்டு செல்லுதல.

ஆக முமைக்கருள் வார்தே சிகர்மெய் யசலமன்னும்
நாக முமிழு மணிவெயில் சூழுநன் னாகத்தின்கீழ்ச்
சோக முறுமன்பர் வந்துநின் றாரிந்தத் தொல்லிருளிற்
போக முதவுவர் நீயாங்குப் போகப் புறப்படின்னே. (211)

(கு-ரை) ஆகம்-திருமேனியிற்பாதியை. தேசிகர்-குருவாகியகுமாரக்கடவுள். நாகம்-பாம்பு. உமிழும்-கக்கும். மணி-நாகரத்நம். நாகம்-புன்னைமரம். தொல்-பழைய. போகம்-இன்பம்.

### குறியுய்த்தகறல்.

(இ-ள்) பாங்கி தலைவியைக் குறித்த காவிடத்திலேசெலுத்தி நீங்குதல்

மறியுண்க ணாய்நின் குழற்பகை யாயிருள் வைகுதற்குச்
செறியுங்க ணல்குமிக் கானினை வாட்டுஞ் செயலெனச்செம்
முறியுங்கண் மாமல ருங்கொய்து மீள்வல் முருகனையுள்
அறியுங் கருத்தினர் போற்பிரி யேன்மெய் யசலம்விட்டே. (212)

(கு-ரை) மறியுண்கணாய்-மான்போலுங்கண்ணையுடையவளே. செறியும்-நெருங்கும். கண்-இடம். செயலென-செய்கையைப்போல. முறியும்-தளிரும். மீள்வல்-திரும்புவேன்.

வண்டுறை தாரோன் வந்தெதிர்ப்படுதல்.

(இ-ள்) தலைவன் தலைவியை நேர்வந்து காணுதல்.

ஐவகைப் பாசம் பதிசேர் பசுவினுக் காயதடை
செய்வதைப் போலெனைச் சேரிவட் காஐவர் செய்தடையை
வெவ்விதத் தாற்கடந் தென்பாலுற் றாள்வள்ளி யீர்ந்துவர்வாய்
வைவினைக் காதலித் தேற்றான் பரங்கிரி வாணுதலே. (213)

(கு-ரை) ஐவகை-ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், அல்லது வயிந்தவம், திரோதாயி. பதி-பரம்பொருளை. பசு-உயிர். ஐவர்-ஐவகைத்தாய்மார். அவர்-பாராட்டுந்தாய், ஊட்டுந்தாய், முலைத்தாய், கைத்தாய், செவிலித்தாயென்பார். ஈர்ந்துவர்-குளிர்ந்தபவளம்போலும்.

பெருமகளாற்றின தருமை நினைந்திரங்கல்.

(இ-ள்) தலைவி தலைவன்வரும் வழியின தருமையை நினைத்து வருந்துதல். அருமை-கொடுமையின் மேலது.

விண்ணாடு நீருண்ட மேக மிடிப்பச்செவ் வேலன்மெய்வெற்
பண்ணாடு கானி லரையிருள் யாமத்தண் ணாலெனக்கா
எண்ணா டுறுமன்பி னீவால் கேட்கி லெவர்க்குநெஞ்சிற்
புண்ணா டுறுமழல் போலா மெனிலெற்கென் போல்வதுவே. (214)

(கு-ரை) ஊடுகான்-நடுக்காடு. அண்ணல்-தலைவனே. அன்பின்-அன்பினால்.

புரவலன் றேற்றல்.

(இ-ன்) அங்ஙனம் வருந்திய தலைவியைத் தலைவன் றெளிவித்தல்.

உள்ளிரு ளோட்டும் பரங்கிரிச் சேபரு ளொப்பவெளி
நள்ளிரு ளோட்டும் பயோதர மார்மின் நகுதலினாற்
புள்ளிரு ளுஞ்செறி வெய்தும் பொதும்பருள் புக்கணியான்
கொள்ளிருள் ளேகவல் கோற்றொடி யீரிணிக் கூடுவமே. (215)

(கு-ரை) உள்ளிருள்-ஆணவமாகிய இருள். நள்-நடு. இருள்-புறவிருள். பயோதரம்-மேகம். மின்-மின்னல். புள்-பறவை. இருளும்-மயங்கும். செறிவு-நெருக்கம். பொதும்பர்-சோலை. கொள்ளிர்-கொள்ளாதேயும். கவல்-கவலை.

புணர்தல்.

(இ-ள்) வெளி.

மணிதோறு மங்கல மன்னுங் குகன்மெய் வரைமலர்கள்
புணிதோறும் பேரெழில் காட்டுந் திருநிகர் பூவையல்குற்
சுனைதோயுந் தோறு நவநவ மாய்வருந் தூயவின்பம்
நினைதோறு மென்னெஞ்சு தானாகச் செய்து நிறைந்ததுவே. (216)

(கு-ரை) மங்கலம்-சுபச்செயல். பூவை-தலைவி. தோயும்-மூழ்கும். நவம் நவம்-புதிதுபுதிது. நெஞ்சுதானாக-மனமின்ப வடிவமாக.

இதுவுமது.

வையத் தவரெவ ராயினும் பெண்ணின்பம் வாய்க்குமென்றாற்
செய்யத் தகாதன யாவுஞ்செய் வாரென்பர் தேர்ந்திலன்முன்
உய்யத் தருமருள் செய்சேய் பரங்கிரி யொண்டொடியைப்
பையத் தழுவிய பின்றெரிந் தேனதென் பாக்கியமே. (217)

(கு-ரை) உய்யத்தரும்-பிழைக்கத்தருந்த.

புகழ்தல்.

(இ-ள்) வெளி.

மட்டுண் டளிமொய் கடம்பன் பரங்கிரி வாய்ச்சுவையூ
ணிட்டுண் டவர்செல்வம் போலோங் கியநின் னிணைமுலைவார்க்
கட்டுண்ட போதெதிர் கண்டாலுஞ் செம்புனல் கான்றொழுக
வெட்டுண் டுடைபட்ட தென்னங் குருமபைகள் மென்கொடியே. ()

(கு-ரை) மட்டு-தேன். ஊண்-உணவு. செம்புனல்-இரத்தம், செவ்வை யாகிய நீர். கான்று-கக்கி. உடைபட்ட-உடைந்துபோயின.

## இறைமகளிறைவனைக் குறிவரல்விலக்கல்.

(இ-ள்) யானையைச் சிங்கமோது மிராக்காலத்திலே வரில் துன்பமிக வுண்டாமென்று பயந்து தலைவி தலைவன் வருதலை விலக்கல்.

இன்றே னுகரளி சூழ்தருகன் மெய்வரை யேயனையாய்
கொன்றே திரியும் விலங்கும் புளிஞருங் கூளிகளும்
என்றே னுமெய்தற் கரிதாங் குமரி யிருட்டுங்குழீஇ
யொன்றேனு நன்றி பயவா விரவி லுறலினியே. (219)

(கு-ரை) நுகர்-உண்ணுகின்ற. புளிஞர்-வேடர். கூளி-பேய். குமரி யிருட்டு-மிகக்கரிய இருள். குழீஇ-கூடி. பயவா-தராத. உறல்-வராதே. (எதிர் மறைவியங்கோள்.)

## அவனிறைவியை யில்வயின் விடுத்தல்.

(இ-ள்) தலைவன் றலைவியை வீட்டினிடத்துச் செல்லென விடுத்தல்.

பலகலை கற்றவர் வேலோன் பயிலும் பரங்கிரியைக்
கலகல வென்பது போலேநின் னூரைக் கலகலவென்
றிலகுநின் காற்சிலம் போசை படாமலின் னேகடந்திவ்
வுலகருந் தாயும் விழிக்குமுன் னேகுக வொண்டொடியே. (220)

(கு-ரை) கலகல-கலப்பாய் கலப்பாய். இலங்கு-விளங்குகின்ற. உலகரும் -உலகத்திலுள்ளோரும். ஏகுக-செல்வாயாக.

## இறைவியை யெய்திப் பாங்கி கையுறைகாட்டல்.

(இ-ள்) குறியிடத்து நீங்கிய தலைவியையடைந்து தோழி காட்சிப் பொருளைக் காட்டுதல்.

முலைமாலை நீக்குமென் றெண்ணிவந் தாரை முயங்கியநீ
முலைமாலை கற்பிற் கணியாமென் றன்பின் முதிர்தரும்மால்
இலைமாலை யன்பணி சேய்பரங் குன்றினின் றேகொணர்ந்தேன்
இலைமாலை யாமிவ் விரவிற்சந் தேகமிங் கேலணங்கே. (221)

(கு-ரை) முலை-கொங்கையானது.மாலை—மயக்கத்தை. முயங்கிய-கலந்த. முலைமாலை - முல்லைப்பூமாலை. கற்பிற்கு-கற்புடைமைக்கு. அணி-ஆபரணம். ஆலிலைமால்-ஆலிலையிலுறங்குந் திருமால். மாலை-ஒழுங்கு, சந்தேகமிலையெனக் கூட்டுக. ஏல்-ஏற்றுக்கொள்வாய்.

### இற்கொண் டேகல்.

(இ-ள்) தோழி தலைவியை மனையிடத்துக்குக் கூட்டிக்கொண்டு போதல்.

காதிற் செலாமற் றுயில்விழி யன்னையக் காதுகளின்
மீதிற் செலவிடு முன்கொங்கைப் பார மெலியிடைமேல்
மோதிற் றளருமென் றஞ்சிப் பையப்பைய முன்னடவிப்
போதிற் புகுவங் குமரன் பரங்கிரிப் பூங்குயிலே. (222)

(கு-ரை) துயில்-நித்திரை செய்கின்ற. விழி-கண்ணையுடைய. மோதில்-மோதினால். தளரும்-வருந்தும். இற்புகுவம்-வீட்டிலே சேருவோம்.

### பிற்சென் றிறைவனை வரவு விலக்கல்

(இ-ள்) தோழி தலையை மனையிடத்துச் சேர்த்தபின்பு தலைவன்பாற் சென்று இவ்விருளில் நீவராதே என்று விலக்கிக்கூறுதல்.

வேட்டத்தி னீகொன்ற வேழமுன் னுன விலங்கினினம்
காட்டத்திற் கண்டு பழம்பகை யென்றுனை நாடிவந்து
வாட்டத் துணியிற் பரங்கிரி வேலனை வாழ்த்துமெமர்
கூட்டத்திற் கேவசை யாமிருட் போதெய்தல் கொற்றவனே. (223)

(கு-ரை) வேட்டம்-வேட்டை. வேழம்-யானை. நாட்டத்தில்-கண்ணால். துணியில்-துணிந்தவந்தால். எமர்-எங்களவர். எய்தல்-வாராதே. (வியங்கோள்)

### பெருமகன் மயங்கல்.

(இ-ள்) பாங்கியிவ்வாறு இரவுக்குறிவிலக்கிய சொற்கேட்டுத் தலைவன் மனங்கலங்கிக் கூறுதல்.

ஓடத்தி னூற்கடல் நீப்பார்க்கவ் வோட மொடிந்திடல்போல்
பாடத் திறங்கற் றவர்க்கருள் கந்தன் பரங்கிரிவாய்க்
கூடத் தினமெண்ணு மென்னையுங் காதற் குமரியையும்
வாடத் தடுத்தனை நீவார லென்று மடமயிலே. (224)

(கு-ரை) நீப்பார்-கடப்பார். வாரல்-வாராதே. (வியங்கோள்)

### தோழி தலைமகள் துயர்கிளந்து விடுத்தல்,

(இ-ள்) பாங்கி தலைவிக்கு நேருந்துயரைத் தலைவனுக்குக் கூறி நீ நின்னூர்க்குச் சென்றது நாமறியும்படி அடையாளங் காட்டென்று கூறிவிடுத்தல்.

மாசென்ற தோட்டும் பாங்கிரி வேலனை வாழ்த்திவரு
நீசென் றதுதன் னுயிர்சென்ற தென்ன நினைந்தழுங்கும்
பேசென்றனொடொன் றும்பேசாள்நின் னூர்சென்றபின்னர்விண்ணில்
தேசென் றவிர்முன் னொருகுறி காட்டவள் செஞ்செவிக்கே. (225)

(கு-ரை) மாசு-குற்றம். சென்றதென்ன-போனதுபோல. அழுங்கும்-அழுவள். பேசு-பேசுகின்ற. தேசு-அழகுடைய. என்று-சூரியன். அவிர்முன்-(புறப்பட்டுப்)பிரகாசிக்கு முன்னர். குறி-அடையாளம்.

திருமகட் புணர்ந்தவன் சேறல்.

(இ-ள்) தலைவியைக்கலந்த தலைவன் தன்னூர்க்குப்போதலைப் பாங்கிக் குச் சொல்லுதல்.

உறுசுடர்ச் சூடை மணியாமென் னின்னுயி ரொப்பவளூர்
பெறுநெறி காட்டுங் குகன்மெய்க் கிரிப்பொழில் பின்பற்றினால்
முறுகிய சோதி விருக்கமொன் றுண்டது முந்துமிரு
ளறுமொளி காட்டவென் னூர்செல்லு வேனஞ்ச லாரணங்கே.(225)

(கு-ரை) சூடைமணி-தலையிலே சூடிக்கொள்ளும் இரத்நம். முறுகிய-மிகுந்த. அஞ்சல்-பயப்படாதே. (வியங்கோள்)

இவற்றுள்-இறையோனிருட்குறி வேண்டலும் நெறியினதெளிமை கூறலும் தலைவன் அவள் நாட்டணியியல் வினாதலும் பாங்கியிறைவிக்கு இறையோன் குறை யறிவுறுத்தலுமாகிய நான்கும்வேண்டற்கும், பாங்கி நெறியின தருமை கூறலும் இறைமகள் இறைவனைக்குறிவரல் விலக்கலும் பாங்கியிறைவனை வரவுவிலக்கலுமாகிய மூன்று மறுத்தற்கும், பாங்கி அவனாட்டணியியல் வினாதலும் அவற்குத் தன்னாட்டணியியல் பாங்கி சாற்றலும் சேரிழை பாங்கியொடு நேர்ந்துரைத்தலுமாகிய மூன்றும் உடன்படற்கும், தலைவி நேர்ந்தமை பாங்கி நெடுந்தகைக்குரைத்தலும் குறியிடை நிறீஇத் தாய்துயிலறிதலும் இறைவிக்கு இறைவன் வரவறிவுறுத்தலும் அவட்கொண்டு சேறலுமாகிய நான்குங் கூட்டற்கும், தலைவன் தலைவியை யெதிர்ப்படுதலும் தேற்றலும் புணர்தலுமாகிய மூன்றும் கூடற்கும், தலைவன் புகழ்தலும் கையுறைகாட்டலுமாகிய இரண்டும் பாராட்டற்கும், தலைவன் தலைவியை யில்வயின்விடுத்தலும் பாங்கிதலைவியை யிற்கொண்டேகலுமாகிய இரண்டும் பாங்கிற்கூட்டற்கும், நேரிறைவி நெஞ்சொடு கிளத்தலும் தலைவி ஆற்றினதருமை நினைந்திரங்கலும் பெருமகன் மயங்கலும் தோழிதலைவி துயர்கிளர்ந்து விடுத்தலுமாகிய நான்கும் உயங்கற்

கும், பாங்கிகுறியுய்த்தகறலும் திருமகட்புணர்ந்தவன் சேறலுமாகிய இரண்டும் நீங்கற்கும் உரியன. உயங்கல்-வருந்தல்.

இதுவரையும் எட்டாநாள் நிகழ்ச்சி.

13. இரவுக்குறி முற்றிற்று.

## பதின்மூன்காவது—இரவுக்குறியிடையீடு.

அஃதாவது இரவுக்குறிக்கண் வந்த தலைவன் அல்லகுறிப்படுதலால் இடையீடு பட்டுப்போதல். அஃது அல்லகுறியெனவும் வருந்தொழிற்கருமையெனவு மிருவகைப்படும். அவைவருமாறு இடையீடு படுதல்-குறிதவறுதல்.

### இறைவிக்கிகுளை யிறைவர வுணர்த்தல்.

(இ-ள்) மறுநாளிரவில் தலைவன் வருதலைப்பாங்கி தலைவிக்குணர்த்தல்.

*நின்று சுவைகண் டதனு விளந்தினை தேடிவெண்கோ*
*டொன்று மதகளி றென்றுநம் மூர்ப்புறத் தொண்பொழில்வாய்*
*நின்றுதன் சேவகத் தெய்தாத தென்கொல் நிறைபொருளீ*
*தென்று சொலப்படு சேய்வாழ் பாங்கிரி யேந்திழையே.* (227)

(கு-ரை) கோடு-கொம்பு. ஒன்று-பொருந்துகின்ற. சேவகம்-யானை யுறங்குமிடம். நிறைபொருள்-பரம்பொருள்.

### தான்குறி மருண்டமை தலைவியவட் குணர்த்தல்.

(இ-ள்) தலைவி தான் அல்லகுறியிடத்துத் தலைவனைக்காணமையால் மீண்டு விடியற்காலத்து வந்து பாங்கியொடு பகர்தல். அல்லகுறியிடம்-குறிதவறிய இடம்.

*அறியுங் குறியி னறியாமல் மெய்க்குன் றறுமுகனைப்*
*பிறிதொன் றுறுகுறி யாற்றேடிக் காணப் பெறுதவர்போல்*
*நெறிகண் டரிதின் வருநந் தலைவர் நிகழ்த்திலக்கை*
*மறியுண்க ணுயறி யாதே யென்னுள்ள மருண்டதுவே* (228)

(கு-ரை) அறியுங்குறியின்-அறியவேண்டுமடையாளத்தால். மெய்க்குன்று-பாங்கிரி. பிறிது-வேறு. ஒன்றுறு-பொருந்துகின்ற. அரிதின்-அருமையாக, இலக்கை-அடையாளத்தை. மறியுண்-மான்போலும்.

### பாங்கி தலைவன் றீங்கெடுத்தியம்பல்.

(இ-ள்) தோழி தலைவன் பொல்லாங்கையெடுத்துக் கூறுதல்.

செல்லார் குழல்கம் முருகன் பயில்மெய்ச் சிலம்பனையார்
எல்லா மறியவல் லாரேனு நம்மை யிஃதறிய
வல்லா ரலரென்று சற்றுமெண் ணுமல் மதிமருண்டு
பொல்லாத பொய்க்குறி செய்தா ரவர்க்குப் புரையிதுவே. (229)

(கு-ரை) செல்லார் - மேகம்போலும். குழால் - கூந்தலையுடையவளே. அலர்-அல்லாதவர். மருண்டு-மயங்கி. பொய்க்குறி-பொய்யடையாளம். புரை-குற்றம்.

புலந்தவன் போதல்.

(இ-ள்) தலைவன் தான் குறிக்கப்பட்ட இடத்திற்குத் தலைவி அல்லகுறி யடைந்து வாராமையால் வருந்தித் தன்னூர்க்குப்போதல்.

இதுவரையும் ஒன்பதா நாள் நிகழ்ச்சி.

பாய்விடை யாரொடு சேயார் பயில்மெய்ப் பறம்பனையாள்
தாய்விழி தாமரை யென்றெண்ணி னேனது தாமரையே
யாய்விட லாயது வோவந்தி லாளெற் கமைந்தவிதி
போய்விடு மென்று தெரிந்தாலித் துன்பம் பொருந்திலனே. (230)

(கு-ரை) சேயார் - முருகக்கடவுளானவர். பயில்-தங்குகின்ற. மெய்ப் பறம்பு-பரங்கிரி. தாமரையென்றெண்ணினேன்-தாமரையிரவிற்குவிதல்போலு றங்குமென்று நினைத்தேன். அது-அக்கண். தாமரை-தாவுகின்ற மான். ஆய்-ஆகி.

புலர்ந்தபின் வருங்களந் தலைவிகண்டிரங்கல்.

(இ-ள்) ஒன்பதாநாள் இருள்புலர்ந்தபின்தலைவி வெற்றிடத்தைக்கண்டு வருந்துதல். இருள்புலர்தல்-விடிதல்.

புன்னாக மேகன் மலர்முகங் கொண்டுடல் பூரித்தனை
யென்னாக முற்று மெலிய முகம்புலர்ந் திங்குநின்றேன்
துன்னாக மஞ்சொல் முருகன் பரங்கிரித் தோன்றல்கைத்தார்
முன்னாக நீபெற்றும் பின்யான் பெறாத முறைமையென்னே. (231)

(கு-ரை) புன்னாகம்-ஓர்மரம். என்னாகம்-என்னுடல். புலர்ந்து-வாடி. துன்-நெருங்கிய. தார்-மாலை. முன்னாக-முதலாவதாக.

இதுவுமது.

பொய்யா ரொருபொருள் பெற்றால் விழிக்கும் புலப்படுத்தல்
செய்யா ரெனச்சிறி தோராமற் சேய்மெய்ச் சிலம்பனையார்
கையா ரலங்கல்லைத் தாழை யிற்பெய்து கலங்கலெற்கு
மையா ரிருள்வயிற் செய்தாரென் னோமெய் மறந்தனனே. (232)

(கு-ரை) பொய்யார்-பொய்யுடையவர். புலப்படுதல்-அறிவித்தல். அலங்கல்-பூமாலை. பைந்தாழை-பசியதாழை மரத்தில். பெய்து-வைத்து. கலங்கல்-வருந்துதலை. வயின்-இடத்தில். (சொன்ன இடத்தின்) மெய்மறந்தனர்-உண்மையை மறந்தார்.

## தலைவி தன்றுணைக் குரைத்தல்.

(இ-ள்) தலைவி தன் துன்பத்தைத் தன்றோழிக்குச்சொல்லுதல்.

பிறைமதி போலன்ப ரன்பு வளர்ந்து பிறங்கலின்றி
நிறைமதி போலக் குறைந்ததென் றோவினி நீள்பதினோர்
துறைதின மம்மதி போன்முற்று மாய்தலு முண்டுகொலோ
சிறைமதி லோங்கு முருகன் பரங்கிரிச் சேயிழையே. (233)

(கு-ரை) பிறங்கல்-விளங்குதல். பதினோர்துறுதினம்-அமாவாசி நாள். சிறை-காவல்.

## தலைமகளவலம் பாங்கி தணித்தல்.

(இ-ள்) தலைவியின் துன்பத்தைத் தோழிதணித்துக் கூறுதல்.

அந்தே ரகலல்கு லாய்சேய் பரங்கிரிக் கன்புமிக்கார்
வந்தே யிருப்பர்தம் வாய்மைபொய் யாரவர் வைத்தகுறி
சந்தேக மெய்தி மருண்டா யவருந் தனித்தகன்று
முந்தே முழக்கிய கொம்போதை யென்செவி முற்பட்டதே. (234)

(கு-ரை) தேரகல் - தேர்த்தட்டுப் போலப்பரந்த. வாய்மை - சத்தியம். குறி-அடையாளத்தை. மருண்டாய்-மயங்கினாய். முந்தே-முதலிலே. ஓதை-ஓசை.

## இறைவன்மேற் பாங்கி குறிபிழைப்பேற்றல்.

(இ-ள்) பத்தாநாள் இரவுக்குறியின் வந்ததலைவன்மேற் பாங்கி அல்லகுறிப்பட்ட குற்றமேற்றிக்கூறுதல். அல்லகுறி-குறித்த இடம்தவறுதல்.

பாடுதம் பாட்டின் பயனடை யாரெனப் பன்னுமொழி
லாடு குறியிடத் தும்மடை யாமலெம் மூரடைந்தோந்
தேடு பெரும்பொரு ளானீர் பரங்கிரிச் சேந்தனைப்போல்
நீடு மயில்கொண்ட நீரிங்ங னாதல் நினைந்திலமே (235)

(கு-ரை) குறியிடத்து-அடையாளம் வைத்த இடத்து. உம்-உம்மை. அயில்-வேல். இங்ஙன்-இவ்விதம். ஆதல்-ஆவது.

இறைவிமே லிறைவன் குறிபிழைப் பேற்றல்.

(இ-ள்) மேற்கூறிய குற்றத்தைத் தலைவன் தலைவிமேலேற்றிக் கூறுதல்

புறந்தாழ் குழலி பரங்கிரி வாயன்பர் போற்றநனி
சிறந்தார் முருகன் மயிலேறி யென்னெதிர் தேடிவந்தே
யிறந்தா ரங்கெய்தும் பெரும்பேரின் பத்தினை யீங்கிவளை
மறந்தா லருள்வனென் றறு மறந்திலன் வாய்மையிதே. (236)

(கு-ரை) புறம்-முதுகினிடத்து. குழலி-கூந்தலையுடையாய். ஆர்-நிறைந்த. வாய்மை-சத்தியம்.

இதுவுமது.

பூணப்பட் டும்பணி யுந்தரும் வேள்மெய்ப் பொருப்பினையாட்
காணப்பட் டுக்களி யாம லவளெனக் கண்ணெதிரே
மாணப்பட் டுத்தெரி பற்பல் பொருளையும் வாய்ப்பத்தழீஇ
நாணப்பட் டுப்பட்டுச் சென்றேனென் னூர்க்கு நறுநுதலே. (237)

(கு-ரை) பூண-அணிய. பணியும்-ஆபரணமும். களியாமல்-மகிழாமல். அவளென-அவள்போல. மாண-மாட்சிமையுண்டாக. தழீஇ-தழுவி. நாணப் பட்டு-வெட்கப்பட்டு.

அவள் குறி மருண்டமை யவளவற் கியம்பல்.

(இ-ள்) தலைவி குறி மயங்கியதைப் பாங்கி தலைவனுக்குக் கூறுதல். குறி-அடையாளம்.

நெய்க்குறி யேறி மருமான் பரங்கிரி நீணகரார்
கைக்குறி பார்க்கிற் கலங்கலுண் டேனுண்மை காண்கிலர்போற்
பொய்க்குறி வேறொன் றுநென்ன விராவிற் புகுதக்கண்டு
மெய்க்குறி காண்கில ளாய்மருண் டேயிற்கு மீண்டனளே. (238)

(கு-ரை) உறியேறி-உறியிலேறிய கண்ணபிரான் (வினையாலணையும் பெயர்) மருமான்-மருமகன். கலங்கல்-குழப்பம். பொய்க்குறி-பொய்யடையாளம். இற்கு-வீட்டுக்கு.

அவன் மொழிக்கொடுமை சென்றவளவட் கியம்பல்.

(இ-ள்) தலைவன் சொல்லியகொடுமையைத் தோழி தலைவிக்குச் சொல்லுதல்.

செந்தில் பரங்கிரி போற்கோயில் கொண்டருள் சேய்வனத்துள்
இந்திய மைந்தும் பொருதலைத் தீர்ப்பவு மியோகியற்ற
முந்திய னெஞ்செனப் புல்லெய் கரடி மூாட்கயஞ்சீ
யந்திர ளாய்வந் தலைப்பவந் தேனென்ற ணரணங்கே. (239)

(கு-ரை) செந்தில்-திருச்செந்தூர். ஐந்து-மெய் வாய் கண் மூக்கு செவி கள். ஈர்ப்பவும்-இழுப்பவும். யோகியற்ற (அவற்றின் வழிசெல்லாமல்)யோகஞ் செய்ய. புல்-புலி. எய்-முள்ளம்பன்றி. மூாட்கயம்-வலியயானை. சீயம்-சிங்கம். அலைப்ப-வருத்தப்படுத்த.

என் பிழைப்பன்றென் றிறைவி நோதல்.

(இ-ள்) குறிதவறியது என்னுடைய குற்றமல்லவென்று தலைவிநொந்து கூறுதல்.

என்னேயென் னேயி தறவுங் கொடுமை யிடையிருளில்
தன்னோர் மிருகம் பலவச் சுறுத்தத் தலைவர்வந்து
முன்னே முருகன் பரங்கிரி யேத்த முயன்றிலர்போற்
கொன்னே யகன்றன ரென்பிழைப் பன்று குறிப்பிழைப்பே. (240)

(கு-ரை) என்னே-யாதே. அச்சுறுத்த-பயப்படுத்த. முன்-முற்காலத்தில். கொன்னே-வீணாக. பிழைப்பு-தவறு, குற்றம்.

இதுவரை பத்தாநாட் பகல் நிகழ்ச்சி.

தாய் துஞ்சாமை.

(இ-ள்) தாய்விழித்திருத்தல். இது, தலைவிதோழிக்குச் சொல்லியது.

ஒருமுனி வேள்வி புரக்கின்ற நாள்மைந்த ரோரிருவர்
கருவிழி போகம தன்னைகண் யாமத்துங் கண்படைகொண்
டிருநில மேலின்ப மெய்தா தினியென் னியற்றுவரோ
குருபா லுருங் குகன்பரங் குன்றுறை கொற்றவரே. (241)

(கு-ரை) முனி - விசுவாமித்திரர். இருவர் - இராமர் இலக்குமணர். யாமத்தும்-நடுச்சாமத்திலும். கண்படை-நித்திரை.

நாய் துஞ்சாமை.

(இ-ள்) தாயுறங்கிய பின் ஊரிலுள்ள நாயுறங்காதிருத்தல்.

வயிரவர் கோயிலைத் தாங்காவல் கொண்டுதம் வாகனத்தை
யயிரறல் சூழ்நக் நகர்க்காவ லாமுன் பமைத்தனரோ
குயில்மொழி யாயன்னை போலேதுஞ் சாமற் குரைக்குமொலி
செயிரறு வேலன் பரங்கிரிக் கப்புறஞ் சென்றதுவே. (242)

(கு-ரை) தம்வாகனம்-தம்முடைய வாகனமாகியநாய். அயிர் அறல்-நுண் மணலையுடைய நீர் துஞ்சாமல்-உறங்காமல். குரைக்கும்-குலைக்கும். செயிர்-குற்றம்.

ஊர் துஞ்சாமை.

(இ-ள்). நாயுறங்கினும் ஊரிலுள்ளாருறங்காதிருத்தல். ஊர்-ஆகுபெயர்.

ஊரார்துஞ் சாம லிருத்தற்குக் காரண மொண்டொடியே
சீரார் பரங்கிரி வேலன் விழாவெனச் செப்பிலது
பாரா ருயும்படி பங்குனி யில்வரற் பாலதொன்றும்
போரார்கண் ணுயெற்கு நல்லின்பம் வாய்க்கப் பொறாவிதியே. (243)

(கு-ரை) விழா-திருவிழா. பாரோர்-இப்பூமியிலுள்ளவர். உயும்-உய்யும், பிழைக்கும். பங்குனியில்-பங்குனி மாதத்தில். போர்-யுத்தம். ஆர்-நிறைந்த.

காவலர் கடுகுதல்.

(இ-ள்) ஊர் உறங்கியபின் நகர்காப்போர் பறையடித்துக்கொண்டு ஊரைச்சுற்றிக் கடுகிவருதல். கடுகல்-விரைதல்.

முறையோடு பூசை முருகனுக் காற்றுவர் முந்துமுரா
சறையோசை யேபரங் குன்றி லுயர்ந்த ததிறசிறிதுங்
குறையோ துதலின்றி நந்நகர்க் காவலர் கொட்டியகைப்
பறையோசை மேலிடு மென்று லெவர்கண் படைகொள்வரே. (244)

(கு-ரை) முந்தும்-முற்படும். முரசு-வாத்தியம். அறை-அடிக்கின்ற. ஓதுதலின்றி-சொல்லுதலில்லாமல். பறை-வாயகன்ற வாத்தியம். கண்படை-நித்திரை.

நிலவு வெளிப்படுதல்.

(இ-ள்) தலைவன் வருதற்கிடையூருய் நிலாவெளிப்படுதல்.

காமக் கிழத்தி யரைக்கா தலர்வந்து காணவொட்டா
தேமத் தெழுமிம் மதியை விழுங்கி யிராகெழுந்து
போமத் தினமித் தினமாக் கணிதர் பொறித்திருந்தால்
தாமக் குழலி தடையுண்டு மோவது தாணிலையே. (245)

(கு-ரை) ஏமத்து-இரவில். இராகு-ஓர்வகைப் பாம்பு. அத்தினம்-அந்தக் கிரகணகாலம். கணிதர்-சோதிட நூலார். பொறித்து-எழுதி. தாமக்குழலி-மாலையணிந்த கூந்தலையுடையாளே.

கூகை குழறுதல்.

(இ-ள்) கூகை குழறக்கேட்ட தலைவி யஞ்சிக் கூறுதல்.

கள்ளை யுமிழுங் கடம்பன் பரங்கிரிக் கண்ணுனக்குக்
கொள்ளையென் போயிற்றுக் கூகாய் பலதரங் கூக்குரல்கொண்
டுள்ளையிவ் வூர்துயில் கொள்ளா வருத்தமு மோர்ந்திலையால்
வெள்ளை மதியொடுன் வாய்மாயச் செய்வன் விடிந்திடினே. (246)

(கு-ரை) உமிழும்-கக்கும். கண்-இடத்தில். கூகாய்-கூகையே. கூக்குரல் கொண்டு-பேரொலிசெய்து. உள்ளை-உள்ளாய், இருக்கிறாய். வாய்மாய-வாய் ஒடுங்க.

கோழி குரற் காட்டுதல்.

(இ-ள்) தலைவி தலைவன் ஆகிய இருவர்க்குமிடையூறாய்க்கோழிகூவுதல்.

வருவார் தமையன்பிற் கால மறிந்து வரவழைக்கு
மொருநீவிர் கந்த னுறையும் பரங்கிரி யூர்புரக்கும்
பெருமானை யென்னிடஞ் சேரச்செ யாமற் பெயரச்செய்தீர்
திருவார்செஞ் சூட்டுயர் வாரணங் காளிது தீமையின்றே. (247)

(கு-ரை) வருவார் - வருகின்ற சூரியர். ஒரு-ஒப்பற்ற. நீவிர் - நீங்கள். பெருமானை-தலைவனை. பெயர-நீங்க. சூட்டு-உச்சிப்பூ. வாரணங்காள்-கோழி களே.

இவ்வேழு துறைகளும் இரவுக்குறியிடையீட்டில் வருந்தொழிற் கருமை யின் விரியென்க. ஒவ்வொன்றுக்கும் நந்நான்கு நாழிகையாகக்கொள்க.

14-இரவுக் குறியிடையீடு முற்றிற்று.

---

## பதினைந்தாவது—வரைதல் வேட்கை.

அஃதாவது இடையீடுபட்டதனால் பதினொராநாள் தலைவிமணஞ்செய்ய விரும்புதல். அஃது, அச்சம் உவர்த்தல் ஆற்றுமையென மூன்றுவகைப்படும். அவ்வருமாறு:—

### தலைவியைப் பாங்கி பருவரல் வினவல்.

(இ-ள்) தலைவி துன்பமுற்றிருத்தலைத் தோழிகேட்டல்.

அஞ்சலஞ் சேல்விழி மின்னே நின் னுள்ளத் தடைந்ததொரு
சஞ்சல முண்டென்று நின்முக மேசொலத் தானறிந்தேன்
மஞ்சலர் பூங்குழல் வள்ளிதன் கோன்மெய் வரையினிலென்
னெஞ்சலை தில்லையுன் னெண்ணிறை வேற்றுவர் நீணிலத்தே. (248)

(கு-ரை) அஞ்சல்அஞ்சேல்-பயப்படாதே பயப்படாதே. சஞ்சலம்-துன்பம். மஞ்சு-அழகு. அலர்-விரிந்த.

### அருமறை செவிலியறிந்தமை கூறல்.

(இ-ள்) தலைவியரிய களவொழுக்கத்தைச் செவிலித்தாயறிந்தமை பாங்கிக்குக்கூறுதல்.

மங்கைக் கொருபங் களித்தார் மகன்மெய் வரைமயிலே
கொங்கைக் குறியினை யான்பார்த்து மூடுங் குறிப்பினையும்
அங்கைக் கருவளை கீழே கழல்வது மன்னைகண்டு
தூங்கைக்கு நோக்குதல் போலே சினந்தென்னை நோக்கினளே. ()

(கு-ரை) மெய்வரை-பரங்கிரி. குறி-அடையாளம். வளை-வளையல். துங்கைக்கு-விழுங்குதற்கு. சினந்து-கோபித்து.

### தலைமகன் வருந்தொழிற் கருமைசாற்றல்.

(இ-ள்) தலைவி தலைவன் வருதற்கருமையைப் பாங்கிக்குக் கூறுதல்.

ஊர்தாய் ஞமலி துடிகூகை கோழி யொளிருமதி
போர்தா மியற்றுதல் போலிடை யூறு புரிந்துநனி
சூர்தா மியற்றில் முருகன் பரங்கிரி சூழிருளில்
ஆர்தாம் வருவ ரவர்வா விலையென தயாணங்கே. (250)

(கு-ரை) ஞமலி-நாய். துடி-பறை. இயற்றுதல்-செய்தல். புரிந்து-விரும்பி.நனி-மிக. சூர்-பயம். இயற்றில்-செய்தால். இல்-இல்லை. அயர்-வருந்துகின்ற.

### தலைமகனூர்க்குச் செலவொருப்படுதல்.

(இ-ள்) தலைவனிருப்பிடத்துக்குப் போகத் தலைவி துணிந்து பாங்கிக்குக் கூறுதல்,

மாவோம் பொருளென வந்தார் பாங்கிரி மார்க்கமின்னே
போவோ மவரெதிர் கேட்குமப் போதும் புறக்கணித்தாற்
சாவோமின் றேலெலை யாசைப் பிராந்தி தகர்த்தழிக்கும்
ஏவோம்பு கண்ணி யெதிலேனு மென்னுயி ரேருகவே. (251)

(கு-ரை) மா-பெரிய. ஓம்பொருள் பிரணவப்பொருள். புறக்கணித்தால்-பாராமுகமாயிருந்தால். பிராந்தி - மயக்கம். ஏ-பாணத்தை. ஓம்பு - காக்கின்ற. ஏருக-போவதாருக.

பாங்கி யிறைவனைப் பழித்தல்.

(இ-ள்) தோழி தலைவனை நிந்தித்துக் கூறுதல்.

தானுக் கனியப் படாதசெங் காய்தடி தான்றகர்ப்ப
தானுற் கனியுங்கொ லோநங் குகன்மெய் யசலத்தினில்
நானுப் புகல்வது கொள்ளாயென் போலொரு நங்கையைக்கேள்
தேனுற் புகழ்சொல்லி யேயவள் சொல்லத் தெரிந்துகொள்ளே (252)

(கு-ரை) தகர்ப்பது-அடிப்பது. சொல்லியே-சொல்லையுடையவளே.

இறைவி யிறையோன்றன்னை நேர்ந் தியற்பட மொழிதல்

(இ-ள்) பாங்கி தலைவனியலைப் பழித்தது பொறுளாய்த் தலைவி தலைவனோடுடன்பட்டவளா யவனியலைக் கூறுதல். இயல்-தன்மை.

நம்மிற் பலகுறை காணினும் போக்கிநென் னல்லிருளிற்
றம்மிற் பலசுக மீந்தா ரவரைத் தணந்திருந்து
தும்மிற் குறைசொல்வர் போலே குறைசொல்லித் தூறல்நன்றோ
விம்மிற் குறைதல் வழக்காங் குகன்பர வெற்பணங்கே. (253)

(கு-ரை) நென்னல்-நேற்று. தம்மில் - தம்மிடத்திலிருந்து. தணந்து-நீங்கி. விம்மில்-பருத்தால்.

கனவு நலிபுரைத்தல்.

(இ-ள்) தலைவன் கனவிற் கூடினதை விழித்தபின்பு பொய்யாய்ப் போன துன்பத்தைப் பன்னிரண்டாநாள் தலைவி பாங்கியினிடத்திற் கூறுதல்.

போராசை யுற்றவர் தீராத் தரித்திரம் பெற்றெனவென்
னோராசை யோடு கனவில்வந் தாரை நெருக்கவவர்
ஓரா சையுமின்றி யோடினர் கண்விழித் துள்ளுடைந்தேன்
பாராசை கொள்ளு முருகன் பாங்கிரிப் பைந்தொடியே. (254)

(கு-ரை) பெற்றெனை-பெற்றாற்போல. நெருக்க - அதாவது, மிகவூடல் செய்ய என்றபடி.

கவினழிபுரைத்தல்.

(இ-ள்) விகாரத்தாற் றலைவி தன்னலனழிந்ததைப் பாங்கியுடன் சொல்லுதல்.

எம்புன வேங்கையென் மேனியிற் பூப்ப விருந்தனங்கள்
வம்பு னொடுங்கநம் வேலோன்மெய்க் குன்றில் மலரிழந்த
கொம்பு நிகருமென் கோல மவருங் குறித்திலர்நீ
யும்புக லாயவர்க் கென்செய்து வேனிங் குளையன்றியே. (255)

(கு-ரை) வேங்கை-ஓர்மரம். பூப்ப-மலர, அதாவது பொன்னிறமாகிய தேமல்படர என்றபடி. வம்பு-கச்சு. கோலம்-அலங்கோலம்.

தன்றுயர் தலைவற் குணர்த்தல் வேண்டல்.

(இ-ள்) தலைவி தன்றுன்பத்தைத் தலைவனுக்கறிவிக்க வேண்டுமென்று பாங்கியுடன் சொல்லுதல்.

உற்றுழி நேர்வந் துதவிசெய் தோழி யொருத்திதனைப்
பெற்றுய மாதவஞ் செய்யப் பெறுதவிப் பேதைதுயர்
சற்றுநங் காதலர் முன்சென் றுரைக்கத் தகுந்தவளைக்
கற்றுயர் நீகண்டு சொல்சேய் பரங்கிரிக் காரிகையே. (256)

(கு-ரை) உற்றுழி-ஆபத்துவந்த இடத்து. உயும்-(விகாரம்) பிழைக்கும். பேதை-பேதையாகிய என்னுடைய. சற்று-சிறிது. சொல்-(அவருக்குச் சொல்லும்படி) சொல்லுவாயாக.

துன்புறு பாங்கி சொல்லெனச் சொல்லல்.

(இ-ள்) தலைவி துன்பத்தைக்கண்டு தானுந் துன்பமுற்ற தோழி யுன் துன்பத்தை நீயே தலைவனுக்குச் சொல்லென்று கூறுதல்.

இடுவார் கிழிக்கு முலையாயுன் னுள்ளத் திசைந்திருக்கப்
படுவார்க்கு நீபக ராமற் பிறரைப் பகருகென்றல்
நடுவார்நன் னுசியை நேரே தொடாதுவ்வி நாடிச்சுற்றித்
தொடுவார் செயலொக்கும் வேலோன் பரங்கிரி சூழிடத்தே. (257)

(கு-ரை) பகருகென்றல் - சொல்வீரென்று சொல்லுதல். நடு-நடுவே. வார்--நீண்ட, உவ்வி-தலையை.

## அலர் பார்த்துற்ற அச்சக்கிளவி.

(இ-ள்) ஊரிலுள்ளார் சொல்லும் பழிச்சொல்லைக்கருதி அசனுற்ற பயத்தாற் றலைவி கூறுஞ்சொல்.

உணரா ருணா வுணர்ந்தா ருணர்வற வோங்கருள்செய்
கணநாதர் கண்பெற்ற கந்தர் பரங்கிரிக் கானநதி
மணலூ றலரினும் வாயூ றலர்பல மாதரிடைத்
தணவாம லோங்கிப் பெருகிய தீதென் றலைவிதியே. (258)

(கு-ரை) உணரார் - ஆராய்ச்சி செய்தறியார். உணர்ந்தார் - ஆராய்ச்சி செய்தறிந்தார். உணர்வற-ஆராய்ச்சி செய்தற்குத் தாம் வேறில்லாமல், அதாவது தம்மோடிரண்டறக் கலந்து என்றபடி. கணநாதர் - சிவ கணங்களுக்குத் தலைவராகிய சிவபிரான். கானநதி-காட்டாற்றின். அலரினும்-நீரைப் பார்க்கிலும். வாயூறு அலர்-வாயினிடத்துண்டாகும் பழிமொழி. தணவாமல்-நீங்காமல்.

## ஆறுபார்த்துற்ற அச்சக் கிளவி.

(இ-ள்) வழியைப் பார்த்து அசனுலடைந்த பயத்தாற் றலைவி பாங்கியை நோக்கிக் கூறுஞ்சொல். பார்த்தல்-கருதல்.

யாருந் தனிவழி யஞ்சாம லேகற்க வென்றவுரை
தேருங் கருத்தின்றி யெம்பெரு மான்வந்து செல்நெறிக்கட்
பேருங் கரியு மரியும் பயஞ்செய் பெருங்கொடுமை
கூருந் தயிற்கைக் குமரன் பரங்குன்றிற் கூறரிதே. (259)

(கு-ரை) ஏகற்க-போகக்கூடாது. இன்றி-இல்லாமல். நெறிக்கண்-வழியிடத்து. பேரும்-பேர்ந்து திரியும். கூர்-கூர்மையை. உந்து-செலுத்துகின்ற. அயில்-வேல்.

## காமமிக்க கழிபடர் கிளவி.

(இ-ள்) தலைவி யாசைமிகுந்து சிறப்பச்சிந்தித்துச் சொல்லுஞ்சொல். இக்கிளவிக்கு கடல் கானல் விலங்கு பறவை முதலியவற்றை விளித்துத் தலைவி வருந்திக் கூறுதல் மரபு.

உழலோசை விண்செல் பரங்கிரி வேலனை யுள்கிடையர்
குழலோசை காமக் கொடுங்கனல் மூட்டுங் குரவையலை
யெழலோசை யென்னை யெரிக்கு மதுகண் டெனைத்தந்ததா
யழலோசை யென்செவி கேட்குமுன் னுவி யகன்றிடுமே, (260)

(கு-ரை) உழல் - உழுதல். உள்கு - நினைக்கின்ற. குழல்- வேய்ங்குழல். குரவை-கடலின். எழல்-எழுதலின். ஆவி-உயிர்.

இதுவுமது.

மயில்கா னிளமென் பசுங்கிளி காள்வெண் மடவனங்காள்
குயில்காள் முருகன் பரங்கிரி காகநின்ற கொற்றவர்நாம்
பயில்கா னகத்து வரப்போக நீவிரும் பார்த்திருப்பீர்
துயில்கிண்ணி லாளென் றவர்செவி யுட்புகச் சொல்லுமினே. (261)

(கு-ரை) கொற்றவர்-குறிஞ்சிநிலத் தலைவர். நீவிரும்-நீங்களும்.

தன்னுட் கையாறெய்திடுகிளவி.

(இ-ள்) தலைவி தன்னிடத்துண்டாய துன்பத்தைப் பிறிதொன்றன் மேல்வைத்துச் சொல்லுஞ்சொல்.

சங்க வளைக ளகன்றோடப் பல்கலை தங்குமருங்
கங்க ணகல முருகன் பரங்குன் றமர்பெருங்கா
னெங்கணு மோடிப் பரந்தலைந் தாயென் னிறைவரைநீ
யுங்கலந் தேடிநிந் தாயோசிற் றூறெனு மொண்டொடியே. (262)

(கு-ரை) சங்கவளைகள்-சங்கினாற்செய்த வளையல்கள், கூட்டமாகிய சங்குகள். அகன்று-நீங்கி, விரிந்து. பல்கலை-பலவிதமானசேலை, விருதநியாகின்ற அலை. மருங்கு-பக்கம். அங்கண்-இடையாகிய அவ்விடம், பக்கமாகிய அவ்விடம் எனச் சிலேடைப்பொருள் கண்டுகொள்க. பரந்து-வியாபித்து. இறைவரை-தலைவரை.

நெறிவிலக்குதல்.

(இ-ள்) தலைவி தலைவன் வரும்வழியை விலக்கெனப் பாங்கியொடு கூறுதல்.

கவர்மன்னு பன்னெறி காட்டுமிக் கானெறிக் கண்மிகவும்
இவர்மின் னிடிமழை காரிரு ளெய்து மிரவில்வா
அவரொன் னூமுன்சென் றகற்றுவர் சேய்மெய் யசலத்தினி
லெவரொன் னினுமெனக் கின்னுயி ரீந்தவ ரீர்ங்குழலே. (263)

(கு-ரை) கவர்-பிரிவு. மன்னு-பொருந்துகின்ற. நெறி-வழி. இவர்-எழுகின்ற. சேய்-குமாரக்கடவுள். ஈர்ங்குழலே-குளிர்ந்தகூந்தலையுடையதோழியே.

## குறி விலக்குவித்தல்.

(இ-ள்) தலைவி தலைவன் வரும் இரவுக்குறியை விலக்கெனப் பாங்கியொடு கூறுதல்.

புன்னையங் கொம்பினிற் புள்ளெழுப் புங்குறி பொய்க்குறியா
என்னையங் கின்ன லிழைக்கு மிரவிடை யெய்தற்கவென்
றன்னையன் பிற்கண்டு கேட்பார்க் குரைகுக னோங்குமெய்வெற்
பன்னையின் றீம்புனங் காவற் கெனைவைத் ததுமுரையே. (264)

(கு-ரை) கொம்பு-கொப்பு. புள்-பறவைகளை. குறி-அடையாளம். பொய்க்குறியா-பொய்யடையாளமாக. இன்னல்-துன்பம். இழைக்கும்-செய்யும். எய்தற்க-வாராதே. அன்னை-தாய். புனம்-தினைப்புனம்.

## வெறி விலக்குவித்தல்.

(இ-ள்) தனக்குற்ற காமநோயைத் தாய்தந்தையர் விலக்கும்பொருட்டு வெறியாடுதலை விலக்கும்படி பாங்கிக்குத் தலைவி கூறுதல். வெறியாடுதல்-ஆடுவெட்டிப் பலிகொடுத்தல்.

வந்த பிணியை யறிந்ததற் கேற்ற மருந்துகொடா
தெந்த மருந்தையு மூட்டுவர் போலென் னிறைவரொற்குத்
தந்த மயலறத் தாயர் குகன்மெய்த் தடத்திலசம்
வெந்தவி யப்பலி யீந்தாற் பயனென் விளங்கிழையே. (265)

(கு-ரை) ஊட்டுவர்-உண்ணச்செய்வார். இறைவர்-தலைவர். மயல்-காம மயக்கம். மெய்த்தடம்-பாங்கிரி. அசம்-ஆடு. அவிய-கெட. பலி-பூசை.

## இதுவுமது.

பல்லார் பரவக் குகன்வீற் றிருக்கும் பாங்கிரிவாழ்
நல்லார் பிழைத்தற் கசத்தினை நாடுதல் நல்லதன்றென்
றல்லார் குழல்நம தன்னையர் பாற்சென் றடுத்தெடுத்துச்
சொல்லா ரொருவரும் நீயே விரைந்து துணிந்துரையே. (266)

(கு-ரை) நல்லார்-பெண்கள், நல்லவர்கள். அசத்தினை-ஆட்டினை, உண்மையில்லாத விஷயத்தினை. அன்று-அல்ல. குழால்-கூந்தலையுடையபாங்கியே.

## பிறவிலக்குவித்தல்.

(இ-ள்) மணப்பொருட்டு வரும் இதர வரவைத் தாயர்க்குச்சொல்லி அவர் வரவை விலக்கெனத் தலைவி தோழிக்குச் சொல்லுதல்.

*வேலற் கமைத்த பலியினைப் பேய்பெறு விப்பவர்போற்*
*காலற்கு நேர்கரி தாக்குமந் நாளினிற் காத்தவருக்*
*கேலக் கொடுக்கு மெனைத்தாயர் மற்றையர்க் கியனெஞ்சிற்*
*சாலக் குறித்த லழகோ பரங்கிரித் தாழ்குழலே.* (267)

(கு-ரை) பலியினை-பூசையாகிய உணவுப்பொருளை. பெறுவிப்பவர்-பெறச்செய்பவர். காலற்கு-யமனை. (உருபுமயக்கம்) கரி-யானை. ஏல-பொருந்த. குறித்தல்-கருதுதல்.

### குரவரை வரவெதிர் கொள்ளுவித்தல்.

(இ-ள்) நந்தலைவர் விட்ட பெரியோர் மணம் பேசிவர அவரை நம்மவர் எதிர்கொண்டழைக்குமாறு செய்யெனத் தலைவி பாங்கியொடு சொல்லுதல்.

*தன்னடி யார்க்குப சாரஞ்செய் தாலுந் தற்கெனவே*
*யின்னருள் செய்யும் பரங்கிரி வேல னெனச்சிலம்பர்*
*நன்னல மாமணம் பேசிவந் தார்க்கெதிர் நங்கிளைஞர்*
*புன்னகை யோடுரை யாடி லவருளம் பூரிக்குமே.* (268)

(கு-ரை) தற்கு-தனக்கு. வேலனென-குமாரக் கடவுளைப்போல. சிலம்பர்-குறிஞ்சிநிலத் தலைவர். மணம்-விவாகத்தைக் குறித்து. புன்னகை-குறுஞ் சிரிப்பு. உரையாடில்-பேசினால்.

இவற்றுள்-அருமறை செவிலியறிந்தமை கூறலும் தலைமகன் வருந்தொழிற் கருமை சாற்றலும் அலர் பார்த்துற்ற அச்சக்கிளவியும் ஆறுபார்த்துற்ற அச்சக் கிளவியும் நெறி விலக்குவித்தலும் குறி விலக்குவித்தலும் வெறி விலக்குவித் தலும் பிறவிலக்குவித்தலும் குரவரை வரவெதிர்கொள்ளுவித்தலுமாகிய ஒன் பதும் அச்சத்திற்கும், தலைமகனூர்க்குச் செலவொருப்படுதலும் பாங்கி யிறை வனைப் பழித்தலும் தலைவி யிறையோன்றன்னை நேர்ந் தியற்படமொழிதலு மாகிய மூன்றும் உவர்த்தற்கும், பாங்கி பருவரல் வினவலும் கனவு நலிபுரைத் தலும் கவினழிபுரைத்தலும் தன்றுயர் தலைவற்குணர்த்தல் வேண்டலும் துன் புறு பாங்கி சொல்லெனச் சொல்லலும் காமமிக்க கழிபடர்கிளவியும் தன்னுட் கையாறெய்திடு கிளவியுமாகிய ஏழும் ஆற்றாமைக்கு முரியன. பருவரல் வின விய பாங்கி யென்பதனை இரண்டு துறையாக்குவாருமுண்டு.

இதுவரையும் பன்னிரண்டாநாள் நிகழ்ச்சி.

15-வரைதல் வேட்கை முற்றிற்று.

## பதினாறாவது—வரைவுகடாதல்.

அஃதாவது பாங்கி தலைவனோடு வரைவு கடாதல், வரைவு கடாதல்-மணம் வினவுதல்,- அது பொய்த்தல் மறுத்தல் கழறல் மெய்த்தலென நான்கு வகைப்படும். அவைவருமாறு:—

### வினவிய செவிலிக்கு மறைத்தமை விளம்பல்.

(இ-ள்) முன் வரைதல்வேட்கையில் தலைவி அருமறை செவிலி யறிந்தமை கூறியவதனைத் தோழி தன்னைச் செவிலி வினவியதாகவும் அதற்குத் தான் மறைத்துக் கூறியதாகவும் தலைவற்குக் கூறுதல். பின்வருங் கவினழிபுரைத்தலீறாகிய கிளவிகள் பலவற்றானுங் குறிப்பினானும் வெளிப்படையானும் வரைவு கடாவியவாறு கண்டுகொள்க.

இடைபோல் மெலியு முடலினை நேர்தெரிந் தித்தகைய
அடைவே தெனவினை கேட்கவெற் பாமெய் யசலமுற்றும்
உடையான் சடாக்கர மோதுமென் கிள்ளைக ளூட்டிடினும்
மடையோடு பாலு மருந்தாவென் றுள்நம் மடமயிலே. (269)

(கு-ரை) அடைவு - அமைதி, அதாவது உடலிளைத்திருத்தல். அனை-தாய். வெற்பா - குறிஞ்சிநிலத்தலைவனே. சடாக்கரம் - ஆறெழுத்து மந்திரம். கிள்ளை-கிளி. மடை-சோறு. அருந்தா-உண்ணமாட்டா.

### அலரறிவுறுத்தல்.

(இ-ள்) ஊரில் தலைவியைத் தூற்றும் அலர் விரிந்ததென்று தலைவனுக்குப் பாங்கி யறிவுறுத்தல். அலர்-பழிச்சொல். அறிவுறுத்தல்-அறியும்படி கூறுதல்.

நீரல ராதிய நால்வகை மாமலர் நீடுமிந்த
ஊரலர் பூத்த ததனால் மணஞ்செய் யுறுதிபெற்றோங்
காரலர் பெய்யு முருகன் பரங்கிரிக் கன்னியையிச்
சாரலர் முன்பது நீயேவெற் பாசெயத் தக்கதுவே. (270)

(கு-ரை) நீரலர்-நீர்ப்பூ. நால்வகை-கோடு கொடி நீர் நிலம். அலர்-பழிச்சொல். மணம்-விவாகம், வாசனை. கார்-மேகம். அலர்-நீர். இச்சாரலர்-இந்த மலைப்பக்கத்திலுள்ளவர்.

### தாயறி வுணர்த்தல்.

(இ-ள்) தலைவியின் களவைத் தாயறிந்தாளென்று தலைவனுக்குப் பாங்கி யறியும்படி சொல்லுதல்.

இல்லாத வூரி லியைமா மலர்மண மெங்கிருந்தோ
பொல்லாத விந்த நடுராத் திரியிற் புகுந்ததென்றுள்
ளல்லார் குழலி களவறிந் தாளன்னை யன்பருக்கே
யெல்லா நலனுந் தருஞ்சேய் பரங்குன் றிறையவனே. (271)

(கு-ரை) இயை-பொருந்திய. குழலி-கூந்தலையுடைய தலைவி. வூரிலில் லாதமணமெனக் கூட்டுக.

வெறியச்சுறுத்தல்.

(இ-ள்) அன்னை வெறியாடல் செய்ய நினைத்தாளென்று தலைவனுக்குப் பாங்கி பயமுறுத்திக் கூறுதல்.

மாட்டுப் பிணிக்கு மருந்து கொடாதிட மாற்றுதல்போல்
காட்டுட் பெறுமிவள் காமவெப் பிற்குண் கலவைசெய்யா
தாட்டுக்கங் கொய்ய நினைந்தே மதிமருண் டாரன்னைமார்
வீட்டுக்கு நேர்வழி காட்டுங் குகன்பர வெற்பரசே. (272)

(கு-ரை) கலவை-சேர்க்கையை. கம்-தலை. வீட்டுக்கு - மோக்ஷத்துக்கு.

பிறர் வரைவுணர்த்தல்.

(இ-ள்) தலைவி மணங்குறித்துப் பிறர் வந்ததைத் தலைவனுக்குப் பாங்கி கூறுதல்.

கனியப் பழுத்த பழத்தினை யீக்கணங் காணில்மொய்யா
தினியப் புறத்தி லிருக்குங்கொ லோவெங்க ளேந்துகொங்கை
வனிதைக்குத் தூது மணப்பா னிளைஞர் வரவிடுத்தார்
தனியுற்ற நீயுமவ் வாறுசெய் சேய்மெய்த் தடத்திறையே. (273)

(கு-ரை) கணம் - கூட்டம். மணப்பான் - விவாகஞ்செய்யும்பொருட்டு. இளைஞர்-யௌவனமுடைய புருடர். தனி-ஒப்பில்லாமை. மெய்த்தடம்-பரங் கிரி.

வரைவெதிர்வுணர்த்தல்

(இ-ள்) பாங்கி தலைவனை நோக்கி நீ மணங்குறித்துத் தூதனுப்பினால் தலைவி சுற்றத்தாரெதிர்கொண்டு வருவரெனக் கூறுதல்.

நற்புலிக் குள்ள மதிப்புக் குகன்மெய்ந் நகுலமன்னாய்
இற்புலிக் கில்லை யதுபோற் பிறரை யெமர்மதியார்
சொற்புகழ் பெற்றநின் றூதுரைப் பார்த் தொடர்ந்தெதிர்போய்
அற்புறப் பேசி மணநேர்வர் நின்மதிப் பார்க்குள்ளதே. (274)

(கு-ரை) மெய்ச்சுலம்-பரங்கிரி. இற்புலி-பூனை. எமர்-எங்கள் சாதியார். அற்பு-அன்பு. மணம்-விவாகத்துக்கு. சேர்வர்-உடன்படுவர்.

வரையு நாளுணர்த்தல்.

(இ-ள்) தலைவனுக்குப் பாங்கி மணஞ்செய்புநாளை யறிவித்தல்.

கணிமலர் கொய்யுநற் காலந் தினைகொய்யுங் காலமதி
லணியு மணச்சடங் கெல்லாங் குகன்மெய் யசலத்தெமர்
திணியுறச் செய்வர்நின் றாது செலுத்துக செய்விளைநெல்
மணிபெறு வார்வந்த காற்றினிற் றூற்றும் வழக்குணர்ந்தே (275)

(கு-ரை) கணி-வேங்கை. சடங்கு-கிரியை. திணியுற-உறுதியாக. செய்-வயல். நெல்மணி-நெல்லொடு விளையு முத்துக்கள்.

அறிவறிவுறுத்தல்.

(இ-ள்) பாங்கி தலைமகளறிவைத் தலைவனுக்கறியக் கூறுதல்.

மஞ்சிற் பொதியு முருகன் பரங்கிரி வாய்மடவார்
தஞ்சிற் குறிப்பி னுளவறிந் துன்புயஞ் சாத்தலரைப்
பஞ்சிற் படினும் பதைக்கும் பதமலர்ப் பைந்தொடிதன்
னெஞ்சிற் கொளிப்பது போலொளித் தாளெற்கு நீயறியே. (276)

(கு-ரை) மஞ்சின்-மேகத்தால். சிற்குறிப்பில்-சிலகுறிப்புக்களால். உளவு-இரகசியம். சாத்து - சேர்த்துகின்ற. அலரை - பழிச்சொல்லை. பதைக்கும்-வருந்தும்.

குறிபெயர்த்திடுதல்.

(இ-ள்) பாங்கி யிக்குறியிடத்தை விட்டு வேறோர் குறியிடத்து வருக வென்று தலைவனுக்குக் கூறுதல்.

குறவர் மருள்குன்றின் மேலாங் குகன்பரங் குன்றின்மந்தி
யுறமருள் சோலை யகப்புறத் துண்டகி லோர்குறிவைத்
தறனிக ருங்குழ லாளொடு போய்விளை யாடுவெளிப்
புறனமர் பூம்பொழிற் கேவரு மெய்துவர் போதற்கவே. (277).

(கு-ரை) மருள்-மயங்குகின்ற. மந்தி-குரங்குகள். உற-மிக. அகப்புறம்-உட்பக்கம். குறி-அடையாளம். அறல்-கருமணல். வெளிப்புறன்-வெளிப்பக்கம். போதற்க-போதல்வேண்டா.

இதுவரையும் பதின்மூன்று நாள் நிகழ்ச்சி.

### பகல்வருவானை யிரவுவருகேன்றல்.

(இ-ள்) வெளி.

அகலிற் சுடர்விளக் கென்னக் குகன்மெய் யசலமன்னாய்
பகலிற் களவு பயனடை யாதெங்கள் பாவையின்பம்
புகலிற் பிரிய மிருந்தா லரிகரி போந்தெதிரே
யிகலிற் பொருவடி வேலேந்தி நீயெய் திரவினிலே. (278)

(கு-ரை) அகலில்-விரிந்தபாத்திரத்தில். விளக்கென்ன-விளக்குப்போல. புகலில்-புகுதலினிடத்து. போந்து - வந்து. இகலில்-பகைத்தால். எய்து-வருவாயாக.

### இரவுவருவானைப் பகல்வருகேன்றல்

(இ-ள்) வெளி.

காணற் கரிய விருளிற் களவினைக் கண்டுதண்டம்
பேணற் கிருந்தன ரன்னைய ராயினும் பேதுறல்நீ
கோணற் கிசைந்த குழிகல்லு வாரெனக் கோக்குமரன்
பூணற் கிசைந்த பரங்கிரி யாய்பகற் போதுகவே. (279)

(கு-ரை) களவினை-கள்ளப்புணர்ச்சியை. பேதுறல்-மயங்காதே. கல்லுவார்-தோண்டுவார். போதுக-வருவாயாக.

இதுவரையும் பதினொன்கா நாள் நிகழ்ச்சி.

### பகலினுமிரவினும் பயின்றுவருகேன்றல்.

(இ-ள்) பகற்காலத்து மிராககாலத்தும் நெருங்கி வருகெனப் பாங்கி தலைவனுக்குச் சொல்லுதல். பயிலல்-நெருங்கல்.

மருவாரெய் யேவுக்கு மாறுமெய் யேவிட்டு மாற்றுவர்போல்
கருவா ரிருளினிற் காவல்வைத் தார்கதிர் காண்பகலில்
வருவாய் பகலினிற் காவல்வைத் தாலிருள் வாய்வருவாய்
வெருவாயெஞ் சேய்பர வெற்பனை யாயின்ப மேவுதற்கே. (280)

(கு-ரை), எய் - எய்கின்ற. ஏ - பாணம். வெருவாய்-பயப்படாதே. பரவெற்பு-பரங்கிரி.

### பகலினுமிரவினு மகலிவணேன்றல்.

(இ-ள்) பகற்காலத்தினு மிராக்காலத்தினு நீ யிவ்விடத்துக்கு வராதேயென்று தலைவனைப் பாங்கி விலக்குதல்.

படிக்கும் கிளிகள் பரங்கிரி வேள்புகழ் பன்னுகென்று
துடிக்கின்ற நாவொடுஞ் சூரியன் போமட்டுஞ் சூழ்ந்துநிற்கும்
அடிக்கும் பறைக ளிராமுற்று மேயுறங் காதொலிக்கும்
முடிக்குநின் னெண்ண மினிமுடி யாதெங்கள் முன்னவனே. (281)

(கு-ரை) பன்னுகென்று-சொல்லென்று. பறைகள்-வாச்சியங்கள். முடியாது-நடவாது.

உரவோனுடுமுருங் குலனு மரபும் புகழும் வாய்மையுங் கூறல்.

(இ-ள்) பாங்கி தலைவனைநோக்கி நாடு முதலியவற்றாற்சிறந்த நீ மணஞ் செய்யாது வந்து போவது தகுதியன்றெனக் கூறுதல்.

வாடுங் கருத்தினை யத்தே வரைவினை மாற்றினையேல்
நீடும் பரங்கிரி வேலோ னருளி னிமிர்ந்திடுநின்
னாடும் பதியுங் குலனு மரபு நகுபுகழுங்
கூடுமெய் வாய்மையுஞ் சூர்மா வெனவடுக் கொள்ளுமின்றே. (282)

(கு-ரை) கருத்தின்-கருத்தால். ஐயத்தே-சந்தேகத்தினிடத்தே. வரைவினை-கலியாணத்தை. இனிச்சிலேடைப்பொருள். கருத்தினைய-மனம் வருந்தும்படி. தேவர்ஐவினை-தேவர்செய்யும் அழகிய கிரியைகளை. சூர்மா-சூரனாகிய மாமரம். வடு-குற்றம்.

ஆறுபார்த்துற்ற அச்சங்கூறல்.

(இ-ள்) வரும் வழியைக் கருதி அவ்வழியிற்றிரியும் விலங்காற் றோன்றும் பயத்தைத் தலைவனுக்குத் தோழி கூறுதல்.

பதியினைச் சேருமெய்ஞ் ஞான நெறிக்கிடர் பண்ணுகொடுங்
கொதிகொளு மாணவம் போல்நின் பதியைக் குறிக்குநெறி
யதில்வரு மாகரிக் கஞ்சுகின் றேமெய் யசலமன்னாய்
கதிர்வடி வேல னருளாலிக் கானங் கடந்துசெல்லே. (283)

(கு-ரை) பதி-இறைவன், சிவன். ஆணவம்-ஆணவமலம். பதியை-ஊரை. மா-பெரிய.

ஆற்றுத்தன்மை யாற்றக்கூறல்.

(இ-ள்) தலைவியின் ஆற்றுத் தன்மையை யாற்றுதல்செய்யத் தோழி தலைவனுக்குக் கூறுதல். ஆற்றுதல்-சகித்தல்.

வரைவின்றி யேகலப் பாலிடை யூறு வரக்கண்டுடல்
கரைவின் றியல மனங்கரைந் தாள்கண் கலுழ்ந்துநன்று
வுரையுங் குழறிப் பெருமூச் செறிந்தன ளொண்சிலம்பா
விரைவொன் றியென்று மணப்பாய் குகன்பர வெற்பிடத்தே. (284)

(கு-ரை) வரைவின்றியே விவாகமில்லாமலே. கரைவு-மெலிவு. இயல-பொருந்த. கலுழ்ந்து-அழுது. சிலம்பா-குறிஞ்சிநிலத் தலைவனே. விரைவு-சீக்கிரம். ஒன்றி-ஒருமைப்பட்டு. என்று-என்நாள்.

### காவன்மிக வுரைத்தல்.

(இ-ள்) குறியிடத்து நீ வருதற்கும் அவள் வருதற்கும் இடையூறாகிய காவல் அதிகப்பட்டதென்று தோழி தலைவனுக்குக் கூறுதல்.

முன்னை யிரவு பகல்போலல் லாமல் முழுத்தினமும்
அன்னையர் காவல்வைத் தார்நங் குகன்மெய் யசலத்தினில்
உன்னை யெதிர்ப்படி லென்னையுஞ் சேர வுருத்தொறுப்பர்
பின்னையென் சொல்லுவ னீயே யறிதி பெருந்தகையே. (285)

(கு-ரை) முன்னை-முன்னைநாள். எதிர்ப்படில்-கண்டால். சேர-ஒருமிக்க. உருத்து-கோபித்து. ஒறுப்பர்-தண்டிப்பர். அறிதி-அறிவாயாக.

### காமமிக வுரைத்தல்.

(இ-ள்) தலைவி வேட்கை யதிகப்பட்டதென்று தோழி தலைவனுக்குச் சொல்லுதல்.

மன்றற் கிசைந்திலை யேலிவள் காம மயக்கமுற்றுத்
தென்றற் புலிவரி லென்செய்கு வாள்மதன் றீக்கணையொவ்
வொன்றற்கும் தப்ப லரிதே பரங்குன் றொருவரரு
ளன்றற் புறுதும் மிருவோருங் கூட வியைவிப்பதே. (286)

(கு-ரை) மன்றற்கு-விவாகத்துக்கு. தப்பல்-தப்பிப்பிழைத்தல். அரிது-முடியாது. ஒருவர்-ஆட்டு வாகனத்தையுடைய குமாரக்கடவுள். அற்புறும்-அன்புமிகும். இயைவிப்பது-பொருத்துவது.

### கனவு நலிபுரைத்தல்.

(இ-ள்) தலைவிக்குக் கனவினால் வந்த துன்பத்தைத் தோழி தலைவனுக்குச் சொல்லுதல்.

காவற் றுயாங் கனுவிற்கின் றேயக் கனுவினிடை
யாவற் கிசைந்திடு நீயக லாயென் றகமகிழ்ந்தா
லோவற் குவந்தனை வந்தாலுங் கண்விழித் துள்ளழிந்தாள்
சேவற் றுவசன் பரங்கிரி போலுந் திறத்தரசே. (287)

(கு-ரை) ஆவற்கு-ஆசைக்கு. அகலாய்-நீங்கமாட்டாய். ஓவற்கு-நீங்குதற்கு. உவந்தனை-மகிழ்ந்தாய். சேவற்றுவசன்-கோழிக்கொடியை யுடையவன்.

## கவினழிவுரைத்தல்.

(இ-ள்) தலைவி அழகிழந்திருந்தலைத்தோழி தலைவனுக்குச் சொல்லுதல்.

வெயிலின் றுயருள் ளறியவொண் ணுப்பொழில் மேவுபச்சை
மயிலின் புறத்திவர் வேலன் பரங்கிரி வாயண்ணலே
யயிலுந் துறந்து கையிலுந் துவளை யவளவும்போய்த்
துயிலுந் துறந்து கவினிழந் தாள்நிற் றுறந்தபின்னே. (288)

(கு-ரை) ஒண்ணு-முடியாத. புறத்து-முதுகில். இவர்-ஏறுகின்ற. அயிலும்-உண்ணுதலும். உந்து-செலுத்துகின்ற. துயிலும்-நித்திரையும். கவின்-அழகு. துறந்தபின்-நீங்கியபின்பு.

இவற்றுள் வினவிய செவிலிக்கு மறைத்தமை விளம்பல் முதலாகப் பிறர் வரைவுணர்த்தலீறாகக் கூறிய ஐந்தும் பொய்த்தற்கும், குறி பெயர்த்திடுதலும் பகல் வருவானை யிரவு வருகென்றல் முதலிய நான்கும் மறுத்தற்கும், உரவோ னூரொருங் குலனும் வாய்மையுங் கூற லொன்றுங் கழறற்கும், வரைவெதிர் வுணர்த்தல் முதலாகிய மற்றைய ஒன்பது மெய்த்தற்கு முரியன. இவையெல் லாங் குறிப்பினானும் வெளிப்படையானும் வரைவுகடாவியவாறு கண்டு கொள்க.

16-வரைவு கடாதல் முற்றிற்று.

---

## பதினேழாவது—ஒருவழித்தணத்தல்.

அஃதாவது மேற்கூறிய பாங்கியிடத்து வரைதற்கு உடன்பட்ட தலைவன் தன்னூர்க் கொருவழி போய்வருகிறேனென்று போதல். அது செலவறிவுறுத்தல் செலவுடன் படாமை செலவுடன் படுத்தல் செலவுடன்படுதல் சென்றுழிக்கலங்கல் தேற்றியாற்றுவித்தல் வந்துழி நொந்துரைத்தல் என ஏழு வகைப்படும். அவைவருமாறு:—

## தன்பதிக்ககற்சி தலைவன் சாற்றல்.

(இ-ள்) தலைவன் தன்னூர்க்குப் போய்வருதலைப் பாங்கிக்குக் கூறுதல்

என்னுயிர் பாதி யவளுயி ரோடு மிணங்குமந்தப்
பொன்னுயிர் பாதியென் றன்னுயி ரோடு பொருந்தியென்னூர்
கன்னுத லேபுக்கு நாளைக்கு நேமிகள் நற்கதிருண்
மூன்னுறு வேன்பரங் குன்றூர் குகனருள் முன்னிற்கவே. (289)

(கு-ரை) இணங்கும்-பொருந்தும். பொன்-இலக்குமிபோன்றதலைவி. புக்கு-புகுந்து. நேமிகள்-சக்கரவாகப்பறவைகள். கதிர்-சூரியகிரணத்தை. உறுவேன்-வந்துசேருவேன். ஆர்-நிறைந்த.

## பாங்கிவிலக்கல்.

(இ-ள்) தலைவன் பிரிதலைப் பாங்கி தடுத்தல்.

போனாலும் போனவன் வந்தாலும் வந்தவன் போன்றவனீ
யானாலுன் சொல்நமபி நின்பிரி வெங்ஙன மாற்றுவம்பாங்
தேனால் குழலி செவிகேட்கச் செப்பலித் தீயசொல்பொன்
மானால் மனையகன் றோன்மரு மான்மெய் வரையரசே. (290)

(கு-ரை) எங்ஙனம்-எவ்விதம். ஆற்றுவம்-சகிப்போம். தேன்-வண்டுகள். ஆல்-ஒலிக்கின்ற. செப்பல்-சொல்லாதே. மானால்-மாரீசனாகிய மானால். மனையகன்றோன்-மனைவியைநீங்கின திருமால். மருமான்-மருமகன். மெய்வரை-பரங்கிரி.

## தலைவனீங்கல் வேண்டல்.

(இ-ள்) தலைவன் பாங்கியை யுடன்படுத்தி நீங்கற்பொருட்டு வேண்டிக் கூறுதல்.

கதியே தெவர்க்கும் பரங்கிரி மேவிய கர்த்தனின்றி
றதியேறும் வேற்கண்ணி நும்மையல் லாதுய்ய நோன்மையிலேன்
பதியேகி நாளைக்கென் சொற்றவ றாத படிவருவல்
மதியே யெனுமுகங் கோடாம லாற்றும் மயிலினையே. (291)

(கு-ரை) றதி-கூர்மை. நும்மை-உங்களை. இது-தலைவியையுஞ் சேர்த்த பன்மை. நோன்மை-வலிமை. கோடாமல்-கோணாமல்.

### பாங்கி விடுத்தல்.

(இ-ள்) பாங்கி தலைவனை யுன்னூருக்குப் போய்வருகென விடுத்தல்.

பூவியக் கும்பதி சென்றூற் குகன்மெய்ப் பொருப்பனையாள்
ஆவியைக் காக்க வுடன்வரு வாய்தலை யால்வந்தசீ
தேவியைக் காவினிற் றள்ளுவ ரோவுன் றிருவுளமிப்
பாவிசொற் கொள்ளுக சற்றேனுந் தள்ளப் படுவதன்றே. (292)

(கு-ரை) பூ-உலகம். பதி-வூர்.

### பாங்கி தலைவிக்கவன்செலவுணர்த்தல்.

(இ-ள்) தலைவிக்குப் பாங்கி தலைவன் பிரிவைச் சொல்லுதல்.

வெட்டவெட் டத்தழைத் தோங்கிய சூர்த்தலை வேரறவே
யொட்டவொட் டத்தடி வேலோன் பரங்கிரி யொக்குந்தம்மூர்
வட்டவட் டக்கிண்ணம் போன்முலை யாய்செல்ல வல்விரைந்தார்
முட்டமுட் டச்செல் பரம்பொருள் போன்றனர் மொய்ம்பென்னையே.

(கு-ரை) சூர்த்தலை-சூரனுடைய தலை. தடி-கொய்த. வல்விரைந்தார்-மிகவிரைவாகப்போனார். முட்டமுட்ட - நெருங்கநெருங்க. செல் - அப்பாற் போகின்ற. மொய்ம்பு-வலிமை.

### தலைவி நெஞ்சொடு புலத்தல்.

(இ-ள்) தலைவி மனத்தொடு வருந்திக்கூறுதல்.

பிரிந்து பிரிந்து பழகிக்கொண் டாரவர் பின்றிரிந்து
திரிந்து வருந்தற்க நாளைநெஞ் சேவந்து சேர்ந்திலரேல்
மரிந்து பிறந்து மறுமையி லேனும் வழக்குரைத்துத்
தெரிந்துகொள் வோம்நங் குகன்பரங் குன்றவர் சிந்தனையே. (294)

(கு-ரை) வருந்தற்க-வருந்தாதே. மரிந்து-இறந்து (விகாரம்) பரங்குன்றவர்-மலையி (பரங்கிரியி) லுள்ள தலைவர்.

இதுவரையும் பதினோந்தா நாள் நிகழ்ச்சி.

### சென்றேனீடலிற் காமமிக்க கழிபடர்கிளவி.

(இ-ள்) தலைவன் மாலைக்காலம் வரையும் வாராமல் வரவு நீட்டித்தலாற் காமமிக அதனால் மிகுந்த நினைவொடு கூறுதல்.

திடக்தரு வேலன் பரங்கிரிச் சாரல் செறிவனத்து
ளுடக்தையென் றெண்ணி யடிக்கடி தேடியிங் கோடியென்பால்
கடந்தசெங் தாமரை சூடவென் கைசெய்த நற்றவங்கள்
கடந்தன வென்று செயலாற்சொன் மின்கிளி காளவர்க்கே. (295)

(கு-ரை) சாரல்-மலைப்பக்கம். செறி-நெருங்கிய. உடந்தை-சொந்தம். தாமரை-தாமரை மலர்போன்ற பாதம். சூட-அணிந்துகொள்ள. கடந்தன-நீங்கின. செயலால்-(அவர்வாரா திருக்கும்) செய்கைக்குக்காரணமாக.

## தலைவியைப்பாங்கி யாற்றுவித்தல்.

(இ-ள்) மேற்கூறியவாறு வருந்திய தலைவியைப் பாங்கி யவ்வருத்தந் தணியும்படி சாந்தப்படுத்தல்.

துன்ப முடிவு சுகமென் றறிஞர்முன் சொற்றனர்நம்
மன்பர் பரங்கிரி யாள்வே ளருளி னடைந்துநினக்
கின்ப முதவுவர் சற்றே சகியவ ரேறியதேர்
முன்பல சங்க முரலோசை யென்செவி முட்டியதே (296)

(கு-ரை) சொற்றனர்-சொன்னார். வேள்-குமாரக்கடவுள். சகி-சகிப்பாய். முரல்-ஒலிக்கின்ற.

## இதுவுமது.

களனைப் பிரிந்து தமயந்தி யெத்தனை நாளிருந்தாள்
இளமைப் பிராய முடையா யவள்நிக ரெத்தனைபே
ருளரத் தனையும் வகைவகை யாக வுரைப்பரிதால்
வளமுற் றியபொழில் சூழுங் குகன்மெய் வரைமயிலே. (297)

(கு-ரை) உரைப்பரிது-சொல்லமுடியாது. பொழில்-சோலை.

இதுவரையும் பதினறுநாள் நிகழ்ச்சி.

## தலைவன் வந்தமை பாங்கியுணர்த்தல்.

(இ-ள்) தலைவன் வந்தசெய்தி தோழி தலைவிக்குக் கூறுதல்.

குலமட மாதாதங் காமக் குறிப்பினைக் கூறலரிங்
நலமறி யாது படபடப் பாய்ச்சிறு நாணு மின்றிப்
பலரறி யத்துயர் பட்டாய் முருகன் பரங்கிரிபோ
லிலகுமின் னேயன்பர் வந்தா ரினியின்ப மெய்துகவே. (298)

(கு-ரை) கூறலர்-(வாயாற்) சொல்லார். நாணும்-வெட்கமும். எய்துக. பொருந்துவாய்.

## பாங்கி தலைவனோடு நொந்துவினாதல்.

(இ-ள்) பாங்கி வந்த தலைவனோடு துன்பப்பட்டுக் கேட்டல்.

நட்பால் லாரைப் பரங்கிரி வேல னலிந்தொதுக்கு
முட்பால் மொய்ந்நெறி நீயேகல் கேட்டு முகங்கறுப்பக்
கட்பா வைமுத்தங் காலப் படுந்துயர் கண்டனையேல்
எட்பக லேனும் பிரிவைகொ லேந்திழை யில்வினையே. (299)

(கு-ரை) நட்பர் - சிநேகர். நலிந்து - வருத்தப்படுத்தி, (பிறவினைப் பொருள்) முட்பால்-முள்ளுங்கூரிய கற்களும். கட்பாவை-கண்ணாகிய கடல். முத்தம்-முத்துப்போலும் நீர்த்துளி. கால-கக்க. எட்பகல்-எள்ளளவுகாலம். பிரிவைகொல்-பிரிவாயோ. இல்வினை-வீட்டை.

## தலைவன் பாங்கியோடு நொந்துவினாதல்.

(இ-ள்) எவ்வண்ணந் தலைவியை யாற்றியிருந்தாயென்று தலைவன் வருந்தித் தோழியோடு கேட்டல்.

மதித்தீயிற் றேயு மதனம்பு தாக்கி வடுச்செய்புண்ணிற்
கொதித்தேறு தென்றீற் கொடுவிடம் பாயக் குலைகுலைந்தேன்
துதித்தேயிராமுற் றுஞ்சேய்பரங்குன்றைத் தொழீஇப்பிழைத்தேன்
திதித்தீரெவ் வாறுநந் தேவியை யென்சொற் றிறம்பலிரே. (300)

(கு-ரை) மதித்தீயில்-சந்திரகிரணமாகியநெருப்பில். தொழீஇ-தொழுது. திதித்தீர்-காப்பாற்றினீர். சொற்றிறம்பலிர்-சொற்குமாறுபடாதவரே.

## பாங்கி தலைவியை யாற்றுவித்திருந்த அருமைகூறல்.

(இ-ள்) ஆற்றுவித்தல்-வருத்தந்தணிவித்தல்.

அருளும் பொருளு முதவுங் குகன்மெய் யசலமன்னாய்
இருளுந் நிலவுங் குழல்முகத் தொல்பகை யெண்ணியெண்ணி
மருளுந் துயர்செய நின்பேர் சொலிச்சொல்லி மாற்றுவித்தேன்
உருளுங் கருவியை யோட்டுவர் போலநின் ஒண்டொடிக்கே. (301)

(கு-ரை) இருளும்-இருட்டும். குழல்-கூந்தல். தொல்-பழைய. மருளும்-மயக்கும். உருளுங்கருவி-சக்கரம். ஓட்டுவர்போல்-செலுத்துவார் போல. எந்த வழியாக ஆற்றவேண்டுமோ அந்தவழியாற்ற வேண்டுமென்றபடி.

இவற்றுள் தன்பதிக்ககற்சி தலைவன் சாற்றலும் பாங்கி தலைவிக்கவன் செலவுணர்த்தலுமாகிய இரண்டும் செலவறிவுறுத்தற்கும், தலைவனைப் பாங்கி விலக்கலொன்றுஞ் செலவுடன்படாமைக்கும், நீங்கல்வேண்ட லொன்றுஞ் செலவுடன்படுத்தற்கும், பாங்கி விடுத்தலொன்றுஞ் செலவுடன்படுதற்கும், தலைவிநெஞ்சொடு புலத்தல் முதலிய இரண்டும் சென்றுழிக்கலங்கற்கும் தலைவியையாற்றுவித்தலும் தலைவன்வந்தமை தலைவிகுணர்த்தலுமாகிய இரண்டும் தேற்றியாற்றுவித்தற்கும் பாங்கி வந்தோன்றன்னொடு நொந்து வினுதல் முதல் மூன்றும் வந்துழி நொந்துரைத்தற்கு முரியன.

17-ஒருவழித்தணத்தல் முற்றிற்று.

## 18-வது வரைவிடைவைத்துப் பொருள்வயிற் பிரிதல்.

அஃதாவது விவாகத்தை யிடையிலே நிச்சயித்து விவாகத்துக்கு வேண்டும்பொருள் காரணமாகத் தலைவன் பிரிதல். அது-பிரிவறிவுறுத்தல் பிரிவுடன்படாமை பிரிவுடன்படுத்தல் பிரிவுழிக்கலங்கல் வன்புறை வன்பொறை வருவழிக்கலங்கல் வந்துழிமகிழ்ச்சியென ஒன்பது வகைப்படும். அவைவருமாறு:-

### என்பொருட் பிரிவுணர்த் தேந்திழைக்கென்றல்.

(இ-ள்) விவாகத்துக்காகப் பொருள்கொண்டு வருதற்குப் பிரியும் என்னுடைய பிரிவைத் தலைவிக்குச் சொல்லென்று தலைவன் பாங்கிக்குக் கூறுதல்.

நில்லா வுலகத்து வேண்டிய வின்ப நிகழ்ப்பொரு
ளெல்லாம லொன்று முடியா தெனுமஃ தறிதியன்றே
நல்லாய் பரங்கிரி வேளருள் போல்வந்த நங்கைக்குநீ
யெல்லாம் புகல்மணஞ் செய்பொருட் கேகுவ னிப்பொழுதே. (302)

(கு-ரை) நில்லா-நிலையில்லாத. அறிதியன்றே-அறிவாயல்லவா. நல்லாய்-நல்லவளே. மணம்-விவாகம்.

### நின்பொருட் பிரிவுரை நீயவட்கென்றல்.

(இ-ள்) வெளி

முன்னுன் பிரிவு மொழிந்ததற் கென்னை முனிந்துவைதாள்
இன்னும் புகலிலென் னூர்பாழ் படுவதற் கியாதுமஞ்சாள்
சின்னஞ் சிறுமி யவளிடம் போயிந்தத் தீயசொலலைப்
பன்னுந் திறனைக் கேவருஞ் செய்மெய்ப் பரங்கிரிக்கே. (303)

(கு-ரை) முனிந்து-கோபித்து. பாழ்படுதல்-ஒன்றுமில்லாமற் போதல். யாதும்-சிறிதும். சின்னஞ் சிறுமி-மிக இளமைப்பருவமுடையவள். திறன்-வலிமை. மெய்-உண்மை. கிரிக்கே-கிரியினிடத்து.

## நீடேனென்றவ னீங்கல்.

(இ-ள்) தலைவன் காலநீட்டித்திராது விரைந்து வருவேனென்று பாங்கியொடு கூறிப்பிரிதல்.

இன்னற் கடலைக் கடக்க மரக்கல மென்னவுனைப்
பின்னற் குழலி பெறினும் பொறுளெண் பிரிவையென்று
முன்னர்த் தெரிந்தில னல்லேன் மணஞ்செய் முலைவிலைக்குப்
பொன்னற் குமரன் பாங்கிரி வாய்ப்பெற்றுப் போதுவனே. (304)

(கு-ரை) இன்னல்-துன்பம். பொறுள்-சகிக்கமாட்டாள். மணம்-விவாகம். பொன்-திரவியம். போதுவன்-வந்துசேர்வேன்.

இதுவரை பதினேழா நாள் நிகழ்ச்சி.

## பாங்கிதலைவிக் கவன்செலவுணர்த்தல்.

(இ-ள்) பொருள் கொண்டுவரப் பிரியுந் தலைவன் செல்லுதலைப் பாங்கி தலைவிக்குக் கூறுதல்.

உன்னானை யும்பண மும்கொள வேலன்மெய் யோங்கலன்றான்
றன்னானை மேற்பணங் கொண்டிங்ங னெய்தத் தணந்தனனால்
பின்னானை யாதிரு வீரும் பிரிவறு பெற்றியெண்ணி
முன்னானை யாமணஞ் செய்யென்று சொன்ன முறையறிந்தே. (305)

(கு-ரை) ஆனையும் - ஆனைபோன்ற தனமும். பணமும்-பாம்பின் படம் போன்றஅல்குலும். தணந்தனன்-நீங்கினான். நையாது-வாடாமல். நான்-யான். ஐபா-ஐயனே.

## பூங்குழை யிரங்கல்.

(இ-ள்) தலைவன் பிரிவைக்கேட்டுத் தலைவி வருந்துதல்.

ஆழுங் கடனின் றெடுத்தாரைப் பின்னுமவ் வாழ்கடலிற்
றாழும் படிதள்ளி னாற்போற் பிரிதுயர் தானற்றுநான்
வாழும் படிவந்து மீட்டும் பிரிந்து வருத்தஞ்செய்தார்
சூழும் பாங்கிரி வேளானு மீது தொலைப்பரிதே. (306)

(கு-ரை) மீட்டும்-திரும்பவும். வேளாலும்-முருகக்கடவுளாலும்.

பாங்கி கொடுஞ்சொற் சொல்லல்.

(இ-ள்) இவ்வாறு நீ வருந்துவ தென்னென்று தோழி தலைவியை நோக்கிக் கொடிய சொல்லைச் சொல்லுதல்.

இரவைப் பொருளை விலைகொடுத் துப்பெறற் கெண்ணுவர்போற்
கரவிற் பெறுமுனை மன்றற்செய் தெய்தக் கருதுகின்றார்
வரவைப் பொறுக்கறி யாயுனைப் போலு மடச்சிறுமி
யுரவிற் பொலிகுகன் வாழ்பரங் குன்றி லொருத்தி யின்றே. (307)

(கு-ரை) கரவில் - கள்ளத்தால். வரவை - வருதலை. பொறுக்கறியாய்-பொறுத்தலில்லாதவளே. மடச்சிறுமி-அறிவில்லாத சிறுபெண். உரவில்-வலிமையால். பொலி-விளங்குகின்ற.

தலைவி கொடுஞ்சொற்சொல்லுதல்.

(இ-ள்) மேற்கூறிய பாங்கியை மனதினொந்து தலைவி கூறுதல்.

நாய்நாவி னீரன்றி வேறற லின்றி நலிகொடுங்கான்
போய்நான் வருவனென் றார்க்குக் குகன்மெய்ப் பொருப்பிலுறும்
நோய்நா டுதலின்றிப் போய்நாடு கென்ற நுமையனைய
வாய்நா ரியரன்றி மற்றார் பெரியரிம் மாநிலத்தே. (308)

(கு-ரை) வேறறல்-வேறாகிய நீர். நலி-வருத்துகின்ற. கான்-காடு. என்றார்க்கு-என்றுகூறிய தலைவருக்கு. நோய்நாடுதல்-(போதல் வருதலால் உண்டாகும்) நோயை ஆராய்தல். நாடுகென்ற-(பொருள்) தேடுவாயென்ற.

வருகுவர் மீண்டெனப்பாங்கி வலித்தல்.

(இ-ள்) பாங்கி தலைவர் விரைந்து திரும்பி வருவாரெனத் தலைவிக்குக் கூறுதல்.

நெருப்பிற் செயுந்தக டொக்குஞ்செம் பாலை நிலத்தினின்மெய்ப்
பொருப்பிற் குகனருள் பெற்றார்க்கு நோய்கள் புகுதலுண்டோ
விருப்பிற் குறைநிற் குளதா யினுமவர் மேவலில்லார்
அருப்பிற் பொலிமுலை யாய்வரு வார்மண மாற்றுதற்கே. (309)

(கு-ரை) நிலத்தினில்-நிலத்தினிடத்து. மேவல்-பொருந்துதல். அருப்பின்-தாமரையரும்புபோலும். (விகாரம்.)

## பருவங்கண்டு பெருமகள் புலம்பல்.

(இ-ள்) தலைவன் பிரியும்போது கார்காலத்துக்கு முன்னே வருவ னென்று குறிப்பாற் கூறிப்போயினனாதலாலே கார்ப்பருவங்கண்டு தலைவி புலம்பிக் கூறுதல்.

தானே வளையுந் தடிகொடு கோடை தடியுமம்பு
வானேவு கால மெழுந்தது கார்முல்லை வாய்மலர்வாய்த்
தேனே யுரைத்தும்வந் தாரில்லை யானென்ன தீமைசெய்தேன்
வேனே ரமையுங் கரதலத் தார்மகிழ் மெய்வெற்பரே. (310)

(கு-ரை) தடி-இந்திரதநுசு. தடியும்-நீங்கும். அம்பு-நீர், பாணம். வான்-மேகம். ஏவு-செலுத்துகின்ற. வாய்-வாய்த்த. தேன்-வண்டுகளே. வேல்நேர்-வேலினது ஒழுங்கு. மெய்வெற்பர்-பரங்கிரித்தலைவர்.

## இகுளை வம்பென்றல்.

(இ-ள்) அவ்வாறு புலம்பிய தலைவி தேறும் வண்ணம் பாங்கி இது காலத்தின் வந்தமேகமன்று. இடையே வம்பாகத் தோன்றியதென்று கூறுதல். வம்பு-காலமல்லாத காலத்திற்றோன்றுவதொன்று.

கற்புறு மாதர் நகைகண்டு முல்லை கமழ்மலர்பூத்
தற்புறு மீது செயற்கை யியற்கையன் றாலறிவாய்
பொற்புறு பொன்னுக்குப் போனவர் காரொடு போதுவரால்
வெற்புறு கண்டடச் செய்வேலன் வாழுமெய் வெற்பணங்கே. (311)

(கு-ரை) நகை-சிரிப்பு. அற்பு-அன்பு. ஆல்-ஆசை. பொற்பு-அழகு. காரொடு-கார்காலத்தோடு. வெற்பு-கிரௌஞ்சகிரி. உறுகண்-துன்பம்.

## இறைமகள் மறுத்தல்.

(இ-ள்) தலைவி பாங்கி கூறிய அதனை மறுத்துக்கூறுதல்.

ஓசனித் தார்க்குங் குயில்வா யடங்கின வொண்மதலை
வாசனைப் பொன்மலர் பூத்தன கார்ப்பரு வம்மிலையோ
ஈசனைத் தந்தை யெனுங்குகன் மெய்வெற் பிடத்துழுழுப்
பூசனிக் காயினைச் சோற்றா டொளிப்பருன் போல்பவரே. (312)

(கு-ரை) ஓசனித்து-சிறகடித்து. ஆர்க்கும்-முழங்கிய. மதலை-கொன்றை.

அவர் தூதாகிவந்ததைடந்த திப் பொழுதெனத் துணைவி சாற்றல்.

(இ-ள்) தலைவி கார்காலம் வந்ததென்ற சொற்கேட்ட பாங்கி தலைவன் றன் வருகின்றசெய்தியை யறிவித்தற்குவிடுப்ப இப்பொழுது இக்கார்(மேகம்) தூதாய் வந்தடைந்ததென்று கூறுதல்.

வருகாலம் வந்த முகிலன்பர் நிற்கு வரவிடுத்த
ஒருதூ தெனவுணர் வாய்புழு வூரெழுத் தொப்பமின்னே
கருகால முண்டவர் தேசிக ராபபெற்ற கந்தரருள்
பெருகா லயமென நின்றேறுங் கியமெய்ப் பிறங்கலினே. (313)

(கு-ரை) வருகாலம்-வரத்தக்ககாலம். முகில்-மேகம். புழுவூரெழுத்து-நீர்ப்பூச்சியூர்ந்து செல்லும்போது தோன்றுமெழுத்து, இவ்வுவமானத்துக் கேற்றபடி உவமையர்த்தைத்தெரிந்துகொள்க. கருகு-கருகிய. ஆலம்-விடம். தேசிகரா-குருவாக. மெய்ப்பிறங்கலின்-பரங்கிரியினிடத்து.

ஆமைக ளாற்றல்.

(இ-ள்) தலைவி துன்பத்தைச் சகித்திருத்தல்.

ஊக்கத்திற் சென்றவ ரின்னுஞ்சின் னோரத் துறுவரென்று
காகத் திகழ்கருங் கார்வந் திசைப்பது கண்டுநெஞ்சே
யேக்கத் துழலுதி யென்னே குகன்மெய் யிறும்பினுற்றோர்
ஆக்கப் பொறுத்தவ ராறப் பொறுரென்ப தாய்ந்திலமே. (314)

(கு-ரை) ஊக்கத்தின்-ஊக்கத்தோடு. திகழ்-விளங்குகின்ற.இசைப்பது-முழங்குவது. உழலுதி-வருந்துகின்றாய். மெய்யிறும்பில்-பரங்கிரியினிடத்து.

அவனவட் புலம்பல்.

(இ-ள்) பொருளீட்டச்சென்ற தலைவன் தன் கருமமுற்றிய பின்றையே யவ்விடத்துத் தலைவியை நினைதது வருந்துதல். பின்றை-பிற்பொழுது.

பொன்னே யனையவட் கியான்கொண்டு போகுமென் பொன்முனம்
தன்னே ரிலாத தனத்திற் படரத் தனித்திருந்து [போய்த்
மின்னே நிகரிடை போலே மெலியுமம் மெல்லியலை
யென்றோங் காண்பன் முருகன் பரங்குன் றியலிடத்தே. (315)

(கு-ரை) பொன்-இலக்குமி. பொன்-பொன்போலுந்தேமல். மெலியும்-வருந்துவன்.

இதுவரையும் பதினேழாநாள் நிகழ்ச்சி.

பாகன்றன்னொடு சோகங்கொண்டவன் சொல்லல்.

(இ-ள்) சோகங்கொண்ட தலைவன் தேர்ப்பாகனோடு தேரை விரைந்து நடத்தச்சொல்லுதல்.

வாங்கு திரையினின் வாங்கு திரைவல வாசெலுத்தாய்
ஓங்குபைங் காரினு மோடியென் னெஞ்சமுன் னுற்றிடினும்
பூங்குழை யின்னல் பொருளுநை யேயெதிர் போதக்கண்டால்
ஏங்குத லின்றி யிருப்பாள் குகன்மெய் யிறும்பிடத்தே. (316)

(கு-ரை) வாங்கு-வளைந்த. திரையின்-அலைபோல். வாம்-தாவுகின்ற. குதிரைவலவா-குதிரையை நடத்தும் பாகனே. காரினும்-மேகத்தைப்பார்க்கினும். பூங்குழை-தலைவி. இன்னல்-துன்பம். போத-வர. மெய்யிறும்பு-பரங்கிரி.

சோகங்கோண்டவன் மேகந்தன்னேடு சோல்லல்.

(இ-ள்) மேற்கூறிய தலைவன் வருங்காலத்து மேகத்தை நோக்கிக் கூறுதல்.

கடனீர் வறப்பச் செயல்வன்மை யன்றுபைங் கார்முகில்காள்
அடனீர்மை மேவயில் வேலோன் பரங்குன் றனையவள்கண்
ணுடனீ ரணுகி யதனீர் வறப்ப வுஞற்றுதலே
திடனீர்மை யாமதற் கென்றடை யோதுஞ் சிறிதெடுத்தே. (317)

(கு-ரை) வறப்ப-வற்ற. முகில்-மேகம். அடல்-வலிமை. அயில்-கூர்மை. அணுகி-கிட்ட. உஞற்றுதல்-செய்தல். நீர்மை-குணம்.

பாங்கிவலம்புரி கேட்டவன் வரவறிவுறுத்தல்.

(இ-ள்) வலம்புரிச் சங்கோசையைக்கேட்டுத் தோழி தலைவன் வருதலைத் தலைவிக்கறிவித்தல்.

தளச்சங்கத் தோடுறு சூர்தடிந் தார்மெய்த் தடகிரிநின்
களச்சங்கத் தோடுற வாதற் கொருநன்றி காட்டுதல்போல்
உளச்சங் கடியுந் தலைவர்திண் டேர்முன் றொலிக்குமெய்த்த
வளச்சங் கரசொலி யூரெங்குங் கேட்டது மாமயிலே. (318)

(கு-ரை) தளம்-சேனை. சூர்-சூரனை. மெய்த்தடம்-பரங்கிரி. களச்சங்கம்-கழுத்தாகிய சங்கு. உளச்சம்-மனப்பயத்தை. மெய்-உடம்பில். தவளம்-வெண்ணிறமுள்ள. சங்கரசு-சங்குகட்குத் தலைமையான சங்கு.

வலம்புரி கிழத்தி வாழ்த்தல்.

(இ-ள்) தலைவன் வலம்புரிச்சங்கத்தைத் தலைவி வாழ்த்தல்.

கடலின் மேய தமிழ்ச்சங்கம் போலுங் குமரன்புகழ்
பாடலின் வாயடி யார்சங்கம் போலும் பரங்கிரிவா
யாடலின் காவடி யார்சங்கம் போலுமெய் யன்பரெனை
நாடலி னேறுபொற் றேர்ச்சங்கம் வாழ்கவெந் நாளுநின்றே. (319)

(கு-ரை) பாடலின்-பாடுதலுடைய. ஆடலின்-ஆடுதலையுடைய. நாடலின்-தேடுதல் காரணமாக.

## தலைவன்வந்துழிப் பாங்கிநினைத்தமை வினாதல்.

(இ-ள்) தலைவன் வந்தவிடத்துத் தோழி தலைவியை நினைத்ததுண்டோ வென்று கேட்டல்.

நெஞ்சாய வீட்டிலென் னேரிழை யாய நிறைவிளக்கை
யெஞ்சாம லேற்றி யிருந்தனை யோகல் லிலஞ்சியெங்கும்
அஞ்சாய லன்னங்க ளாடுந் துறைவ வசுரரழற்
பஞ்சாக வேவிய வேலோன் பரங்கிரிப் பாலமர்ந்தே. (320)

(கு-ரை) எஞ்சாமல்-குறையாமல். இலஞ்சி-தடாகம். சாயல்-மேம்பாடு. துறைவ-நீர்த்துறைகளையுடைய தலைவனே. அழற்பஞ்சு - அக்கினியிற்பட்ட பஞ்சு. பால்-பக்கத்தில்.

வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்த தலைவன் முப்பத்துநான்கா நாள் வந்தானென்க. முப்பத்து நான்கென்னும் கணக்கு எற்றாற் பெற்றதெனின் "களவினுடவிர்ச்சி வரைவினீட்டந் திங்களிரண்டினகமென மொழிப" என்னும் இறைவனாரகப்பொருட் சூத்திரவுரையில் பொருளீட்டி வந்த தலைவன் ஆறுநாளில்வரைவு முடிப்பனென்று கூறியதனாலும், தலைவன் தலைவியைக் கண்ட பதினெட்டா நாளிற் பொருள் வயிற் பிரிந்ததனாலும் ஐம்பத்தாறு நாள் வரைவு முடிந்ததாகக் கூறுதலாலும் என்க. அற்றேல் "வரைவிடை வைத்துப் பொருள் வயிற்பிரிவோ ரிருதுவின் கண்ணுடைத் தென்மனார் புலவர்" எனக் கூறினாரலோவெனின், இருதிங்களென்றது எல்லை கடவாமைக்குக் கூறியதன்றி இரு திங்களுள் வரக்கூடாதென்னும் யாப்புறவின்மையின் என்க. ஆயின் "வரைவினீட்டந் திங்களிரண்டினக" மென்றதனால் அறுபதா நாள் மணமுடிந்ததாகக் கூறினாலென்னை யெனின், அச்சூத்திரவுரையில் திங்களிரண்டினும் நான்கு நாளிருக்க மணமுடிப்பதியல்பென்று கூறியதனால் அங்ஙனங் கூறலாகா தென்க. மாதத்தினந்தமாகிய நான்குநாட்கள் மணத்துக்கு விலக்கப்பட்டன வென்று சோதிடநூற்புலவர் சிலர் கூறுதலா லிங்ஙனங் கூறியது போலும்.

## தலைவனினைத்தமை செப்பல்.

(இ-ள்) பாங்கிக்குத் தலைவன் தலைவியை நினைத்திருந்ததைச் சொல்லுதல்.

மடமாது நெஞ்செற்கு மென்னெஞ் சவட்கும் வசப்பட்டுநின்
றிடமா வனங்கடந் தேனத னாலெனக் கென்றெரியும்
திடமா ரவளிடங் கேட்டே நினைந்தமை தேர்ந்தறிவாய்
குடமா முலைவள்ளி கொண்கன் பரங்கிரிக் கோற்றொடியே. (321)

(கு-ரை) எற்கும்-எனக்கும். மாவனம்-பெரியகாடு. கொண்கன்-நாயகன்.

பாங்கி தலைவியை ஆற்றுவித்திருந்த அருமைகூறல்.

(இ-ள்) பாங்கி தலைவி வருத்தத்தை யாற்றுவித்திருந்த அருமையைத் தலைவனுக்குச் சொல்லுதல்.

வெங்காமத் தீயிற் கொதிகொளுங் கானெறி மேவியவர்
தங்கால் கடுத்திடு மேயென் றுபரி தவித்தவளை
யங்காமுன் னுசைநன் னீராற்று மென்றுசொற் றாற்றுவித்தேன்
கங்கா நதிக்கின் மகனுங் குகன்மெய்க்கற் காவலனே. (322)

(கு-ரை) தீயின்-தீயைப்போல. கானெறி-காட்டுவழி. பரிதபித்து-பரிதாபப்பட்டு. அங்கு-அவ்விடத்து. உன்-உன்னுடைய. சொற்று-சொல்லி. இன்-இனிய.

இவற்றுள் என் பொருட்பிரிவுணர்த் தேர்ந்திழைக் கென்றலும் பாங்கி தலைவிக்கவன் செலவுணர்த்தலுமாகிய இரண்டும் பிரிவறிவுறுத்தற்கும், நின் பொருட் பிரிவுரை நீயவட்கென்ற லொன்றும் பிரிவுடன்படாமைக்கும், நீடே னென்றவ னீங்கலொன்றும் பிரிவுடன்படுத்தற்கும், பூங்குழை யிரங்கலும் பாங்கி கொடுஞ்சொற் சொல்லலும் பருவங்கண்டு பெருமகள் புலம்பலும் இறைமகள் மறுத்தலும் அவனவட் புலம்பலுமாகிய ஐந்தும் பிரிவுழிக் கலங்கற்கும், வருகுவர் மீண்டெனப் பாங்கி வலித்தலும் இகுளைவம்பென்றலும் அவர் தூதாகிவந்தடைந்ததிப்பொழு தென்றலுமாகிய மூன்றும் வன்பொறைக்கும், பிணைவிழியாற்றலொன்றும் வன்புறைக்கும், பாகனொடு சொல்லலும் மேகத்தொடு சொல்லலுமாகிய இரண்டும் வருவழிக் கலங்கற்கும், வரவறிவுறுத்தல் முதலாகிய ஐந்தும் வந்துழி மகிழ்ச்சிக்கு முரியன.

18-வரைவிடை வைத்துப் பொருள்வயிற்பிரிதல் முற்றிற்று.

முதலாவது களவியல் முற்றிற்று.

---

## இரண்டாவது வரைவியல்.

அஃதாவது தலைவன் தலைவியைக் கொடுப்பவுங் கொடா தொழியவும் கற்பிற்கு நிமித்தமாகிய வதுவைச்சடங்கோடு பொருந்தி மணஞ்செய்து கொள்

ளுதல். ஆதலாலிது கற்பின் பாற் படுமெனக. இவ்வரைவு வரைவுமலிவும் அறத்தொடு நிற்றலுமாகிய இரண்டு வகைப்படும். அவற்றுள்,

## பத்தொன்பதாவது—வரைவு மலிவு.

அஃதாவது வரைவு தொடங்கி நடக்கு முயற்சிமிகுதல். அது-வரைவு முயல்வுணர்த்தல் வரைவெதிர்வுணர்த்தல் வரைவறிந்து மகிழ்தல் பராவல் கண் டுவத்தலென நான்கு வகைப்படும். அவைவருமாறு:

### காதலன் முலைவிலைவிடுத்தமை காதலிக்குணர்த்தல்

(இ-ள்) தலைவன் தனவிலையாகத் திரவியங் கொடுத்ததைத் தோழி தலைவிக்குக் கூறுதல்.

தலையாக மப்பொரு ளாகுங் குகன்மெய்த் தடத்தினிற்பொன்
மலையாக வேறும் மிருவோர் தனமு மதிக்கமுலை
விலையாக வெண்ணறு பொன்குவித் தாரமர் வென்றவெற்றிச்
சிலையாக மேயநின் கொண்கரிப் போது திருந்திழையே. (323)

(கு-ரை) தலை-முதன்மையாகிய. மெய்த்தடம்-பராங்கிரி. தனம்-பொருள், கொங்கை. அமர்-யுத்தத்தில். சிலை-வில்லைத்தாங்கிய. ஆகம்-மார்பு. கொண்கர்-தலைவர். திருந்து-திருந்திய. இழை-ஆபரணங்களையுடையவளே.

### காதலி நற்றாயுள்ள மகிழ்ச்சியுள்ளல்.

(இ-ள்) தலைவி தனக்குமணமாலை புனையுந் தலைவரைக்கண்டால் நற்றாய் மகிழ்ச்சி யடைவளென்று நினைத்தல்.

பருவர லோவும் படிவந்தென் கொங்கை படமணத்தார்
உருவ மதனிகர் நம்பிகை சூட்ட வுவந்துகண்டால்
அருவமுன் மூன்றுடை யார்சேய் பரங்கிரி யாய்கனிந்து
திருவ மிதனினு மேலிலை யென்றுளஞ் சிந்திப்பளே. (324)

(கு-ரை) பருவரல்-துன்பம். ஓவும்-நீங்கும். மணத்தார்-மணமாலை. நம்பி-புருடரிற்சிறந்த தலைவர். அருவமுன் மூன்று-அருவம், உருவம், அருவுருவம். சேய்-பிள்ளையாகிய முருகக்கடவுள். ஆய்-தாய். திருவம்-செல்வம்.

### பாங்கி தமர்வரவெதிர்ந்தமை தலைவிக்குணர்த்தல்.

(இ-ள்) தலைவன்சுற்றத்தார் மணநிகழ்ச்சிகட்கு வந்த செய்தியைப் பாங்கி தலைவிக்குச் சொல்லுதல்,

விதிகூட்ட வந்த தலைவர்க்கு மன்றல் விதித்ததுகேட்
டதிகூட்ட மாகத் தமர்வரு மாமூர சார்ப்பொலிபொன்
பொதிகூட் டமையுங் கிளிகளுங் கேட்டன போற்றினரைக்
கதிகூட்ட வல்ல முருகன் பரங்கிரிக் காரிகையே. (325)

(கு-ரை) மன்றல்-விவாகம். விதித்தது-நிச்சயித்தது. தமர்-சுற்றத்தார். கூட்டு-கூட்டுக்குள்.

தலைமகளுவகையாற்று துளத்தோடு சொல்லல்.

(இ-ள்) தலைவி மகிழ்ச்சியடங்காது நெஞ்சொடு கூறுதல்.

புக்க விடத்தச்சம் போதரும் போதர்சம் போகமன்பர்த்
துய்க்கு மிடத்தச்ச மெல்லாஞ் சிறிதுந் தொலைந்தகலத்
தக்க மணமவர்க் கேவாய்த் தருமெய்த் தடத்திலுறை
யிக்கனி கால வரனுங் குகனரு ளீதுநெஞ்சே. (326)

(கு-ரை) புக்க-புகுந்த. போதரும்போது-வருங்காலத்தில். துய்க்கும்-அநுபவிக்கும்.

தலைவனைப்பாங்கி வாழ்த்தல்.

(இ-ள்) வெளி.

மையலர் கண்ணியர் வாயலர் மாலை வகுப்பனைத்தும்
பொய்யலர் தாழை மலரா யடங்கச்செம் பொன்பொழிநின்
கையலர் மாமண மாலைநங் கண்ணி கழுத்தணிந்தே
நெய்யலர் வேலன் பரங்குன்றில் வாழுக நீயினியே. (327)

(கு-ரை) அலர்-விரிந்த. வாயலர்-பழிமொழி. வகுப்பு-பிரிவு. பொய்யலர்-பொய்விரிந்த. கன்னி-தலைவி. நெய்யலர்-நெய் நிரம்பிய.

தலைவி மணம்பொருட்டாக அணங்கைப் பராநிலைகாட்டல்.

(இ-ள்) தலைவி விவாக நிமித்தமாகத் தெய்வத்துக்குச் சிறப்புச் செய்து வணங்கிக்கொண்டு நிற்குநிலையைத் தலைவனுக்குப் பாங்கி காட்டுதல்.

ஆத்திர மிக்கு வானுகத் தெய்வமு மன்புறுநங்
கோத்திர மாத ராசிதற் கொள்ளக் குறிக்குநிற்சற்
பாத்திர மென்று பரங்கிரிச் சேயைப் பராவிநின்று
நேத்திர மானந்த நீர்மல்க நின்றனள் நீயறியே. (328)

(கு-ரை) வரன்-நாயகன். தற்கொள்ள-தன்னைப்பெற. நின்-நின்னை. மல்க-நிறைய.

### கண்டோன் மகிழ்தல்.

(இ-ள்) தலைவி தெய்வத்தைத் தொழுது நின்றதைக் கண்ட தலைவன் மகிழ்தல்.

மெய்யன்பர் செய்கை யிவையே யெனும்படி மெய்விதிர்ப்ப
ஐயன் பரங்கிரி யாண்டவ னைத்தொழு தஞ்சலித்தாள்
செய்யன் பளவிடற் பாலதொன் றோவினிச் சீக்கிரத்தென்
கையன்பி னாலவள் காலம்மி யேற்றக் கருதுநெஞ்சே. (329)

(கு-ரை) பாலது-பகுப்புடையது. அம்மியேற்றக்கருது-இது விவாகஞ் செய்ய நினையென்றபடி.

இவற்றுள்-காதலன் முலைவிலை விடுத்தமை காதலிக்குணர்த்தலும் தலைவி மணம்பொருட்டாக அணங்கைப்பராநிலை காட்டலுமாகிய விரண்டும் வரைவு முயல்வுணர்த்தற்கும், பாங்கிதமர்வரவெதிர்ந்தமை தலைவிக்குணர்த்தலாகிய வொன்றும் வரைவெதிர்வுணர்த்தற்கும், நற்றாயுள்ள மகிழ்ச்சியுள்ளலும், தலைமகள் உவகையாற்றா துளத்தொடு கிளத்தலும், தலைவனைப் பாங்கிவாழ்த்தலு மாகிய மூன்றும் வரைவெதிர்ந்து மகிழ்தற்கும், தலைமகளணங்கைப் பராநிலை கண்டோன்மகிழ்தலாகியவொன்றும் பராவல்கண்டுவத்தற்குமுரியன.

இதுவரையும் ஐம்பத்தோராநாள் நிகழ்ச்சி.

19-வரைவுமலிவு முற்றிற்று.

---

## இருபதாவது—அறத்தொடுநிற்றல்.

அஃதாவது களவைமுறையே வெளிப்படுத்தி நிற்றல். முறையே வெளிப்படுத்தி நிற்றலாவது, தலைவி பாங்கிக் கறத்தொடு நிற்றல், பாங்கி செவிலிக் கறத்தொடு நிற்றல், செவிலி நற்றாய்க் கறத்தொடு நிற்றல், நற்றாய் தன்னையர்க் கறத்தொடு நிற்றலாம். அத்தொடு நிற்றற்குப்பொருள்முறையே வெளிப்படுத்தி நிற்றலென்பது எவ்விடத்திற்கு மாகாது. இவ்விடத்திற்கு மாத்திரமெனக் கொள்க. அது முன்னிலை, முன்னிலைப் புறமொழியென விருவகைப்படும். அவை வருமாறு:—

### கையறுதோழி கண்ணீர்துடைத்தல்.

(இ-ள்) களவுப்புணர்ச்சியால் மிகவும் அலரெழுதல்கண்டு தலைவிதந்தையர்முதலாயினோர் வெறுப்புற்றதறிந்த தலைவன்பிரிந்தேக அப் பிரிவாற்றாமையாலழுதுகொண்டிருந்த தலைவியையாற்றிச் கையற்ற தோழியருகிருந்து கண்ணீர்துடைத்தல். கையறல்-செயலறல்.

மணம்வந்த தென்று பரங்கிரி வேலனை வாழ்த்தியநின்
குணமின் றகன்று கலுழ்ந்ததென் னேமலர்க் கோதைநல்லாய்
நிணமொன்று வேல்விழி யன்னைய ராற்றடை நேர்ந்ததுண்டோ
கணமொன்றில் மாறு மடவார்க்கு நெஞ்சென்று காட்டுதற்கே. ()

(கு-ரை) மணம்-கல்யாணம். கலுழ்ந்தது-அழுதது. நிணம்-இறைச்சி. ஒன்று-பொருந்திய. கணம்-க்ஷணகாலம்.

தலைமகள் கலுழ்தற் காரணங்கூறல்.

(இ-ள்) தலைவியழுதற்குக் காரணஞ்சொல்லுதல்.

கமைக்கன விற்புகுந் தினபஞ்செய் கொண்கரை நங்கண்களே
யிமைக்கத வந்திறந் தோட்டிய துன்பமொன் றேயன்றிவே
றமைக்கருந் துன்ப மில்லுரு கனமெய் யசலநங்காய்
தமைச்சுமந் தேற்கவை யீதோகைம் மாறுசெய் தக்கதுவே. (331)

(கு-ரை) கொண்கரை-தலைவரை. கதவம்-கதவு. அமைக்கரும்-அடக்கு தற்கரிய. தமையென்றது-கண்களை. செய்தக்கது-செய்யத்தகுந்தது.

தலைவன்றெய்வங்காட்டித் தெளிப்பத் தெளிந்தமைகூறல்.

(இ-ள்) தலைவன் றெய்வத்தைக் கரியென்று சூளுறவுசொல்ல மெய் யென்று தெளிந்த அதனைப்பாங்கிக்குத் தலைவி கூறுதல். கரி-சாட்சி. சூளுறவு-சபதம்.

கடம்பெதிர் நின்று முருகன் பரங்கிரி காட்டிநெஞ்சந்
திடம்பெறச் சூளொடு தேற்றுவித் தார்சொற் றிறமபிலனென்
றிடம்பொரு ளேவ லுடையநங் கேள்வ ரியான்மட்டுமா
அடம்பரு கேநின்ற மாஞெனன்றுங் கேட்ட தவர்மொழியே. (332)

(கு-ரை) கடம்பு-கடம்பமரம். சூள்-சபதம். திறம்பிலன்-மாறுபடமாட் டேன். கேள்வர்-தலைவர். அடம்பு-ஓர்மரம்.

இகந்தமை யியம்பல்.

(இ-ள்) தலைவனீங்கினமை தலைவி பாங்கிக்குக் கூறுதல்.

பெருமா னெனைப்பிரி யேனென்று சூளொடு பேசியசொல்
லொருமா னலாம லெதிர்கேட்ட சான்றுமற் றென்றிருந்து
திருமான் மருகன் பரங்கிரி யம்பலஞ் சென்றுசொன்னால்
பொருமான் விழியயி லேயவன் பொய்மை புலப்படுமே. (333)

(கு-ரை) பெருமான்-தலைவன். சூள்-சபதம். சான்று-சாக்ஷி. அம்பலம்-புலப்படும்-வெளிப்படும்.

### இயற்பழித்தல்

(இ-ள்) தலைவனியலைப் பாங்கி பழித்துக் கூறுதல்.

கை புயமும்மெண் மூன்றூர் பரங்கிரிக் காவலனார்
மெய்யுந் துவரென் றிருந்தோம் நமையின்று விட்டகன்றார்
செய்யுந் தொழில்முற் றுந்தேர்ந்தா மிதுவுந் தெரிவமென்று
பொய்யுன் மனமெனத் திடப்படிக் கின்றனர் போலுமின்னே. (334)

(கு-ரை) எண்மூன்றூர்-இருபத்து நான்குள்ள முருகக்கடவுள். உர்துவர்-செலுத்துவர். தேர்ந்தாம்-தெளிந்துகொண்டோம். பொய்-பொய்மை.

### இயற்படமொழிதல்.

(இ-ள்) அங்ஙனங்கூறக்கேட்ட தலைவி தலைவனியற்கையை யோரியல்புபட மொழிதல்.

ஏதோ பிரிந்ததன் காரண நேரிற்கண் டென்னெனுமப்
போதோ துரவாது மெய்யே லவரைப் புறமுரைத்தல்
மாதோகை மீது வருவார் பரங்கிரி வாய்நமக்குக்
கோதோடு பட்ட செயலாங் குறிக்கொள் குறுந்தொடியே. (335)

(கு-ரை) புறமுரைத்தல்-வேறாகப்பேசுதல். மா-பெரிய. தோகை-மயில். கோது-குற்றம். குறிக்கொள்-எண்ணிக்கொள்வாயாக.

### தெய்வம் பொறைகொளச் செல்குவமென்றல்.

(இ-ள்) தலைவர் பிரியேனென்றுணைகூறிப் பிரிந்து போனாராதலால அத்தெய்வம் அவரைச் சீறுதபடி அவரெங்கட்குக் குற்றஞ்செய்தாரல்லர். பொறுத்துக்கொள்ளென்று வேண்டிக்கோடற்கு நாமிருவரும் போவோமென்று தலைவி பாங்கியுடன் கூறுதல்.

பெண்ணொன்று வேண்டி மகிழடி போய்ப்பொய் பிதற்றினர்தாங்
கண்ணொன் றிழந்தது போலேநங் காதலர் கண்ணிழவா
தெண்ணொன்று செய்பரங் குன்றினிற் போயவ னின்னடிக்கீழ்
மண்ணொன் றவீழ்ந்தொர் வரம்வேண் டுவமென்பின் வாசகியே. ()

(கு-ரை) மகிழடி-மகிழமரத்தடி. பொய்பிதற்றினர்-சுந்தரமூர்த்தி நாயனார். இவர் சரிதம் பெரியபுராணத்துட் காண்க. எண்-நினைப்பினிடத்து. ஒன்று-பொருந்துகின்ற. மண்-பூமியில். ஒன்ற-பொருந்த.

## இல்வயிற் செறித்தமை சொல்லல்.

(இ-ள்) தலைவி தன் மெய்வேறுபாட்டாலும் ஊரிலுள்ளா ரலர்தூற்றுதலாலும் நற்றாயுளத்தில் வெறுப்பாகி மனையிடத்திலென்னை யுனக்குக் காவல் வைத்தாளென்று தலைவிக்குப் பாங்கி கூறுதல்.

சிறுகுற்றஞ் செய்யினுங் காவற் குறள்குகை சேர்த்துவைக்கப்
பெறுமெய்க் கிரியிற் பிறந்தன ளாதலிற் ெற்றவன்னை
யுறுமெய்க் குறியு மிதழ்க்குறி யும்பிற வுங்கண்டுனை
மறுகிச் சுழலச் செறித்தாள் குகனருள் வாய்ப்பதென்றே (337)

(கு-ரை) காவற்குறள்-காத்துக்கொண்டிருக்கும் அண்டாபரணரென்னும்பூதவீரர். குகைசேர்த்துவைக்க-குகையினிடத்தடைத்துவைக்க. இக்கதை பரங்கிரிப்புராணத்துட் காண்க. மெய்க்குறி - ஊடற்காலத்துச் சரீரத்திற் றோன்று மடையாளம். செறித்தாள்-காவற்படுத்தினாள்.

## செவிலிகனையிரு ளவன்வரக்கண்டமை கூறல்.

(இ-ள்) செவிலித்தாய் நெருங்கிய இருட்குறியிடத்துத் தலைவன் வரக் கண்டாளென்று பாங்கி தலைவிக்குச் சொல்லுதல்

வடநாடு செல்ல விடுந்தோ னேறு மதகரியிற்
றிடநாடு மன்பரைக் கண்டிவன் காமச் செழுங்கடலூர்
குடநாடு வானென் றயிர்த்தே செவிலிவெங் கோபங்கொண்டாள்
படநாடு பாம்படு மாமயி லோன்மெய்ப் பறம்பணங்கே (338)

(கு-ரை) தேரன்-தேரையுடையமன்மதன். மதகரி-யானையாகியஇருள். குடம்-தனமாகிய குடத்தை. நாடுவான்-தேடுவோன். அடு-கொல்லுகின்ற. மெய்ப்பறம்பு-பரங்கிரி.

## எறிவளைவேற்றுமைக் கேது வினுதல்.

(இ-ள்) செவிலித்தாய் தலைவியின தவயவ வேறுபாட்டுக்குக் காரண மென்னையென்று பாங்கியைக் கேட்டல்.

ஆரத்தின் முத்த மிதுகண் சொரிமுத் தநுவெனவே
பாரத் தனத்திற் பருக்கப் படாமலிப் பாதியிரா
கோரத்தி லுந்துயி லாளயி லாள்புன நீத்தபின்னர்
வீரத் தனவடி வேலோன்மெய்க் குன்றிலென் மெல்லியலே. (339)

(கு-ரை) ஆரம்-மாலை. சொரி-உதிர்க்கின்ற. முத்தம்-முத்துப்போன்ற நீர்த்துளி. பருக்க-பிரிக்க. அயிலாள்-உண்ணாள்.

### பாங்கி வெறிவிலக்கல்.

(இ-ள்) செவிலித்தாய் வெறியாட்டாளனையழைத்து மகட்கு நோயுற்ற வாறும் அது தீருமாறுஞ் சொல்லவேண்டுமென்று கேட்ட இடத்துத் தெய்வம் வந்தாடும்போது பாங்கி அத்தெய்வத்தை யாடவேண்டாவென்று விலக்குதல். வெறியாட்டாளன் ஆடுவெட்டிப் பலிகொடுததாற்றீருமென்ற இடத்து அவ்வாட்டைக் கொல்லாமல் விலக்கலெனினும் பொருந்தும்.

ஆலிலை நேர்வயி றாரொடு நீர்மெய் யசலமென்னீர்
வேலிலை தூங்கிய சாமிகொண் டாடி விளம்புரையாற்
சேலிலை யாகச்செய் கண்ணொ டுணைவு செயற்கினிதாம்
பாலிலை யாகிலிப் பாயசத் தாலென பயனுளதே. (340)

(கு-ரை) வயிறார்-வயிற்றையுடைய பெண்கள். வேலிலை-இலை வடிவமாகிய வேலாயுதம். சாமிகொண் டாடி-முருகக்கடவுளாவேசித்து நின்றாடுவோன். சேல்-சேல்மீன். பால்-ஊழ் + பால். பாயசம்-பாய்கின்ற ஆடு, பாயசம்.

### வெறிவிலக்கியவழிச் செவிலி பாங்கியைவினாதல்.

(இ-ள்) வெறியாடல் விலக்கிய காரணத்தைப் பாங்கியுடன் செவிலித்தாய் கேட்டல்.

நெறியார் குழாலொரு காரியங் காரண நீர்மையின்றி
வறிதே யெழாது வெறியுயிர் காந்த வகையென்னைநீ
யறியாம லொன்று நிகழாது சேய்மெய் யசலத்தெனைப்
பிறிதா நினைந்திலை யாயுரை யாவர்க்கும் பேசிலனே. (341)

(கு-ரை) நெறி-நெறிப்பு. குழால்-கூந்தலையுடையாய். வறிதே-வீணாக வெறி-ஆட்டினது. நினைந்திலையாய்-நினையாதவளாய்.

### பூத்தரு புணர்ச்சியா லறத்தோடு நிற்றல்.

(இ-ள்) பூவைக்கொடுத்ததனாற் புணர்ந்த களவை வெளிப்படுத்தித் தோழி செவிலிக்குக் கூறுதல்.

மாரன் றனக்கு வடுச்செயு மம்பொன்றை வைத்துமற்றைக்
கூரம்பு நான்குங் கொணர்ந்துன் மகட்குக் கொடுத்தொருவன்
பேரன்பு கொண்டு முடிப்ப முடியென்று பேசிச்சென்றான்
தாரந் தனக்கிவ ளாமெனறு சேய்மெய்த் தடத்தயலே. (342)

(கு-ரை) வடுச்செயும் அம்பு - மாம்பூவாகிய பாணம். நான்கு - முல்லை, அசோகு, நீலோற்பலம், தாமரையாகியமலர்கள். முடிப்ப-முடித்துக்கொள்வன வற்றை. மெய்த்தடம்-பரங்கிரி.

### புனல்தரு புணர்ச்சியாலறத்தோடு நிற்றல்.

(இ-ள்) தலைவி புனலாற் கூடிய புணர்ச்சியைப் பாங்கி வெளிப்படுத்திக் கூறுதல்.

செய்யாம லெய்தும்வெம் பாவத்துக் கஞ்சித் திறலொருவன்
மையாருங் கண்ணியைக் கான்யா றிழுக்குமவ் வாயெதிர்த்து
கையா லெடுத்து வெளியேற்றி யன்பிற் கலந்தகன்றான்
ஐயா யிவனு மவனே குகன்மெய் யசலத்தினே. (343)

(கு-ரை) செய்யாமலெய்தும்பாவம் - ஒருவனை ஆறிழுக்கக்கண்டு அவ்விடர் தீர்க்கவல்லன் தீராமற் சும்மா இருத்தல் போல்வது, இஃது இலக்கணக்கொத்துரையுட் கண்டது. அவ்வாய்-அந்த இடத்து. ஐயாய்-அழகிய தாயே.

### களிறுதரு புணர்ச்சியாலறத்தோடு நிற்றல்.

(இ-ள்) யானையைத்தடுத்துக் காத்து மேற்சொன்னவன் கூடிய புணர்ச்சியைக் கூறுதல்.

கொம்பின் பகையென் றொருமத யானைநின் கொம்பனையாள்
வம்பின் முலையொடு தாக்க வரவுமவ் வன்மையுற்றோன்
அம்பி னதனைத் துரத்திநின் றன்பி னளாவிச்சென்றான்
நம்பி னுறத்தக் கவளல்லள் சேய்மெய் நகத்திடத்தே. (344)

(கு-ரை) வம்பின்-வாரினையுடைய. அளாவி-கலந்து. மெய்நகம்-பரங்கிரி.

### தலைமகள் வேற்றுமைகண்டு நற்றாய்செவிலியை வினவுதல்.

(இ-ள்) தலைவி வேறுபாட்டைத் தெரிந்து அதனுண்மையை நற்றாய் செவிலியைக் கேட்டல்.

முன்னே யயிர்த்தன னென்சுதை செய்கையை முற்றமுறப்
பின்னே தெரியுமென் றேயிருந் தேன்கரம பெய்வளைகள்
கொன்னே யிரங்கிக்கண் ணீருட் குளிப்பக் கொடுத்துநின்றாள்
என்னேயென் சேடி யினிச்செயல் வேள்மெய் யிறும்பிடத்தே (345)

(கு-ரை) அயிர்த்தனன் - சந்தேகித்தேன். சுதை - மகள். கொன்னே வீணுக. சேடி-தோழியே. மெய்யிறும்பு-பரங்கிரி.

### செவிலி நற்றாய்க்கு முன்னிலை மொழியாலறத்தோடு நிற்றல்.

(இ-ள்) செவிலி நற்றாய்க்குத் தலைவியின் களவை முன்னிலைப் புறமொழியால் மொழியாது முன்னிலை மொழியால் மொழிதல்,

பூத்தானஞ் செய்து மதனைப் புனற்றுயர் போக்கிவிடப்
பாத்தானை மாகரி காத்துப் படப்பணிப் பாயனைநீர்
மாத்தானை மண்ணிலொப் பாகிழுன் னளில் வரனொருவன்
காத்தானம் பொன்னை முருகன் பரங்கிரிக் கானகத்தே. (346)

(கு-ரை) பூத்தானஞ்செய்து-மலரைத் தானமாகக்கொடுத்து+புட்பம் ஐந்தைப் பாணமாக எய்து, இதில் தானென்பது அசை. மதனை-மன்மதனையும், புனற்றுயர்-காட்டாற்றில் சேர்ந்த துன்பம்+கங்கையாறு உலகத்துக்குச் செய்யுந் துன்பம். விடப்பாத்தானை-விஷமாகிய சோற்றையுண்ட சிவபிரானையும், மாகரி-பெரிய குவலயாபீடமென்னும் யானை+பெரியகாட்டானை. காத்தானை-காத்த விஷ்ணுவையும். வரன்-நாயகன். பொன்-இலக்குமி போன்ற தலைவியை.

இவற்றுள் வெறி விலக்கலொன்று முன்னிலைப் புறமொழிக்கும் ஏனைய பதினாறு முன்னிலை மொழிக்குமுரியன.

20-வது அறத்தொடு நிற்றல் முற்றிற்று.

---

## இருபத்தொராவது—உடன்போக்கு.

அஃதாவது தலைவன் தன்னூர்க்குத் தலைவியை யுடன்கொண்டுபோதல். அது-போக்கு கற்பொடுபுணர்ந்த கௌவை மீட்சியென மூன்றுவகைப்படும். அவற்றுள் போக்காவது போக்கறிவுறுத்தல், போக்குடன்படாமை, போக்குடன் படுத்தல், போக்குடன் படுதல், போக்கல் விலக்கல், புகழ்தல், தேற்றல் எனவெட்டு வகைப்படும். அவ்வெட்டும் பாங்கி தலைவற் குடன்போக்குணர்த்தல்முதல தலைவன்றன் பதியடைந்தமை தலைவிக்குணர்த்தலீறாகிய பதினெட்டுவிரிப்படும். அவைவருமாறு:—

### பாங்கி தலைவற் குடன்போக்குணர்த்தல்.

(இ-ள்) காவலதிகப்படுதலால் தலைவியை யுன்னூர்க்கு உடன்கொண்டு போவாயெனப் பாங்கி தலைவனுக்குக் கூறுதல்.

வானும் பரவு முருகன் பரங்கிரி வாயன்னைமார்
நானும் பலசொல வியுமணஞ் செய்யுநனா ளுட்குறியார்
கானுங் கமல மலர்ந்த தெனவிவள் காலநடப்பத்
தேனுந்து தாமண்ணா லேயுடன கூட்டிமுன் செல்லுகவே. (347)

(கு-ரை) மணம்-விவாகம். நாட்குறியார்-முகூர்த்தம் வைக்கமாட்டார். கமலம்-தாமரை. உந்து-செலுத்துகின்ற.

### இதுவுமது.

*பணமெனில் வாய்பிளக் கும்பிண மும்மெனப் பன்னுமுரை*
*தணவநின் செம்பொற் குளியலை யன்னையர் தாமதியார்*
*உணர்வொடு தந்திலர் நின்னோ டிவளை யுடன்கொடுபோய்*
*மணநின் புரியிற் புரிவாய் குகன்மெய் வரையிறையே.* (348)

(கு-ரை) பன்னும்-சொல்லும். தணவ-நீங்க. உணர்வு-அறிவு. புரி-ஊரில். புரிவாய்-செய்வாய்.

### தலைவ னுடன்போக்கு மறுத்தல்.

*காற்று முலாவிற் கனலும்வெங் கானினென் கால்நடப்பக்*
*கீற்று வரிசெய் பரல்வெப் புறிலுன்றன் கிஞ்சுகவாய்*
*மாற்றுயர் பொன்னிள காநிற்ப தன்றி வரப்பெறுமோ*
*போற்று முருகன் பரங்கிரிச் சாரற்பொற் பூங்கொடியே.* (349)

(கு-ரை) கனலும்-சுடும். வரி-இரேகை. பரல்-கூரியகல். கிஞ்சுகவாய்-முருக்கம் பூப்போன்ற வாயிதழ். இளகாநிற்பது-மனங்கலங்கி நிற்பது. சாரல்-மலைப்பக்கம்.

### இதுவுமது.

*மழைவர வஞ்சுங் கொடும்பாலை யுற்ற மரங்களிற்செந்*
*தழைவர வஞ்சுங் கழுதும் பறவை தணந்தகலும்*
*அளைவர வாய்விரித் தான்மரு மான்மெய் யசலத்தையா*
*யிழைவர வஞ்சு மலாதெழு மோவி தியல்வதன்றே* (350)

(கு-ரை) பறவை-பறத்தல். தணந்து-நீங்கி. அளை-தயிர். மருமான்-மருமகன். ஐ-அழகிய. ஆயிழை-தலைவி. இயல்வது-நடப்பது. அளை-இனவெதுகை.

### பாங்கி தலைவனை யுடன்படுத்தல்.

(இ-ள்) தலைவியைத் தலைவன் கூட்டிப்போதற்குப் பாங்கி யுடன்படுத்திக் கூறுதல்.

*சாலை வனம்விளை கானிற் கொடிய தழலுருவாம்*
*பாலை வனமெங்கள் பாவைக்குன் மேல்வைத்த பற்றுமிகு*
*காலை வனசநன் னீருரு வாகுங் கவலற்கநீ*
*மேலை வனசார் பெண்சேர் முருகன்மெய் வெற்பரசே.* (351)

(கு-ரை) சால்-மிகுந்த. ஐவனம்-மலைநெல். பற்று-அன்பு. காலை-காலத்தில். கவலற்க-வருந்தாதே. வனசார்-வேடர்.

## தலைவன் போக்குடன்படுதல்.

(இ-ள்) தலைவன் தலைவியை உடன்கொண்டு போதற்குச் சம்மதித்தல்.

ஒருமுனி வாய்மறை யாலே யிராமனுக் கோங்குசுரம்
மருவு மருத நிலமாதல் போலவுன் வாய்மறைபால்
அருகு புனலுமில பாலைநன் செய்ந்நில மாகுமெங்கட்
கிருவருஞ் செலவம் பாங்கிரி வேலனை யெண்ணியின்னே. (352)

(கு-ரை) முனி-விசுவாமுத்திரர் மறை-பலம், அதிபலமென்னும் மந்திரம். சுரம்-பாலைநிலம். வாய்மறைபால்-வாயாற்சொல்லும் இரகசியச் சொற்களால். செல்வம்-போவோம்.

## பாங்கி தலைவிக் குடன்போக்குணர்த்தல்.

(இ-ள்) தலைவனுடன் தலைவி போதலை யவளுக்குப்பாங்கி சொல்லுதல்.

ஆயமின் னொருவ னுயிரனை யாளை யகன்றினிமேற்
போயலர் கொய்தலும் பொய்த லயர்தலும் பூஞ்சுனைநீர்
தோய நினைதலு முண்டோவென் றூர்தண் டுறைவரதென்
சேய பரங்கிரி வேலோ னருளன்ன தேமொழியே. (353)

(கு-ரை) ஆயம்-மாதர் கூட்டத்திலுள்ள. பொய்தல்-மகளிர்விளையாட்டு. அயர்தலும்-செய்தலும். அதென்-அது யாதுகாரணம். சேய-சிவந்த.

## தலைவி நாணழிவிரங்கல்.

(இ-ள்) தலைவனுடன் போனால் வெட்கங் கெடுமேயென்று தலைவி வருந்துதல்.

கோணுத நாணல்ல வாமங் கையர்தங் குழாத்தினுக்குப்
பூணுமொன் றேயவர் மங்கல நாணுக்கும பூணணியாம்
ஏணுமிந் நாணறு தியூழ்வந் தாலன் பெனைத்துமிலார்
காணு முருகன்மெய்க் கல்லிடைச் செய்வதென் காரிகையே. (354)

(கு-ரை) நாண்-வெட்கம். ஒன்றே-இதுவொன்றே. மங்கலநாண்-தாலி. அணி-ஆபரணம். ஏண்-வலிமை. எனைத்தும்-எவ்வளவும். மெய்க்கல்-பரங்கிரி.

## கற்புமேம்பாடு பாங்கிகழறல்.

(இ-ள்) தலைவிக்குப் பாங்கி கற்பின் பெருமை கூறுதல்.

மாதர்க்கு நாணமுங் கற்பு மிருகண் மணியெனவே
யோதற் கியைந்த வுயர்பொரு ளாங்கற் பொழியவரும்
போதற்ப மாகுமந் நாணமென் றேயுன்றன் புந்திகொள்வாய்
வேதற்கு மூன்மந் திரப்பொருள் காட்டிமெய் வெற்பணங்கே. (355)

(கு-ரை) ஒழிய - கெட. அற்பம் - சிறிது. புந்தி-அறிவினிடத்து. மூன் மந்திரம்-பிரணவம். காட்டி-குமாரக்கடவுள் (வினையாலணையும் பெயர்.)

தலைவி யொருப்பட்டெழுதல்.

(இ-ள்) தலைவி தலைவனுடன் மனந்துணிந்து போகச் சம்மதித்தல்.

தீப்பா லையினிடை யானடந் தன்பர்பின் சென்றதன்மே
லாப்பாலை யென்கிள்ளை பூவைக் கருத்திவ் வகிலமெலாங்
காப்பாலை யைந்தகல் சேயுறை மெய்ககிரி கண்டிலர்போல்
மூப்பா லையரன் னையருக்குந் தேற்ற மொழிசகியே. (356)

(கு-ரை) ஆ-பசு. ஊட்டு-உண்ணச்செய். காபபால்-காக்கும்பொருட்டு. ஐயைந்து-இருபத்தைந்து தத்துவங்களையும். அகல்-நீங்கிய. (ஐயைந்துக்கப் புறத்தானும் என்றார் பெரியார். தேவாரம்) அயர்-வருந்துகின்ற.

பாங்கி சுரத்தியல் புரைத்துழித் தலைவி சொல்லல்.

(இ-ள்) பாலையின் கொடுமை கூறிய பாங்கிக்குத் தலைவி கூறுதல்.

ஏட்டி லெழுதின்மை தானிடும் பாலை யெனமொழிந்தாய்
நாட்டி லெழுமல ரில்லனை காவல் நணுகப்படும்
பாட்டி லுயிர்தப்பி நினைறேற்கப் பாலைதண் பாற்கடலாம
வீட்டி லெனையினி மேலவிடுங் கந்தனமெய் வெற்பணங்கே. (357)

(கு-ரை) மைதானிடும்-கரியாய்ப்போம். (தாற்பரியம்) அலரில்-பழிமொழியால். வீட்டில்-மோக்ஷவீட்டில். மற்றொருபொருள் + மணங்கூட்டுவித்து இல்லற வீட்டிலென்றுமாம்.

பாங்கி கையடைகொடுத்தல்.

(இ-ள்) தலைவனிடத்துத் தலைவியைப் பாங்கியடைக்கலப்பொருளாகக் கொடுத்தல்.

பாலாழி தந்த திருவைமுன் ஞளங்கைப் பற்றிநெஞ்சின்
மேலாக வைத்தவன் போலா னெனவெங்கண் மெல்லியலை
மாலாய நீநெஞ் சிரண்டிலும் வைத்தின்ப வாழ்வெய்துவாய்
நூலா யுதமுங்கைக் கொண்டோன் பரங்கிரிக் காவலனே. (358)

(கு-ரை) போலான்-சமானமாகான். மால்-திருமால்+மோகம். நெஞ்சிரண்டு-மனம், மார்பு. காலாயுதம்-கோழிக்கொடி. வீரனுக்கு முழு ஆயுதம் வேண்டுவதில்லை. காலாயுதம் போதுமென்று சிலேடைப்பொருள் கண்டு கொள்க.

## பாங்கி வைகிருள் விடுத்தல்.

(இ-ள்) இருளார்ந்த இடையாமத்தில் பாங்கி தலைவியைத் தலைவனுடன் விடுத்தல். இடையாமம்-நடுராத்திரி.

விதியா துறினு மநுபவி யாமல் விடுபவர்யார்
பதியாய வேலன் பரங்கிரிச் சாரற்கப் பாற்செலுமுன்
மதியாம் நுதலி வருந்தி யுனைப்பெற்ற மாதுவயின்
கொதியாம லாற்றி விடியுமப் போதுனைக் கூடுவனே. (359)

(கு-ரை) யாது - எது. நுதலி - நெற்றியையுடையாய். வயின்-வயிறு. கூடுவன்-வந்துசேர்வேன்.

## தலைமகளைத் தலைமகன் சுரத்துய்த்தல்.

(இ-ள்) தலைவன் தலைவியைப் பாலை நிலத்திற் செலுத்தல்.

என்மனக் கல்லி னடந்து பழகி யிருக்கின்றநின்
மென்மலர்க் காலிப் பரற்கா னடக்கின் மெலிவதுண்டோ
நன்மலர் நீத்த திருவேயென் பின்னர் நடமடவார்
தன்ம நிறைபரங் குன்றூர் முருகன் றனைநினைந்தே. (360)

(கு-ரை) பரல்-கூரியமுட்போன்ற கற்களையுடைய. மடவார்தன்மம்-பெண்கள்தருமம். அதாவது= நாயகன் சொல்வழிநடத்தல்.

இதுவரையும் ஐம்பத்திரண்டா நாள் நிகழ்ச்சி.

## தலைமகன் தலைமகளசைவறிந் திருத்தல்.

(இ-ள்) தலைவியினது வருத்தத்தையறிந்து தலைவனவளுடனிருத்தல்.

வெய்ய வினையி னுழல்வார்க்கு நல்வினை மேவலெனச்
செய்ய வெயிலி னடந்திளைத் தாய்க்குச் செழும்பொழிலொன்
றுய்ய வருகும ரேசன் பரங்கிரி யூர்ப்புறத்துண்
டைய வதிற்சற் றிருந்திளைப் பாறி யகலுவமே. (361)

(கு-ரை) உழல்வார்க்கு-வருந்துகின்றவருக்கு. இளைத்தாய்க்கு-இளைத்தவனுக்கு. ஐய-ஆச்சரியம்.

### உவந்தலர் சூட்டி யுண்மகிழ்ந்துரைத்தல்.

(இ-ள்) தலைவியைமகிழ்ந்து அவள் கூந்தற்குப் பலமலர்சூட்டி அதனாற் பரவச மகிழ்ச்சியடைந்து தலைவன் கூறுதல். உவகை-அறிவொடு கூடியது. மகிழ்ச்சி-அறிவழிந்திருப்பது. இதற்கு உதாரணமாக "உள்ளக்களித்தலுங் காண மகிழ்தலுங் கள்ளுக்கில் காமத்திற்குண்டு" என்னுந் திருக்குறட்பரி மேலழகருரையைக் காண்க.

தாவந்தந் தீர்க்குங் குமரன் பரங்கிரித் தையனல்லாய்
நீவந் தமரவிக் காவும்நின் கூந்தலை நீவிநறும்
பூவந்த மாகப் புனையுமென் கையுஞ்செய் புண்ணியமும்
மாவந் தணரெனச் செய்ம்மா தவமும் வகுப்பரிதே. (362)

(குரை) அமர-தங்க. நீவி-சீவி. அந்தம்-அழகு. மா-பெரிய. அந்தணர்-முனிவர். வகுப்பு-வகுத்துச்சொல்லுதல்.

### கண்டோரயிர்த்தல்.

(இ-ள்) வடிவின் மேம்பாட்டால் தலைவனையுந் தலைவியையுங் கண்டவர் சந்தேகப்பட்டுக் கூறுதல்.

எதிர்வரு வார்கள் மதனு மிரதியு மென்னிலுரு
முதிர்வடி வேதவ னல்லனிவனந்த மொய்குழலாள்
கதிர்மணிப் பூணிவ ளோடுவ ராளன்பர் காதற்றுதி
யதிர்பரங் குன்றின் முருகனுக் காட்பட்ட ஆண்டையரே. (363)

(கு-ரை) உரு-நிறம். அல்லன்-இல்லை. கதிர்-ஒளி. அதிர்-முழங்குகின்ற. ஆட்பட்ட-அடிமைப்பட்ட. ஆண்டையர்-அவ்விடத்திலுள்ளார்.

### கண்டோர் காதலின் விலக்கல்

(இ-ள்) மேற்கூறிய கண்டோர் ஆசையுடன் தலைவன்றலைவியிருவரையும் இங்கிருந்து நாளைப்போகலாமென்று வழிச்செலவு விலக்குதல்.

பாற்கா னூர்பரி மேல்கடற் பாய்ந்ததிப் பாரினைச்சூழ்
நாற்கட லென்ன மதன்கரி சூழ்ந்தது நங்களில்லில்
வேற்கான் மேய பரங்கிரி நாடு விரும்பியசெங்
கோற்கா சேயிவ ளோடிருந் தேகுன் குறிப்பிடத்தே. (364)

(கு-ரை) பாற்கான்-சூரியன். ஊர்-செலுத்துகின்ற. மதன்கரி-இருள். செங்கோற்கு-நீதிக்கு. குறிப்பிடம்-குறிக்கப்பட்டஇடம்.

இதுவுமது.

ஆயுந் தளிரு மலரு நிறைகொம்ப ரன்னவளைத்
தீயும் கரையும்வெங் கானில் நடந்திடச் செய்துவந்த
நீயும் தனியை நுமைப்பார்க்குந் தோறுமெந் நெஞ்சுருகும்
ஏயுங் குகன்மெய் யசலத்தெம் மூரிருந் தேகுகவே. (365)

(கு-ரை) ஆயும்-ஆராயும். தனியை-தனிமையாயுள்ளாய். நுமை-உங்களிருவரையும். ஏயும்-பொருந்தும். எம்மூர்-எங்களூரில்.

இதுவுமது.

பெருந்தகை நீயு மிவளு நடந்து பெருந்தகையே
வருந்தழல் போலுஞ் சுரத்தினைத் தீரெங்கள் மாட்டிரவி
லிருந்தயர் வோய்ந்து முருகன் பரங்குன் றிருந்தவர்போல்
விருந்தமு துட்கொண்டு நும்மூர்க் கெழுமின் விடியலிலே. (366)

(கு-ரை) பெருந்தகை-பெரியதகுதியுடைய. தகை-தாகம். சுரத்து-பாலைநிலத்தில். மாட்டு-பக்கத்தில். அயர்வு-சோர்வு. இருந்தவர்-தங்கினவர் + பெரியதவசிகள். ஏகுமின்-செல்லுங்கள்.

கண்டோர் தன் பதியணிமை சாற்றல்.

(இ-ள்) இவ்விடத்தில் தங்கிப்போதல்வேண்டுமென்று சொல்லப்பட்ட தலைவிக்குத் தலைவனுடையநகர் சமீபத்திலுள்ளதென்று கண்டோர் கூறுதல்.

வீரமன் றாரணி வேலோ னுறைபரம் வெற்பனையா
யீரமொன் றுமிலு மில்லாவிக் கானகன் றேகில்வெகு
தூரமன் றாலுங்க ளூரதன் பாங்கர்ச் சுகங்கள்கனி
யாரமென் றார்க்கும் பொழிலெதிர் தோன்று மழகுறவே. (367)

(கு-ரை) மன்-நிலைபெற்ற. ஈரம்-குளிர்ச்சி. ஆல்-அசை. பாங்கர்-பக்கத்தில். சுகங்கள்-கிளிகள். ஆர-உண்ண. ஆர்க்கும்-முழங்கும்.

தலைவன் றன்பதியடைந்தமை தலைவிக்குணர்த்தல்.

(இ-ள்) வெளி.

*காவற் சிறையிற்றுஞ் சூழ்ந்து வன்றெனக் கானில்நடந்
தேவற் பணிசெயுங் கோகில மேயெதி ரேதெரிவ
தாவற் பரங்கிரி யூர்க்குக னூர்நிவந் தாடுபொழி
லோவற்கு நெஞ்சந் துணியுங்கொ லோவத னுட்புகிலே. (368)

(கு-ரை) காவற்சிறை-காவல்வைக்குமிடம். பணி-தொழில். ஆவல்-ஆசை. ஊர்தி-மயில்வாகனம். ஓவற்கு-நீங்குதற்கு.

இதுமது.

வேர்த்தங்க ணொந்த வருத்தமெல் லாங்குகன் மெய்வெற்புறு
தீர்த்தங்கள் முற்றுந் தவிர்க்குஞ் சிகரி சிகரமெதிர்
பார்த்தங்க ணுனந்த மெய்துமெய் யன்புறு பத்தரெலா
மார்த்தங்கண் மேவிப் பெறும்பே றனைத்துமிங் கார்சொல்வரே. ()

(கு-ரை) சிகரி-கோபுரம். சிகரம்-தூவி. அங்கண்-அழகியநேத்திரம்.

இதுவுமது.

பன்று லுலகும் பாவுங் குமரன் பரங்கிரிப்பேர்
சொன்று லறமுத லுன்குங் கிடைக்குஞ் சுடர்த்தொடியே
யென்று லியம்ப முடியாதென் ஞேடிங் கிருந்திருந்து
பின்று லுணர்திநம் சிற்றின்ப மியாவையும் பேரின்பமே. (370)

(கு-ரை) அறமுதல்நான்கு-அறம், பொருள், இன்பம், வீடு. உணர்தி-அறிவாய்.

இவற்றுள்-பாங்கி தலைவற் குடன்போக்குணர்த்தலும் தலைவிக் குடன் போக்குணர்த்தலுமாகிய விரண்டும் போக்கறிவுறுத்தற்கும், தலைவன் மறுத்தலும் தலைவி நாணழிந்திரங்கலுமாகிய விரண்டும் போக்குடன் படாமைக்கும், பாங்கி தலைவனையுடன்படுத்தலும் தலைவி கற்புமேம்பாடு பாங்கிசழறலுமாகிய விரண்டும் போக்குடன் படுத்தற்கும், தலைவன் போக்குடன்படுதலும் தலைவி யொருப்பட்டெழுதலும் பாங்கி சுரத்தியல் புரைத்துழிச் சொல்லலுமாகிய மூன்றும் உடன்போக்குடன்படுதற்கும், பாங்கி கையடைகொடுத்தலும் வைகிருள்விடுத்தலும் தலைவன் தலைவியைச் சுரத்துய்த்தலுமாகிய மூன்றும் போக்கற்கும், தலைவன் தலைவி யசைவறிந்திருத்தலும் கண்டோர்காதலின் விலக்கலுமாகியவிரண்டும் விலக்கற்கும், தலைவன் தலைவியை யுவந்தலர்சூட்டி யுண் மகிழ்ந்துரைத்தலும் கண்டோரயிர்த்தலுமாகிய விரண்டும் புகழ்தற்கும், கண்டோர் தன்பதியணிமை சாற்றலும் தலைவன்றன்பதி யடைந்தமை தலைவிக்குணர்த்தலுமாகிய விரண்டும் தேற்றற்குமுரியன. சுரத்தியல்புரைத்தல்-சுரத்தியல் புரைத்துழிச்சொல்லலினும், கண்டோரிரங்கல்-கண்டோரயிர்த்தலினு மடங்குமென்க.

21-உடன்போக்கு முற்றிற்று.

## இருபத்திரண்டாவது—கற்பொடுபுணர்ந்த கௌவை.

அஃதாவது தலைவிதலைவனுடைமையாய்க் கற்பொடுகூடிய அதனை அய லார் விராயசேரியர் பலருமறிதல். அதுசெவிலி புலம்பல் நற்றாய் புலம்பல் மனைமருட்சி (நற்றாய்மருட்சி)கண்டோரிரக்கம் செவிலிபின்றேடிச்சேறல் என ஐந்துவகைப்படும். அவைவருமாறு:—

### செவிலி பாங்கியை வினாதல்.

(இ-ள்) தலைவியைத் தேடிக் காணாமல் செவிலித்தாய் பாங்கியைக் கேட்டல்.

நலமலி வேலன் பரங்கிரி மான்மிய நன்கெடுத்துப்
பலமுறை பேசியுன் பாயலி லேகண் படைகொண்டநங்
குலமயி லுன்னை யறியாதெங் கேகினள் கூற்றுவனோர்
புலமறி யாதுயிர் போவதுண் டோபசும் பொற்றொடியே. (371)

(கு-ரை) கண்படை-நித்திரை. புலம்-அறிவு.

### இதுவுமது.

வண்ட லிழைக்கு மிடத்து மலர்கொய் வனத்திடத்துந்
தண்டரு பூஞ்சுனை யாடு மிடத்துநந் தையலைநேர்
கண்டன மென்ப ரிலையே யவடன் கருத்தினிலுட்
கொண்ட மறைவிண் டிலையும வேலன்மெய்ச குன்றணங்கே. (372)

(கு-ரை) வண்டல்-மகளிர்விளையாட்டு. தண்-குளிர்ச்சி. மறை-இரகசியம். விண்டிலை-சொன்னாயில்லை.

### பாங்கி செவிலிக்குணர்த்தல்.

(இ-ள்) தலைவி தலைவனுடன் சென்றதைப் பாங்கி செவிலிக்குக் கூறுதல்.

வெள்ளத் தணைந்துதற் காத்ததல் லாமல் வியந்துநமர்
கொள்ளத் தகுபொன் கொணர்ந்து குவித்த கொழுநன்வரப்
பள்ளத் தணைபுனல் போலவ னோடன்பு பற்றிச்சென்றாள்
உள்ளத் துணர்தி யன்னையே முருகன்மெய் யோங்கலினே. (373)

(கு-ரை) அணைந்து-வந்துசேர்ந்து. நமர்-நம்மவர். கொழுநன்-கணவன். உணர்தி-அறிவாய். மெய்யோங்கல்-பரங்கிரி.

### இதுவுமது.

வெள்ளம் வருமுன் னணைகோலி வைப்பரிம் மேதினியோர்
உள்ளதெ லாநுமக் கோதியு மென்சொற்க ளொன்றுங்கொளீர்
வள்ளல்பின் போக மறவாம லேகினள் மற்றென்செய்வாள்
கள்ளவிழ் கோதையைக் காக்கும் பரங்கிரிக் கந்தனின்றே. (374)

(கு-ரை) கோலி - வளைந்து. பின்போக - பின்செல்ல. பின்போகம்-பின்னநுபவிக்குமின்பம். அவிழ்-விரிந்த. காக்குய-காப்பன்.

### செவிலி தேற்றுவோர்க்கெதிரழிந்து மொழிதல்.

(இ-ள்) பாங்கியாலறிந்த செவிலி தன்னைத் தேற்றுபவருக்கு நேரே நொந்து கூறுதல்.

உதவிக் குதவிசெ யாதொழிந் தாலு முபாத்திரவம்
அதனைச்செ யாம லிருந்தாலும் போது மஃதறியா
மதலைச் சிறுமியின் பாலூட் டியவென் மனங்கொதிக்க
விதனத்தில் விட்டகன் றாளைய கோகுகன் மெய்வெற்பினே. (375)

(கு-ரை) விதனம்-துன்பம்.

### இதுவுமது.

பாலூட்டி மெய்யன்பு பாராட்டிச் செம்பஞ்சு பங்கயநேர்
காலூட்டிக் கண்ணெச்சில் வாராமற் காத்தவென் கண்கலுழ
மாலூட் டியவ னொடுசெல் குகன்மெய் வரையனையாள்
போலூட் டியையரி வார்மட வீரிப் புவியிலின்றே. (376)

(கு-ரை) கண்ணெச்சில்-திட்டிதோஷம். கலுழ-அழ. ஊட்டியை-கழுத்தை.

### செவிலி தன்னறிவின்மை தன்னைநொந்துரைத்தல்.

(இ-ள்) தலைவிபோதலைத் தோழிதன் குறிப்பினாலறிவித்த தன்மையை யறிந்திலேனென்று செவிலிதன்னறிவின்மையை நொந்து கூறுதல்.

காபாலி மைந்தன் பரங்கிரி வாய்நென்னற் காரிருளில்
நீபாலை யேகுடி காலையிற் போவென்று நேரிழைக்கென்
மாபாலை யாய புதல்வி கவர்பொருள் வைத்துச்சொன்ன
தேபா லியமதி யாலறிந் தேனில்லை யென்செய்வதே. (377)

(கு-ரை) காபாலி-சிவபிரான். நென்னல்-நேற்று. பாலையேகுடி-பாலையேசாப்பிடு+பாலைநிலத்திலே குடியிருக்க. மாபாலை-மிகஇளமைப் பருவமுடையாள். கவர்பொருள்-இரண்டுபொருள். பாலியமதியால்-சிறுபிராயப்புத்தியால்.

இதுவுமது.

கற்பென் புதுசொற் றிறம்பாமை யென்றெளவை கட்டுரைத்த
பொற்பமை யுண்மைப் பொருளுணர்ந் தேன்குகன் புக்கமர்மெய்
வெற்பனை யேயென்று சொற்றகன் றூளந்த வேளையினில்
அற்ப மதியுடை யேனவள் சூதை யறிந்திலனே. (378)

(கு-ரை) சொல்—(கணவன்)சொல்லுக்கு. திறம்பாமை - மாறுபடாதிருத்தல்.

சேவிலி தெய்வம் வாழ்த்தல்.

(இ-ள்) தலைவிக்குஇடையூறு நிகழாவிதம் செவிலி தெய்வத்தை வாழ்த்துதல்.

இந்திரன் முன்ன மிழந்தசெல் வத்தினை யீந்ததெய்வம்
சந்திர விம்ப முகமாதெம் மெய்த்தடஞ் சாரல்விட்டு
நொந்திடு பாலையிற் சென்றது போல்வர நோக்குமென்றால்
மந்திர பூசை பரம்பரை யாச்செய்து வாழ்த்துவமே. (379)

(கு-ரை) தெய்வம்-குமாரக்கடவுள். மெய்த்தடம்-பரங்கிரி. நோக்கும்-பார்க்கும்.

இவ்வைந்து துறைகளும் செவிலி புலம்பலின் விரி.

---

சேவிலி நற்றாய்க்கறத்தோடு நிற்றல்.

(இ-ள்) தலைவி தலைவனுடன்போயின செய்தியைச் செவிலி நற்றாய்க்குக்கூறுதல்.

பெண்ணுப் பிறப்பர் பிறர்க்குரி யாரெனல் பேச்சுமட்டோ
கண்ணாரக் கண்டது மாம்நென்னல் வந்து கனகந்தந்தார்க்
கெண்ணும் இல்லெனு நின்னு லவர்பின் னெழுந்துவெள்ளி
விண்ணுரு முன்னடந் தாளுன் மகள்குகன் மெய்வெற்பினே. (380)

(கு-ரை) நென்னல்-நேற்று. இல்லெனும்-இல்லையென்றுசொல்லும்.

நற்றாய் பாங்கிதன்னோடு புலம்பல்

(இ-ள்) அங்ஙனங்கேட்ட நற்றாய் பாங்கியொடு வருந்திக்கூறுதல்.

*நீயென் றவளென்று வேற்றுமை சற்று நினைந்தறியாத்*
*தாயென் றெனையறி யாய்கொலந் தோவென் றனிமகளைச்*
*சேயென்று மன்னும் பரங்கிரிக் கான்விட்டுத் தீச்சுரத்திற்*
*போயென்றாந் துன்புறப் போக்கினை தீய பொலங்கொடியே.* (381)

(கு-ரை) சற்றும்-சிறிதும். தனி-ஒப்பற்ற. என்றும்-எந்நாளும்.

இதுவுமது.

*பஞ்சிற் படினும் பதைக்குமப் பாவை பதமலரென்*
*னெஞ்சிற் படியச் சகியாத நீவிழு நீர்த்துளிகள்*
*தஞ்சிற் றுருவங் கெடுஞ்சுரத் தேகச் சகித்ததெவ்வா*
*றஞ்சிற் படாத வறிவுருச் சேய்மெய் யசலத்தினே.* (382)

(கு-ரை) பதைக்கும்-வருந்தும். அஞ்சில்-ஐந்து இந்திரிய அறிவோடு. படாத-தோன்றாத.

இதுவுமது.

*குழியில் விழுந்த சலம்போல வேநங் குலத்துக்குற்ற*
*பழிவெளி யேறப் படாதுள் ளடங்கவெம் பாலையிற்செல்*
*வழியி லொருவன்பின் னேநடந் தாள்மங்கை மாய்ந்தெனுயிர்*
*கழிவதல் லால்நிற்கி லென்னுங் குமரன்மெய்க் கற்கொடியே.* (383)

(கு-ரை) பாலை-பாலைநிலம். மெய்க்கல்-பரங்கிரி.

நற்றாய் பாங்கியர் தம்மோடு புலம்பல்.

(இ-ள்) நற்றாய் மற்றைப் பாங்கியருடன் வருந்திக்கூறல்.

*ஆய மகளி ரயர்வொழி காவி லவர்க்குள்நடு*
*நாயக மாமென் புதல்வி றமைவிட்டு நள்ளிருளிற்*
*போயத னால்வருந் துன்பமெவ் வாறு பொறுத்திருந்தீர்*
*தேய முழுதும் புகழ்சேய் பரங்கிரிச் சேடியரே.* (384)

(கு-ரை) ஆயம்-மாதர்கூட்டம். அயர்வு-சோர்வு. நள்ளிருள்-நடுராத்திரி யிருட்டு. சேடியரே-தோழிப்பெண்களே.

நற்றாயயலார் தம்மோடு புலம்பல்.

(இ-ள்) வெளி.

*கண்பெற்ற பேறெய் திலர்போலென் மேனி கவினழியப்*
*பெண்பெற்ற பேறெய் திலனுங்க ளோடினிப் பேசவதென்*
*மண்பெற்ற பேறென வந்த குகன்மெய் வரைமங்கையீர்*
*புண்பெற்ற நெஞ்ச மெனக்காறு மாறென்று போதருமே.* (385)

(கு-ரை) *பேறு-பிரயோசனம். கவின்-அழகு. போதரும்-வரும்.*

நற்றாய்பயிலிடந் தம்மொடு புலம்பல்.

(இ-ள்) *தலைவி பழகிவிளையாடுமிடங்களோடு நற்றாய் மனம் வருந்திக் கூறுதல்.*

*பன்னாளும் வந்து பயில்வண்ட லாடப் படுமிடங்காள்*
*நன்னாள் மலர்தந் தவளொடு கானில் நடந்துசென்ற*
*மின்னா ளுமைக்கண்டு பேசின ளோவென்று மீள்வலென்றாள்*
*அன்னாள் பிரிவினை யாற்றேன் குகன்மெய் யசலத்தினே.* (386)

(கு-ரை) *பயில்-பழகுகின்ற. வண்டல்-மகளிர் விளையாட்டு. நாள்மலர்-அன்றலர்ந்தபூ. மீள்வல்-திரும்பிவருவேன்.*

இவ் வாறு துறைகளும் நற்றாய் புலம்பலின் விரியெனக.

நிமித்தம் போற்றல்'

(இ-ள்) *தலைவி வருதற்குத்தக்க சகுனத்தைத் துதித்து நற்றாய் கூறுதல்.*

*புனக்காக மேபலி யியார்க்கு முண்மை புகன்றருணீ*
*முனக்காக மேந்தி யறியா மறைமுன் மொழிப்பொருள்சொல்*
*வனக்காகர் தாங்கு பரங்கிரி யானருள் வாய்த்தவளை*
*யெனக்காக விங்கு வருமோர் நிமித்த மியற்றுகவே.* (387)

(கு-ரை) *புனம்-காடு. பலி-பூசை. உண்மை-சகுனத்தால் நிகழ் காரியங்கள். முன்-முற்காலம். அக்கு-உருத்திராக்கம். ஆகம்-மார்பில். ஏந்தி-தாங்கிய சிவபிரான் (விநாயகனையும் பெயர்) மறைமுன்-பிரணவ மந்திரம். நிமித்தம்-சகுனம்.*

சுரந்தணிவித்தல்.

(இ-ள்) *தலைவிக்குப் பாலை நிலத்தின் வெப்பந்தணியுமாறு நற்றாய் தெய்வத்தைப் பிரார்த்தித்தல்.*

34

தன்னாட் டிறைக்குச் சுரந்தந் ததனைத் தணித்தவன்போல்
முன்னாட்டி யாக்கொண்ட வள்ளி குலத்து முறைமையெண்ணிக்
கொன்னாட்டி லேறுங் குமரன் சுரத்தைக் குளிர்ச்சிசெய்து
சொன்னாட்டி னூற்றன் பரங்குன் றனையள் சுகமெய்துமே. (388)

(கு-ரை) தன்னென்பது - முருகக்கடவுளை. இறை - கூன்பாண்டியன். ஆட்டி-மனைவி. கொன்-அச்சத்தைச் செய்கின்ற. சுரத்தை-பாலைநிலத்தை. சொல்-புகழ்.

தலைமகள் மென்மைத்தன்மைக் கிரங்கல்.

(இ-ள்) நற்றாய் தலைவி மெல்லிய தன்மைக்கு வருந்திச் சொல்லுதல்.

தென்றல் படினுந் தளரு மிடைபதஞ் செம்பஞ்சுறிற்
கன்ற லொடுசெங் குருதி துளிக்குமென் கன்னிசெந்தீத்
துன்றருங் கானில் நடந்தாலச் சோவென்ன துன்புறுமோ
நன்றமர் சேய்பரங் குன்றினிற் பாவமென் னூன்செய்ததே. (389)

(கு-ரை) படினும்-பட்டாலும். தளரும்-வருந்தும். கன்றல்-வாடுதல். குருதி-இரத்தம். துன்று-நெருங்குதல். அச்சோ-ஐயோ.

தலைமக ளிளமைத்தன்மைக் குளமெலிந்திரங்கல்.

(இ-ள்) நற்றாய் தலைவி யிளமைத்தன்மைக்கு மனம் வருந்திக்கூறுதல்

முகங்கொண் டெழுந்த முலையா விளைஞரை மோதுசெய
லகங்கொண் டெழுத லறியா ளொருவனை யண்மிவெகு
சுகங்கண் டெழுந்து சுடுபரற் கானிற் றொடர்ந்ததென்னோ
சகங்கொண்ட தெய்வ மெனுஞ்சேய் பரங்கிரித் தையலரே. (390)

(கு-ரை) முகங்கொண்டெழுதல் - திரண்டெழுதல். இளைஞரை-ஆடவரை. அகம்-மனம். அண்மி-நெருங்கி. பரல்-கூரிய கற்களையுடைய. சகம்-உலகம். கொண்ட-கைக்கொண்ட.

அச்சத்தன்மைக் கச்சமுற்றிரங்கல்.

(இ-ள்) நற்றாய் தலைவியின் வெருவுந் தன்மையை நினைந்து தான் பயமுற்று வருந்துதல்.

அரியும் பிரமனுந் தேடும் பரமனுக் காடைநல்குங்
கரியும் புலியு நிகராக் கரியுங் கடியகொடு
வரியும் பொரவெதிர் வந்தாலஞ் சோவென் மகளென்செய்வாள்
விரியுங் கடம்பணி வேலோன் பரங்கிரி மெல்லியரே. (391)

(கு-ரை) கரி-(தாருகாவனத்து இருடிகள்விட்ட) யானை. நிகரா-ஒப்பாகாத. கொடுவரி-புலி.

இவ்வைந்து துறைகளு மனைமருட்சிக்குரியன. மனைமருட்சி-நற்றாய் மயங்குதல்.

## கண்டோரிரக்கம்.

(இ-ள்) வழியிற்கண்ட மாதர் தலைவியை நோக்கி வருந்தியழுங்கல். அழுங்கல்-அழுதல்.

வசனும் பந்துங் கழங்கு நிலையிய லொண்பொருளா
யேசலி யாம லிருந்திடக் கண்ட விவளைப்பெற்ற
மாசறு வேலன் பரங்கிரி மேவன்னை மார்வருந்திப்
பேசருந் துன்பம் பெறாரல்ல ரேவினைப் பெற்றியிதே. (392)

(கு-ரை) கழங்கு-கழற்சிக்காய். நிலையியல்-நிலையிலே தங்கும். பெற்ற அன்னையெனக்கூட்டுக. பெறாரல்லர்-பெறாதவராகார். பெற்றி-தன்மை.

## செவிலி யாற்றுத் தாயைத் தேற்றுவித் தகறல்.

(இ-ள்) தலைவி பிரிவைச் சகியாத நற்றாயைச் செவிலி சாந்தப்படுத்தித் தெளிவித்து நீங்குதல்.

தீரா விடரையுந் தீர்க்குங் குகன்மெய்ச் சிலம்பணங்கே
போரா விடர்செய் தொருவன்பின் னேசென்ற பேதையைக்கா
லூரா விடமுண் டெனினுமங் கேகிக்கொண் டென்னிடத்தில்
வாரா விடினல்ல வாமன னொந்து வருந்துவதே. (393)

(கு-ரை) போரா-நீங்காத. கால்-காற்று. ஊரா-செல்லாத.

## ஆற்றிடைமுக்கோற்பகவரை வினாதல்.

(இ-ள்) செவிலி தலைவியைத் தேடிப்போகுங்காட்டி லெதிரேவந்த திரிதண்டமுடைய அந்தணரைக் கண்டு கேட்டல்.

விரிதண் டமிழ்ப்புல வோனுங் குமரன்மெய் வெற்பினிடைத்
திரிதண்ட மேந்தித் திரிமுனி வீர்நுந் திருவடிக்குப்
புரிதண்டஞ் செய்தொரு பூவையுங் காளையும் போயினரோ
அரிதண் டலையுட் புகுந்ததப் பூவை யகன்றபின்னே. (394)

(கு-ரை) திரிதண்டம்-முக்கோல். புரி-செய்கின்ற. தண்டம்-வணக்கம். அரி-(தலைவிவளர்த்த) கிளிகள். அந்தப்பூவை-அந்தப்பெண்.

### மிக்கோரேதுக் காட்டல்.

(இ-ள்) செவிலி கேட்டதற்குப் பெரியோர் அஃது உலகவியல்பென்று காரணங்காட்டிக் கூறுதல்.

கடலிற் பிறந்த திருத்திரு மாலைக் கலந்தவன்பின்
னுடனுற் றகன்ற துலக முழுது முணர்ந்ததொன்றே
மடன்மொய்த்த கூந்தல் மயிலே பரங்கிரி வாணன்பின்னே
திடனுற்ற வள்ளியுஞ் சென்றாளிதுவுந் தெரிந்துகொள்ளே. (395)

(கு-ரை) அவன்-இத்திருமால். மடல்-பூவிதழ். வாணன்-வாழுகின்ற வனாகிய முருகக்கடவுள்.

### இதுவுமது.

தாயோ டியைந்த பறவைப் பெடையுந் தனக்கமைந்த
சேயோ டியையும் பருவங் கடக்கிலோர் சேவலினைப்
போயோடி நாடித் தொடரு மிஃதோர் புதுமையன்றே
காயோ டியைகரன் சேய்வாழ் பரங்கிரிக் காரிகையே. (396)

(கு-ரை) சேய்-இளமை. சேவல்-ஆண்பறவை. காய்-வற்றிய. ஓடு-பிரம கபாலம். சேய்-மகனாகிய குமாரக்கடவுள்.

### எயிற்றியோடு புலம்பல்.

(இ-ள்) செவிலி பாலைநிலத்துப் பெண்ணொடு வருந்துதல்.

உற்றாலின் கீழறஞ் சொற்றான் குமரன்மெய் யோங்கலன்னாள்
பொற்றாலி யாக்குமுன் காமம் பொருதுவெம் போர்செய்புலிப்
பற்றாலி பூணு மடவாயிக் கான்வரப் பார்த்தஇடன்
சொற்றா லினியிட ரில்லாம லோடித் துருவுவனே. (397)

(கு-ரை) ஆல் - கல்லாலவிருக்ஷம். சொற்றான் - சொன்ன சிவபிரான். யாக்குமுன்-கட்டுமுன். சொற்றால்-சொன்னால். துருவுவன்-தேடுவன்.

### குரவோடு புலம்பல்.

(இ-ள்) செவிலி குராமரத்தொடு வருந்துதல்.

நீதந்த பாவையைப் போற்குகன் மெய்வரை நேரிழைதா
னேதந்த பாவை தனையுரு வொப்பினை யேனுமெண்ணித்
தாதந்த மேவு மலர்வாய் திறந்து தடுக்குமுறை
யோதந்த வேளையென் சொற்கள்சொற் றாள்சொல் லுயர்குரவே. ()

(கு-ரை) பாவை-மரப்பாவை போன்றதாய். பாவை-பெண் (உவமையாகுபெயர்.) உரு-வடிவம். ஒப்பினை-சமானத்தை. தாது-மகரந்தம். ஓது-சொல்கின்ற. என்-யாது. குரவே-குராமரமே.

சுவடுகண்டிரங்கல்.

(இ-ள்) நிலத்தின் மேற் காலழுந்திய குறியைச் செவிலிகண்டு வருந்திக் கூறுதல்.

எயின ரடியி திளவ லடியிது வென் றுமெய்யில்
வயினறி யேனின் றெனினுங் குகன்மெய் வரையனையாள்
பயின்மெல் லடியிது வென்றேசெம் பஞ்சு படவிற்கண்டேன்
வெயின்மிகு பாலை யெயிற்றியர் தம்மடி வெற்றடியே. (399)

(கு-ரை) எயினர்-வேடர். இளவல்-தலைவன். வயின்-இடத்தில். பயில்-நடை பழகுகின்ற. பாலை-பாலைநிலத்தில். எயிற்றியர்-வேடப்பெண்கள். வெற்றடி-வெறும்பாதங்கள்.

செவிலி கலந்துடன் வருவோர்க்கண்டு கேட்டல்.

(இ-ள்) உடன்போக்குப் போய தலைவனுந் தலைவியும் போல அன்பு கலந்து வழியிடை வருவோரிருவரைக் கண்டு செவிலி கேட்டல்.

கானல் புனலெனக் கண்டுபின் னுண்மை கடிதறிந்த
மானது போல மயங்கி நமையெம் மனம்வருந்தப்
போன விருவரன் றென்றோர்ந் தனனவர் போந்ததுண்டேல்
ஊனமில் வேலன் பரங்கிரி வாயெற் குரைமின்களே. (400)

(கு-ரை) கடிது-சீக்கிரத்தில். ஓர்ந்தனன்-அறிந்தேன். உரைமின்கள்-சொல்லுங்கள்.

அவர் புலம்பறேற்றல்.

(இ-ள்) செவிலி யிரங்கிப் புலம்புதலை யெதிர்வந்தோர் தெளிவித்தல்.

என்னை யவனு மிவளை யவளு மெதிர்வினவிப்
பின்னையு மாலு மெனமெல்ல மெல்லப் பெயர்ந்துசென்று
ரன்னை யனைய வணங்கே வயல்க ளயல்களெங்குந்
தென்னை யமரு முருகன் பரங்கிரி சேர்வரின்றே. (401)

(கு-ரை) எதிர்வினவி-நேரிற்கேட்டு. பின்னை-இலக்குமி. அயல்-பக்கத்திடம். அமரும்-தங்கும்.

செவிலி புதல்வியைக் காணாது கவலைகூர்தல்.

(இ-ள்) செவிலி தலைவியைக்காணாமல் துன்பமிகுதிப்படல்.

பாரிலுள் ளார்தவப் பேறா முருகன் பரங்கிரிவாய்
ஊரிலுள் ளாரெனைக் கண்டன்பி னாலெதி ரோடிவந்தென்
னோரி லவளெங் கிருந்தாளென் றாலென் னிகழ்த்துவனான்
ஆரினி யென்னை மதிப்பா ரிவள்நல்ல ளாமெனவே. (402)

(கு-ரை) பேறு-பயன். நிகழ்த்துவன்-சொல்வேன். நல்லள்-நல்லவள். இவ்வொன்பது துறைகளும் செவிலி பின்றேடிச் சேறலின் விரி என்க.

இதுவரை ஐம்பத்துமூன்று நாள் நிகழ்ச்சி யென்க.

22-வது கற்பொடு புணர்ந்த கௌவை முற்றிற்று.

---

## இருபத்துமூன்றாவது—மீட்சி.

அஃதாவது மீண்டு வருதல். செவிலி புதல்வியைக் காணாது மீண்டு வருதலும் உடன்போய தலைவனுந் தலைவியு மீண்டு வருதலுமடங்கப் பொதுப்பட மீட்சி யென்றார். அது—தெளிதல் மகிழ்ச்சி வினாதல் செப்பலென நான்கு வகைப்படும். அவை தலைவி சேணகன்றமை செவிலி தாய்க்குணர்த்தல் முதல் நற்றாய் கேட்டவனுளங்கோள் வேலனை வினாதலீறாகிய ஆறு விரிகளை யுடையன. அவைவருமாறு:—

தலைவிசேணகன்றமை செவிலி தாய்க்குணர்த்தல்.

(இ-ள்) தலைவி நெடுந்தூரம் போன செய்தியைச் செவிலி நற்றாய்க்குச் சொல்லுதல்.

பெண்ணுக்கெட் டாமிடத் துச்சனி வந்து பிடித்ததுவோ
கண்ணுக்கெட் டாவெகு தூரத்திற் பாலை கடந்துசென்றாள்
விண்ணுக்கெட் டாம லுயர்பரங் குன்றுறை வேலனரு
ளெண்ணுக்கெட் டாதது போலே யினிநமக் கெட்டிலளே. (403)

(கு-ரை) பாலை-பாலைவனத்தை. விண்-ஆகாயம். எண்-நினைப்பு. எட்டிலள்-எட்டமாட்டாள். காணமுடியாதென்றபடி.

தலைவன்றம்மூர் சார்ந்தமை சாற்றல்.

(இ-ள்) ஐம்பத்துநான்காநாள் தலைவன் மீட்சியில் தமதூரைத்தலைவன் சேர்ந்தமை தலைவிக்குச் சொல்லுதல். தம் என்றது தலைவன்றலைவிய ரிருவரையும்.

அசையுஞ்செங் காந்தளுங் கையோ டுனையு மழைத்ததுபோ
லிசையுஞ் சுனையு மிதனயல் காமன் பியல்நகரும்
நசையுந்தி நீயெதிர் காண்பாய் முருகனை நாடியெட்டுத்
திசையுந் தொழும்பரங் குன்றே யெனுமுலைத் தேமொழியே. (404)

(கு-ரை) இசையும்-பொருந்தும். இயல்-பொருந்துகின்ற. நசை-விருப்பம். உந்தி-செலுத்தி.

தலைவி முன்செல்வோர் தம்மோடு தன்வரல் பாங்கியர்க்குணர்த்திவிடுத்தல்.

(இ-ள்) தலைவி தனக்கு முன்னே போகும் அந்தணரிடத்தில் தன் வரவைத் தன்றோழியருக்குச் சொல்லியனுப்புதல்.

நாட்டலர் விஞ்சி யெழுதலி ஞற்சிறு நாணுமின்றிக்
காட்டலர் பாலை கடந்துசென் றுள்தனைக் காமிக்குறும்
மாட்டல ரன்பின்வந் தாளென்றென் பாங்கியர் வாய்ப்புகல்வீர்
தேட்டலர் கந்தன் பரங்கிரிக் கேசெலுஞ் செல்வர்களே. (405)

(கு-ரை) அலர்-பழிமொழி விஞ்சி-அதிகப்பட்டு. அலர்-விரிந்த. பாலை-பாலைவனத்தை. காமிக்கும்-விரும்பும். உம்மாட்டு-உங்களிடத்து. அலர்-விரிந்த. வாய்-இடத்தில். தேட்டு-செல்வம். அலர்-மிகுந்த. (தாற்பரியம்)

முன்சென்றோர் பாங்கியர்க்குணர்த்தல்.

(இ-ள்) வெளி.

புதைய லெடுத்தவர் போலுடல் பூரித்தொர் பூவையுமன்
பதைபுகழ் மீளி யொருவனுஞ் சேய்மெய் வரைப்புறத்தி
லிதைய மகிழ்ச்சியி னெய்துகின் றாரவ ரிந்திரையுந்
ததைவன மாலியு மாஞ்சகி மாரெனுந் தையலரே. (406)

(கு-ரை) மன்பதை-மனிதர் கூட்டம். மீளி-தலைவன். மெய்வரை-பரங்கிரி. இந்திரையும் - இலக்குமியும். ததை - நெருங்கிய. வனமாலி-துளசிமாலை யணிந்த விஷ்ணுவும். ஆம்-போலும்.

பாங்கியர்கேட்டு நற்றாய்க்குணர்த்தல்.

(இ-ள்) வெளி.

விண்ணவர் தாழ்ந்தடி சூழுங் குகன்பா வெற்பிடைநம்
பெண்ணமு தங்கை வசங்கொண் டகன்ற பெருந்தகையா
மண்ண லவளொடு மீண்டாரென் றேநகண் டவர்புகன்றார்
கண்ணனை யாயின்றும் பெற்று யவளைக் களிப்புறவே. (407)

(கு-ரை) பெருந்தகை-பெரிய தகுதியுடைய. அண்ணல்-தலைவன். கண்ணனையாய்-கண்போன்றதாயே. களிப்பு-மகிழ்ச்சி.

நற்றாய் கேட்டவனுளங்கோள் வேலனை வினுதல்.

(இ-ள்) நற்றாய் தலைவிவரவையறிந்து தலைவனுட்குறிப் பின்னதென்று வெறியாட்டாளனைக் கேட்டறிதல். வெறியாட்டாளன்-சாமிகொண்டாடி.

வெறியாடல் செய்தருள் வேலோய் முருகன்மெய் வெற்பிலெனைப்
பிறியா டளைக்கொண் டகன்றனை யேமணம் பெட்பிற்செயக்
குறியா டவனென்று கொண்டால்நன் றாகுங் குணமுண்டுகொல்
மறியா டனந்தந் தருவேன் றெரிந்து வரைந்துரையே. (408)

(கு-ரை) வெறியாடல்-ஆட்டுப்பலிகொடுத்து ஆடுதலை. வேலோ-வெறியாட்டாளனே. பெட்பின்-ஆசையோடு. குறி-குறிக்கப்பட்ட. மறியாடு-குட்டி ஆடு. வரைந்து-ஆராய்ந்தளவிட்டு.

இவற்றுள் தலைவி சேணகன்றமை செவிலி தாய்க்குணர்த்தலும் தலைவன்றம்மூர் சார்ந்தமை சாற்றலுமாகிய விரண்டுந் தெளிதற்கும், தலைவி முன் செல்வோர் தம்மொடு தன்வரல் பாங்கியர்க் குணர்த்திவிடுத்தலும் பாங்கி நற்றாய்க் குணர்த்தலுமாகிய விரண்டும் மகிழ்ச்சிக்கும், நற்றாய் தலைவனுளங்கோள் வேலனை வினுதலொன்றும் வினுதற்கும், பாங்கியர்க்கு முன் சென்றோருரைத்தலாகிய வொன்றும் செப்பற்கு முரியன.

23-வது மீட்சி முற்றிற்று.

---

## இருபத்து நான்காவது—தன் மனை வரைதல்.

அஃதாவது உடன்போய் மீண்டுவந்த தலைவன் தலைவியைத் தன்னூர்க்குக் கூட்டிப்போய்த் தன் மனையின்கண் மணஞ்செய்து கொள்ளல். அது-வினுதல் செப்பல் மேவலென மூன்று வகைப்படும். நற்றாய் மணமயர் வேட்கையிற் செவிலியை வினுதல் முதல், பாங்கி தானது முன்னே சாற்றிய துரைத்தலீறாகிய ஐந்து விரிகளையுடையன. அவைவருமாறு:—

நற்றாய் மணனயர்வேட்கையிற் செவிலியை வினாதல்.

(இ-ள்) நற்றாய் தலைவிக்குத் தன் மனையில் விவாகஞ்செய்யும் விருப்பி ஞற் செவிலியைக் கேட்டல்.

விதிவழி யாலொன்று வந்தா லதனை விலக்குவர்யார்
மதிநுத லாடன் மனம்போன போக்கில் மணந்தவன்றன்
பதியென வேதம் பதியா முருகர் பரங்கிரியில்
முதிர்விதி யால்நன் மணஞ்செயச் செய்வதென் மொய்குழலே.(409)

(கு-ரை) விதி-ஊழ். மணந்தவன்-கலந்ததலைவன். பதி-கணவன். தம் பதி-தமது நகரம். விதி-விவாகஞ்செய்யுமுறை. செய-செய்வதற்கு. செய்வது-(நாம்) செய்யவேண்டுவது. என்-யாது. முருகர் தம்பதியாம் பரங்கிரியிலெனக் கூட்டுக.

செவிலிக்கிகுளை வரைந்தமை யுணர்த்தல்.

(இ-ள்) பாங்கி செவிலித் தாய்க்குத் தலைவன் றலைவியை மணந்தமை தாதாற்றெரிந்து கூறுதல்.

செய்பத் தருவ திருந்தச்செய் யென்றெளவை செப்பியவா
றையப் படுமிடை யாளைக்கொண் டேகிவந் தானபினுல்
உய்யத்தம் மில்லின் மணந்தாரென் றேயறிந் தோருரைத்தார்
வையத் தவர்தொழும் வேலோன் பரங்கிரி வாழன்னையே. (410)

(கு-ரை) தருவ-தக்ககாரியங்களை. கொண்டார்-தலைவர். தம்மில்-தமது வீட்டில்.

வரைந்தமை செவிலிநற்றாய்க் குணர்த்தல்.

(இ-ள்) வெளி.

முன்னே யுரைத்த கடுமொழி யால்மண முற்றிடநீ
பின்னே யிசைகிலை யென்றெண்ணி யோவவர் பேதைதனைத்
தன்னேரில் வாய்மணஞ் செய்தாரென் றூர்மிகத் தக்கவர்க
ளொன்னேர் திருவுருக் கந்தன் பரங்குன் றிருந்திருவே. (411)

(கு-ரை) முற்றிட-முடிக்க. தன்னேர்-தனக்கு நேர்ந்த. இல்வாய்-வீட்டி னிடத்து. எல்-சூரியனை. நேர்-ஒத்த.

தலைவன் பாங்கிக்கு யான்வரைந்தமை நுமர்க்கியம்பு சென்றேன்றல்.

(இ-ள்) விவாகமுடித்து மீண்டுவந்த தலைவன் தலைவியை விவாகஞ் செய்த செய்தியை யுன் சுற்றத்தார்க்குச் சொல்லென்று பாங்கியினிடத்துக் கூறுதல்.

ஊரலர் யாவு மொடுங்க முருகன்மெய் யோங்கலுற்ற
சாரலர் யாவருஞ் சான்ரு யிருக்கநற் றண்ணலர்த்தார்
காரலர் பூங்குழ லாடன் கழுத்திலென் கையணிந்த
தோரல ராறும் மவர்யார்க்கு நீசென் றுணர்த்துகவே. (412)

(கு-ரை) ஊரலர்-ஊரார்சொல்லும் பழிமொழி. சாரலர்-மலைப்பக்கத்தி லுள்ளார். சான்று-சாட்சி. தார்-மாலையை. காரலர்-கருநிறம் விரிந்த. ஓரலர்-உணராதவர்களாகிய. நம்மவர்-உங்கள் கூட்டத்தார். உணர்த்துக (நீ) தெரிவிப்பாயாக.

தானது முன்னே சாற்றிய துரைத்தல்.

(இ-ள்) பாங்கி நீர் விவாகஞ்செய்த செய்தியை நீர் சொல்லுதற்குமுன்னேதெரிந்து எங்கள் கூட்டத்தாருக்குச் சொல்லிவிட்டேனென்று தலைமகனுக்குக்கூறுதல்.

எற்குஞ் சொலாதெம் மிறைவியை நீர்மணந் திட்டசெய்தி
பொற்குன் றனைய புயத்தீர் குகன்மெய்ப் பொருப்பிலுள்ளார்
கற்குங் கதையெனச் சொற்றிடக் கேட்டுக் கவலைகொண்டு
நிற்குந் தமர்க்கும் பிறர்க்குஞ்சொன் னேன்முன்ன நேர்படவே ()

(கு-ரை) எற்கும்-எனக்கும். பொற்குன்று-மகாமேருமலை. சொற்றிட-சொல்ல. தமர்க்கும்-சுற்றத்தார்க்கும். முன்னம்-(நீர்)சொல்லுமுன்னர். நேர்பட-ஒழுங்காக.

இவற்றுள்—நற்றாய் மணனயர் வேட்கையிற் செவிலியை வினுதலொன்றும் வினுதற்கும், வரைந்தமை பாங்கி செவிலிக்குணர்த்தலும் வரைந்தமை செவிலி நற்றாய்க்குணர்த்தலும் தானதுமுன்னே சாற்றியதுரைத்தலுமாகிய மூன்றும் செப்பற்கும், தலைவன் பாங்கிக்கு யான் வரைந்தமை நுமர்க்கியம்பு சென்றென்றலொன்றும் மேவற்கு முரியன.

இதுவரை ஐம்பத்துநான்கா நாள் நிகழ்ச்சியென்க.

24-வது தன் மனை வரைதல் முற்றிற்று!

## இருபத்தைந்தாவது—உடன்போக்கிடையீடு.

அஃதாவது நம்மனையில் வரைந்துகொள்ளாது தன்னூரில் வரைந்தானென்று தலைவி சுற்றத்தார் வெறுப்படைதலால் தலைவன் தலைவியை யுடன்கொண்டுபோம்போது தலைவி சுற்றத்தாராலிடையீடுபட்டு மீண்டு தலைவிவரு

தல். அதுபோக்கறிவுறுத்தல் வரவறிவுறுத்தல் நீக்கம் இரக்கமொடுமீட்சியென நான்கு வகைப்படும். அவை நீங்குங் கிழத்தி பாங்கியர் தமக்குத் தன் செலவுணர்த்தி விடுத்தல் முதல் தலைமகளவன்புற நோக்கிக் கவன்றாற்றலீறாகிய ஆறு விரிகளையுடையன. அவைவருமாறு:—

நீங்குங்கிழத்தி பாங்கியர் தமக்குத் தன் செலவுணர்த்திவிடுத்தல்.

(இ-ள்) ஐம்பத்தைந்தாநாள் தன்னூரைவிட்டு நீங்குந் தலைவி எதிர்வருவாரோடு, தலைவனுடன் செல்லுந் தன் செலவைப் பாங்கியர்க்குச் சொல்லியனுப்புதல்.

அழகிய தாரண்ணல் பின்னேமுன் போலன்பி னொலெடுத்துப்
பழகிய பாலையில் யான்போகுஞ் செய்தியென் பாங்கியர்க்குக்
குழகன் பரங்கிரி யூர்சென்ற பின்னர்முக் கோலந்தணீர்
கழல்வருந் தாவிதஞ் சென்றுசொல் வீர்நுங் கருணைவைத்தே. (414)

(கு-ரை) பாலையில்-பாலைவனத்தில். குழகன்-முருகக்கடவுள். கோல்-திரிதண்டமேந்திய. அந்தணர்-அழகிய குளிர்ந்த குணமுடைய முனிவர்களே. முன்போல் யான் போகுஞ்செய்தியெனக் கூட்டுக. அன்பினொலெடுத்துச் சொல்வீரெனக்கூட்டுக.

தலைமகள் தன்செல வின்றாட் குணர்த்திவிடுத்தல்.

(இ-ள்) தலைவி தலைவனுடன் போதலைத் தன்றாய்க்குச் சொல்லியனுப்புதல்.

செய்யிரும் பூம்பொழில் சூழுங் குகன்மெய்ச் சிலம்பிலெனை
யையிரு மாதம் வயிற்றிற் சுமந்தரு ளன்னையரை
நையிருங் காதற் புதல்விதன் காதல னன்குவப்ப
மையிருங் கானம் புகுந்தாளென் றோதுமின் மாதவரே. (415)

(கு-ரை) செய்-வயல். இரும்-பெரிய. நையிர்-வருந்தாதிருங்கள். காதலன்-கணவன். மை-கரிய. இரும்-பெரிய.

நற்றாய்க் கந்தணர்மொழிதல்.

(இ-ள்) வெளி.

மின்னுரு மூவிலை வேலோன் குமரன்மெய் வெற்பனையே
கொன்னுருங் கானிடை நின்மக டாளொரு கொண்கனொடு
நன்னா ருடன்செலக் கண்டோமின் னூர்க்குநன் னாயகனே
யின்னா ருயிரன்றி வேறொன்றுண் டோகவ லேலினியே. (416)

(கு-ரை) மூவிலைவேல்-சூலம். குமரன்-மைந்தனுகிய முருகக்கடவுள். கோள்-பயம். ஆரும்-நிறைந்த. கொண்கன்-கணவன். நார்-அன்பு. கவலேல்-வருந்தாதே.

## தமர் பின்சேறலைத் தலைவிகண்டு தலைவற்குணர்த்தல்.

(இ-ள்) சுற்றத்தார் பின் வருதலைத் தலைவி பார்த்துத் தலைவனுக்கறிவித்தல்.

கொடுத்தற் குரியர் கொடாம லொருபெண்ணைக் கொண்டுபிற
ரெடுத்தப் புறஞ்செல வொட்டாத வன்மை யிசையுமெமர்
அடுத்தப்பு மாரி பொழிந்துநம் மோடம ராற்றவந்தார்
விடுத்தற்கு மெண்ணங்கொள் வீரோ முருகன்மெய் வெற்பிடத்தே.()

(கு-ரை) எமர்-எங்கள் சாதியார். அப்புமாரி-பாணவருஷம். அமராற்ற-யுத்தஞ்செய்ய.

## தலைமகளைத்தலைவன் விடுத்தல்.

(இ-ள்) வெளி.

தேவ ரசுரர் இரண்டுவர் தானுஞ் சிறுகணையா
லோவ விரட்டும் வலியுடை யேற்கிவ ரோர்பொருளோ
பூவர் பொதும்பர் புடைசூழ் குகன்மெய்ப் பொருப்பணையாய்
நீவர லொன்றுக்கு மஞ்சேலெற் காகவிந் நீணெறிக்கே. (418)

(கு-ரை) ஓவ-நீங்க. பூவர்பொதும்பர்-பூக்களையுடைய சோலை. புடை-பக்கம். வரல்-(என்கூட)வராதே. அஞ்சேல்-பயப்படாதே. நெறிக்கே-வழியினிடத்து.

## தமருடன் செல்பவ ளவன் புறநோக்கிக் கவன்றரற்றல்.

(இ-ள்) சுற்றத்தாருடன் செல்லப்பட்ட தலைவி தலைவன் புறங்காட்டிப் போதலை நோக்கிக் கவலைப்பட்டு வருந்துதல்.

எங்தேரி லேறுமின் பத்தை மறந்திங் கெனையகற்றித்
தங்தேரி லேறி விரைந்துசென் றுரெந் தமர்க்கஞ்சியோ
பங்தேர் முலைவள்ளிக் கன்பார் பரங்கிரி பற்றலர்போல்
கொங்தே ரழிந்திங் கிருத்தலெவ் வாறவர் நோக்கமென்னே. (419)

(கு-ரை) தேர்-(அல்குலாகிய) தேர். பந்து ஏர்-பந்தினழகுடைய. பற்றலர்-பகைவர். ஏர்-அழகு. நோக்கம்-கருத்து. என்-யாது.

இவற்றுள்-நீங்குங்கிழத்தி பாங்கியர் தமக்குத்தன் செலவுணர்த்திவிடுத்தலும் தன்செலவின்றாட்குணர்த்திவிடுத்தலும் நன்றாட்கந்தணர் மொழிதலுமாகிய மூன்றும் போக்கறிவுறுத்தற்கும், நன்றுளறத்தொடு நிற்றலிற்றமர்பின் சேறலைத்தலைவிகண்டு தலைவற்குணர்த்தலொன்றும் வரவறிவுறுத்தற்கும், தலைமகளைத் தலைமகன் விடுத்தலொன்றும் நீங்கற்கும், தமருடன் செல்பவளவன் புறநோக்கிக்கவன்றாற்றலொன்றும் இரக்கமொடு மீட்சிக்கு முரியன.

இதுவரையும் ஐம்பத்தைந்தா நாள் நிகழ்ச்சியென்க.

25-வது உடன்போக்கிடையீடு முற்றிற்று இடையீடு-நடை.

---

## இருபத்தாறுவது—வரைவு.

அஃதாவது ஐம்பத்தாறுநாள் தலைவன்மீண்டு தலைவியில்லில் வருகின்ற இடத்துத்தலைவி சுற்றத்தாரெதிர்கொண்டு போயழைத்துவந்த பின்னர் உலகவியற்கையின்படி பலவிதமாக அரிய ஆபரணமுதலிய வேண்டுவனகொடுத்து அந்தணரையுஞ் சான்றோரையு முன்னிட்டு மணச்சடங்குடனே விவாகமுடித்தல். இதற்கு வகையும்விரியுமில்லை.

### அந்தணர்சான்றோர் முன்னிட்டருங்கலந்தந்து வரைதல்.

(இ-ள்) முனிவரையும் பெரியோரையு முன்வைத்துக்கொண்டு தலைவன் அரிய ஆபரணங்களைத் தலைவிக்குக்கொடுத்து விவாகஞ்செய்தல்.

மருங்கல மந்து வருந்துந் தனத்தெழின் மாதையினி
யருங்கலந் தந்தந் தணர்சான் றவர்முன் னனல்வளர்த்தே
யொருங்கல மாக மணந்தால் முருகன்மெய் யோங்கலன்றான்
வருங்க லகமிலை யென்றேயவ் வாறு மணந்தனனே. (420)

(கு-ரை) மருங்கு-இடை. அலமந்து-சுழன்று. கலம்-ஆபரணம். அந்தணர்-அழகிய குளிர்ந்தகுணமுடையமுனிவர். சான்றவர்-கல்வியறிவாற் பெரியவர். அனல்-யாகாக்கினி. ஒருங்கு-முழுவதும். அலமாக-அமைவாக. மணந்தனன்-விவாகஞ்செய்தான்.

### இதுவுமது.

தன்றாதை சுற்றந்தன் றேரை வளைத்துத் தடுத்ததற்குக்
கொன்றா லவளுள்ள நோமென்று நெஞ்சிற் குறித்தகன்ற
மன்றா ரணிவழக் கப்படி யேமின் வதுவைசெய்து
நன்றா கியவின்பந் துய்த்தான் குகன்மெய்ந் நகத்திடத்தே. (421)

(கு-ரை) மன்-தலைவன். மின்-தலைவியை. துய்த்தான்-அநுபவித்தான். மெய்ந்நகம்-பரங்கிரி.

இங்ஙனம் ஒருதலைவனுக்கு ஒருகால் மணமுடிப்பதன்றிப் பலகால் மண முடிந்ததாகக்கூறுதல் உலகின்கண் வழங்குவதன்றே,இவ்வாறு கூறியதென்ன வென்றால் உடன்போய்த் தன்னூரின்கண்ணே வரைதலும் மீண்டுவந்து தன் மனையின்கண்ணே வரைதலும் அந்தணர் சான்றோரை முன்னிட்டுத் தாய் தமரறிய மனச்சடங்கின் முறையே முடியாமையால் அவையிரண்டு மணமாகா. ஆதலால் அந்தணர் சான்றோரை முன்னிட்டு விதிப்படி சடங்குசெய்துமுடிப் பதே மணமாமென்க. சடங்கு-கிரியை.

இதுவரை ஐம்பத்தாறு நாளெனக்கணக்கிட்டதுபோல மேல் நிகழ்ச்சி கணக்கிடமுடியாதென அறிந்துகொள்க.

26-வது வரைவு முற்றிற்று.

இரண்டாவது வரைவியல் முற்றிற்று.

---

மூன்றாவது—கற்பியல்.

கற்பென்பது-கற்பிக்கப்படுவது. கற்பித்தலாவதென்னவென்றால் தலை விக்கு அறிவும் ஆசாரமும் தலைவனாலும் தாய்தந்தையராலும் செவிலியாலும் அந்தணர் முதலிய சான்றோராலும் போதித்தல். ஆதலாலிவ்வியல் கற்பிய லெனப் பெயராயிற்று.

ஆனால் இவ்வாறு களவின்கணொழுகல் உலகின்கணில்லையென்றாற்சொல் வோம். அறிவுடையோர் மக்கட்கு மணஞ்செய்யுங்கால் இத்தன்மையானை யுனக்கு மணஞ்செய்ய நினைத்தோம். இது உனக்குச்சம்மதமோ சம்மதமில்லை யோவெனக்கேட்டு அவரவர் சொற்படிசெய்வர். அவர் சொல்லாக்கால் குறிப் பாலுணர்ந்து செய்வரெனக்கொள்க. இவ்விதம் இருவருள்ளமும் ஒத்தவழி மணஞ்செய்தலியல்பாயிற்று. ஆகவே, மணஞ்செய்வோரிருவருக்கும் உள்ளப் புணர்ச்சி நிகழ்ந்ததாம், அதுநிகழ்ந்தபோதே மெய்யுறுபுணர்ச்சி நிகழ்ந்ததா யிற்று. இதனை "உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக் கள்ளத்தாற் கள்வே மெனல்" என்னுந்திருக்குறட்கு ஆசிரியர் பரிமேலழகரெழுதிய உரை யில் நினைத்தலுஞ்செய்தலோடொக்கு மெனக் கூறியதனாலுணர்க. எனவே, உலகின்கண் நிகழுங்கற்பொழுக்கமெல்லாம் கந்தருவமணத்தின்வழிக்கற்பென் றேகொள்க. இக்கற்பு மகிழ்வும் ஊடலும் ஊடலுணர்த்தலும் பிரிவும் பிற வும் பொருந்தியதாய் இல்வாழ்க்கை பரத்தையிற்பிரிவு ஓதற்பிரிவு காதற்பிரிவு தூதிற்பிரிவு துணைவயிற்பிரிவு பொருள்வயிற்பிரிவு என எழுபாகுபாடுடை யது. அவற்றுள்.

## இருபத்தேழாவது—இல்வாழ்க்கை.

அஃதாவது தலைவனுந்தலைவியும் இல்லின்கண்ணே வாழுதலைக்கூறுதல். அது கிழவோன் மகிழ்ச்சி கிழத்தி மகிழ்ச்சி பாங்கிமகிழ்ச்சி செவிலிமகிழ்ச்சியென நான்குவகைப்படும், அவை தலைவன் தலைவிமுன் பாங்கியைப்புகழ்தல் முதல் அன்னவர் காதலறிவித்தலீறாகிய பத்துவிரிகளையுடையன. அவைவருமாறு:—

### தலைவன் தலைவிமுன் பாங்கியைப் புகழ்தல்.

(இ-ள்) வெளி.

முனிவரு மன்னரு மூன்னுவ பொன்னின் முடியுமெனுந்
தனியுரை பொய்ப்பவென் பொன்னூற் பெருவிருந்தத் தையலையுன்
பனிமொழி யாற்கொடு போய்ப்பின் கொணர்ந்திப் பதவிபெற்றேன்
வனிதை யுனைநிகர் வார்யார் குகன்மெய் வரைவயினே. (422)

(கு-ரை) மூன்னுவ-நினைத்த காரியங்கள். தனி-ஒப்பற்ற. பொய்ப்ப-பொய்த்துப்போக. என்பொன்-யான்கொடுத்த திரவியம். பனி-குளிர்ந்த. வனிதை-பாங்கியே. வயின்-இடத்து.

### தலைவனைப்பாங்கி வாழ்த்தல்.

(இ-ள்) வெளி.

மெய்ச்சகி யென்றெனைக் கொண்டாட்டும் நிற்குமென் மேலும்வரும்
அச்சமி லாமற் செயுமென் கடமையை யாற்றிநின்றேன்
இச்சக மேலதன் பேறென நீவி ரிலக்குமிமாற்
குச்சம மாவென்றும் வாழ்வீர் குகன்பரங் குன்றிடத்தே. (423)

(கு-ரை) பேறென-பிரயோசனமாக. நீவிர்-நீங்கள்.

### பாங்கி தலைவியை வரையுநாளளவும் வருந்தாதிருந்தமை யுரையாயென்றல்.

(இ-ள்) மணஞ்செய்யும் வரையுங் காமத்தை யெவ்வாறு சகித்திருந்தாய் அதைச்சொல்லென்று தலைவியைப் பாங்கிகேட்டல்.

இம்மி யளவு பிரியிற் றுயா மெனைத்துமெய்தி
யிம்மி யிரங்குவை வேலேந்து மெந்தைமெய் வெற்பனையாய்
அம்மியி லுன்பத மேற்றும் வரையு மங்கனன்னூர்
தம்மியல் பாம்பிரி வெவ்வனந் தாங்கிச் சகித்தனையே. (424)

(கு-ரை) எனைத்தும்-எவ்வளவும். விம்மி-பொருமி. இரங்குவை-வருந்துவாய். இயல்பு-சுபாவம். எங்ஙனம்-எவ்விதம்.

### பெருமகளுரைத்தல்.

(இ-ள்) தலைவிதான் வருந்தாதிருந்த காரணம் பாங்கிக்குக்கூறுதல்.

அஞ்சல ரால்வருந் துன்ப மனைத்து மயலவர்வாய்
விஞ்சலர் சூழ்ந்து விரட்டப் படுதலின் மின்னனையார்
துஞ்சல ராவ ரெனலறி யாய்கொல் தொழுதவரை
யெஞ்சல ராக வருளுங் குகன்மெய்வெற் பேந்திழையே. (425)

(கு-ரை) அஞ்சலர் - ஐந்து புட்பபாணம். விஞ்சு-அதிகப்படும். அலர்-பழிச்சொல. துஞ்சலர்-நிலையில்லாதவர். எஞ்சலர்-குறையாதவர்.

### தலைவனைப்பாங்கி வரையுநாளளவு நிலைபெறவாற்றிய நிலைமை வினாதல்.

(இ-ள்) தலைவியைத் தலைவன் விவாகஞ்செய்யும்வரை யுயிர்தரிக்கச் செய்த நிலைமையை அத்தலைவனிடத்துப் பாங்கிகேட்டல்.

நீங்கிற் றெறுங்கனல் பெற்றுள் கழுத்து நிறையணிநாண்
டாங்கிப் பயிலப் புனையிது காறுந் தளர்ந்துடலம்
ஏங்கிக் குழைந்திட விலலாமற் காத்தனை யெம்மருந்தாற்
கோங்கிற் பொலிமுலைக் குஞ்சரி பாகன்மெய்க் குன்றிடத்தே (426)

(கு-ரை) தெறும்-வருத்தும். கனல் - காமாக்கினி. நாண்-தாலிச்சரடு. காறும் - வரையும். கோங்கின்-கோங்கரும்பைப்போல. குஞ்சரி-தெய்வயானையம்மை.

### மன்றன்மனை வருசெவிலிக்குகிளை யன்புறவுணர்த்தல்.

(இ-ள்) கலியாண வீட்டுக்குவந்த செவிலிக்குப் பாங்கி இருவருடைய அன்பும் ஒத்திருப்பதைப் பொருந்தக்கூறல்.

யோகியர் போல வொருவ ருடலி லொருவர்புகுந்
தாகிய அன்பு முயிருமொன் றாகி யநுபவித்துப்
பாகியல் சொல்லியு மண்ணலு மின்பம் பயின்றனராற்
போகி யருள்மகள் வேட்டோ னமர்மெய்ப் பொருப்பனையே. (427)

(கு-ரை) பாகு-சருக்கரைப்பாகுபோல.சொல்லி-சொல்லையுடையதலைவி. பயின்றனர்-பழகினர். போகி-இந்திரன்.வேட்டோன்-விவாகஞ்செய்த குமாரக்கடவுள்.

இல்வாழ்க்கை நன்றென்று பாங்கி செவிலிக்குணர்த்தல்.

(இ-ள்) தோழி தலைவியினது இல்லற வாழ்க்கை நல்லதென்று செவிலித்தாய்க்குச்சொல்லுதல்.

புன்புலத் தார்க்கறி வொண்ணாக் குகன்மெய்ப் பொருப்பனையாள்
தென்புலத் தார்முதல் நால்வர்க்குஞ் செய்வன செய்துவரும்
அன்புலத் தாற்செய் புயத்தா னறிந்துள் ளகமகிழ்ந்தான்
பொன்புலத் தாரும் புகழில் லறமகிழ் பூத்ததுவே. (428)

(கு-ரை) புன்புலம் - அற்பஅறிவு. நால்வர் - தெய்வம் விருந்து சுற்றம் தான். அன்பு-அன்பினை. உலம்-திரண்டகல். அன்பினையறிந்தெனக் கூட்டுக.

மணமனைச்சென்றுவந்த செவிலி பொற்றொடி கற்பியல் நற்றாய்க்குணர்த்தல்.

(இ-ள்) விவாகஞ்செய்யப்பட்ட வீட்டுக்குப்போய்ப் பார்த்துவந்த செவிலித்தாய் தலைவியின் கற்புத்தன்மையை நற்றாய்க்குச் சொல்லுதல்.

பொற்பிற் சிறத்தல் புகழன்று மாதரப் பொற்பினுயர்
கற்பிற் சிறத்தல் புகழாம்நின் கன்னியக் கற்பிற்சிறந்
தற்பிற் சிறந்த கணவற் கடங்கு மமைதிபெற்றாள்
வெற்பிற் சிறந்த பரங்கிரி வேளருள் மேவணங்கே. (429)

(கு-ரை) பொற்பின் - அழகால். அற்பின்-அன்பால். அமைதி-அடக்கமுடைமை. வெற்பின்-மலைகளுக்குள். வேள்-குமாரக்கடவுள்.

நன்மனை வாழ்க்கைத்தன்மை யுணர்த்தல்.

(இ-ள்) செவிலித்தாய் நற்றாய்க்குத் தலைவியினது நல்ல மனைவாழ்க்கைத் தன்மையைச் சொல்லுதல்.

எடுக்கும் இணற்றற லூறிச் சாந்திட லென்னவென்றுங்
கொடுக்குந் தொறும்பல செல்வமு மோங்கிக் குலக்கவிஞ
ரடுக்குந் தொறும்புகழ் நன்மனை வாழ்க்கை யமைந்திருந்தாள்
மடுக்குங் குமான் பரங்கிரி போலுநின் மாமகளே. (430)

(கு-ரை) அறல்-நீர். மடுக்கும்-(அன்பொடு)கலக்கும்.

அன்னவர் காதலறிவித்தல்.

(இ-ள்) அத்தன்மையுடைய தலைவன் தலைவியரிருவர் ஆசையினையும் செவிலி நற்றாய்க்குக் கூறுதல்.

தெய்வந் தொழாமற் றனையே தொழுதெழச் சேயிழைக்குக்
கைவந்த பேரன்பு காட்டினன் காதலன் காதலியும்
ஐவந்த தேர்புறம் போகவொட் டாவன் பவற்குச்செய்தாள்
சைவர் தழைப்பு முருகன் பரங்கிரித் தாழ்குழலே. (431)

(கு-ரை) சேயிழை-சிவந்த ஆபரணங்களையணிந்த தலைவி. கைவந்த-தேர்ச்சியடைந்த. காதலன்-தலைவன். காதலி-தலைவி. ஐ- அழகு. புறம்-வெளியே. அவற்கு-அத்தலைவனுக்கு.

இவற்றுள் தலைவன் றலைவி முன் பாங்கியைப் புகழ்தலொன்றும் கிழவோன் மகிழ்ச்சிக்கும், தலைவனைப் பாங்கி வாழ்த்தல் முதல் பாங்கி இல்வாழ்க்கை நன்றென்று செவிலிக்குணர்த்தலீறாகிய வாறனுள் பெருமகளுரைத்தலொன்றும் கிழத்தி மகிழ்ச்சிக்கும், அல்லன ஐந்தும் பாங்கி மகிழ்ச்சிக்கும், மணமனைச்சென்று வந்த செவிலி பொற்றொடி கற்பியல் நற்றாய்க் குணர்த்தலாதிய மூன்றும் செவிலி மகிழ்ச்சிக்கு முரியன.

27-இல்வாழ்க்கை முற்றிற்று.

---

## இருபத்தெட்டாவது—பரத்தையிற் பிரிவு.

அஃதாவது தலைவன் பரத்தைமேற் காதலாய்த் தலைவியைப் பிரிந்து பரத்தையர் சேரிக்குப்போதல். அது, வாயில் வேண்டல் வாயில் மறுத்தல் வாயில் நேர்வித்தல் வாயில் நேர்தல் என நால்வகைப்படும். அவை-காதலன் பிரிவுழிக் கண்டோர் புலவிக் கேதுவிதா மவ்விறைவிக்கென்றல் முதல் புணர்ச்சியின் மகிழ்தலீறாகிய பதின்மூன்றும் உணர்த்தவுணரு மூடலெனவும், வெள்ளணியணிந்து விடுத்துழிப் புள்ளணிமாலை வேலன்னைல் வாயில் வேண்டல் முதல் இணர்த்தார் மார்பனை யிகழ்தலும் பிறவுமாகிய அனைத்தும் உணர்த்தவுணரா வூடலெனவு மிருவகைப்படும். அவைவருமாறு:—

### காதலன் பிரிவுழிக்கண்டோர் புலவிக்கேதுவி தாமவ்விறைவிக் கென்றல்.

(இ-ள்) தலைவன் தலைவியைப் பிரிந்து பரத்தையர் சேரிக்குப் போதலைப் பார்த்தோர் இவன் போதல் தலைவியூடுதலுக்குக் காரணமென்று கூறுதல்.

செய்யன் கரியன் மகன்மரு மானெனுஞ் சேய்மெய்வெற்பிற்
றுய்ய வமுதுண் டிருப்பார் பிறரெச்சிற் சோறருந்தப்
பைய வகன்ற பரிசெனத் தன்மணப் பாவையைவிட்
டையன் பரத்தையர் பாற்போத லூடலுக் காம்விதையே. (432)

(கு-ரை) செய்யன்-சிவபிரான். கரியன்-திருமால். மருமான்-மருமகன். மெய்வெற்பு-பரங்கிரி. அருந்த-உண்ண. பரிசென-தன்மையைப்போல. மணப்பூவை-விவாகஞ்செய்யப்பட்ட தலைவி. ஐயன்-தலைவன்.

## தனித்துழியிறைவி துனித்தழுதிரங்கல்.

(இ-ள்) தலைவி தலைவனைப்பிரிந்து தனித்த இடத்துத் துன்பமுற்று அழுது வருந்தல்.

சிறைகண்டு நிற்கும் புனல்சூழ் பரங்கிரிச் சேந்தனருள்
முறைகண்டு செல்லுந் தலைவரென் பால்வந்து முந்தியவென்
குறைகண்டு சேரிப் பரத்தையர் பாலன்பு கொண்டுசென்றார்
தறைகண்டு கொள்ளில் மதிக்குங்கொ லோவவர் தம்மைநெஞ்சே. ()

(கு-ரை) சிறை-அணை. சேந்தன் - முருகக்கடவுள். முந்திய-முற்பட்ட. என்-யாது. தறை-உலகத்தார்.

## ஈங்கிதுவென்னெனப் பாங்கிவினவுதல்.

(இ-ள்) பாங்கி தலைவியைநோக்கி நீ யழுதுகொண்டிருத்தற்குக் காரணமென்னவென்று கேட்டல்.

இணைபிரி யாமல் மணமக னோடிருந் தின்பெய்துநீ
பிணைவிழி நீர்பெய்யப் பூங்குழல் சோரப் பெரிதுதுன்பம்
அணைவுறு மாறென் னுரையாய் குகன்மெய் யசலத்தினிற்
றுணையிலர் போலத் தளர்ந்தாய் பசும்பொற் சுடர்த்தொடியே.(434)

(கு-ரை) பிணை-மான்போன்ற அணைவுறுமாறு-பொருந்தும்விதம்.

## இறைமகன் புறத்தொழுக் கிறைமகளுணர்த்தல்.

(இ-ள்) தலைவன் தன்னிடத்தொழுகு மொழுக்கமின்றிப் பரத்தையரிடத்தொழுகுகின்றானென்று தலைவி பாங்கிக்குக் கூறுதல். புறத்தொழுக்கென்பதற்குப்பொருள்-பரத்தையரிடத் தொழுகுமொழுக்கமென்று பொருள் கொண்டதென்னவென்றால், வடநூலார் புறமுறைப்பாமென்று கூறுவர். ஆதலால், பரத்தையரென்னுஞ் சொற்குப் புறமுடையவரென்னும் பொருள் கூறி நின்றவாறுணர்க. புறமுடையவரென்றதென்னவென்றால், இவரின்பமின்பமல்லவென்று தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார் வரைவின் மகளிரென்னு மதிகாரத்தில் இன்பத்திற்குப் புற மிவரின்பமென்று கூறியவாற்றானுணர்க. "இருமனப் பெண்டிரும்" என்னுந் திருக்குறளானு முணர்க.

தேரோடும் வீதியிற் சங்க முலாவுந் திருப்பரங்குன்
றாரோ டுறையு முருகனுக் காட்பட்ட வொண்டலைவர்
வேரோ டுயிரைப் பறிக்கும் பரத்தையர் வீடுசென்றால்
ஆரோடு சொல்லித் தடுத்தல்லல் போக்குவ னாணங்கே. (435)

(கு-ரை) சங்கம்-சங்குகள். ஆட்பட்ட-அடிமைப்பட்ட. ஒண் தலைவர்-ஒழுங்குள்ள தலைவர். அல்லல்-துன்பம்.

### தலைவியைப் பாங்கி கழறல்.

(இ-ள்) தலைவிக்குப் பாங்கி புத்தி கூறுதல்.

கற்றான் றேறுநின் கணவ ரேதோவொரு காரணத்தாற்
பொற்றார் புனைநினை விட்டுப் புறஞ்சென்று போயினரேற்
பற்றா ரெனநின்று தூறுவ ரோகுலப் பாவைநல்லார்
செற்றார் புரஞ்செற்ற வன்பெறு வேள்மெய்ச் சிலம்பணங்கே. (436)

(கு-ரை) பொற்றார்-பொன்னாற்செய்த மாலையாகியதாலி. பற்றாரென-அன்பில்லாதவரைப்போல. குலப்பாவையர்-நல்லகுலத்திற் பிறந்த பெண்கள். தூறுவரோ-வசைசொல்லுவரோ. செற்றார்-பகைவர். புரம்-திரிபுரத்தை. செற்றவன்-அழித்தசிவபிரான்.

### தலைவி செவ்வணியணிந்து சேடியைவிடுப்புழி யவ்வணியுழையர் கண்டழுங்கிக் கூறல்.

(இ-ள்) தலைவி பூத்தகாலை மூன்றுநாட்போக்கி நாலாநாள் நீராடியபின் இவற்றி னறிகுறியாகச் செம்பூவும் செவ்வாடையும் செஞ்சாந்தும்புனைவித்துத் தோழியைப் பரத்தையினிடத்திருக்கும் தலைவனிடத்துக் கனுப்பும்போது அவ்வலங்காரத்தைக்கண்ட பக்கத்திலுள்ளார் வருந்திச்சொல்லுதல். அறிகுறி-அடையாளம்.

செய்ய துகிலு மணியு மலருந்தன் சேடிக்கிட்டு
மையல் பொறுக்க முடியாமற் சேரி மகிழ்நனிடம்
பைய நடந்துசெல் லென்று ளவள்படும் பாடெனைத்தோ
துய்யவொள் வேலன் பரங்கிரி வாய்ப்பசுந் தோகையரே. (437)

(கு-ரை) செய்ய-சிவந்த. அணியும்-ஆபரணமும். சேடி-தோழி. சேரி-பரத்தையர்தெரு. மகிழ்நன்-கணவன். எனைத்தோ-எவ்வளவோ.

## பரத்தையர் கண்டுபழித்தல்.

(இ-ள்) சேரியிற் போகிய தோழியின் செவ்வணியைப் பரத்தையர் பார்த்து நிந்தித்துக் கூறுதல்.

நம்பினுஞ் சாலம் படித்தனள் போலுமந் நங்கைசொல்லாற்
செம்பி னவயவங் கொண்டுவந் தாலெனச் சேடிவந்தாள்
விம்பின் கொங்கை மடவீர்பொய் கற்றிட வேண்டுமென்றால்
வம்பி னவளிடஞ் செல்வோங் குகன்மெய் வரைப்புறத்தே. (438)

(கு-ரை) சாலம்-நடிப்பு. செம்பின்-சிவந்தமின்னல். வந்தாலென-வந்தாற்போல. வம்பின்-வாருங்கள். மெய்வரை-பரங்கிரி.

## பரத்தையருலகியல் நோக்கிவிடுத்தலிற் றலைமகன் வரவுகண்டு வாயில்கண்மொழிதல்.

(இ-ள்) தலைவி பூத்து நீராடிய நாளில பரத்தையர் தங்கள் சேரியில் தலைவனிருத்தல் உலக முறைமைக்கு இயலாதென்று அவனை யனுப்புதலை நோக்கித் தாதிகள் பாங்கிக்குச் சொல்லுதல். உலக முறைமைக்கு இயலாமை "பூத்த காலைப் புனையிழை மனைவியை, நீரா டியபின் னீரா று நாளுங்,கருவயிற் றுறூஉங் கால மாதலிற், பிரியப்பெறா அன் பரத்தையிற் பிரிவோன்" என்பதனுமுணர்க. (அகப்பொருள்-அகத்திணையியல் 91.)

பரத்தைய ரோடு பழகினர் வீடுறற் பாலரெனுஞ்
சிரத்தை யுணர்மின் கவலீர் தலைவர் திரும்பினும்பால்
அரத்தை யனைய விழியீர்வந் தார்நுமர்க் காயவெல்லா
வரத்தையு நல்கும் பரங்கிரி வேளருள் வாய்த்ததுவே. (439)

(கு-ரை) பரத்தையர்-வேசைகள், மெய்யுடைய குருக்கள். பழகினர்-பழகியவர். வீடுறற்பாலர்-வீட்டுக்கு வந்துசேரும் பகுப்புடையவர், மோக்ஷ வீட்டுக்குவந்துசேரும்பகுப்புடையவர். சிரத்தை-ஒழுங்கை, நீதியை. அதாவது மேலேகூறியிருக்கிற பூத்தகாலை என்னுஞ்சூத்திரத்திற்கூறியவிதி. கவலீர்-துன்பமடையாதேயுங்கள்.

## தலைமகன் வரவுணர் பாங்கி தலைவிக்குணர்த்தல்.

(இ-ள்) தலைவன் வருதலையறிந்த பாங்கி தலைவனை யெதிர்கொள்ளத் தலைவிக்குச் சொல்லுதல்.

இருதுநாற் றான முடிந்தபின் ஞம்பன் னிருதினமுங்
கருவயிற் றெய்துறுங் காலமென் றோர்நற் கணவர்வந்தார்
பொருதுநற் கேள்விப் புறம்போங் கடைக்கட்செம் பொற்றொடியே
கருதுமெய்க் கேள்வியர் காணுங் குமரன்மெய்க் கற்புறத்தே. (440)

(கு-ரை) இருது-பெண்கள்பூப்பு. தானம்-நீராடல். கரு-கருப்பம். ஓர்-உணர்ந்த. கேள்விப்புறம்-காதின்வெளிபக்கம். கட்கடை-கடைக்கண், இது மொழிமாற்று. கேள்வியர்-கல்வியறிவுடையர்.

முதிராவிளமுலை யெதிர்கொண்டுபணிதல்.

(இ-ள்) தலைவி தலைவனை யெதிர்சென்று வணங்குதல்.

கரும்பி னிரதம் பிரிப்பவர் போற்கணி கைஇயரென்பால்
விரும்பி யுறையு நுமைப்பிரித் தின்றென்கண் விட்டநன்றி
வரும்பி றவிதொறு நும்மையெப் பாக மறந்தறியேன்
அரும்பியல் பூங்கடம் பாரங்கொள் வேள்மெய் யசலத்தினே. (441)

(கு-ரை) இரதம்-தித்திப்புரசம். கணிகையர்-வேசையர். ஆரம்-மாலை. மெய்யசலத்தின்-பரங்கிரியினிடத்து. என்பால்விட்ட நன்றியெனக்கூட்டுக.

புணர்ச்சியின் மகிழ்தல்.

(இ-ள்) வெளி.

தொகுத்தினி மைப்பொரு ளெல்லாமும் வைத்துச் சுவைபெருகி
மிகுத்த தெதுவெனில் நின்னித ழென்பனம் மெல்லிதழ்ச்சீர்
வகுத்துரை யென்னிற் றெவிட்டாப் பெருங்குணம் வாய்ந்ததென்பன்
புகுத்தரு ளென்னெஞ்சில் வைக்குங் குகன்மெய்ப் பொருட்டணங்கே.

(கு-ரை) தொகுத்து-ஒன்றுசேர்த்து. வகுத்து-பிரித்து. என்னெஞ்சி லருள்புகுத்துவைக்குமெனக்கூட்டுக. புகுத்து-புகச்செய்து.

இதுவுமது

உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலு மோங்குலகக்
கள்ளுக்கில் காமத்திற் குண்டென் பதுநினைக் கண்டறிந்தேன்
கொள்ளக் குறைவிலன் புன்பாற்பெற் றேனினிக் கூறுவதென்
வள்ளற் கருணை முருகன் பரங்கிரி வாழ்மயிலே. (443)

(கு-ரை) உள்ள-நினைக்க. இல்-இல்லை. கொள்ள- (பிறர்) பெற. என்-யாதிருக்கிறது.

இப்பதினொருதுறைகளும் உணர்த்தவுணரு மூடற்குரியன.

வெள்ளணியணிந்து விடுத்துழித் தலைமகன் வாயில்வேண்டல்.

(இ-ள்) தலைவி புதல்வனைப்பெற்று நெய்யாடிய செய்திக்கு அடையாளமாக வெள்ளிய ஆபரண முதலியவற்றைத் தோழிக்குப் புனைந்து செவிலித்தாயர் தலைவனுக்கனுப்ப அதுகண்ட தலைவன் அத்தோழியைத் தூதாக வேண்டிக்கூறுதல்.

காதற் புதல்வனைப் பெற்றநற் செய்தி கருதியென்பா
லோதற்கு வெள்ளணி யாடை புனைந்திங் குனைவிடுத்த
மாதற்பி னென்றன் வரவேற்பச் செய்மெய் வரையிலொரு
தூதற் குழலி யுனைப்போ லெவர்சென்று சொல்லுவரே. (444)

(கு-ரை) காதல்-ஆசை. வெள்-வெள்ளைநிறமுடைய. மாது-தலைவி. அற்பின்-அன்பால். அற்குழலி-இருள்போலுங்கூந்தலையுடையதோழியே.

தலைவி நெய்யாடிய திகுளை சாற்றல்.

(இ-ள்) தலைவி புதல்வனைப்பெற்று நெய்யாடிய செய்தியைப் பாங்கி தலைவனுக்குச் சொல்லுதல். நெய்யாடுதல்-நெய்தேய்த்து ஸ்நானஞ்செய்தல். இது பிள்ளைப்பேற்றுச் சடங்கினொன்று. சடங்கு-கிரியை.

திருமதில் வானுறச் செல்லுங் குகன்மெய்ச் சிலம்பிடைப்பன்
னிருமதி நீயு மவளும் வயினிடை யேந்துபிறைப்
பெருமதி நேர்மகற் பெற்றுநெய் யாடிய பெற்றிபெற்றுள்
தருமதி யான முடையா யிதுநுந் தவப்பயனே. (445)

(கு-ரை) பன்னிருமதி-பன்னிரண்டுமாதம். வயின்-வயிறு. மதி-சந்திரன். பெற்றி-தன்மை.- நும்-உங்கள். "பத்திரு மாதங் கருவயி னூறிய பாழுடம்பை" என்றார் பிறரும்.

தலைவன் தன்மனத் துவகை கூர்தல்.

(இ-ள்) புத்திரன் பிறந்தானென்ற செய்திகேட்டுத் தலைவன் றன்மனத் துள்ளே சந்தோஷமிகுதல்.

நெறியுண் கருங்குழ லாள்மகற் பெற்றுநெய் நீர்குளித்தாள்
அறியென்ற தோழிசொற் கேட்கப்பெற் றேன்முன் னருந்தவத்தால்
வறியன் புதையல்பெற் றுற்போல் மகிழ்ச்சி வரவும்பெற்றேன்
கறிமென் கொடிகொள் பரங்கிரி வேலன் கருணையிதே. (446)

(கு-ரை) நெறியுண்-நெறிப்புப்பொருந்திய. குழால்-கூந்தலையுடைய வளே. அறி-அறிவாய். ஏறியன்-தரித்திரன். கறி-மிளகு.

தலைவிக் கவன்வரல் பாங்கி சாற்றல்.

(இ-ள்) தலைவிக்குத் தலைவன் பரத்தையர் சேரியினின்று வருதலைப் பாங்கி கூறுதல்.

சகவாச தோடத்தி னாலே பரத்தையர் தம்மிடம்போ
யுகவாநின் றேனெனு மூரனெனைக்கண் டுளமகிழ்ந்து
மகவாசை யாலிங்கு வந்தான் றனைநினை வாரை யென்றுஞ்
சுகவா ரியில்விடும் வேலோன் பரங்கிரித் தூநகையே. (447)

(கு-ரை) சகவாசம்-ஒருவரோடுசேர்ந்துபழகியிருத்தல். உகவா-மகிழ்ந்து. ஊரன்-மருதநிலத்தலைவன். சுகவாரி-இன்பக்கடல். தூ-பரிசுத்தமாகிய. நகையே-பற்களையுடையாளே.

தலைவி யுணர்ந்து தலைவனோடு புலத்தல்.

(இ-ள்) தலைவி தலைவன் வருதலைத் தெரிந்து ஊடுதல்.

அரவிட்ட செஞ்சடை யார்குரு வாழ்மெய் யசலமன்னீர்
கரவிட்ட நெஞ்சினர் கண்சிவ வாதெனைக் காணநமை
வரவிட்ட தெந்த வுறுதிகொண் டோவதை மட்டுஞ்சொல்லிப்
புரவிட்ட மானதுஞ் செய்திடெ லாம்பின் புகலுமினே. (448)

(கு-ரை) அரவிட்ட-சர்ப்பாபரணமணிந்த குரு-முருகக்கடவுள். கரவு-கள்ளம். இட்ட-பொருந்திய. நெஞ்சினர்-மனத்தையுடையபரத்தையர். கண் சிவவாது-கோபியாமல். புரவு-காத்தலிலே. இட்டம்-விருப்பம்.

தலைவி பாணனை மறுத்தல்.

(இ-ள்) ஊடல் தணியாத தலைவி தலைவன் தூதாகவிடுத்த பாணனை மறுத்துக் கூறுதல்.

அடும்பாண மன்ன கருங்கட் பரத்தையர்க் காயவர்தாம்
விடும்பாண வெய்ய விரகம் விளைக்குநின் வீணைதருங்
கொடும்பா ணமர்கொளத் தக்கதன் றூற்பரங் குன்றினிற்போ
யிடும்பாண வந்தவிர் வேலோனைப் பாடி யிறைஞ்சுகவே. (449)

(கு-ரை) அடும்-கொல்லும். ஆயவர்-ஆகியதலைவர். பாண-பாணனே, பாண்-இசைப்பாட்டு. நமர்-நம்மவர். ஆணவம்-ஆணவமலத்தை.

இதுவுமது.

தன்னமு மன்பில் பரத்தையர் சார்பிற் றலைவர்செயும்
இன்னல் பொறுக்க முடியாதென் பால்வந் திரந்துநின்ற
அன்ன ரலரினி நீநங் குகன்மெய் யசலஞ்செலாய்
கன்ன லிசைப்புல வாநிற்றி யேலெற்குக் கற்கையுண்டே. (450)

(கு-ரை) • தன்னமும்-சிறிதும். இல்-இல்லாத. இன்னல்-துன்பம். இரந்து-யாசித்து. அன்னர்-அத்தன்மையுடையவர். செலாய்-போவாயாக. கன்னல்-கரும்பிரசம்போன்ற. நிற்றியேல்- (இங்கு) நிற்பாயானால். கல்-கல்லானது. கையில்-(என்) கையில். உண்டு-இருக்கிறது. இதனாலடிப்பேனென்றபடி.

வாயில் மறுக்கப்பட்ட பாணன் கூறல்.

(இ-ள்) தலைவன் விடுத்ததூதினை மறுக்கப்பட்ட பாணன் தலைவிக்குச் சொல்லுதல்.

அப்போது கற்கையி னாலே யவரை யகற்றறியா
யிப்போது கற்கையி னென்னை யகற்றிடி லென்பயனா
மெப்போதும் வேள்மெய் யசலமன் னாய்தம் மிருங்கணவர்
தப்போது தல்கற் புடையார் தமக்குத் தகுதியன்றே. (451)

(கு-ரை) கற்கையினாலே-படித்தலாலே. அவரை-அத்தலைவரை. கற்கையின்-கல்லேந்தியகையால். தப்பு-குற்றத்தை. ஓதுதல்-சொல்லுதல்.

தலைவி மறுத்தமை பாணன் றலைவற் குணர்த்தல்.

(இ-ள்) தலைவி கோபித்ததைத் தலைவனுக்குப் பாணன் சொல்லுதல்.

மல்லெடுத் தாரும் புயத்தண்ண லேயுன் வரவுரைக்குஞ்
சொல்லெடுத் தேனது கேட்டவ ளென்கந் துணிப்பதற்குக்
கல்லெடுத் தாளெதிர் நிற்கிலென் வீட்டிலுங் கல்லெடுப்பார்
அல்லெடுத் தார்கண்ட னேடுறை வேள்மெய் யசலத்தினே. (452)

(கு-ரை) மல்-மல்யுத்தம். அண்ணல்-தலைவனே. கம்-தலையை. கல்லெடுப்பார்- (எனக்குக் கருமாதிசெய்யும்) கல்லைக்கையிலெடுப்பார். அதாவது நானிறப்பேனென்றபடி. அல்-இருள்போலும்விடம். கண்டன்-கழுத்தையுடையசிவபிரான்.

## விறலி வாயில்வேண்டல்.

(இ-ள்) தலைவியிடத்துத் தலைவனுக்காகப் பாடும்பெண் தூதுசொல்லுதல்.

பெண்முத்த மன்ன பிராட்டியுன் கேள்வர் பிரிந்துவந்தா
லெண்முத்த மிட்டின்ப மெய்தற் கவர்வர வேற்றலின்றிக்
கண்முத்தங் கொள்வ தழகோ மதுரைச்சங் கப்புலவர்
பண்முத் தமிழும் பயிலுங் குமரன் பரங்கிரிக்கே. (453)

(கு-ரை) பெண்-பெண்களுக்குள். பிராட்டி-தலைவியே. கேள்வர்-கணவர். எண்-எண்ணப்பட்ட. முத்தம்-முத்துப்போலும்நீர்த்துளி. பண்-செய்யப்பட்ட.

## விறலி வாயில் மறுத்தல்.

(இ-ள்) பாடும் பெண்ணுடைய தூதைத் தலைவி மறுத்துக் கூறுதல்.

வீடுந் தருங்குகன் வென்றியை யேபா வெற்பினிடைப்
பாடுங் குமரி பிரையால்வெண் பாலுருப் பாறுதல்போற்
றேடும் பொருட்பெண்டி ராசையி னுற்றுணச் சீரழிந்தா
ரோடுங் கெனக்கின்ப மாவதுண் டோவிதை யோதவர்க்கே. (454)

(கு-ரை) வீடு-மோக்ஷம். வென்றி-வெற்றி. குமரி-இளம்பருவப்பெண்ணே. பிரை-உறை. பாறுதல்-அழிதல். பொருட்பெண்டிர்-பரத்தையர். உங்கு-இவ்விடத்து. அவர்க்கு-அத்தலைவருக்கு.

## கூத்தர் வாயில் வேண்டல்.

(இ-ள்) தலைவனுக்காகத் தலைவியிடத்துக் கோடியர் தூதுசொல்லுதல். கோடியர்-கூத்தாடுவோர்.

மாதா சேயான் மன்னுங் குகன்மெய் வரையிடத்திற்
பேதைமை யென்ப திவட்கில யன்பர் பிழைபொறுத்தா
ளாதலி னென்றோர் புகழ்பெறு வாயவ ரன்பொடுன்பாற்
போதரி னுள்ள மிகக்குழைந் தின்பம் பொருந்திடினே. (455)

(கு-ரை) மன்னும்-நிலைபெற்றிருக்கும். போதரின்-வந்தால்.

## கூத்தர் வாயில் மறுத்தல்.

(இ-ள்) கோடியராகிய கூத்தர் தூதைத் தலைவி மறுத்துக்கூறல்.

சிவனுருங் கூத்த ரியாங்களுங் கூத்தர் செகந்தனிலென்
றவமான மின்றி யலைகின்ற நீர்பொய்ம்மை யாற்றினர்தந்
நவமான தூது சொலப்புகுந் தீரினி நல்லறிஞர்க்
குவமான நும்மன்றி யாரோ முருகன்மெய் யோங்கலினே. (456)

(கு-ரை) ஆற்றினர்-செய்ததலைவர். நவம்-புதிது. நும்மன்றி-உம்மையல்லாமல்.

## பாங்கி வாயில் வேண்டல்.

(இ-ள்) பாங்கி தலைவியினிடத்துத் தூது சொல்லுதல்.

மழையேய் பரங்கிரி வாயயி லேந்துதெய் வத்தையன்றிப்
பிழையே யிலாதவர் யாவர்சொ லாய்களன் பேதைதனை
யுழையேயுங் காட்டினில் விட்டகன் றானிஃ துணர்ந்திலையோ
தழையேமுன் றந்தவர் வந்தாலுன் கோபந் தணியணங்கே. (457)

(கு-ரை) ஏய்-பொருந்திய. வாய்-இடத்து. அயில்-வேல். உழை-மான்கள். தழை-மாந்தழை. தந்தவர்-கொடுத்ததலைவர்.

## பாங்கி வாயில் மறுத்தல்.

(இ-ள்) பாங்கி சொல்லிய தூதுவார்த்தையைத் தலைவி மறுத்தல்.

முதுவரை யென்னும் பரங்கிரிச் சேயருள் முன்னிட்டயான்
இதுவரை யுன்சொற் றவிர்ந்தில னிச்சொலி யம்பறகநீ
பொதுவரை நம்பிப் புறம்போந் தவர்பல பொய்புகன்றார்
அதுவரை யுந்தகைத் தன்றாலென் றோழி யறிந்திலையே. (458)

(கு-ரை) முதுவரை-பழையமலை. தவிர்ந்திலன்-கடந்தேனில்லை. இயம்பற்க-சொல்லாதே. பொதுவரை-பொது மாதராகிய பரத்தையரை. வரையுந்தகைத்து-எழுதியடங்குந் தகுதியுடையது.

## விருந்தொடுவந்துழிப் பொறுத்தல்கண் டிறையோன் மகிழ்தல்.

(இ-ள்) விருந்தினரோடு வந்த இடத்துத் தலைவி யூடலைச்சகித்தல் கண்டு தலைவன் மகிழ்ச்சியுறுதல்.

ஊடற் பிணிதவிர் கைகண்ட நன்மருந் தோர்விருந்தென்
றாடற் பரமன் பதன்மெய் யசலத் தறிந்துகொண்டேன்
நீடற் குழலிதன் னூடற்கஞ் சேனினி நீமனமே
தேடற் கிலாமற் கிடைக்கும் விருந்தைத் தெரிந்துவையே. (459)

(கு-ரை) ஊடல்-கடனைஞ்செய்கின்ற. அற்குழலி-இருள்போலுங்கூந்தலையுடையதலைவி.

விருந்துகண்டொளித்த வூடல் வெளிப்படநோக்கிச்
சீறேலென்றவள் சீறடி தொழுதல்.

(இ-ள்) விருந்தினரைக் கண்டு தலைவி மறைத்தவூடல் அவ்விருந்தினர் நீங்கியபின் வெளிப்படுதலைப் பார்த்துக் கோபியாதேயென்று அவள் சிறியபாதங்களைத் தலைவன் வணங்குதல்.

வம்பிட்ட மென்முலை மாதேநின் கோபம் வருவிருந்தாற்
றம்பிட்ட கன்றெனத் துள்ளா தொடுங்கிப்பின் றோன்றலுமியான்
அம்பிட் டறுக்கவல் லேனல னாய்நின் னடிபணிந்தேன்
கும்பிட்ட கையைக் குறைப்பா ரெவரிக் குவலயத்தே. (460)

(கு-ரை) வம்பிட்ட-கச்சணிந்த. இட்ட-பூட்டிய. பின்-(விருந்துநீங்கிய) பின்னர். அம்பிட்டு-பாணத்தால். அலன்-இல்லை. குறைப்பார்-வெட்டுவார்.

இஃதெங்கையர் காணில் நன்றன்றெனல்.

(இ-ள்) என் தங்கையராகிய பரத்தையர் கண்டால் நீர் செய்த பணிவு குற்றமாமென்று தலைவனுக்குத் தலைவி சொல்லுதல்.

மங்கையர் யார்க்கு முயர்ந்தோ ரெனநும் மனத்திலெண்ணு
மெங்கையர் காணில் நுமைமதிப் பார்கொ லியற்குமரன்
பங்கையம் போலும் பதம்பணி நீர்நம் பரங்கிரிவாய்ச்
செங்கையி னாலென் பதம்பணிந் தீரிதென் றீவினையே. (461)

(கு-ரை) எங்கையர்-எம் தங்கையராகிய பரத்தையர்.

இதுவுமது.

திகையளக் கின்றநும் மார்பினை யெங்கையர் சிறடியின்
றொகையளக் கும்மிது காணிலென் றுள்ளந் துயருறுமிவ்
வகையளக் கின்றவர் யாவர் குகன்மெய் வரையிடத்திற்
பகையளக் கின்றவொள் வேலீ ரெடுங்கையென் பாதம்விட்டே. ()

(கு-ரை) திகை-திசையினை. எங்கையர்-எம்தங்கையராகிய பரத்தையர். தொகை-கூட்டங்கள். அளக்கும்-, அதாவது மிதிக்குமென்றபடி. துயருறும்-துன்பமடையும்.

### அங்கவர் யாரையு மறியேனென்றல்.

(இ-ள்) அப்பரத்தையர் யாரையுமறியேனென்று தலைவன் தலைவிக்குக் கூறுதல்.

கச்சிற் பொருமுலைச் சேரியர் வாயினைக் கண்டபல்லோ
ரெச்சிற் படிக்க மெனகினை யாதென் னிதழ்தொடுமோ
உச்சிக்கண் வைக்கும் பரங்கிரி வேல னுயரடியார்
நச்சிப் பிறதெய்வ மேத்துவ ரோசொல் நறுநுதலே. (463)

(கு-ரை) கச்சிற்பொரும் - வாரினைக்கிழித்தெழும். இதழ்-வாய் (ஆகு பெயர்.) கண்-இடத்து. நச்சி-விரும்பி. நறுநுதலே-நல்ல நெற்றியுடைய தலைவியே.

### காமக்கிழத்தியைக் கண்டமை பகர்தல்.

(இ-ள்) தலைவி அப்பரத்தையரைப் பார்த்ததைத் தலைவனுக்குச் சொல்லுதல்.

தெருவிலும் மைந்தனைக் கண்டிவன் யார்மகன் செப்புகென்றாள்
வருவர்நும் பேர்சொல்ல வாரி யெடுத்துத்தன் மார்பிலணைத்
தருமை மிகுமுகத் திட்டா ளவளெங்கை யாவளன்றோ
கருமை மிகுகண்டன் சேய்வாழ் பரங்கிரிக் காவலரே. (464)

(கு-ரை) உம்-உம்முடைய. எங்கை-என் தங்கையாகியபரத்தை. மை-கரிய. கண்டன்-கழுத்தையுடைய சிவபிரான். சேய்-மகனாகியகுமாரக்கடவுள்.

### தாமக்குழலியைப் பாங்கி தணித்தல்.

(இ-ள்) தலைவி கோபத்தைப் பாங்கியாற்றுதல்.

உப்பமைந் தற்றுப் புலவியென் றாதை யோர்ந்திலையோ
செப்பம்வர் தூற்ற தலைவரை யேன்மிகச் சீறுகின்றாய்
துப்பமைந் தூற்ற விதழாய் சினத்தைத் தொலைத்திடின்றேற்
றப்பமைந் தூற்றனை யாவாய் குகன்மெய்த் தடத்திடையே. (465)

(கு-ரை) உப்பு-(கறிக்கு) உப்பானது. அமைந்தற்று-கூடாமலுங்குறையாமலும் அமைந்த அத்தன்மையுடையது. செப்பம்-ஒழுங்கு. துப்பு-பவளம். தொலைத்தி-விட்டுவிடு இன்றேல்-விடாயானால். தப்பு-குற்றம் அமைந்தூற்றனை-பொருந்தினவள். மெய்த்தடம்-பரங்கிரி.

### தலைமகள் புலவி தணியாளாகத் தலைமகனூடல்.

(இ-ள்) பாங்கி ஊடலைத்தணித்தும் தலைவி தணியாளாக, அதுகண்டு தலைவனூடுதல்.

அணங்கா சார்தெய்வ யானை வான்மெய் யசலமலர்
மணங்கமழ் சோலையின் வைத்த குறியை மருண்டலைந்து
கணங்களுஞ் சேறற் கருமிருள் வாய்வந்து காத்திருந்த
குணங்கனி மாதிவ ளல்லள்கெஞ் சேசினங் கொள்ளற்கவே. (466)

(கு-ரை) அணங்கு-தெய்வப்பெண். வான்-கணவன். மருண்டு-மயங்கி. கணம்-பேய். சேறற்கு-செல்லுதற்கு. கொள்ளற்க-கொள்ளாதே.

### பாங்கி அன்பிலை கொடியை யென்றிணர்த்தார் மார்பனை யிகழ்தல்.

(இ-ள்) பாங்கி தலைவனை நீ அன்பில்லாதவன் கொடியனென்றிகழ்ந்து கூறுதல்.

கான்வந் தலைந்து கமழ்பூந் தழைகண்ணி கையிற்கொடு
மான்வந்த தாவென்று கேட்டவர் நாளெங்கள் மாதிதழ்நீர்
தேன்வந்த தாகும் பரத்தையர் சேரியிற் சென்றபின்வேற்
கோன்வந்த மெய்க்குன்றில் வெவ்விட மாகின் குறிப்பினுக்கே.(467)

(கு-ரை) கான்-காடு. கண்ணி-மாலை. சேரி-தெரு. வேற்கோன்-முருகக்கடவுள். குறிப்பினுக்கு-நினைப்புக்கு.

### ஆயிழைமைந்தனும் ஆற்றுமையும் வாயில்களாகவர வெதிர்கோடல்.

(இ-ள்) தலைவன் பரத்தையர் சேரிக்குத் தேரின்மேலேறிப் போகும் போது தெரிந்தெடுத்த ஆபரணங்களையணிந்த புதல்வன் எதிரேநிற்ப அப் புதல்வனைத் தழுவி யெடுத்துக்கொண்டு தலைவன் பிரிவாற்றுமையுடன் வந்த இடத்துப்புதல்வனும் தலைவன் பிரிவாற்றுமையுந் தூதுகளாகநோக்கித் தலைவி தலைவனையெதிர்கொண்டு செல்லுதல்.

கழலேறு தேருந்து மன்பர்தம் நேரிற்றங் காலினைக்கண்
டழலேறு வெண்ணெயி னெஞ்சுரு காநின் றவனையெடுத்
துழலேறு செய்ப்பரங் குன்றார் நெடுந்தெரு வூடுவந்தார்
தொழலே யெதிர்சென்று செய்வேன் குகனருட் டோற்றமிதே. ()

(கு-ரை) கழல்-காலால். உந்து-செலுத்துகின்ற. கால்-புத்திரன்.

**மணந்தவன் போயபின் வந்த பாங்கியோடிணங்கிய மைந்தனை யினிதிற்புகழ்தல்.**

(இ-ள்) அங்ஙனம் தலைவன் தலைவியைக்கலந்துபோனபின் பொருந்திய புத்திரனைத் தலைவி யன்புடன் புகழ்ந்து பாங்கிக்குக் கூறுதல்.

புலவி மிகுத்த தலைவனை யென்னெதிர் போதச்செய்தான்
கலவி நலத்தை யவன்பா லுறீஇயுட் களிக்கச்செய்தான்
உலகி லெனக்கிவன் செய்த வுதவி யுரைப்பரிதால்
பலவிதத் தாலு முயருங் குகன்மெய்ப் பறம்பணங்கே. (469)

(கு-ரை) புலவி-ஊடல். போத-வர. உறீஇ-உற்று. இவன்-இப்புத்திரன். மெய்ப்பறம்பு-பரங்கிரி.

**தலைவி தலைவனைப் புகழ்தல்.**

(இ-ள்) வெளி.

மாணிக்கங் குப்பையி னூடுசென் றாலு மலர்ந்தவொளி
கோணிப் பிரியுங் கொலோபொய்ப் பரத்தையர் கூட்டநண்ணிப்
பேணிப் பிரிந்தின்று வந்தார்முன் னன்பிற் பிறழ்ந்திலரால்
ஆணிப்பொ னன்ன குகன்மெய் யசலத்தி னாரணங்கே. (470)

(கு-ரை) முன்னன்பின்-பழைய அன்பினின்றும். பிறழ்ந்திலர்-மாறு பட்டாரில்லை. மெய்யசலம்-பரங்கிரி.

**சிலைநுதற் பாங்கி தலைவியைப் புகழ்தல்.**

(இ-ள்) வெளி.

போத மிகுந்தவ ராயினுங் குற்றம் பொறுப்பரிதாற்
பேதை யெனவந்த வூரன் மிகச்செய் பிழைபொறுத்துக்
காத லுடன்றெய்வ மென்னக்கொண் டாய்நிற் கடுப்பவரார்
வேத நனிமலி வேலோன் பரங்கிரி மெல்லியலே. (471)

(கு-ரை) போதம்-அறிவு. பொறுப்பு-பொறுத்தல். பேதை-பெண், அறிவில்லாதவன். ஊரன்-மருதநிலத்தலைவன். நிற்கடுப்பவர்-உன்னை நிகர்ப்பவர். நனி-மிக. மலி-நிறைந்த.

ஆயிழைமைந்தனு மாற்றுமையும் வாயில்களாக வரவெதிர் கோடல்முதல் சிலைநுதற்பாங்கி தலைவியைப் புகழ்தலீறாகிய இவ்வைந்து துறைகளு மேற்

கூறிய இருவகையூடல்களோடுசேர்ந்து பரத்தையிற் பிரிவின் விரிபாமென்க. இம்முப்பத்தெட்டுத் துறைகளும் வாயில் வேண்டல் வாயின்மறுத்தல் வாயினேர்வித்தல் வாயினேர்தல் என்னும் நான்குவகைக்கும் ஏற்றபெற்றியறிந்து முடித்துக் கொள்க.

28-பரத்தையிற்பிரிவு முற்றிற்று.

---

## இருபத்தொன்பதாவது—ஓதற்பிரிவு

அஃதாவது, தலைவன் கல்விகாரணமாகப்பிரிதல்; தலைவன் புலமையை யெய்தியிருந்தும் ஓதற்குப் பிரிவு குறைவாகாதோவென்றால்? ஆகாது. புலமை நிரம்பாமலக்குறைதீர்ப்பான் ஓதற்குப் பிரிதலன்று. பண்டேகுரவரால் (ஆசிரியரால்) கற்பிக்கப்பட்டு, அறம் பொருளின்பம் வீடு நுதலிய நூல்களெல்லாங் கற்றான். பரதேயத்து அவைவல்லாருளரெனிற் சென்று தன்னறிவைமேற்படுத்திக் காட்டற்கென்க இவ்வோதற் பிரிவு முதலிய எல்லாப் பிரிவுகளும் பிரிவறிவுறுத்தல் பிரிவுடன்படாமை பிரிவுடன்படுத்தல் பிரிவுடன்படுதல் பிரிவுழிக்கலங்கல் வன்புறை ஒன்பொறை வருவழிக்கலங்கல் வந்துழிமகிழ்ச்சியென வொன்பது வகைப்படும். ஆங்காங்குக் காண்க

### தலைவன் பாங்கிக்கு ஓதற்பிரிவுரைத்தல்.

(இ-ள்) வெளி.

எத்துணைச் செல்வருங் கற்றாரொருவருக் கீடலரென்
றுய்த்துணராரெவர் நீயு முணரய லூர்புகுந்து
மெய்த்துறு பல்கலை யோதத் துணிந்தனன் வேலெடுத்துக்
கைத்திறங் காட்டு முருகன் பரங்கிரிக் கட்சகியே. (472)

(கு-ரை) எத்துணை - எவ்வளவு. ஈடலர் - ஒப்பாக மாட்டார். உய்த்து - ஆராய்ந்து. மெய்த்துறு-மெய்க்கப்பட்ட. கண்-இடத்தில். சகியே-தோழியே.

### பிரிவுடன்படாமை.

(இ-ள்) தலைவன் ஓதற்குப் பிரிதலைப் பாங்கி மறுத்தல்.

ஐங்விக்குந் துன்புற் றிரந்தாரைச் சேய்மெய்ம் நகுலமன்னீர்
உய்விக்கு மாறும் வறங்கூர்ந்த காலத்தி லோங்குமழை
பெய்விக்கு மாறுஞ்சம் பந்தரைப் போலக்கற் பீரெனிற்பூக்
கொய்விக்கு மாறுசெய் தாற்றுவ னம்மலர்க் கொம்பினையே. (473)

(கு-ரை) நைவிக்கும்-வருத்தப்படுத்தும். மெய்ந்நகுலம்-பரங்கிரி. உய்விக்கும்-பிழைக்கச்செய்யும் வறம்-வறுமை. கூர்ந்த-மிகுந்த.பெய்விக்கும்-பெய்யச்செய்யும். கொய்விக்கும்-கொய்யச்செய்யும்.

## பிரிவுடன் படுத்தல்.

(இ-ள்) தலைவன் ஓதற்பிரிவுக்குத் தலைவியைப் பாங்கி சம்மதிக்கச் செய்தல்.

பெரியார சபைமுன் னிருக்கப்பெற் றார்கற்ற பெற்றியரே
சிரியா ரெவர்கலை கல்லாரை யென்றுளந் தேர்ந்துகொளற்
குரியா ரெனுமன்ப ரோதற் பிரிவுநிற் கோதச்சொற்றார்
வரியார்கண் வள்ளி மகிழ்நன் பரங்கிரி மாமயிலே. (474)

(கு-ரை) பெற்றியர்-தன்மையுடையவர்.உரியார்-உரியவர்.நிற்கு-உனக்கு சொற்றார்-சொன்னார். வரி-இரேகை. மகிழ்நன்-கணவன்.

## பிரிவுடன் படுதல்.

(இ-ள்) தலைவன் ஓதற்பிரிவுக்குத் தலைவி சம்மதித்தல்.

கல்வி கலவி யிரண்டினிற் றேரயிற் கணக்கறவே
பல்வித வின்பம் விளையுமென் றோர்ந்தநம் பார்த்திவர்செந்
நெல்விளை யும்பரங் குன்றிற்செவ் வேளை நினைந்தகல்க
புல்விருந் தாய்விரைந் தேகல்வி கற்றிங்குப் போதரவே. (475)

(கு-ரை) கலவி-புணர்ச்சி. கணக்கற-எண்ணில்லாமல். பார்த்திவர்-அரசராகிய தலைவர். புல்-பொருந்திய விருந்தாய்-புதிதாகி. போதர-வர.

## பிரிவுழிக்கலங்கல்.

(இ-ள்) தலைவன் ஓதற்குப் பிரிந்த இடத்துக் கார்காலம்வர அதுகண்டு தலைவி வருந்துதல்.

மகனொடு வந்த களிப்பாற் சினத்தை மறந்துகொண்கன்
அகமகி ழின்ப மறுபவித் தேனட் பமைபவன்போ
லிகல்செய் யவன்பிரிந் தேகற் குடன்பட்ட வேழைமையாற்
குகன்மெய் வரைபொதி கொண்மூ வரத்துன்பங் கூர்ந்தனனே. (476)

(கு-ரை) கொண்கன்-கணவன். நட்பு-சிநேகம். இகல்-பகை. அவன்-அக்கணவன். ஏழைமையால்-அறியாமையால். கொண்மூ-மேகம்.

## வன்புறை.

(இ-ள்) கார்காலங்கண்டு வருந்துந்தலைவி துன்பத்தைச் சகித்திருக்கும் படி தோழி வற்புறுத்திக்கூறுதல்.

கார்வந் ததுநன் றெனவுண ராயந்தக் காரிலெழும்
ஏர்வந்த மின்ன லெனுமிடை யாயினி யேயிடையாய்
தார்வந்த மார்பன் வருங்குகன் மெய்வரை தன்னிலவன்
தேர்வந்த போதென் னுரைதேர் பொறுக்க சிறுபொழுதே. (477)

(கு-ரை) கார்-மேகம். ஏர்-அழகு. இடையாய்-வருந்தப்படமாட்டாய். வரும்-வருவான். பொறுக்க-பொறுத்துக்கொள்வாய்.

## வன்பொறை.

(இ-ள்) அங்ஙனங்கூறிய தோழி சொல்வன்மையால் தலைவி துன்பத்தைப்பொறுத்திருத்தல்.

இற்புறத் தேயகன் றோதற்குச் சென்ற விறைவரவை
வற்புறுத் திச்சகி சொற்றத னாலென் மடநெஞ்சமே
யற்புறச் சற்றுப் பொறுப்பாய் பொறுவிடி லாவதென்னே
பொற்புறத் திப்பெண் மணந்தோன் மகிழ்மெய்ப் பொருப்பிடத்தே.

(கு-ரை) ஓதற்கு-படித்தற்கு. இறை-தலைவன். அற்பு-அன்பு. பொற்பு-அழகு. அத்திப்பெண்-தெய்வயானையம்மை.

## வருவழிக்கலங்கல்.

(இ-ள்) ஓதற்குப்பிரிந்த தலைவன் கார்காலங்கண்டு வருமிடத்துத்தலைவியை நினைந்து வருந்துதல்.

நானு மவளுமொன் றுதலி னாலிங்கு நான்மயங்கிற்
றானு மயங்குவ ளங்கே யினியுந் தனிமைபொறுள்
மானும் புலியும் விளையாடுஞ் சேய்மெய் வரைசெலச்சற்
றேனுஞ் சலனமில் லாதூர் வலவநந் தேரினையே. (479)

(கு-ரை) இனியும்-இனிமேலும். தனிமை-தனித்திருப்பது. சேய்-முருகக்கடவுள். மெய்வரை-பரங்கிரி. சலனம்-வருத்தம். ஊர்-செலுத்து. வலவ-சாரதியே.

## வந்துழிமகிழ்ச்சி.

(இ-ள்) தலைவியை நினைத்துத் தலைவன்வந்த இடத்து சந்தோஷமடைதல்.

கலைக்கட லாடித் திரும்பிவந் தேனினிக் காமவின்ப
நிலைக்கடல் மூழ்கநன் னேரிழை யாளையென் னேரிற்கண்டேன்
அலைக்கடல் போல வமுதஞ் சுரக்கு மவளுநங்கண்டாள்
மலைக்கடல் வேலெடுத் தார்பரங் குன்றின் மகிழெய்துமே. (480)

(கு-ரை) கலை-நூல். அமுதம்-அமுதம்போலுமின்பம். மலைக்கு-கிரௌஞ்சகிரிக்காக. அடல்-வலிய. மகிழ்-மகிழ்ச்சி.

29-வது ஓதற்பிரிவு முற்றிற்று.

## முப்பதாவது—காவற்பிரிவு.

அஃதாவது நாடுகாத்தற்குப்பிரியும்பிரிவு. அங்ஙனமானால் தலைவனது நாட்டை நலிவதுங் கைக்கொள்வதும் உளராக, அவை தீர்க்கச்செல்வானாயின் தலைவன் வலியிலனாதல்வேண்டுமென்றால் அப்படியல்ல. நாட்டகத்தில் நின்று நகரத்துக்கு வந்து குறைசொல்லமாட்டாத மூத்தோரும், பெண்டிரும், கூனரும், குருடரும், பிணியுடையாருமாகியவர் முறைப்பாடுகேட்டுத் திருத்துதல் காரணமாகவும், வளனில்லாத இடத்து வளமுண்டாக்குதற்கும், ஆலயம் அறச்சாலை முதலியவற்றை யாராய்தற்கும், உயிர்கள்தாயைக்கண் டின்புறுதல் போலத் தன்னாற் காக்கப்பட்ட குடிகள் தன்னைக்கண்டின்புறத் தன்னுருவு காட்டுதற்கு மென்க.

### தலைவன் காவற்பிரிவுணர்ந்ததோழி தலைவிக்குணர்த்தல்.

(இ-ள்) வெளி.

சேவற் கொடியுடை யார்பரங் குன்றிற் றிகழுநின
தாவற் பிரிய ரறங்காவ லாற்றுதற் காகநினை
யோவற் செயலெற் குணர்த்தி யுனக்கினி தோதச்சொற்றார்
மாவற் புதமயில் போலுமென் சாயல் மடக்கொடியே. (481)

(கு-ரை) ஆவல்-ஆசை. ஆற்றுதற்கு-செய்தற்கு. ஓவல்-நீங்குதல். மா-பெருமை. சாயல்-அழகு.

### தலைவி பிரிவுடன் படாமை.

(இ-ள்) தலைவன் காவற்பிரிதலைத் தலைவிமறுத்தல்.

பொன்னாடு காத்தருள் வேலோன்மெய்க் குன்றிற் புரவலன்றான்
றன்னாடு மேவறங் காவற்குத் தான்செலத் தக்கதன்றென்
றென்னாடு கண்மணி போல்வா யறிந்திலை யெண்ணிலென்றன்
சொன்னாடு வாயலை நின்னோ டினியென் றொடர்பெனக்கே. (482)

(கு-ரை) தான்செல-தான்போக. ஆடு-அசைகின்ற.போல்வாய்-போன்ற தோழியே. என்னில் என்றால். நாடுவாயலை-ஆராயமாட்டாய். தொடர்பு-சம்பந்தம்.

## பிரிவுடன்படுத்தல்.

(இ-ள்) தலைவன் காவற்பிரிவைத் தலைவி சம்மதிக்கத் தோழி செய்தல்.

நிலங்கா வலர்பல் லுருவாந் தரும நிகழ்வதுவுங்
கலங்கா நிலையி லுயிர்களெல் லாமுட் களிப்பதுவும்
பலங்காவ லாச்சென்று பார்த்து வருதல் பழைமையன்றோ
குலங்காவல் கொண்ட மயிலாங் குகன்பரங் குன்றணங்கே. (483)

(கு-ரை) பல்லுருவாம்-பலவடிவாம். நிகழ்வதுவும்-நடப்பதும். பலம்-வலிமை. குலம்-நல்லகுலத்தை, அதாவது சாதிதருமத்தை யென்றபடி.

## பிரிவுடன்படுதல்

(இ-ள்) தலைவன் காவற்பிரிவுக்குத் தலைவி சம்மதித்தல்.

தோழி யுரைப்பது கோழித் துசன்மெய்ச் சுரும்பிடத்தில்
ஆழி யுலகம் புரப்பார் செயுங்கட னாகுமெனறால்
பாழியல் பாகத் தடுக்கினுண் டாகும் பழியையகோ
ஊழிற் பெருவலி யுண்டோ தனியெனக் குற்றதுவே. (484)

(கு-ரை) துசன்-கொடியையுடைய முருகக்கடவுள். மெய்ச்சுரும்பு-பரங்கிரி. ஆழி-கடல்சூழ்ந்த. பாழியல்-வீணத்தனம். ஊழில்-ஊழைப்பார்க்கிலும். தனி-தனியேயிருத்தல்.

## பிரிவுழிக்கலங்கல்.

(இ-ள்) தலைவன் காவற்குப் பிரிந்த இடத்து வாடைப் பருவங்கண்டு தலைவி வருந்துதல்.

வாடைப் பருவம் வரிலெனைப் போல வருந்திநிற்கும்
பேடைப் பறவையைக் கண்டேனு மிங்குப் பிரிந்தகல்பொன்
மேடைப்பொன் மாடம் விளங்குங் குகன்பர வெற்பிலுயர்
ஓடைப் புகர்முக யானையன் னார்வா வுள்ளிலரே. (485)

(கு-ரை) வரில்-வந்தால். பேடை-பெட்டை. கண்டேனும்-பார்த்தானும். ஓடை-நெற்றிப்பட்டம். புகர்-புள்ளி. உள்ளிலர்-நினைத்தாரில்லை.

## வன்புறை.

(இ-ள்) வாடைப்பருவத்தால் வருந்துந்தலைவி துன்பத்தைப் பொறுத்

காதற் கணவர் குகன்பரங் குன்றிற் கலைகள்பல
ஓதற் பிரிவொரு மூவாண் டுளதனை யும்பொறுத்தாய்
மாதற்ப மாகு மிருமதி யுள்ளவிவ் வாடையினு
லாதற் றுயர மிகச்சிறி தாம்பொறுத் தாலழகே. (486)

(கு-ரை) மூவாண்டு-மூன்றுவருடம் மாது தலைவியே. இருமதி-இரண்டு மாதம். ஆதல்-உண்டாவதாகிய.

வன்பொறை.

(இ-ள்) வாடைத்துன்பத்தைப் பாங்கி வற்புறுத்திக் கூறுதலால் தலைவி பொறுத்தல்.

பல்லுயிர் காக்கப் புறம்போ னவரகம் பற்றியகம்
மெல்லுயிர் காக்க வாரோ விரைந்தது மெய்ம்மையென்று
சொல்லுமென் சேடி யுரைகொண்டு துன்பந் துடைத்திநெஞ்சே
கொல்லுமிவ் வாடையென் செய்யு மவர்வந்து கூடிடினே. (487)

(கு-ரை) புறம்-வெளிப்பக்கம். சேடி-தோழி. துடைத்தி-போக்குவாய். கூடிடின்-சேர்ந்தால்.

வருவழிக்கலங்கல்.

(இ-ள்) காவற்குப் பிரிந்த தலைவன் வாடையினலே வருந்துந் தலைவியை நினைந்து வருந்துதல்.

பல்லொடு பல்முர சார்ப்பது போலொன்று பட்டொலிக்க
வல்லொடு வந்தவிவ் வாடையில் யாமிவ் வருத்தமுற்றால்
அல்லொடு நட்புறு பூங்குழ லாளெங்ங னாற்றுவளோ
வில்லொடு மேகம்வந் தம்பெய் குகன்பர வெற்பிடத்தே. (488)

(கு-ரை) முரசு ஒருவாத்தியம். ஆர்ப்பது-முழங்குவது. வல்-விரைவு. அல்-இருள். எங்ஙன்-எவ்விதம். வில்-இந்திரதநுசு. அம்-நீர். அம்பெய் என்பதில்-பாணத்தை யெய்கின்ற என்னுமொரு சிலேடைப் பொருளுங் காண்க.

வந்துழிமகிழ்ச்சி.

(இ-ள்) அங்ஙனம் வருந்திய தலைவன் தலைவியைநோக்கி வந்தவிடத்து மகிழ்தல்.

பன்னாள் மிகவும் பசித்துவந் தானெதிர்ப் பட்டவமு
தன்னாளை நோக்கி யகமு முகமு மலர்ந்தனயான்
முன்னாள் முருகன் பரங்கிரி வாய்த்தவ முற்றியதன்
பின்னா ளுறுபெரும் பேறுமிவ் வாறுற்ற பெற்றியதே. (489)

(கு-ரை) முற்றி-முடித்து. பேறு-பிரயோசனம். பெற்றி-தன்மை.

30-காவற்பிரிவு முற்றிற்று.

## முப்பத்தொராவது—தூதிற்பிரிவு.

அஃதாவது இரண்டரசர் தம்மிற்பொருகின்ற இடத்து அவரைச்சமாதானஞ் செய்தற்குப்பிரியும் பிரிவு. அரசரைச்சமாதானஞ் செய்வித்தற்குப்பிரியும் பிரிவென்றால், தூதுவராவார் பிறர்க்குப்பணிசெய்து வாழ்வார், அவரொப்பில்லாராவரென்பதென்னவென்றால் இரண்டரசரும் நாளைப்பொருவோமென்றிருந்த நிலைமைக்கண் தானருளரசனாதலின் மக்களும் விலங்குகளும் பல இறத்தல் சகியாது இப்போரையொழிப்பேனென்று இருவரையுமிரந்து சமாதானஞ்செய்வித்தலெனக. இஃதல்லாமல் தேவருமசுரரும் பொருதகாலத்துத் தேவாசுரருக்குள் மிகைசெய்தாரை யொறுப்பலென்று பாண்டியன்மாகீர்த்தி சமாதானஞ் செய்வித்ததுபோல இவரையுமிகைசெய்தாரை யொறுப்பலென்று தூதாகச்செல்லுதலென்றலுமொன்று.

### தலைவன்றூதிற்பிரிவு பாங்கி தலைவிக்குணர்த்தல்.

(இ-ள்) இரண்டரசர் பொருட்டுத்தலைவன்றூதுக்குப் போதலைப்பாங்கி தலைவிக்குக் கூறுதல்.

ஒத்த வாச ரிருவ ரொருவ ரொருவரொடு
செத்தகல் போர்செய லானூர்நற் றூதினிற் சென்றதனை
யுத்தம மன்றென் றகற்றற் கெழுத லொருப்பட்டனர்
பத்தர் பரவு முருகன் பரங்கிரிப் பைந்தொடியே. (490)

(கு-ரை) ஒருப்பட்டனர்-(தலைவர்) சம்மதித்தனர்.

### தூதிற் பிரிவுடன்படாமை.

(இ-ள்) தலைவன் றூதிற்பிரிவைத் தலைவி மறுத்தல்.

தூதுக்கு வாவென் றெவரழைத் தார்சென்று தூதுசொல
ஏதுக் கிவரின் றெழவேண்டும் நீதடுத் தேன்புகலாய்
மாதுக்குச் சம்மத மின்றென் றுரைத்து மறுசகியே
காதுக்கிவ் வார்த்தை கொடிதா முருகன்மெய்க் கல்லிடத்தே. (491)

(கு-ரை) எழ-போக. மறு-தடுப்பாய். மெய்க்கல்-பரங்கிரி.

பிரிவுடன்படுத்தல்.

(இ-ள்) தலைவி தலைவன் தூதுக்குச் செல்லுதலைச் சம்மதிக்கப் பாங்கி செய்தல்.*

ஆறிழுப் பாரும் விடாந்திண்டி ஞரு மறைத்தலின்றி
நூறிதழ்த் தாமரை மேலணங் கேகண்ட நுண்ணறிவோர்
தேறிய தன்மத்தை யுந்தேசித் தேசென்று தீர்ப்பரிடர்
கூறிய நன்மைக் கிருப்பாங் குகன்பரங் குன்றிடத்தே. (492)

(கு-ரை) தேறிய-தெளியப்பட்ட. தன்மத்தை-தருமத்தை.

பிரிவுடன்படுதல்.

(இ-ள்) தலைவன் தூதுக்குச் செல்லுதலைத் தலைவி சம்மதித்தல்.

தன்போற் பிறரை நினைப்பாற் கியாமென்ன சாற்றிடினு
முன்போற் பிரிவனல் லாதிங் கிரானவன் முன்னமெலாம்
உன்போற் பிறரிங் குரைப்பவ ராரென் னுயிர்ச்சகியே
பொன்போற் கதிர்னுறு வேலோன் றிகழ்மெய்ப் பொருப்பிடத்தே ()

(கு-ரை) நினைப்பாற்கு-நினைக்கின்ற தலைவனுக்கு முன்னம்-எண்ணம். திகழ்-விளங்குகின்ற. மெய்ப்பொருப்பு-பரங்கிரி.

பிரிவுழிக்கலங்கல்.

(இ-ள்) தலைவன் தூதுக்குப் பிரிந்த இடத்துத் தலைவி முன்பனிப் பருவங்கண்டு வருந்துதல்.

கெடுஞ்சம ராற்றிடு மன்ன ரிருவர்முன் னின்றவர்வே
ளடுஞ்சமர் மாற்றுதற் கென்முன் வரார்பனி யாமிருது
கொடுஞ்சம ராற்றுத லுங்குறி யாரைய கோவவுணர்
படுஞ்சம ராற்றிய வேலோன் பரங்கிரிப் பான்மொழியே. (494)

(கு-ரை) சமர்-யுத்தம். ஆற்றிடும் - செய்யும். வேள் - மன்மதன். அடும்-கொல்லும். இருது-பருவம். அவுணர்-அசுரர். படும்-இறக்கும்.

## வன்புறை.

(இ-ள்) முன்பனியால் வருந்துந் தலைவியைப் பாங்கி வற்புறுத்தி யாற்றுதல்.

எண்ணு கரும முடித்திடு முன்ன மிடையில்விட்டு
நண்ணுவர் யாவர் முருகன் பரங்கிரி நாட்டிலுள்ளார்
ஒண்ணுத லேமுன் பனிக்காலம் வந்தது மோர்வரவர்
மண்ணு பரியு மிரதமுந் தாமும் வருவரின்றே. (495)

(கு-ரை) கருமம் - தொழில். ஓர்வர்-அறிவார். மண்ணு - அலங்கரிக்கப் பட்ட. பரி-குதிரை. இரதம்-தேர்.

## வருவழிக் கலங்கல்.

(இ-ள்) அதிற்பிரிந்த தலைவன் திரும்பிவருமிடத்து முன்பனித்துன் பத்தைக்கண்டு வருந்திக்கூறுதல்.

புனனின்ற தாமரை வாடுமிக் காலம் புகுமயலாம்
அனனின்ற வன்னங்கண் காணக் குகன்மெய் யசலத்திலென்
மனனின்ற வின்பெனு நீராற் குளிர்விக்க வாம்பரிகாள்
இனனின்ற நீர்விரைந் தீர்மினென் றேரவ னிற்செலவே, (496)

(கு-ரை) தாமரை - தாமரைப்பூ. அனல் - தீயில். அன்னம் - அன்னம் போலுந்தலைவி. வாம்-தாவுகின்ற. பரிகாள்-குதிரைகளே. இனனின்ற-கூட்ட மாக நின்ற. ஈர்மின்-இழுத்துச் செல்லுங்கள். வளியின்-காற்றைப்போல.

## வன்பொறை.

(இ-ள்) முன்பனித் துன்பத்தைப் பாங்கி வற்புறுத்துதலாற் றலைவி பொறுத்தல்.

தூதுரைப் பார்செயல் தூதுரைப் பாருக்குத் தோன்றுமென்னும்
ஈதுரைத் தேமுன் பழகிய தோழி யிசைத்தபடி
போதுவர் பாம்பின் பதம்பாம் பறிவது போலநெஞ்சே
வாதுசெய் யாது பொறுப்பாய் குகன்மெய் வரையிடத்தே. (497)

(கு-ரை) போதுவர்-(தலைவர்) வருவார். பதம்-கால். வாது-போர்.

## வந்துழிமகிழ்ச்சி.

(இ-ள்) அதிற்பிரிந்த தலைவன் மீண்டு வந்த இடத்துத் தலைவியைக் கண்டு மகிழ்தல்.

மன்ன ரிகலை யடக்கித் திரும்பி வரும்வழியில்
முன்னர் நடக்குமென் னெஞ்சின்பின் னேவர்நிம் மொய்குழலை
நன்னர் முருகன் பரங்கிரி வாய்க்கண்டு நான்மகிழ்ந்தே
னென்ன ரிதனை விளம்பவந் தாலு மியம்பரிதே. (498)

(கு-ரை) இகல்-போர். நன்னர்-அழகிய. என்னர் - எப்படிப்பட்டவர். இயம்பரிது-சொல்லமுடியாது.

31-தூதிற்பிரிவு முற்றிற்று.

---

## முப்பத்திரண்டாவது—துணைவயிற்பிரிவு.

அஃதாவது—நட்பாகிய அரசனுக்குப் பகையரசரிடையூறுற்றவழி, அது தீர்த்தற்குத் தலைவன் துணையாகப் பிரிதல். அப்படியானால் தன்னிடத்தி லுள்ள வீரரு ளொருவனைப் படைத்துணையாகச் செல்லவிடாது தான் போதல் வேண்டுமென்ப தென்னவென்றால் நட்பு மிகுதியால் தான் அவனுயிருத்தலின் அவன் கருமம் தன் கருமமாகவெண்ணி விரைவினெழுந்து அப்பகை தீர்க்கத் தானே சென்றானெனக் கொள்க.

### தலைவன் துணைவயிற்பிரிவு பாங்கி தலைவிக்குணர்த்தல்.

(இ-ள்) தலைவன்தன்னுடைய நட்பரசனுக்குப் படைத்துணையாகப் பிரிந்துபோதலைப் பாங்கி தலைவிக்குச் சொல்லுதல்.

உறினட் டறினொரு வொப்பில ரன்றியுள் ளோர்க்குபுன
லறினுற்ற நெய்த லெனுநட் பமையு மரசர்படைச்
செறிவிற்குத் தாந்துணைச் செல்வனென் றூர்நஞ் சிலம்பர்பெண்ணே
யறிநற் குமரன் பரங்கிரி மாநகர்க் கப்புறத்தே. (499)

(கு-ரை) உறின்-பொருளிருந்தால். நட்டு-நட்பாகவந்து. அறின் - அப்பொருள் நீங்கினால். ஒருவு-நீங்குகின்ற. ஒப்பிலர்-ஒத்தகுணமில்லாதவர். அன்றி-அல்லாமல். புனலறின்-நீரற்றகாலத்தும். உற்ற-கைவிடாதிருந்த. நெய்தல்-நெய்தற்பூ. நட்பமையும்-சிநேகம் பொருந்தும். செறிவு-நெருக்கம். சிலம்பர்-குறிஞ்சிநிலத் தலைவர். அறி-அறிவாயாக.

### தலைவி பிரிவுடன்படாமை.

(இ-ள்) தலைவன் படைத்துணையாகச் செல்லுதலைத்தலைவி மறுத்தல்.

என்னாகு மோபெரும் போர்த்துணைக் கேகி விதற்குமட்டு
மன்னா புறஞ்செல லாகாதென் றேநனி வற்புறுத்திச்
சொன்னாலுன் சொல்லை மறாருன் சகாயமத் தோன்றலுக்குப்
பன்னாளும் வேண்டு முருகன் பரங்கிரிப் பைந்தொடியே. (500)

(கு-ரை) நனி-மிக. தோன்றல்-தலைவன்.

பிரிவுடன்படுத்தல்.

(இ-ள்) தலைவன் படைத்துணையாகச் செல்லுதலைத் தலைவி சம்மதிக்கும்படி தோழிசெய்தல்.

தடுப்பேனின் சொற்கொடி தின்றி யமையத் தகாதெனிலோ
விடுப்பே னமக்கிடர் செய்யாத வெற்பரை வீண்புகன்று
கெடுப்பே னெனிலெற் கவர்பகை யோடு கிளர்பழியாம்
வடுப்போர் வதுமிலைச் சொன்னேன் குகன்மெய் வரைமயிலே. (501)

(கு-ரை) சொற்கொடு-சொல்லால். தகாது-கூடாது. வெற்பரை-குறிஞ்சி நிலத்தலைவரை. வீண்-வீண்வார்த்தை.

பிரிவுடன் படுதல்.

(இ-ள்) தலைவன் படைத்துணையாகச்செல்லுதலுக்குத்தலைவி சம்மதித்தல்.

பன்முறை யன்பர் பிரிவுக் குடன்படப் பாங்கிசொன்ன
சொன்முறை போயின்று கேட்கத் தகாச்சொற்கள் சொல்லினையி
தென்முறை யோவவர் சென்றூ லிகல்வயி னீறுபடா
தொன்முறை செய்து திரும்புக வேலன்மெய் யோங்கலுக்கே. (502)

(கு-ரை) பாங்கி-தோழியே. சொன்ன-(அவர்) சொல்லிய. போய்-(நீ) சென்று, ஒழுகி. இகல்வயின்-போரினிடத்து. ஈறு-அழிதல். ஒல்-பொருந்திய. மெய்யோங்கல்-பரங்கிரி.

பிரிவுழிக்கலங்கல்.

(இ-ள்) தலைவன் படைத்துணையாகச்சென்ற இடத்துப் பின்பனிக் காலம் வரக்கண்டு தலைவி வருந்துதல்.

அன்பனி வந்த செருக்களத் திடுபட் டாங்கிருந்து
பின்பனி நாள்வரப் பெய்வளை கைவளை பெற்றியின்றித்
தன்பனி வாடுமென் றெண்ணான் குகன்மெய்த் தடத்திணையுந்
தென்பனி யாய முரைத்தாலு மேற்றிலன் யானினியே. (503)

(கு-ரை) நிவந்த-உயர்ந்த. ஈடுபட்டு-நிலைத்துநின்று. வளை-வளையல். கை-கையை. வளை-வளையும். பணி-மனைவி (விகாரம்). மெய்த்தடம்-பரங்கிரி. என்-எப்படிப்பட்ட. பல்-பல. ஏற்றிலன்-ஒப்புக்கொள்ளமாட்டேன்.

வன்புறை.

(இ-ள்) பின்பனியால் வருந்துந்தலைவியைத் தோழி வற்புறுத்தியாற்றுவித்தல்.

சற்றே பொறுபகை வேறலி னருந் தலைவர்புகழ்
நற்றே மொழியுன்கட் டுதெய்தல போல நமைவளைய
வுற்றே யிருந்தவிப் பின்பனி வேலன்மெய் யோங்கலினிற்
பொற்றே ரவர்கொண் டுறிற்போந் துயரமும் போமினியே. (504)

•(கு-ரை) பகை-பகைவரை. வேறலின்-வெல்லுதலால். பின்பனி-பின்பனிக்காலமானது. பொன்-அழகுடைய. அவர்-அத்தலைவர்.

வன்போறை.

(இ-ள்) பின்பனித் துன்பத்தைப் பாங்கி வற்புறுத்தி யாற்றுதலால் தலைவிபொறுத்தல்.

கலங்கற் புனலொரு தேற்றுவித் தாற்றெளி காட்சியென
அலங்கற் புயமன்ன ரின்னுஞ்சின் னோரத் தணைவரென்றே
யிலங்கற் குழற்சகி தேற்றுவித் தாலெவ ரேதெளியார்
நலங்கற் றிடாமட நெஞ்சே குகன்மெய்ந் நகத்திடத்தே. (505)

(கு-ரை) தேற்றுவித்து-தேற்றாம்விதை. அலங்கல்-பூமாலை. அல்-இருள் போலும். தேற்றுவித்தால்-தெளிவித்தால். மெய்ந்நகம்-பரங்கிரி.

வருவழிக் கலங்கல்.

(இ-ள்) படைத்துணையாகச் சென்ற தலைவன் போர்முற்றித் திரும்புமிடத்துத் தலைவியை நினைத்து வருந்துதல்.

போர்முற்றி மீளுமென் முன்றோன்று மோடையென் பூவைகண்ணில்
நீர்முற்றி யோடிய வோடைகொ லோவவள் நீர்மையறிந்
தார்முற்ற வும்வந்து சொல்வா ரதுவரை யல்லலென்கண்
வேர்முற்றி வைகு மருள்வாய் பரங்கிரி வேலவனே. (506)

(கு-ரை) போர்முற்றி - சண்டைமுடித்து. ஓடை - ஓடுகின்றநீர். முற்றி-மிகுந்து. நீர்மை-குணம். முற்றவும்-முழுதும். அல்லல்-துன்பம். என்கண்-என்னிடத்து. வேர்முற்றி-வேரூன்றி.

வந்துழி மகிழ்ச்சி.

(இ-ள்) போர்முற்றிய தலைவன் மீண்டுவந்த இடத்துத்தலைவியைக் கண்டு மகிழ்தல்.

நாரிற் பெரியர் பகைப்போ ரினிற்சென்று நான்பிழைத்திவ்
வூரிற் புகுந்த தொருவியப் பன்றுபின் னோங்குபனிப்
போரிற் பிழைத்திவள் வைகிய தேவியப் புக்குமரன்
சீரிற் சிறந்த பாங்கிரி வாய்ச்செய் செயலினுமே. (507)

(கு-ரை) நாரில்-அன்பில். வியப்பு-ஆச்சரியம். வைகியது-தங்கியது. செய்செயல்-(கணவரைப் பிரிந்திருக்கும் பெண்கள்) செய்யும் செய்கை, அதாவது பிரிவைச்சகித்திருத்தல்.

32-துணைவயிற்பிரிவு முற்றிற்று

## முப்பத்து மூன்றாவது—பொருள்வயிற் பிரிவு.

அஃதாவது பொருளீட்டுதல் காரணமாகப்பிரியும் பிரிவு. அப்படியானால் தலைவன்முன் பொருளில்லாதவனாதல்வேண்டும். ஆகவே "எள்ளுநர்ப்பணித்தலும் இரந்தோர்க்கீதலும் நள்ளுநர் நாட்டலும் நயவாரொறுத்தலும்" என்னுமிவையெல்லாம் பொருட்குறைபாடுடையார்க்கு உண்டாகாமையால் இக்குறைபாடெல்லாம் உடையனாம். இவையுடையான் ஒப்பில்லாதவனென்பதென்னவென்றால், பொருளில்லாதவனைப் பொருள் சம்பாதிக்கப்பிரிவனென்பதல்ல. தன் தாய் தந்தையர் முதலியவரால் படைக்கப்பட்ட பலவேறுவகைப்பட்ட பொருள்களெல்லாவற்றையுங்கொண்டு பயனநுபவிப்பது ஆண்மைத்தன்மையன்றெனக்கருதித் தனது முயற்சியாற் கிடைத்தபொருள்கொண்டு வழங்கி வாழ்தற்பொருட்டென்க. இஃதல்லாமல் தனது முயற்சியாற்கிடைத்த பொருள்கொண்டு செய்த கருமங்கள் தனக்கே பயன்படும் பொருட்டுமாம். ஈட்டுதல்-சம்பாதித்தல்.

### தலைவன் பொருள்வயிற் பிரிவு பாங்கி தலைவிக்குணர்த்தல்.

(இ-ள்) தலைவன் பொருள் சம்பாதிக்கப்பிரியும் பிரிவு பாங்கி தலைவிக்குணர்த்தல்.

ஒவ்வொன் றினுலொவ்வொன் றுண்டாமெல்லாம்பொருளொன் றினுண்
அவ்வொன்று தேடி வரப்பிரி வேனென அன்பரென்பாற் [டாம்
செவ்வொன்று வேலன் பாங்கிரி நேர்நிற்குச் செப்பச்சொன்னார்
இவ்வொன்று நீதடை செய்யாம லேகற் கிணங்குகவே. (508)

(கு-ரை) அவ்வொன்று-அந்த ஒன்றாகியபொருள். செவ் - ஒழுங்கு, அல்லது சிவப்பு. ஒன்று-பொருந்திய. நேர்-ஒத்த. நிற்கு-உனக்கு. ஏகற்கு-(அவர்) போவதற்கு. இணங்குக-சம்மதிப்பாயாக.

### பிரிவுடன் படாமை.

(இ-ள்) தலைவன் பொருள்வயிற்பிரிவைத் தலைவி மறுத்தல்.

என்றாலுண் டாமின்பம் வேற்றார் புகுந்தவ ரீட்டுபொருள்
தன்றாலுண் டாங்கொலி தென்னே புதுமைச் சழக்குரைத்தார்
உன்றா லியன்ற வளவென் றுயர்சொற் றுறுத்திதடை
நன்றாறு பேறுந் தருப்வேள் பரங்கிரி நற்சகியே. (509)

(கு-ரை) சழக்கு-வழக்குக்குமாறுபட்டது. நன்றாறு பதினாறு, அவை யாவன-புகழ் கல்வி வலி வெற்றி நன்மக்கள் பொன்நெல் நல்லூண் நுகர்ச்சி அறிவு அழகு பெருமை இளமை துணிவு நோயின்மை வாழ்நாள் என்பன.

### பிரிவுடன் படுத்தல்.

(இ-ள்) தலைவன் பொருளீட்டச்செல்லுதற்குப்பாங்கி தலைவியைச் சம் மதிக்கச்செய்தல்.

நடுவண தெய்தி யிருதலை யெய்து நமக்கெனுஞ்சொற்
படுதலல் லாதுமற் றெல்லாமு மாமெனப் பண்டுணர்ந்த
நெடுமுடி மன்னர்முன் னிற்குங்கொன் னின்னுரை நீங்கினரேல்
விடுசுடர் வேலன் பரங்கிரி சூழ்க விரைந்துறவே. (510)

(கு-ரை) நடுவணது-இடத்துக்கும் ஏவலுக்கும் நடுவேயுள்ளதாகிய பொருள். இருதலை-இரண்டு பக்கத்துமுள்ள இடமும் ஏவலும். அல்லாது-அல்லாமல். நினதுரை-உன்வார்த்தை. சூழ்க-வலம்வருவாயாக.

### பிரிவுடன் படுதல்.

(இ-ள்) தலைவன் பொருள் சம்பாதிக்கப்போதலுக்குத் தலைவி சம்மதித் தல்.

புன்பவ நீக்குமொள் வேலோ னமர்மெய்ப் பொருப்பிடத்தென்
னன்பர் பிரிவுக் கியைந்த நியாய மநேகமெங்கு
முன்பயின் றாயிது நிற்கவஞ் சாதென் றன் முன்னரின்னும்
பின்பவ ரேகும் பெருந்துயர் சொல்லற்க பெய்வளையே. (511)

(கு-ரை) புன்பவம்-தாழ்மையாகிய பிறவியை. பயின்றாய்-படித்தாய். சொல்லற்க-சொல்லாதே.

### பிரிவுழிக் கலங்கல்.

(இ-ள்) தலைவன் பொருளுக்காகப் பிரிந்தவிடத்து இளவேனிற் பருவங்கண்டு தலைவி வருந்துதல்.

காமம் பெரிதென்று கைவிடு வார்பொருள் காசினியோர்
ஏமம் பெரிதென்று கைவிடு வாரின்ப மெய்மிறைவர்
நாமஞ்சு மாறிள வேனிலும் வந்தது நாடியெற்குச்
சேமஞ்செய் வாரினி யார்பராங் குன்றுறை சேயன்றியே. (512)

(கு-ரை) ஏமம்-பொருள். அஞ்சுமாறு-பயப்படும் விதம். சேமம்-சுபம். சேய்-முருகக்கடவுள். அன்றி-அல்லாமல்.

### வன்புறை.

(இ-ள்) தலைவன் பொருட்பிரிவுத்துன்பத்தை தலைவி சகிக்கும்படி வற்புறுத்திச்சொல்லுதல்.

பயிலல் முதலிய நீள்பல் பிரிவிற் பழகியநீ
குயில்களி கூருமிந் நாளினிற் கொண்கர் குறித்தபொருள்
கையினுற் லெய்துவ ரென்று பொறுமறக் கலங்குகின்றாய்
மயிலமர் வேள்பராங் குன்றனை யாயென் மதியிதுவே. (513)

(கு-ரை) பயிலல்-படித்தல். களிகூரும்-மகிழ்ச்சியடையும். இந்நாள்-இந்தவேனிற்பருவநாள். கொண்கர்-தலைவர். என்மதி-என்ன அறிவு.

### வன்பொறை.

(இ-ள்) தலைவன் பொருட்பிரிவுத் துன்பத்தைப் பாங்கி வற்புறுத்தியாற்றுதலால் தலைவி பொறுத்தல்.

ஆம்புக ழண்ணலொவ் வோர்கா ரணத்தி னகல்வதுவும்
காம்புறழ் தோளி பொறுபொறு வென்று கரைவதுவும்
வேம்பு கசத்தல் சகசமென் றேவிட்டு விட்டுநெஞ்சே
காம்புல ராது பராங்கிரிச் சேயருள் நாடுவமே. (514)

(கு-ரை) அண்ணல்-தலைவன். காம்பு-மூங்கில். உறழ்-ஒத்த. தோளி-தோளையுடைய பாங்கி. கரைவதுவும்-சொல்வதும். புலராது-வாடாமல்.

### வருவழிக் கலங்கல்.

(இ-ள்) தலைவன் பொருளீட்டித் திரும்பிவருமிடத்துத் தலைவியை நினைந்துவருந்துதல்.

இன்பத்தி லன்றிப் பொருளினி லாசை யிலாவிறைவி
துன்பத் தினைத்துடைப் பார்யாரிவ் வேனில் சுடாததன்றே
வன்பத்தி யீருரி கொண்டார்தஞ் சேய்மெய் வரையினிற்போய்
முன்பத்தி செய்து பணிந்தாலுந் தீர்ந்திலள் மூள்சினமே. (515)

(கு-ரை) துடைப்பார்-போக்குவார்.

வந்துழி மகிழ்ச்சி.

(இ-ள்) அவ்விதம் வருந்திய தலைவன் தலைவியை நோக்கிவந்தவிடத்து மகிழ்தல்.

பண்டுசெய் குற்றம் பலவும் பொறுத்தருள் பாவையெனைக்
கண்டு மலர்முகங் காட்டிய தாலந்தக் காட்சியினில்
வண்டு படிவது போலே படிந்து மனமகிழ்ச்சி
கொண்டு சுகமுற் றதுசேய் திருப்பரங் குன்றிடத்தே. (516)

(கு-ரை) படிந்து-தோய்ந்து. மனம்-மனமானது. சேய்-முருகக்கடவுள்.

இதுவுமது.

திருந்தவெஞ் ஞான்று முருகன் பரங்கிரி சேவைசெய்து
மருந்தனை யாளின்ப மெய்துமென் போற்பெரு வாழ்வெய்தியே
யருந்தமிழ் நாடெங்கு மெல்லா வுயிரு மகமகிழ்ச்சி
பொருந்த மதிதொறு மும்மாரி வந்து பொழிமுகிலே (517)

(கு-ரை) எஞ்ஞான்றும்-எந்நாளும். மருந்து-அமுதம். மதி-மாதம். மாரி-மழை. முகிலே-மேகமே.

33-பொருள்வயிற் பிரிவு முற்றிற்று.

பரங்கிரி ஐந்திணைக்கோவை முற்றுப்பெற்றது.

---

## நூல் செய்தவன் வாழ்த்து.

வேதசி வாகமம் வேள்வி முறைசெயும் வேந்தனொரு
மாதமும் மாரி யறம்பொரு ளின்பமெய் வாய்மைசிவ
போத நிறையும் பரங்கிரி யின்னருட் பூங்கடம்பன்
காத லடியவர் வாழச்செய் வாய்முக்கட் கற்பகமே. (518)

(கு-ரை) வேள்வி-யாகம். முறைசெயும்-நீதிசெலுத்தும். சிவபோதம்-சிவஞானம். காதல்-அன்பு.

ஆகப்பிரபந்தம் 8-க்குக் காப்புகள்உள்படச் செய்யுள் 1208.

இங்ஙனம்,
மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்,
மு. ரா. அருணாசலக் கவிராயர்.



உ

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 7 | 23 | நீபென் | நீயென் |
| 20 | 34 | தரிசித்த | தரித்த |
| 31 | 23 | ஒய்வு | ஓய்வு |
| 34 | 29 | பதுமனென்றும் | பதுமனென்னும் |
| 37 | 16 | னுப்த்த | றுய்த்த |
| 47 | 25 | சன்னர் | சனனர் |
| 50 | 26 | குயற்றிட | குயிற்றி— |
| 69 | 28 | மகாமேருமலை | மகாமேருமலை. |
| 74 | 24 | கருணைசலதி | கருணைசலதி- |
| 80 | 4 | முன்னமுங் | மின்னமுங் |
| 93 | 9 | உளையுன் | உளையுன் |
| 95 | 29 | லேன்றது | லென்றது |
| ,, | 31 | யிருக்கின்ற | யிருக்கின்ற. |
| 96 | 2 | மன்றீத் | மன்றீ |
| 98 | 26 | நெருங்குகின்ற | நெருங்குகின்ற. |
| 103 | 32 | ஐயானன் | ஐபானனன் |
| 107 | 6 | யாம்ஃ | யாமஃ |
| 109 | 18 | றுயில | துயில |
| 116 | 32 | ஐபானன் | ஐயான்னன் |
| 124 | 33 | புகுப்பு | பகுப்பு |
| 125 | 26 | பரம் | பரம |
| ,, | 29 | (14) அநாயசம் | (15) அநாயாசம் |
| 141 | 20 | திருமுறு | திருமுரு |
| 143 | 11 | தோன்றுல் | தோன்றுதல் |
| 149 | 25 | அறங்கனை | அறங்களை |
| 150 | 21 | ஜர்து | ஐர்து |
| 151 | 10 | கண். பல்- | கண், பல். |
| ,, | ,, | சேர்தலாவது. | சேர்தலாவது:— |
| 155 | 30 | பொறீஇ | பெறீஇ |
| 156 | 26 | கன்டில | கண்டில |
| 158 | 7 | அசோகத்தரு | அசோகத்து |
| 160 | 5 | பாங்கிற் | பாங்கற் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 160 | 32 | கோருக்கு | கோனுக்கு |
| 162 | 24 | சோதிகக | சோதிக்க |
| 168 | 19 | யுடம்பாடு | யுடன்பாடு |
| ,, | 21 | பாங்கியால் | பாங்கி |
| 175 | 5 | தலைவன் | தலைவனால் |
| 177 | 24 | பூளையெலும்பு | பூளை, எலும்பு |
| 179 | 14 | விளக்கி | விலக்கி |
| 181 | 21 | வேளை | வெளை |
| 1c2 | 10 | திடையா | கிடையா |
| ,, | 23 | டொருவா | டொருவர் |
| 184 | 30 | மெய்குநலம் | மெய்ாகுலம் |
| 185 | 16 | மயங்குவார் | மயங்குவர் |
| 186 | 13 | வில்லை | வில்லை; |
| 189 | 11 | தேக்கு | தேங்கு |
| 192 | 4 | மூயலினி | மூயலி |
| 193 | 2 | பகற்குறி | பகற்குறி; |
| ,, | 5 | யாகாது. | யாகாது |
| ,, | 18 | சிற்றத்தோ | சிற்றத்தோ |
| 195 | 12 | செய்ச்சில | மெய்ச்சில |
| 196 | 16 | யறுவுறுத்தி | யறிவுறுத்தி |
| 197 | 18 | சேக்கை | சேர்க்கை |
| 198 | 22 | யப்பொழுது | யம்பொழுது |
| 200 | 27 | தலைவியைய் | தலைவியைப் |
| 202 | 19 | விரண்டும | விரண்டும் |
| ,, | 24 | கூடுதல் | கூடுதல்; |
| 203 | 29 | நவபணி | நவமணி |
| 205 | 15 | அழகிய- | அழகிய. |
| 206 | 19 | சேரல் | சேறல் |
| 208 | 27 | றொழுக | றொழுக |
| 210 | 12 | தலையை | தலைவியை |
| 211 | 24 | நேர்நது | நேர்ந்து |
| 212 | 19 | வருமாறு | வருமாறு:— |
| 213 | 21 | வருங்களம் | வறுங்களம் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 213 | 34 | தனனே | தனரோ |
| 2!4 | 2 | புலப்படுதல் | புலப்படுத்தல் |
| 221 | 23 | சொல்னெ | சொல்லெண |
| 229 | 24 | வைத்தார் | வைத்தாற் |
| 233 | 5 | னுயிரோடு | னுயிரோடும் |
| 234 | 25 | மலையி | ——— |
| ,, | 27 | சேன்றேன் | சென்றேன் |
| 237 | 6 | கலங்கற்கும் | கலங்கற்கும், |
| ,, | 8 | தற்கும் | தற்கும், |
| ,, | 14 | படுத்தல் பிரிவுழி | படுதல் பிரிவுடன்படுதல் [பிரிவுழி |
| 241 | 10 | நீங்கும் | நீக்கும் |
| 242 | 17 | கிட்ட | கிட்டி |
| 243 | 16 | களவினுட | களவினுட்ட |
| ,, | 17 | இறைவனு | இறையனு |
| 246 | 20 | கண்ணி | கன்னி |
| 247 | 24 | அத்தொடு | அறத்தொடு |
| 251 | 6 | கொடுதரா | கொடுத்தா |
| ,, | 13 | வேலாயதம் | வேலாயுதம் |
| 253 | 20 | போக்கல் | போக்கல், |
| ,, | 22 | முதல | மூதல |
| 255 | 8 | முத்திரர் | மித்திரர் |
| 258 | 6 | தாம | காம |
| 270 | 16 | ணகன்றவை | ணகன்றமை |
| 272 | 15 | வேளே | வேலோய் |
| ,, | 28 | படும். நற் | படும். அவை, நற் |
| 277 | 5 | வறிவறு | வறிவுறு |
| 278 | 8 | மண | மண |
| 288 | 2 | கூழால் | குழலான் |
| ,, | 8 | வளே | வள் |
| 289 | 10 | கையில் | கை |
| ,, | 27 | அண்ணல் | அண்ணலே |
| 292 | 12 | குவலை | குவல |
| ,, | 17 | தலைவி | தலைவீ |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 292 | 25 | றன்னர் | னுள்ளர் |
| 293 | 19 | மை | கருமை |
| ,, | 20 | கரிய | கருமை நிறம் |
| 295 | 30 | இவ்வைந்து | இந்நான்கு |
| 296 | 3 | துறைகளும் | துறைகளையும் |
| ,, | 27 | பிரந்தாரை | பிறந்தாரை |
| 299 | 11 | உளராக | உளவாக |
| 300 | 20 | பாழியல் | பாழியல்பு |
| 303 | 22 | மொய் | மெய் |
| 304 | 20 | வளியில்-காற்றைப்போல | ——— |
| 308 | 25 | ஈ_டுதல் | ஈட்டுதல் |
| 310 | 12 | சகிக்கும்படி | சகிக்கும்படி பாங்கி |

244-வது பக்கத்தில் 17-முதல் 27-வரையுள்ள வரிகளைப் பின்வருமாறு திருத்திப்படிக்க.

இவற்றுள், என்பொருட் பிரிவுணர்த்தேர்நிழைக்சென்றலும் பாங்கி தலைவிக்கவன் செலவுணர்த்தலும் ஆகிய இரண்டும் பிரிவறிவுறுத்தற்கும், நின் பொருட் பிரிவுரை நீயவட்கென்றலொன்றும் பிரிவுடன் படாமைக்கும், நீடே னென்றவனீங்க லொன்றும் பிரிவுடன்படுத்தற்கும், வருகுவர் மீண்டெனப் பாங்கி வலித்தலொன்றும் பிரிவுடன்படுதற்கும், பூங்குழைபிரங்கலும் தலைவி கொடுஞ்சொற்சொல்லலும் பருவங்கண்டு பெருமகள் புலம்பலும் இறைமகள் மறுத்தலும் அவளவட் புலம்பலும் ஆகியஐந்தும் பிரிவுழிக்கலங்கற்கும், பாங்கி கொடுஞ்சொற் சொல்லலும் இகுளை வம்பென்றலும் அவர் தூதாகி வந்தடைந் ததிப்பொழுதென்றலும் ஆகியமூன்றும் வன்புறைக்கும், தலைமகளாற்றலொன் றும் வன்பொறைக்கும், பாகனொடு சொல்லலும் மேகத்தொடு சொல்லலும் ஆகிய இரண்டும் வருவழிக்கலங்கற்கும், பாங்கிவலம்புரி கேட்டவன் வரவறி வுறுத்தல் முதல் ஐந்தும் வந்துழிமகிழ்ச்சிக்கு முரியன.

———